ஒழிவிலொடுக்கப்

# பதிப்புரை.

---

தமிழில் வழங்கும் ஞானசாஸ்திரங்கள் வேதாந்த சாஸ்திரங்கள் என்றும் சித்தாந்த சாஸ்திரங்கள் என்றும் இருவகைப்படும். கைவல்ய நவநீதம் ஞானவாசிட்டம் முதலியன வேதாந்தங்களாம். சிவஞானபோதம் சிவஞானசித்தியார் முதலியன சித்தாந்தங்களாம். இக் குறித்த நூல்கள் எழுதப்பட்டு நெடுங்காலமாயிற்று. தற்காலத்து ஞானநூல்கள் எழுதுவோரும் இவ்விருவழிகளில் ஒன்றைப் பற்றித்தான் எழுதுவர் என்பதே பொதுஜன அபிப்பிராயம். ஞானசாஸ்திரம் கற்றுள்ளேன் என முன் வருபவனை நீ வேதாந்தியோ சித்தாந்தியோ எனக் கேட்க முந்தாதார் சிலரே. ஸம்ஸார துக்கத்தை நிவ்ருத்திபண்ணுதற்குக் கருவியாயிருந்த ஞானசாஸ்திரங்கள் கட்சிகளை யுண்டாக்கிவிட்டன. வேதாந்தி சித்தாந்திகட்குள் சண்டை லோகப்பிரசித்தம். இது பரிதாபம் !

நாம் சாஸ்திரம் கற்கும் கருத்து கட்சி கட்டுதற்காக இருத்தல் கூடாது. ஆத்ம லாபத்தை யடைதலே

யே நம் நோக்கமாகக் கொள்ளல்வேண்டும். ஆத்மாவிற்குச் சித்தாந்தமென்றும் வேதாந்தமென்றும் பேதந் தெரியாது. சாஸ்திரங்களைக் கற்கும்போதும் நமக்கிது சாந்திதருமா என்று நோக்குதல் ஒன்றையே நங்கருத்தா வைத்தல்வேண்டும். இதனையே உரைகல்லாகக்கொண்டு படிப்போமாயின் சாஸ்திரங்களில் அநேகம் போலிகளாய் முடியும். மாற்றுவிடாது நிற்பன சிலவற்றுள் ஒழிவிலொடுக்கம் ஒன்று. அதனையியற்றிய கண்ணுடையவள்ளலார் சித்தாந்த மரபினர் என்றுரைத்தற்கு நியாயங்கள் உண்டு. ஆயினும் அவர் சித்தாந்த வேதாந்தங்களுக்குள் உள்ள பேதங்களைப் பாராட்டினவரல்லர்.

சத்தாதி தத்துவம்போய்த் தானுமெதி ருங்கழன்றூற்
சித்தாந்த வேதாந்தச் சீர்மையிலே—முத்தி
அநிர்வசன மின்ப வதீதமெனி லாங்கே
பிணமிடுதல் கன்மம் பிளாய்.

என்ற வெண்பாவால் அவர் உண்மை நிலையில் வேதாந்த சித்தாந்த பேதங்கள் நிலைப்பனவல்ல வென்றுணர்த்தினர். பொய்ந் நிலையைப்பற்றி எவ்வளவுரைத்துமபயனென்?

வேதாந்திகள் அநிறம் என்று சொல்லும் தற்போதம் ஒழிந்துவிட்டது முத்தியுண்டென்பதைத் தெளி

வாகக் காட்டி அதனை யொழிக்கும் நெறியும் இது வெனத் தெரிவித்தனர் ஞானக்கண்ணுடைமையிற் கண்ணுடைய வள்ளலார் எனப்பட்ட பரமாசாரியர்; ஞானத்தின் மிக்க கொடையில்லை யென்று சொல்லிய உண்மைஞானத்தை உலகுய்ய வருளிய கண்ணுடைய மூர்த்திக்கு வள்ளலென்னும் பெயர் மிகவுந் தகும்.

தமக்கு முந்தியுள்ள ஆசிரியர்களும் பிந்தியுள்ள ஆசிரியர்களும் மயங்கி யுரைத்தும் பொய்ம்மை யுரைத்தும் உலகத்தில் அஞ்ஞானத்தை விர்த்தி செய்திருப்பவும், இடையிற் றோன்றிய இவர் சரியை கிரியை யோகங்களை யிகழ்ந்து அவற்றின் வெறுமையை நன்கு விளக்கினர். இவர் சொல்லும் நிலைக்கு உலகம இன்னும் பக்குவப்படவில்லை யென்று தான் சொல்லவேண்டி யிருக்கிறது. ஆயினும் அவ்வுபதேசத்தாற் பயனெய்தும் ஆத்ம சிரேஷ்டங்கள் எப்பொழுதும் உள்ளன வே.

இவ்வாசிரியர் இவ்வளவு பெருமையுடையராயினும் இவர் இருந்த காலம் இவர் வரலாறு என்றின்ன விஷயங்கள் புலப்படுமாறில்லை. இவரை மெய்கண்ட தேவர்க்குத் தநயராக்கும் ஐதிஹ்யமொன்றுண்டு. சைவ சித்தாந்த ஸ்தாபகராகிய மெய்கண்டதேவர்க்குப் பிள்

# பதிப்புரை.

ளையா யவதரித்த வள்ளலார் மேலான ஞானநெறியிலேயே மனம் பற்றினவராய்ச் சரியை கிரியை யோகமென்னும் மூன்று பாதங்களையும் பழித்து நாலெங்கும் தற்போத வொடுக்கம் வேண்டற்பாலது என முழக்கி அதனைத் தவிர வேறொன்றுங் கூறாததற் கறிகுறியாக (தற்போத) ஒழிவொடுக்கமெனத் தமது நூற்குப் பெயருமிட்டருளி அதனைத் தந் தந்தையாரிடத்துக் கொண்டுபோய்க் காட்டினர். மெய்கண்ட தேவரோ பக்குவ வேறுபாடுகளுக் கேற்ப வழங்கிவரும் வழிபாட்டு வேறுபாடுகளையு மாதரித்துவந்தன ராதலின அந் நூலைக்கண்டு மனமுளைந்து பூஜையிலிருந்தவாறே சிறுகோப வெளிப்பாட்டினால் தமது திருமேனியி லிட்டிருந்த விபூதிதிரிபுண்டரக் குறிகளை யழித்துச் சைவ சமயத்துக்கும் அச் சமயத்தின் சின்னங்களாகிய விபூதி ருத்திராக்ஷங்களுக்கும் கேடு வந்ததே என்று இரங்கினர். இன்னும், வள்ளலதீனத்து வந்தார் கைகளிற் குறிகளையிட்டு அழிக்கும் வழக்கத்தைச் சுட்டிக்காட்டிஇக் கதை மெய்ம்மையேயென்று நிறுத்த முயலுவாருமுண்டு. விபூதியை யழித்தவர் மெய்கண்டதேவரா யிருந்ததனால் வள்ளலதீனக்கார் செய்கைக்கு அது காரணமாத லெப்படி? மெய்கண்டதேவர் வள்ளலதீனத்திற்கு மூலபுருஷனோ? அன்றியும், சித்தாந்த சமயபானுவாகிய

மெய்கண்டதேவரிடத்திலுதித்த வள்ளலார் அவரிடத்தேயே உபதேசம் பெற்றுக்கொள்ளாது வேறு வழியிற் புகுந்ததற்கும், அதி பிரபலமுடைய அவரைத் தமது நூலுள் ஒருமுறையாயினும் எடுத்து வழங்காததற்கும் தக்க காரணம் புலப்படவில்லை.

வள்ளலார் முதல்வெண்பாத் தொடங்கிப் பலமுறையும் சீகாழிச் சம்பந்தப்பெருமானை வாழ்த்தினராகலின்,

பட்டினத்துப் பிள்ளையினைப் பத்ரகிரி யைப்பரவி
விட்டுவிட மாட்டார் வெறுவீடர் - வெட்ட
வெறுவெலும்பை நாய்கறண்ட வேந்தர்வர நாய்பார்த்
துறுமுவதைக் காட்டுவோ மோ

சுந்தரனார் சேரர்கோன் சோழர் குறுமன்னர்
மைந்தருடனம்முடலை வாட்டினர்கள் - அந்தமிலாப்
பத்தரொடு ஞான வயிராக் கியர்பலர்க்கும்
ஒத்ததுசார் போத வொழிவு.

என்னும் வெண்பாக்கள் அந் நூலுட் காணப்படவில்லையாயின், அவர்காலம் சம்பந்தர் காலமே யெனச்சொல்லவேண்டிவரும். ஆசிரியர் பலமுறையும், வழக்கில் உபதேச குருவினைவாழ்த்து மன்றே, சம்பந்தரை வாழ்த்தினரன்றோ? சுந்தரர் காலம் கி. பி. ஒன்பதாம் நூற்

ற்றாண்டின் முற்பகுதியென்றும் பட்டினத்தடிகள் காலம் கி. பி. பத்தாம் நூற்றாண்டென்றும் உத்தேசமாகத் தெரிகின்றமையின், மெய்கண்டதேவரது காலமாகிய பதின்மூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதிக்குப் பின்னர்த் தான் வள்ளலார் இம் மண்ணுலகிற் றிகழ்ந்தனர் என்று உறுதியாய்க் கூறமுடியவில்லை. இது பின்னர் ஆராயப்படும்.

மற்று, இவ்வாசிரியரைப்பற்றிச் சீகாழியில் வழங்கும் ஐதிகமொன்று வருமாறு. சீகாழிப்பதியில் ஒரு செல்வவந்தர் வீட்டில் செல்வப்பிள்ளையாய் அவதரித்து அக் காரணத்தினாற் சகல கலைஞானங்களிலும் அபரிமித விற்பத்தியடைந்து தேரும் அவகாசமுதலியன பெற்றிருந்த நமது வள்ளலார் தினந் தவறாது திருக்கோயிலுக்குப் போவது வழக்கம். அப் பதியிலேயே அவதரித்துச் சிவபெருமானது செல்வக்குமாரரென விளங்கிய ஞானசம்பந்தப்பிள்ளையாரது அருட் சரிதங்களைக் கேட்டல் மாத்திரையே யன்றி, அவற்றுட் பெரும்பான்மையும் நிகழ்ந்த ஸ்தலத்தில் தாமும் தங்கும் பெரும் பேறு பெற்றமையால், வள்ளலார் பிள்ளையாரிடத்துப் பேரன்பு பூண்டு அவரையே தமக்கு ஆசிரியராகக்கொண்டு உபாஸித்து வந்தார். உபாஸனையின் பல

ருக ஞானந் தம் மனத்துள் உதித்த காலந்தொட்டு வள்ளலார் பிரதிதினமும் கோயிலுக்குப் போய்த் திரும்பித் துயின்றெழுந்து ஒரு வெண்பாச் செய்துவந்தார் கோயிலில் நெடுநேரம்போக்கி மீளுதல் இவர்க்கு இயல்பாகலின், இவர்க்கு வழிகாட்டியாகக் கந்தன் என்னும் வேலைக்காரன் தீவர்த்தி ஸஹிதம் உடன் செல்வது வழக்கமாயிருந்தது. இருநூற்றைம்பத்து மூன்றாம் வெண்பா ("கண்மணியின்" என்னும் இறுதிவெண்பா) விற்குரிய தினத்தில் நெடுநேரமாயும் வள்ளலார் வீட்டிற்குத் திரும்பினாரல்லர். மத்தியில் மின்னலும் இடியும் மழையும் மிகுந்து தெருக்களிலெல்லாம் வெள்ளம் ஓடத் தலைப்பட்டது. கந்தன் வீட், லேயே இருந்துவிட்டான். வள்ளலார் தரிசனம் முடிந்து கோயில் வாயிலை யணுகிக் கந்தா என்னலும் ஸ்ரீசுப்பிரமணிய மூர்த்தியே கந்தனுருக்கொண்டு அவ்விடத்துத் தீவர்த்தியுங் கையுமாப் புகுந்து வழிவிட்டார். வீடுபோய்ச் சேர்ந்ததும் பழைய கந்தன் மன்னிப்புக்கேட்டற்காக ஒடுங்கி முன் வந்து நின்றான். கூடவந்த கந்தனைத்திரும்பிப்பார்த்தவர் அவனைக் காணாராய்த் திகைத்தார் பின்னர் இஃது எமது ஞானசம்பந்தன் அருள் விளையாட்டேயாகுமெனத் துணிந்து அன்றிரவு வெண்பாப்

பாடி முடித்து அந் நூலுக்கு ஒழிவிலொடுக்க மெனப் பெயருமிட்டுத் தம் அருகிருந்த பக்குவர்களிடத்து அதனை மனமுவந்து கொடுத்தனர். காலை யெழுந்ததும் தம் பெருந்திரவியமத்தனையும் அரைக்கணத்தில்வாரியிறைத்துத் துறவு மேற்கொண்டார். இவ்வாறு வழங்கும் ஐதிகத்தை நம்புவாரிற் சிலர் திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள் உரைகண்ட நூல்களெல்லாம் சற்றேறக்குறைய அவர் காலத்தனவேயாம்,ஒழிவிலொடுக்கக்காலமும் இருநூறு வருஷங்கட்குட்பட்டே யிருக்கும் என்கின்றனர்.

இஃதன்றி வேறொரு ஐதிகமும் வழங்குவதாகக் கேட்டோம். சீகாழி நகரில் ஏழைக் குடும்பமொன்றிற் பிறந்து பள்ளிக்கூடத்தி லோதுங்கும் பாக்கியந் தானுமின்றி, கூலித்தொழில் செய்துவந்தவர் கண்ணுடைய வள்ளல். பகல் முழுதும் கூடையைத் தூக்கிக் கொண்டே கூலிவேலைசெய்து அற்பப் பொருளீட்டித் தம் காலந்தள்ளி வந்தவர். ஒருநாள் தற்செயலாய் ஒரு பணக்காரன் இவரைக் கூலியாக வருமாறு கூப்பிட்டான். இவரும் இசைந்து உடன்போய் அவன் வாங்கிய பொருள்களையெல்லாம் தம் கூடையில் நிரப்பிவைத்துக் கூடையைத் தூக்கிக்கொண்டு அவன்பின் சென்

ஞர். அவனும் வழியிலிருந்த ஆலயத்துள் தரிசனநிமித்தம் பிரவேசித்தான். இவரும் உடன் செல்லுதல் அவசியந்தானே. ஒவ்வொரு ஸந்நிதியிலும் ஒருமுறை கர்ப்பூராத்திரிகம் பணிமாரப்பண்ணினவன், திருஞானசம்பந்தர் ஸந்நிதியில் இரண்டாமுறை எஞ்சிய கர்ப்பூரத்தை யேற்றிவைத்தான். உடனே கூலிக்காரவள்ளல் இம் மூர்த்தியே பெரிய சாமி யென்று நிச்சயித்தார். பின் அப் பணக்காரனோடு அவன் வீடுசேரும் வரை உடன் சென்று அவன் சரக்குகளை யொப்பித்துவிட்டு அவன் கொடுத்த கூலியாகிய இரண்டு பணத்தையும் கூடைக்குளேற்று வாசற்படி தாண்டியதும் கூடை இரண்டுபணத்தோடு வீதியிற் சுழற்றியெறிந்தார். ஜனங்கள் இவரைப் பிழைக்க வகையறியான் பித்தேறினான் என்றல் ஸஹஜந்தானே. விரத்தி மிக்க வள்ளல் நேரே கோயிலுட் புகுந்து பெரியசாமி ஸந்நிதியில் நின்றார். நின்றவர் மூன்றுநாள்வரை அவ்விடம் விட்டுப் பெயரவில்லை. இரவில் கோவிற்கதவு மூடுஞ்சமயம் எங்காயினும் ஒளிந்திருந்து கோவிலார் புறம் போந்ததும் தங் கடவுளிடம் வந்து சேருவர். மூன்றாமநா ளிரவில் வள்ளலார் கனவிற் போந்து கடவுள் 'உன்னுடைய பக்தியாற் பிரஸந்நமாயினோம். வேண்டியதைக் கேட்ட

டைக' என்றனர். இவர் 'யாதொன்று மறியேன். எல்லாம் உன் பரம்' என்றனர். அதன்பின் ஞானசம்பந்தரே யிவருக்குச் சகல ஞானத்தையும் உபதேசித்து இச் சாஸ்திரத்தை எழுதுமாறு செய்தனர் ஞானசம்பந்தரே இவருக்கு உபதேசகுரு என்பது பல பாட்டுகளினும் ஆசிரியர் கூறுமாற்றான் அறியப்படும். வெண்பாக்கள் அமைந்திருக்கும் தன்மையும் பல வழக்குச் சொற்கள் விரவியிருத்தலும் ஆசிரியர் இலக்கண இலக்கியப் பயிற்சி யடைந்தவ ரல்லரெனக் காட்டும்.

ஆசிரியர் இவ் வொழிவி லொடுக்கம் செய்ததேயன்றி மாயாப்ரலாப மென்றொரு நூலும் செய்தனரென்பர். அந் நூல் நுதலிய விஷயம் முதலியன

"ஈரே ழுலகி லெண்ணீங் குயிர்க்கும்
பேரா வறிவாய்ப் பிரிவற நிறைந்து
காயா திகளாய்த் தனுவொடு கலந்து
மாயா ளென்னும் பேருடை மடந்தை
மழைக்கா லிருளை வெளியென மயக்கித்
தழைத்தபல் லுயிர்க்கிரு டாணுய் நிற்பவள்
அன்னை யிருண் மலி யாணவ மாகவும்
முன்னவ டீரோத மொய்குழ லாகவும்
நல்லுயி ரிச்சா ஞானங் கிரியை
தொல்லிரு வினைகளைத் தோழிய ராகவும்
சுத்த மாயையைக் கைத்தா யாகவும்

புத்திரர் பொறிபுலன் கரண மாகவும்
போதன் றன்னைப் பருட ளுகவும்
தீதற வுடைய மோகினித் தெரிவை
ஈங்கிவ ளொருவன் றன்னோ லின்புறு
பாங்குடைப் போதனைப் பறிகொடுத் தழிந்து
போதன் போதையைப் பொருந்துதல் கண்டு
போதமின் மாயாள் புலம்ப றன்னைச்
சாயா வுண்மைத் தபோதனர் கேட்க
மாயா ப்ரலாப மெனவகுத் துரைத்தோன்
கெடிலப் புனல்சூ ழதிகைக் கதிபன்
ஆழிமேன் மிதந்த காழிமூ தூரன்
திசைமிகு கீர்த்திக் குகமடத் தலைவன்
கருநெறி கழிக்குந் திருநெறித் தேசிகன்
அத்தனைக் காட்டி யழுதா வாழ்வித்த
வித்தகன் றனக்கு வேலைக் காரன்
சிற்குணன் றன்னைச் சேர்ந்தவர்க் கருளும்
நற்கண் ணுடைத்திரு ஞானசம் பந்தன்
திருமலி யின்பச் சிவனடித் தொண்டர்தம்
பெருமைய ரடிபுனை பெற்றி யோனே.”

என்னும் சிறப்புப்பாயிரத்தான் அறியக் கிடக்கும் மாயாப்ரலாபமும ஒழிவிலொடுக்கமும் செய்தார் கண்ணுடையவள்ளலே என்று சம்மதிப்போமாயின், முன் அவரை ஏழையென் றுரைத்த ஐதிகம் பொய்யாகும் அதிகைக் கதிபன் என்றதனல் அவர் மிக்க செல்வவ

தரர் இருந்தனரென்பது பெறப்படும். இனிக் குகமடத் தலைவன் என்றமையால் இவர் குகமடமெனப் பெயரிய ஒரு மடத்திற்குப் பிரதிஷ்டாசாரியராகவோ அல்லது அதில் பிரதான ஆசாரியராகவோ விளங்கி யிருந்தன ரென் றேற்படும். கண்ணுடைத் திருஞானசம்பந்தன் என்றமையால் வள்ளலார்க்குத் தம் குருவின் பெயரை யுஞ் சேர்த்து வழங்கும் ஒரு பெயர் உண்டாயிருந்த தென் றறியற்பாற்று.

இவ்விரண்டு நூல்களையுஞ் செய்ததேயன்றிக் கண் ணுடைய வள்ளலார் பஞ்சமலக்கழற்றி யென்னும் பெய ரிய தொருநூ லியற்றியதாகவும் சிலர் சொல்லுவர். சிவானந்தமாலையையும் அவரே செய்தனரென்று சிலர் கூறுவர். அந் நூலுள் அதற்கு ஆதாரமில்லை.

இனி, கண்ணுடைய வள்ளலார் காலத்தை நிச்ச யிக்கப் புகுவோமாயின், இவர் ஞானசம்பந்தரைப் பன் முறையும் தோத்திரித்திருப்பினும் ஞானசம்பந்த உபா஬கரென்று சொல்லத்தக்கவரே யன்றி இவரை ஞான சம்பந்தர் காலமாகிய கி. பி. ஏழாம் நூற்றாண்டின் இ டைப்பகுதியில் வஸித்தனரெனல் இழுக்குடைத்தாம். அதற்குக் காரணம் முன்னரே கூறப்பட்டது. மெய்கண் டதேவரையும் இவரையும் பிணைக்கும் ஐதிகத்தைத் தள்ளி நோக்கினும், சித்தாந்த வேதாந்த மென்னும்

பதப்பிரயோகங்களை அவரைச் சந்தானகுரவர்காலத்துக்குப் பிற்பட்டவராக்குமென்பது எமது அபிப்பிராயம். சந்தான குரவருட் பிந்தியவர் காலம் பதினான்காம் நூற்றாண்டின் முற்பகுதி. திருப்போரூர்ச் சிதம்பரசுவாமிகள் உரைசெய்தமையானும், அவராசிரியர்க்காசிரியராகிய சாந்தலிங்க சுவாமிகள் உரைசெய்யஆஞ்ஞாபித்தமையானும், சாந்தலிங்கரும் சிவப்பிரகாசரும் ஏககாலத்தவரெனக்கூறுதற்கு நியாயமுண்மையானும், சிவப்பிரகாசர் காலம் பதினேழாம் நூற்றாண்டின் பிற்பகுதியென அறிகின்றோமாகலானும், உமாபதியார்க்குப் பிந்தியும் சிவப்பிரகாசர்க்கு முந்தியும் இருந்தவராவர் ஒழிவிலொடுக்க நூலுடையார்.

உரையாசிரியர் சிதம்பரசுவாமிகளைப்பற்றி அநேக சரித்திரங்கள் அச்சிட்டு வழங்கி வருகின்றமையின் அவ் விஷயத்தை ஈண்டு விரித்தல் அநாவசியகம். இவர் காலம் பதினெட்டாம் நூற்றாண்டின் இடைப் பகுதியாம். இவர் ஒழிவிலொடுக்கம் கொலைமறுத்தல் வைராக்கியசதகம் வைராக்கியதீபம் அவிரோதவுந்தியார் என்னும் ஐந்து நூல்கட்கும் உரை செய்தனர். இவர் சிறந்த வுரையாசிரிய ரென்பதிற் சிறிதும் ஐயமில்லை. பிந்திய நான்குநூல்களும் தங்காலத்துப்பெரியோராற் செய்யப்பட்டன, ஐயம் நேர்ந்தவழி ஆசிரியரிடத்தே யே ஐயந் தீர்த்துக்கொள்ளலாம். ஒழிவிலொடுக்கத்திற்கு இவர் உரைசெய்தது அற்புதமென்றே சொல்லும்

படியுளது. இவர் உரையின்றி நோக்கின், அநேக செய்யுள்கள் அரும்புலவர்க்கும் விளங்கா என்பது அதிசயோக்தியன்று. சாமானிய அறிவிற்கு மேற்பட்ட அறிவைத் துணைக்கொண்டுதான் இந் நூற்கு அருத்தம் இவர் செய்திருப்பர் என்றுரைக்கு மாற்றம் யாம் ஒப்பிய தோன்றே.

முதல்முறை இந்நூல் கி. பி. 1851-ல் சிதம்பரம் இராமலிங்கபிள்ளை யென்பவராற் பரிசோதித் தச்சிடப்பட்டது. பரிசோதகர் இந் நூற்குச் சிறப்புப்பாயிரமாயுள்ள "வள்ளல் குருராயன்" என்னும் செய்யுட்குச் சிறந்ததோர் விரிவுரை யெழுதி யுட னச்சிட்டனர். இந்த இராமலிங்கம்பிள்ளையே பின்னால் திருவருட்பிரகாச வள்ளலாரென விளங்கித் திருவருட்பா மொழிந்தவரென்று பலரும் சொல்கின்றனர்.

பிற்காலத்து அச்சிட்டோரிற் சிலர் அவ்வுரையினை நீக்கி மற்றைப் பாகத்தை மட்டும் அச்சிட்டனர். அது களையத்தக்கதன்றாகலானும், வழுக்களில்லாத சுத்தப் பிரதி அகப்படுதல் அருமையா யிருத்தலானும இப்பதிப்புத் தோன்றலாயிற்று.

S. அனவரத விநாயகம் பிள்ளை, M. A., L. T.



# ஒழிவிலொடுக்கம்.

## உள்ளுறை.

உ

சிவமயம்.

# ஒழிவிலொடுக்கம்.

## சிறப்புப்பாயிரம்.

வள்ளல் குருராயன் வாதுவென்ற சம்பந்தன் [வெ
வள்ளன்மலர்த் தாடலைமேல் வைத்துரைத்தான்—உள்
தழிவிலடுக் குந்தேனை யன்பரெலா முண்ண
வொழிவி லொடுக்கநூ லோர்ந்து.

### உரை.

இச்செய்யுள் கருதிற்றியாதோ வெனின், இந்நூன் முகத்து ஆசிரியர் பெயர் முதலியவற்றைக் குறித்து நிற்றலிற் சிறப்புப்பாயிர வொழுக்க முணர்த்தல் கருதிற்றென்க.

“வள்ளல் குருராயன் வாதுவென்ற சம்பந்தன் வள்ளன் மலர்த்தாடலைமேல் வைத்து”—வள்ளலார் என்னுந் திருப்பெயருடையவர் ஞானாசாரிய நிருபராகிச் சமயவாதிகள் தருக்கச் செருக்குகள் பிற்பட்டொழியப் பேரருணெறியான் வெற்

கொண்டு சீகாழியென்னுந் திருநகர்க்கண்ணே மெய்ந்நெறி விளங்க வீற்றிருந்தருளிய திருஞானசம்பந்தப் பிள்ளையாரது வள்ளற்றன்மையுடைய மலர்போலுந் திருவடிகளைத் தமது நன்முடிக்கண் ஓர் பொன்முடியாக வணிந்து,

"ஓர்ந்து உள்ளத் தழிவிலதேக்குந் தேனை யன்பரெலா முண்ண வொழிவிலொடுக்க நூலுரைத்தான்"—அத்திருவடியின் அருட்டுணையால் தத்துவங்களைத் தத்துவமென்றோர்ந்து உணர்ந்து அவற்றைக் கடந்து தற்காட்சியாந் திருவருட் காட்சியுஞ் செய்து அங்ஙனம் வாதனையான் அசைந்தெழும் போதம் தோற்றுது அதனை அத்திருவருளொளியின் அடக்கி ஆண்டு மேன்மேலும் எழுகின்ற சிவானந்தத் தேனைத் தாம் அநுபவஞ் செய்தவாறு அதன்கண் அன்புள்ள பக்குவருஞ் செய்தற்பொருட்டு அச் சிவானந்தாநுபவ அந்தரங்கமெல்லாம் வெளிப்பட்டு விளங்க ஒழிவிலொடுக்க மென்று ஓர் உபதேச முறையை யுரைத்தருளினார்—என்பது பொருள்.

வள்ளல் என்னும் பெயர் ஆசிரியர்க்குத் தாம் முன்னிருந்த கிரியாசாரிய நிலைக்கண் அவ்வாசிரிய மரபின் வழித்தாய் வந்த காரண அபிடேகச் சிறப்புப் பெயரென்க. அல்லதூஉம் பின்னர் ஞாநாசாரிய நிலைக்கண் தமதருண்ஞான நோக்கான் இயைந்த கண்ணுடைய என்னுங் காரண விசேடண மேற்கொண்டு நின்ற இவ்வள்ளலென்னும் பெயர் ஈண்டு அவ் விசேடணம் இசையெச்ச நிலையினிற்ப நின்றதெனினு மமையுமென்க. இஃது வினை பண்பு முதலிய அடுத்த தொகை நிலைச்

## சிறப்புப்பாயிரவுரை.

சொற்றொடராகாது தொகைநிலையாய்த் தலைத்தொடர் பயனிலை உண்மைப்பொருளுணர்ச்சியின்றி இடையிட்டு நிற்கத் தான் செய்யுண் முதற்கண் தனித்திருந்தமையின் ஆற்றலின் றுலோ வெனின், அற்றன்று; கொடைமடங் குறித்த குணங் காரணமாகவந்த இவ்வள்ளலென்னும்பெயர் தன்னுறுப்புகளுட் கொடை குணம் புகழ் அழகு வளமென்னும் நவ்வகை குறித்த பலபொருட் பகுதியான வண்மை யென்னு முதலுறுப்பான் ஆசிரியர்க்குளவாய ஈக்கொடை முதலிய அருட்குணங்களைக் குறிப்பிற் புலப்பட விரித்தலின் பொருளாற்றலுண்டென்க. அல்லதூஉம் இப்பெயர் உயர்பொருட் கிடனா யுடனிலைக்கூட் டாய் ஒரு நெறியசைத்தா யோரினந்தழூஉவிப் பல்வகைக் குறிப் பிற் படர்ந்து முற்றியைபு வண்ணப் பெருஞ்சொல்லாக நிற்ற லின் சொல்லாற்றலு முண்டென்க.

ஆயின் இவ்வாசிரியர் பெயர் இச்செய்யுளின் இடைகடை களின் ஒன்றில் நிறுத்தாது முதலடி முதற்சீர் எதுகைத்தொ டைக்கண் நிறுத்தலிற் குறித்தது யாதோவெனின், ஒன்றிரண் டெனக்கொண்டு உறுமறை யாகம நன்றிரு முடிபின் நடுநிலை நடாஅய்ப் பலம்பெறு தத்துவ நியதியிற் போந்து உண்மலந் தெறு மறிஞர் வாழ்த்திப்பரவும் ஆசிரியர் சன்மார்க்க முதலிய மார்க்க நான்கனுள் தலைமையிற்றலைமையாய உத்தம சன்மார்க் கத்தினையென்பது குறித்ததென்க. இங்ஙனம் உத்தம சன்மார்க் கத்தினர் என்பதை ஆசிரியர் கூறிய* "இது வென்றதெல்லாம்

---

* ஒழிவிலொடுக்கம்: பொதுவிலுபதேசம்-44.

பொய்யென்று" னென்னுந் திருவெண்பாவாற் காண்க. இஃது இன்னும் விரிக்கிற் பெருகும்.

ஞானசம்பந்தப் பிள்ளையார்க்குச் சிறப்பிற் சிறப்பாய காரணப்பெயராய் நின்று, ஓதியுணர்ந்து பன்னாட் பலசாதனங்களின் முயன்று முயன்று ஆசாரியத் தன்மை யொருவாறு அரிதிற்கிடைப்பப் பெற்றும் ஒரோர்காலங்களில் அவத்தைவயப்பட்டு மயங்கும் மற்றை யாசாரியர் போலாது ஓதாமல் வேதாகமாதிகளை முற்றுமுணர்ந்து இறைப்போதும் ஓர் சாதனங்களின் முயன்றதின்றி ஞானாசாரிய அருளிலக்கணங்களனைத்தும் தமே தம்பால் நிரம்பிநிற்ப அமர்ந்தன ரென்பதூஉம், ஓதியுணர்ந்த அவ்வாசாரியர்க்கெல்லாம் அவரவ ரறிவின்கண் அருளுருவாய் நின் றறிவித்தும் ஆசாரிய வுருவாய் வெளிநின் றநுக்கிரகித்தும் நின்றன ரென்பதூஉம், திருநோக்கஞ் செய்தல் முதலிய அறுவகைத் தீக்கையானு மன்றித் தமது திருவுருவைக்காண்டல் நினைத்தன் மாத்திரையே பக்குவரல்லாரும் பக்குவராய்ப் பயன்பெற நின்ற திருவருட் பெருமைய ரென்பதூஉங் குறித்ததென் றுணர்க. இங்ஙனம் ஓதாமல் வேதாகமாதி யுணர்ந்தமை முதலியவற்றை ஆசிரியர் கூறிய * "தன்மையு முன்னிலையு" மென்னுந் திருவெண்பாவாற் காண்க.

அல்லதூஉம், ஞானசம்பந்த வாதுவென்ற சம்பந்தனென்பதற்குமே னிற்கவைத்த விதப்புக் குறிப்பாற் பிள்ளை

* ஒழிவிலொடுக்கம்; பொதுவிலுபதேசம்-42.

யார் இவ்வவதாரத்தின்மேனின்ற வவதாரத்தினுங் குமார சற்குருவாய் அரனுர்க்கும் அகத்தியனுர்க்கும் உபதேசித்தருளிய ஆசாரியத் தலைமையுங் குறித்ததெனக் கொள்க.

அருணகிரிநாதர்.

தேன்னா வனக்கனஞ் சூழ்காத் திரிநக குலகரத்
தென்ன வனாங்கனந் தப்பத நீட்டினன் செல்வமுன்பின்
றென்ன வனங்கநன் னீற்றூற் றிருத்திய தென்னவின்னாந்
தென்ன வனங்கனங் கைச்சிலைக் கூனையுந் தீர்த்தருளே.

என்றதனுற் பிள்ளையார் இவ்வவதாரத்திற்கு மேனின்ற அவதாரத்தில் குமார சற்குருவென்பது காண்க.

கல்லாடம்.

"உழன்மதிற் சுட்ட தழனகைப் பெருமான்
வணங்கினின் றேத்தக் குருமொழி வைத்தோய்
குறுமுனி தேற நெடுமறை விரித்தோய்."

சித்தியார்.

"அருமறையா கமமங்க மருங்கலைநூ றறிந்த
வகத்தியனுக் கோத்துரைக்கு மருட்குருவாங் குருளே."

என்பவைகளா லரனுர்க்கு மகத்தியனுர்க்கு முபதேசித்த ஆசாரியத் தலைமையை யுணர்க.

ஆயின் குருவேந்தனென்றது குருராயனென்றது எது குறித்தற்கோவெனின், நான்கன் வேற்றுமையா னடுத்து மிக்குயர் நெறிப்பொருண்மையின் வந்த காரகச் சிறப்பொருதலைத்

## ஒழிவிலொடுக்கம்.

தொடர்மொழிப் பெயராய இக்குருராய னென்பதன்கட் குருவென்பதன் முதனிலை யெழுத்துத் தமிழியல் விதிப்படி மொழிக்கு முதலாகியும் ராயனென்பதன் முதனிலை யெழுத்துத் தமிழியல் விதியின்றி ஆரியவியல் விதிப்படி மொழிக்கு முதலாகியும் வந்து இருவகை யியலுங் கோடலின் இதனைத் தம்பெயராக வுடைய பிள்ளையாருந் தமிழ்நூல் வடநூலென்னு மிருவகை நூற்கு முரியாரென்பது குறித்தற்கென்க. ஆசிரியர் * "மறைப்புலவன் றமிழ்க்குரிசில் சீகாழிச் சம்பந்த" னென்றதனு லிருவகை நூற்கு முரியாரென்பது காண்கவென்க. அவ்வனூஉம், பொருள் வேறுபடாது சிறிதே வடிவு வேறுபட்டு நின்ற குருராயனென்பது தன்னை உள்ளூன்றி நோக்கினர்க்கு இலைமறை காய்போல் ஐ யென்னும் உயிர்மெய்யோடிருந்ததனை முன்வடிவம் உட்கொண்டு விளங்கக்காட்டி நிற்கின்றதாகலின் இதனையுடைய பிள்ளையாருந் தமது கடவுட்டன்மை வேறுபடாது உத்தமபுருட வுருவங்கொண்டு நின்ற தம்மை அன்பான் உள்ளூன்றி நோக்கினூர்க்குக் குமார சற்குருவென்னும் பெயர்கொண்டு அளவிகந்த சூரியருதயம் போன்று ஒளிவீசுந் தம் முன்னுருவாய தெய்வத் திருவுரு உட்கொண்டு விளங்கக்காட்டி நின்றன ரென்று குறித்தற் கென்பதுமாமென்க.

### ஆளுடைய பிள்ளையார் புராணம்.

மறையவர் திருவே வைதிக நிலையே வளர்ஞானப்
பொறையணி முகிலே புகலியர் புகலே பொருபொன்னித்
துறைபெறு மணியே சுருதியி னொளியே வெளியேவந்
திறையவ னுமையா ளொடுவரு டரவெய் தினையென்றார்.

* ஒழிவிலொடுக்கம்: பொதுவிலுபதேசம் - 11.

என்று மூவாண்டிற் பிள்ளையார் திருவருள் வடிவைக் கண்டு சீகாழியுள்ளார் வியந்து கூறியவாறாய இச்செய்யுளால் உள்ளூன்றி நோக்கினார்க்குத் தம் முன்னூலைக் காட்டி நின்றனரென்பது காண்கவென்க.

இனி இன்றியமையாக் * காட்டுளதேற் காட்டுவதன்றி மற்றைய விரிக்கிற் பெருகுமென்க.

அல்லதூஉம், குருவென்பதன் ஈற்றுயிர் மெய்யோடு ராயனென்பதின் முதலுயிர்மெய் புணராப் புணர்க்கையாய் நின்றதாகலின் இங்ஙனம் ஆனந்தவடிவராகிய பிள்ளையாரும் தாங்கொண்டருளிய மாணிடத்திருவுருவோடு புணராப் புணர்க்கையாய் நின்றனரெனக் குறித்தற் கென்பது மாமென்க.

அல்லதூஉம், குறிலிணைக்கெதிர் நெடிற்குறி லெண்ணீடாக நிற்பவும் ஈற்றின் அவ்வெண்ணீடின்றி பொற்றுநிற்பவுந் தொடர்ந்த மொழியாகலிற் பிள்ளையாரும் பகருவார்க்கு மறைப் பொருளாயும் அநுட்டிக்குவார்க்கு அநுபவப்பொருளாயும் நின்றன ரென்று குறித்தற்கென்பது மாமென்க. இங்ஙனங் குருராய னென்பதற் குவ்வென்பது இருள் ருவ்வென்பது அருள் ராய னென்பது விளங்கச் செய்கின்றோன் பொருளாம். இதனால் குவ்வென்னும் அசுத்தாவத்தையில் நின்றோரை ருவ்வென் னுஞ் சுத்தாவத்தையில் தாம் நின்றவண்ண நிறுத்துகின்றோர் குருவாவர். இச்சுத்தாவத்தைக்கு ஆதாரனாகியும் அதீதனாகியும் விளங்கி இவ்வவத்தையினின்றும் அக்குருவாயினோர் தாழாத

* காட்டு - உதாரணம்.

வண்ணம் அருள்செய்து நின்ற அதிதப்படுத்துகின்றோன் ராயனுவன். ஆகலின் இதனுணு முணர்கவென்க.

எழுத்தாதி பல்வகைக் குறிப்பிற் பொருணெறிப் பற்றி நின்ற நோக்கம் செறிவு நுட்பம் இங்கிதம் இன்பம் கம்பீரஞ் சிறப்பு உறுதி முதலிய நற்குணந் தழீஇய சொற்புணர் ஈதென்றே ஆசிரியரும் "சரிதாதி நான்கினுக்கு" மென்னுந் திரு வெண்பாவி னிடைக்கண் குருராய னென்று இதன்பெருமை தோன்ற வைத்தனரென்க. இஃதின்னும் விரிக்கிற் பெருகு மென்க.

வாதுவென்ற சம்பந்த னென்பதிற் பொதுவானே வாது வென்ற என்றது என்குறித்தோவெனின், எண்வகைக் குன்றத் தெண்ணாயிரவராய பாயுடுக்கைப் பறிதலைச் சமணர்கள் ஒருங்கேகூடித் தென்மதுரைக்கண் செந்தமிழ்ப் பாண்டியனை முன்னிட்டுச் செருக்காற் செய்த சுரவாதம் அனல்வாதம் புனல்வாதங்கள் பிற்படத் திருநீற்றானுந் திருவாக்கானும் வென்று திறல்கொண்டமை யன்றியும் பரசமயகோளரி யென்று தானே யொலித்த திருச்சின்னத்தின்தெய்வப் பேரொலி கேட்டு உளம்பொறாது எதிரிட்டு மறித்த போதமங்கைப் புத்த நந்தியின் பொய்த்தருக்கமும் புழுத்தலையும் பொடிபட்டழிய வும் பின்னர் உள்ளதுபோன்று இல்லதைப்பற்றிச் சாக்கியஞ் சூழ்வுட்டலைவனுய சாரிப்பத்தன் சிற்சில வகையாற் செய்த சமயவாதந் தலைதடுமாறவுஞ் செந்தமிழ் வேதத் திருமுறை

தாங்கி மேம்படும் அறிஞரான் வெற்றிகொண்டமையும் திருவோத்தூரின்கண் அரனுக் கிடுபனை யாண்பனை யாயிற்றே யென்று அசதியாடிய அமணக்குழூஉக்களின் வாய்வாதங்கள் மண்பட்டொழியத் தாம் திருவாய் மலர்ந்த திருக்கடைக் காப்புள் ஓர் மொழியானே அவ்வாண்பனை பெண்பனையாகச் செய்து விறல்கொண்டமையுங் குறித்ததென்க.

அல்லதூஉம், வாதென்பது இலக்கணையாகக் கொண்டு பெருமண நல்லூரின்கண் திருமணநல்விழாவைத் தரிசிப்பான் வந்த மக்கட் கெல்லாந் தொன்றுதொட்டு இடைவிடாது உடல் நிழற்போற் சூழ்ந்துள பிறவிப் பெரு வாதுகளைத்தும் வென்றதூஉம், திருப்பாச்சிலாச்சிராமத்தின்கண் மழவன் மகளார்க்கடுத்த முயலகவாது வென்றதூஉம், மருகற்கண் ஓர் வணிகனுக்கடுத்த விடவாது வென்றதூஉம், இவை முதலியவுங் குறித்த தெனினுமாமென்க.

வெற்றிகொண்ட பொருட்டிறன் முதலியவற்று ளொன்றேனுந் தோன்றக் கூறாது இலேசானே வாதுவென்றது என்றது என்குறித்தோ வெனின், பிறர்க்கு இங்ஙனம் வேறல் தம்மானுந் துணையானும் பற்பல நாட் பற்பல வகையின் முயற்சி செயினும் முற்றாதெனினும் பிள்ளையார்க்குச் செந்தமிழ் மொழியுந் திருவாக்கானே ஆண்டாண்டு அவ் வேறல் முற்றிய தென்பது குறித்தென்க.

வாது என்பது குருராயனென்பதனோடுஞ் சம்பந்தனென்பதனோடுஞ் சாராது நடுநின்றமையின் அத்துவித நெறியி

னுஞ் சேராது துவிதநெறியினுஞ் சாராது நின்ற பதிதவாதிக ளது பயனில்வாத மெனினும் அமையுமென்க.

எதிரேற்கப்பட்டு எதிர்வினை கீழ்ப்பட மேற்கொள்வினை யெழுச்சிப் பொருளின் வந்த வெல்லென்னும் பிறவினைப் பகுதியானடுத்த வென்ற என்னும் பெயரெச்சம் சம்பந்த னென்னும் பெயர்கொண்டு முடிந்து இங்ஙனம் வெற்றிகொ ண்ட பருவம் பிள்ளையார்க்கு இளங்குமாரப் பருவ மெனக் குறித்ததென்க. என்னை? எச்சமென்ப திளஞ்சேய் மேற்றாக லின்.

சம்பந்தனென்பது பிள்ளையார்க்கு மூவுலகைவக்கண் மூவு லகும் புகழப் பொற்பொடு புணர்ந்த அற்புதத் திருப்பெயராக லின், ஆண்டுப் பெருமான் அருளப் பிராட்டியாரளித்த சிவஞா னத் தெள்ளமுதருந்தி அச்சிவஞானத்திற்குரிமை பூண்டமை குறித்த தென்றுணர்க. ஆயின், சிவஞான சம்பந்தனென்றோது சம்பந்தனென வைத்தது என்கொலோ வெனின், சிவஞான த்திற்கும் அன்றிச் சிவானந்தம் ஆனந்தாதித மென்பவைக்கு முரிமைபூண்ட நிலைமைபற்றியும், அவற்றை உலகுயிர்க்கு இங் ஙனமென் றுணர்த்தி உரிமை செய்விக்கும் மாட்சிபற்றியும் அங்ஙனம் வைத்ததென்க. அல்லதூஉம், சுருங்கச்சொல்லுதல் வனப்பினாற் சம்பந்தனெனவே சிவஞான சம்பந்தனென உரி மைச் சிறப்பு வழக்கால் தானே தோன்றுமென வைத்ததெனி னுமாமென்க. எங்ஙனமெனின், இந்திரனென்பது பொருநட் சிறப்பு வழக்காற் றொன்னுடையானையுஞ் குறிக்குமாகலி னெ ன்க

வள்ளல் மலரீந்நா ளென்னும் ஒருவாக வனப் பிருவகைச் சந்தி மூவகை மொழி தொகைச் சொற்றொடர்க்கண் வள்ளலென்னுங் குணப்பெயர் வினைமுதற் றொழிற் பயனுறப்படு முடைமைக் குணப்பெயராய் நின்று பிள்ளையாரது திருவடிகள் தம்மை யடைந்தோர்க்கு வரையாது ஆனந்தப்பேற்றை யளித்து அவரைத்தாங்கிக் கோடலைக் குறித்ததென்றுணர்க.

அஃதேல் ஆனந்தப் பேற்றைத் தருதற்குந் தாங்கிக்கோடற்குங் கருத்தர் பிள்ளையாரன்றே அங்ஙனமிருப்பத் திருவடிகட்கு இங்ஙனங்கூற லெங்ஙனமெனின், திருவடிகள்தம்மை வழிபடுவோர்க் கிரங்கி இன்பமீதற்பொருட்டு எழுந்தருளும் பிள்ளையாரது படர்ச்சி நிகழ்ச்சிக் கருவியாய் நின்று அவரை அவ்வழி படுவோர்பால் வருவித்தலானும், ஞானதீக்கை பண்ணுங்கால் அவர் சென்னியிற் சூட்டப்பட்டு ஐக்கியம் வருவித்தலானும் நித்தியானந்தப் பேறு வாய்க்கு மாகலி னிங்ஙனமென்க.

அல்லதூஉம், வாட்டமி லருளுங் கோட்டமில் குணனும் அசையாநிலையு நசையாமனனும் வெகுளாப்பண்பும் விடாப்பேரன்புஞ் செவ்வியின் மரீஇ எவ்வெவரெவ்வகை வேட்டனரவ்வகை விருப்பொடு குறிப்பின் வரையாதீதல் வள்ளற்றன்மை என்பவாகலின் இவ் வள்ளற் றன்மையைத் தம்பால் அடைந்தோரிடை அடைவித் தருளுங் கருணைபற்றி அங்ஙனங் கூறிய தெனினு மமையுமெ ன்க அஃதேல் வள்ளற்றன்மை வழங்கும் மலர்போலுந் திருவடியென்றன்றோ உரைவிரி

த்தல் வேண்டும், அங்ஙனமின்றி வள்ளற்றன்மையுடைய மலர் போலுந் தாளென விரித்திருக்கின்றதே யெனின், அங்ஙனம் அடைவித்தலும் வள்ளற் றன்மையே யாகலினும் உடைய தொன்றன்றே உதவப்படுமாகலினும் இங்ஙனம் விரித்தல் அங்ஙனங் கூறற்கும் அமைதியாமென்க.

அல்லதூஉம், அருளின்றியமையாத வள்ளற்றன்மைக்கு அவ்வருளே முதற்காரணமாகலின் ஆனந்த வடிவராகிய பிள்ளையார் அவ்வானந்தப் பேற்றை யளிக்கும் வள்ளற்றன்மைக்கு முதற்காரணமாகிய திருவருட் சத்தியே திருவடியென்று குறித்தற்குக் காரணத்தைக் காரியமாக ஈண்டு உபசரித்ததெனினு மமையுமென்க.

அல்லதூஉம், எமது திருவடிகளை வழிபடின் வீட்டின்பம் எளிதிற் றருவேமென்று பிள்ளையார் விதித்தருளிய அருள் விதிப்படி யறிந்து வழிபடின் அவ்வழிபாட்டான் அவ்வீட்டின்பந் தரப்பெறுத லுண்மையாகலின் அவ்வுண்மை நோக்கி ஈண்டுக் கூறியதெனினும் பிள்ளையார் திருமேனி முற்றுந் தெய்வத் தன்மை பூரணமாகலின் அதனை யறிவிக்க ஈண்டுக் கூறிய தெனினும் அமையுமென்க. திருவடிகட்கு அடையாய வள்ளலென்பதூஉம், ஆசிரியர் பெயராய வள்ளலென்பதூஉம், அடியிணை எதுகைத் தொடையாய் எழுத்தசை சீரொலி பொருளாதிகளா னொற்றுமைகொண்டு நின்று பிள்ளையாரது திருவடித்தீக்கைக்கும் ஆசிரிய ரதிபக்குவத் தன்மைக்கு முள்ள ஒற்றுமைப் பொருத்தம் விளக்கின வென்க.

வளையென்பது (இரண்டாவதடியில்) பிள்ளையார்க்குக் காரணச் சிறப்புப் பெயராகக்கொண்டு பொருள் கூறுவாரு முளர். அங்ஙனங்கூறின் இத்துணைச் சிறப்பின் றென்று மறுக்க. என்னெனின், அவயவச் சிறப்பான அவயவிக்குணம் வெளிப்படுத்தலே பெரும்பாலும் இன்பமாகவி னென்க. இதனைப் * "போற்றிமா லான்முகனுங் காணாத புண்டரிகம்" என்பதனாற் காண்கவென்க.

வள்ளமலர்த்தாள் எனப் பாடமோதி வள்ளம்போலுங் குவிந்தவாய் மலரென மலர்க்கு அடையாக உரை விரிப்பாரு முளர்; அங்ஙனம் விரித்தல் இத்துணைப் பெரும்பயனின்றென மறுக்க. இங்ஙனம் இன்னும் விரிக்கிற் பெருகுமென்க.

மலர் என்பது வள்ளற்றன்மையின் ஏற்குவைத்தமையின் ஈண்டு நிறைதலுங் குறைதலுமாயுள்ள நீர் நிலைக்கண் தோன்றிய மழிந்தும் விரிந்தும் குவிந்தும் வாடியு நின்று வண்ணமு நறையு வாசமுஞ் சிறிதே சிறுபோது கொண்டு பறித்தலாதிய சிறுதொழிற்படு மலர்களை நீக்கி ஆண்டுத் திரிபிலாத் தெய்வத்தெண்ணீர் நிலைக்கண் ஒழியா மலர்ச்சியும் அழியா மணமும் பொன்னிறப்பொலிவும் இன்னறவொழுக்கும் மென்மையுந் தண்மையும் வியப்புறு முருவும் கண்டோர் கண்கவர் காட்சியும் மாட்சியுங்கொண்டு முக்காலமுங் குன்றா மலரைக் குறித்தமை காண்க. என்னெனின், பிள்ளையார் திருவடிகள் மெய்ஞ்ஞான விளக்கமாய் அருண்மணம் வீசிப் பொன்னிறம்

* திருவாசகம்: திருவெம்பாவை - 20.

பொலிந்து ஆனந்தமொழுக்கி மெல்லெனவுற்றுத் தண்ணெனக் குளிர்ந்து தரிசிக்கின்றோர் வியப்புறு முருவாய் அவரது விருப்பநோக்கம் பரவ என்றும் ஒரு தன்மையவா யிருக்கின்றமையினென்க.

ஆயின் மலர்போலுந் தாளென்று உவமை விரிந்தபடி நிற்றற் கிடங்கொடாது மலர்த்தாளென்ற தென்னெனின், அத்தெய்வத் திருமலர் தனைக் கண்டோர்க்குச் சிறிய விடயாநந்தந் தருதலே யன்றித் திருவடிபோற் சிவானந்தந் தரமாட்டாச் சிறுமைநோக்கி யென்க.

அல்லதூஉம், சுபவடிவாய் எவ்வகைச்சுபங்கட்கும் முன்னின்று அதனை விளக்குறச் செய்வதால் மகிழ்வுடையோர் யாரும் பேற்கொண் டணியப்படுவதாய் நிற்கு நன்மலர்போலு மெனக் கூறினுமமையும். என்னெனின், திருவடிகள் அருள்வடிவாய் ஆனந்தப் பேற்றிற்கு முன்னின்றளிப்பதாய் அறிவுடையோர் தந்தலைமேற் கொண்டணியப்படுவதாய் நிற்றலினென்க.

அல்லதூஉம், மலரையடைந்த வண்டுகள் அதனது தேனுண்டு களிகொள்ளுதல்போல் திருவடிகளை யடைந்தோரும் அருளாநந்தம் பெற்று இறுமாத்தலின் இங்ஙனங் கூறியதெனினு மமையுமென்க. இதனைத் தொகையுவமை யணியாகக்கொண்டு பொருள் கூறுவாருமுளர். அவர் கூறுங் கூற்றிற் பெரும்பயனின்றென மறுக்க. இஃதின்னும் விரிக்கிற்பெருகுமென்க.

தாள் என்பது அடிகட்கன்றியும் முயலுதற்கும், உண்ணின்ற பொருள் வெளிப்படாமைக்கு மடனை வெளிகின்றோர்

உட்சென்று கவரப்படாமைக்குங் காப்பாகக் காப்பினிற்குங் கருவிக்கும், அணிசற்கு அணியின் இருகடையு மிணைத்து நிற்கும் இடைப்பூட்டிற்கும் இடுகுறி வந்த பலபொரு ளொரு சொல்லாகலின், திருவடிகள் தம்மை யடைந்தோரை ஆநந்த நிலையுட் சேர்த்தலும், அங்ஙனஞ் சேர்ந்தோர் மீட்டும் அவ்வாநந்த நிலையினின்றும் போதவுசைவு தோற்றி வெளிப்படாமைக்கும் அவத்தைகளுட் சென்று தாக்கிக் கவரப்படாமைக்குங் காப்பாக அருளுருவா யதன் முன்னிற்றலும், சீவத்துடன் சிவனை யிடைநின்று கூட்டுவித்தலுங் குறித்தது காண்க. இக் குறிப்புணர்த்தவன்றே மலர்க்காலென்னாது மலர்த்தாளென்ற தென் றுணர்க.

தலைமேல்வைத்து என்பது ஆசிரியர் தம்மாசாரியராகிய பிள்ளையார் திருவடித்தீக்கை செய்யத் தாம் பெற்றமை குறித்தது காண்க. அஃதேல் வைக்கப்பட்டு எனச் செயப்பாட்டு வினையெச்சத்தானிறுத்தற்பாலதன்றோவெனின், ஆசிரியர்க்கு அத்திருவடிக்கண் ணுள்ள பிரியத்தொடர்ச்சியின் பெருமை தோன்ற இங்ஙனம் நின்று அங்ஙனங் குறித்ததென்க.

இதற்கு இவ்வாறன்றித் தலைமேற் பாவனையான் வைத்தெனக் குறித்ததென்று கூறுவாரு முளராலோ வெனின், அவ்வாறு கூறிற் பிள்ளையார் இந்நூலாசிரியர்க்கு ஞானாசாரியரென்பதும் இவர் ஞானதீக்கை யுடையாரென்பதும் விளங்குத லின்றி மற்றை யாசிரியர்போல் எடுத்தநூல் இனிது முடிதற் பொருட்டுப் பாவனையான் வழிபடு கடவுட் டுதிச்சினரென்று இலேசிற் கருதப்படுமாகலின் அங்ஙனங் கூறல் மரபன்றென்க,

தலையில்வைத்து என்னாது தலைமேல் வைத்து என்றமை யான் மறைமுடிக்கண்ணே வயங்காநின்ற அச்செல்வத் திரு வடியின் சீர்மை தோன்றிற்றென்க.

ஓர்ந்து என்பதில் ஓர் என்னும் பிறவினை முதனிலை, அறிவு தனக்கெதிரிட்ட உணர்ச்சிப்பொருட்கண் எதிரிடுவ துபோன்று எதிரிடாது உள்ளாழ்ந்த அப்பொருட்டிறன் எதிரி டப் பெயரும் புடைபெயர்ச்சியும் எதிரிட்ட பின்னர் விகற்பி யாது எதிர்க்குந்தொறு மெதிரிடப்பெயரும் புடைபெயர்ச்சியுங் கோடலிற் கருவித்திறனுந் தன்றிறனும் அருட்டிறனும் உற்று ணர்ந்து அவ்வுணர்ச்சி விகற்பியாது தேறி நின்றமையைக் குறி த்தது காண்க. இக்குறிப்புத் தோன்றவன்றே திருவள்ளுவ நாயனாரும் * "ஓர்த்துள்ள முள்ளதுணரி" னென்றாரென் றறிக.

உள்ளந்தழீவி லென்பதில் உள்ளமென்பதன் பகரப்பத வி யிற்றுப் பகுபதப் பொருளி னிடவாகு பெயராய் அணுப் பொருட்கண் வந்த உள்ளென்னும் பகுதி உட்புறத்தும் அப் போதம் எழுஞ்சிற்றசைவும் பேரசைவுங் குறித்தது காண்க.

உள்ளம் என்பது வாதனையான் உள் எழும்போதத் திற்கு ஆகுபெயராயது. வள்ளலென்பது போன்று ஒழுகிசை யாய் வர உள்ளவழீவி லென்னாது பொறுத்திசையாய் வர உள் ளத் தழீவிலென்றதென்கொலோ வெனின், வேற்றுமை வழி யாகலினும் போதவசைவு சார்பின்றி அமையாமை குறிக்க

* திருக்குறள் - 357.

வேண்டுமாகலினும் சாரியையோடு புணர்த்தி அங்ஙனங்கூறிய தென்க. அழிவு என்பதில் அழி யென்னும் பொதுவினைப்பகுதி முன்னர்த் தோற்ற நிகழ்ச்சிப் பின்னரோர் காலத்து மோரிடத்து மின்றிக் கெடுதற் பெயர்ச்சிக் கண் வந்ததாகலின், அப்போத நிகழ்ச்சி பின்னர் எக்காலத்தும் உட்புறமென்னும் எவ்விடத்தும் தோற்ற நிகழ்ச்சியின்றி யொடுங்கியவாறு குறித்ததென்றுணர்க. இங்ஙனமன்றி உள்ளத்தழிவி லென்பதற்கு மனத்தின்அசைவு அற்ற இடத்து எனப் பொருள் கூறுவாருமுளராலோவெனின், மனத்தினசைவு போத அசைவு அறின் றானே யறுமாகலினும் அஃது அறுதவிடத்து இஃது எவ்வாற்றானும் அறுதாகலினும் அது பொருந்தாதென்க. இதனை ஆசிரியர் கூறிய * "பற்றறுதபோதும் பதறு" மென்னுந் திருவெண்பாவாற் காண்க வென்க.

அடுக்குந்தேன் என்பதில் அடுக்கும் என்பது அடுத்தலென்னுந் தொழிற்பெயர்க்கண் தல் விகுதி தன்னொற்றுச் சந்தியொடு நீங்க எதிர்காலப் பெயரெச்ச இடைநிலையும்மை ககர மெய்ச்சாரியை யூர்ந்து தன்னொற்றுச் சந்தி பெற்றுண்டு நின்று இறையுமிடப்பாடு தோற்றுது செறிதற் பெயர்ச்சியும், அடுக்கலென்னுந் தொழிற்பெயர்க்கண் அல் விகுதி நீங்க அவ்வெதிர்காலப் பெயரெச்ச இடைநிலை யும்மை விகுதி நீங்க நின்று தன் வரவு கண்டோடிய குற்றுகர மூர்ந்த மெய்க்கண் ணேறி நின்று இறையுமிடைப்போதின்மை படாது பன்முறை-

* ஒழிவிலொடுக்கம்: யோகக்கழற்றி - 15.

மேன்மே லுறுதற்பெயர்ச்சியும் பொருளாகக்கொண்டு இரு வகைப்பகுதி யொருவகை யெச்சமாக நிற்றலின், சிறிதும் இடத்தானுங் காலத்தானும் பிரிவுதோன்றாது செறிந்து பன் முறை மேன்மேலெழும் ஆநந்தத் தே னென்று குறித்த தென் றுணர்க.

உள்ளத்தழிவில்அடைப்பது ஆநந்தமாகலின் தேனென்பதை உவமைக் குறிப்பாற் சிவானந்தத்தேனென்ற தென்றுணர்க.

தேனுண்ட வண்டு அசைவின்றி அத்தேன் மயமாயிருத் தல்போல ஆநந்தானுபவத்தர் போதவசைவின்றி இவ்வாநந்த மயமாயிருத்தலின் உவமையாகக் குறிக்கப்பட்ட தென்றுணர்க. இதனை ஒப்புமைக் கூட்டு ஒட்டு ஆதிகளாகக் கூறுவாருமுள ராலோ எனின், அவ்வாறு கூறினும் பொருள் சிதையாமையின் ஒருவாறு அமையுமென்க.

போத அசைவின்கண் தோற்றல் விடயாநந்த மாகலிற் போத வொழிவின்கண்தோற்றல் சிவாநந்தமெனக் குறித்தற்கு உள்ளத்தழிவிலடுக்குந்தே னென்ற தென்றுணர்க. எங்ஙன மெனின், உள்ளத் தழியாமையின் அடாத் தேன் என்று எதிர் மறுக்கப்படுதலி னென்க.

மதுரம்பற்றித் தேனையாநந்தத்திற் குவமை கூறுவாரும் உளராலோவெனின், அது நாவிடயமாய் இறைப்போது நிற்ற லின் இத்துணைச் சிறப்பின்றென்க.

அன்பரோலா முன்னா என்பதில் அன்பர் என்பது பொ ருள்புகழாதியைக் குறித்துப்பயில்வோரை நீக்கிச் சிவானந்

தம் எந்நாள் அடைதுமென்று இடைவிடாது அதனையே விரு ம்பிப் பயில்வோரைக் குறித்ததென்றுணர்க. எலா மென்பது சரியையாதி கன்ம மார்க்கங்களைக் கூறும் பிறநூல்களெல் லாம் பருவநோக்காது சாதி சமயாசார விகற்பங்களை நோக் கிச் சிலரை நீக்கியுஞ் சிலரை நிறுவியு மதிகரித்தல் போலாது அச்சாதி சமயாதிகளி னுயர்ந்தோர் தாழ்ந்தோர் யாரேனும் பருவத்தராயின் இந்நூற்கு உரியராவ ரென்பது குறித்ததென் றுணர்க.

உட்கொள என்னும் பொருள் உட்கொண்டு பொருட்டுப் பொருளிற் போந்த உண்ண என்னும் வினையெச்சம் ஆநந் தாபநுவத்திற்கு விடாத இலக்கணை யாயிற்றென் றுணர்க. என்னையெனின், உண்ணலிற் பசிநீங்கல்போல் ஆநந்தாநுப வத்திற் பசுத்துவ நீங்கலி னென்க.

பயன் காரணம் பற்றிவந்த ஒழிவிலொடுக்க நூலென்பது ஒழிவிலொடுக்க மென்னு நூல் ஒழிவிலொடுக்கந்தரு நூலென இருவழிக்கும் பொதுவாய சந்தியான் வந்தமையின், தன்னை வேதாந்தத்திற்குஞ் சித்தாந்தத்திற்கும் பொது வென்று குறி த்ததென் றுணர்க.

ஒழிவிலொடுக்க நூலுரைத்தான் என்பதில் வேற்றுமை சாரியை யுருபு முதலிய வொன்றும் விரியாது நிற்றலின், ஞா நாசாரமன்றிக் கருமாசாரமொன்றும் விரியாத இந்நூலின் நின் மலத்தன்மை தோன்றிற் றென் றுணர்க.

உரைத்தான் என்பது ஒருவர் மந்நுட்பத்தால் தாம் கண் டறிந்த மாற்றுயர்ந்த பொன்னின் தன்மையைப் பிறரு மறி

ந்து பயன்கோடற்குக் கட்டளைக் கல்வி னுரைத்துக் காட்டல் போற் சுருதி குரு அனுபவத்தால் தாம் அநுபவித் தறிந்த சிவாநந்தப் பேற்றின் தன்மையைப் பக்குவருமறிந்து பயன் கோடற்பொருட்டு நூற்கண் உரைத்துக் காட்டினரென்று குறிப்புறுத்திற் றென் றுணர்க. என்னெனின், உரையென்பது பொன்னுரையும் பொருளாகக் கோடலினென்க.

உரைத்தான் என்னும் பயனிலை செயப்படுபொருளின் இறுதியின் இயையாது செயப்படுபொருட்கும் கருவிப்பொருட்கும்மேல் தாடலைமேல்வைத்து என்பதன் இறுதியில் தொடர்ந்து நின்றது என்னெனின், சிவஞானத் தீக்கையுடையராய் உரைத்தார் என்பது மன்றித் தமது ஆசாரியர் திருவடி சான்றாகத் தாங்கண்ட அநுபவத்தை விளங்க உரைத்தார் என்பதூஉங் குறித்தற்கென்க. என்னை? தாடலைமேல்வைத்து எனவே சான்றாகவைத்து என்பது தானே அமையுமாகலின்.

தலைமேல் வைத்து என்பதன் பின் நிற்கக்கடவதாய ஓர்ந்து என்பது செயப்படுபொருட்பின் இறுதிநிலையாய் நின்றது என்னெனின், இந்நூல் கற்றோர்க்குக் கருமங் குறைந்து ஞானம் மேலிடுத லுண்மை குறித்தற்கென்க. எங்ஙனமெனின் அவ்வோர்ந்து என்பது வினைக்குறையாகலின் என்க.

உள்ளத் தழிவிலடுக்குந்தேனை அன்பரெலா முண்ண ஒழிவிலொடுக்கநூ லோர்ந்துரைத்தான் எனக்கொண்டு போத ஒழிவின்கண் அடுப்பதாய ஆனந்தத்தை அன்பரெல்லாம் அநுபவிக்கும்பொருட்டு வேதாகம முடிபான ஞானநெறியை ஆரா

யந்து ஒழிவிலொடுக்கமென்று ஓர் நூலை யுரைத்தார் எனப் பொருள் கூறுவாருமுள்ளர். அங்ஙனங் கூறின் ஆசிரியர் பரஞானமுடையார் என்பது தோற்றாது அபரஞான முடையாராகப் பொருள்படுமாகலினும் அபரஞானத்தாற் கூறப்பட்ட நூல் மிகச் சிறவாமையானும் அது பொருந்தாதென்க.

இந்நூலியற்றற்கேற்ற நற்பொருளுடைமையும், சிறப்புப் பாயிர இலக்கணத்துள் ஆக்கியோன் பெயரேயென முதல் நிறுத்தப்பட்ட நிமித்தகாரணச் சிறப்புடைமையும், இச்செய்யுண் முடிபுக்கு எழுவாயாந் தலைமை யுடைமையும் பற்றி வள்ளல் என முதல் நிறுத்தியதென்க. இந்நூலாசிரியர்க்கு ஆசாரியர் இவர் என்பது தோன்றற்கு அவ் வள்ளல் என்பதன்புடை குருநாயன் என்பதை நிறுத்தியதென்க. இங்ஙனம் ஆசாரிய ரென்பவர் பிள்ளையார் என்பது தோன்றற்கு ஞானசம்பந்தனென வைத்தல்வேண்டுமாகலின் அந்த ஞானத்தைக் குறிக்கும் பாசவெற்றியாய வாதுவென்ற என்பது முன் கூட்டிச் சம்பந்தனென அதன்புடை நிறுத்தியதென்க.

இரண்டாமடிக்கண் பிள்ளையார் தாள்கள் நிறுத்தத் தொடங்கி, முன்னர் அத்தாள்களின் இயற்கை அருளென்று குறிக்க வள்ளலென்றும், அதன் வடிவம் ஆநந்தமென்று குறிக்க மலரென்றும் முறையே வைத்து வள்ளன் மலர்த்தாளென நிறுத்தியதென்க. தாள்களன்றியும் பிள்ளையாரும் அருளியற்கையரே யென்பது குறிக்கச் சம்பந்தனென்னுஞ் சத்தந் தோற்றியவுடன் வள்ளற் சத்தந்தோன்ற நிறுத்தியதென்க. இங்ஙனம்

நிறுத்தியவை சொற்பொருண் முறைநிலை. தாளென்பதற்குந் தலையென்பதற்கு முள்ள சொற்பொருட் சம்பந்த இன்பம் பற்றித் தாட்டலை யென்றும், தலையென்பதற்கும் மேலென்பதற்கு முள்ள உரிமை நோக்கம்பற்றித் தலைமேலென்றும், மேலென்னும் இடப்பொருட்கு வைத்தற்றொழில் சிறந்தது பற்றி மேல் வைத்து என்றும், வைத்து என்பதற்கும் உரைத்தானென்பதற்கும் இறுதியும் முதலும் இனமாதல் பற்றி வைத்துரைத்தான் என்றும், முறையே நிறுத்தியதென்க. இவ்வனம் நிறுத்தியவை சொன்முறை நிலையும் சொற்பொருண் முறை நிலையுமாம்

இங்ஙனம் முற்றும் முறைநிலை கூறப்புகின் மிகப் பெருகுமாகலின் ஒருவாறு காட்டினம்; மற்றையவும் இவைகொண்டுணர்கவென்க.

இச்செய்யுட் பொருள் ஆசிரியரது அருளறிவின் மாட்சிமையைய வெளிப்படையானுங் குறிப்பானும் விளங்க விரித்தலின், வாகைத்திணையுட் சால்புமுல்லைப் பொருளின்பாற் பட்டதென்க. என்னை? * "சால்புமுல்லை: வான்றோயுமலையன்ன, சான்றோர்தஞ் சால்புரைத்தன்று" என்பவாகலின்.

இச்செய்யுள் தன்னுள் செயப்படு பொருளாய் நின்ற நூற்சிறப்பைத் தன்னானுந் தன்னுறுப்புக்களானுங் குறிப்பாற் குறித்து நின்ற நன்றேக்குடைச் செய்யுளென் றுணர்க. அங்ஙனம் குறித்தவை எங்ஙனமெனின், இச்செய்யுள்தான் கலி

* புறப்பொருள் வெண்பாமாலை: வாகைப்படலம்-31.

ப்பா வஞ்சிப்பா ஆசிரியப்பா என்னும் முப்பாவினுஞ் சிறந்த வெண்பாவாகலின் இக்குறிப்பால் இந்நூல் சரியைநூல் கிரியைநூல் யோகநூல் என்னும் மூந்நூலினுஞ் சிறந்த ஞானநூலென்று குறித்ததென்க. தான் ஈரசையான் ஆகிட்டு இருவகைத் தளைதழீஇ ஒழுகிசைச் செப்பலோசையான் வந்ததாகலின், இக்குறிப்பால் இந்நூல் ஆகமமுடிவும் வேதமுடிவுங் கூறும் இருவகை நெறியும் ஒருவகை நெறியாத் தழீஇக் கொண்டிருந்தமை குறித்ததென்க.

தான் ஒன்றடுத்த இரட்டை முப்பத்தாறெழுத்துக்களைக் கொண்டு நிற்றலின், இக்குறிப்பான் இந்நூல் பாசமொன்றடுத்த தத்துவ முப்பத்தாறென்றும் அம்முப்பத்தாறன் தன்மையிவையென்று பகுத்தறிதல் வகையும் உணர்த்துவதெனக் குறித்ததென்க.

தான் நான்கு அடுத்த முப்பத்தாறசைகளை அசைத்து நிற்றலின் இக்குறிப்பான் இந்நூல் அத்தத்துவ முப்பத்தாறனையும் நியதிகளைதன் முறையை யுணர்த்துவதெனக் குறித்ததென்க. அஃதேன் முப்பத்தாறன்மேல் நான்கடுத்ததென்னெனின், ஆன்ம தத்துவத்தின் வன்மை தோன்றற்கு ஓரசையும் வித்தியா தத்துவத்தின் வலிதோன்றற்கு ஓரசையும், நாத தத்துவத்தின் பெருமை தோன்றற்கு ஈரசையும் இருந்தனவென்க.

தான் பதினைந்துசீர் சீர்கொளநிற்றலின், இக்குறிப்பால் இந்நூல் ஆசாரியத்தன்மை சீடத்தன்மை பதித்தன்மை பசுத்

தன்மை பாசத்தன்மை உபதேசத்தன்மை பக்குவத்தன்மை யோக நிவிர்த்தி கிரியை நிவிர்த்தி சரியை நிவிர்த்தி விரத்தி விளக்கம் துறவுத்தன்மை அருளவத்தைத் தன்மை வாதனை மாண்டார் தன்மை நிலையியல்பு என்னும் இப்பதினைந்தனை யுஞ் சீர்பெறக் கொண்டதெனக் குறித்ததென்க.

தான் எழுவகைத் தளையின் இயைந்ததாகலின், இக்குறிப் பான் இந்நூல் ஆன்மதரிசனம் அருட்டரிசனம் பரைதரிசனம் பரையோகம் பரையோகநீக்கம் போதவொழிவு இன்பப்பேறு என்னும் எழுவகை நிலையும் அறிவிப்பதெனக் குறித்ததென்க.

தான் தனிச்சொல் பெற்று நான்கு அடியுடன் நடந்தா கலின், இக்குறிப்பால் இந்நூல் கூறும் ஒப்பற்ற ஞானமும் சுத்தசரியை சுத்தகிரியை சுத்தயோகம் சுத்தஞானம் என நான்குபாதத்தோடு நடப்பதெனக் குறித்ததென்க.

தான் ஒரூஉத்தொடையொடு மூத்தொடையான் இயன்ற தாகலின், இக்குறிப்பான் இந்நூல் சுருதி குரு அனுபவமென் னு மூன்றும் ஒத்தியன்றதெனக் குறித்ததென்க.

அல்லதூஉம், இச்செய்யுள் அடி நேரடியாய்விதித்த எழுத் தெல்லையின் இகவாது நிற்றலின், இக்குறிப்பான் இந்நூல் மெய்வீட்டின் நெறித்தாய் அவ்வீட்டின் நெறிக்கு எல்லையாய ஞானத்தின் இகவாது நின்றதெனினுமாமென்க. எல்லை என் னெனிற் "பத்தெழுத்தென்ப நேரடிக்களவே, யொத்தநா லெழுத் தொற்றலங் கடையே" யென்பவென்க. இங்ஙனங்

தொல்காப்பியம்: செய்யுளியல்-38.

குறித்தற்கன்றே இச்செய்யுளீற்றடியில் நூற்பெயரை வேறு அடை கொடாது தனிமையின் நிறுத்திய தென்க.

இச்செய்யுள் சிறபபுப் பாயிரத்ததாயின் அப்பாயிரத்திலக்கணம் இதனுளிருந்தவாறு எங்ஙனமெனின், வள்ளலென்பதனால் ஆசிரியர் பெயரும், குரு ராயன்வாது வென்ற சம்பந்தன் வள்ளன் மலர்த்தாடலைமேல் வைத்துரைத்தான் என்பதனான் ஞானாசாரியராகிய பிள்ளையார் அருளுபதேச வழித்தென உட்கொளப்படுதலின் வழியும், இந்நூற்றொடர் தமிழ்த் தொடராகலின் இத்தமிழ் வழங்கும் நிலமே இந்நூல் வழங்கு நிலமெனக் கருதப்படுதலின் எல்லையும், ஒழிவிலொடுக்க நூல் என்பதனால் நூற்பெயரும், ஒழிவிலொடுக்கமென அன்மொழித் தொகைப்பெயர் மாத்திரையின் நில்லாது நூலெனவிரித்தமையின் இந்நூலுந் தொகை விரியுடையதெனக் கருதப்படுதலின் யாப்பும், உள்ளத்தழிவி லென்பதனாற் கருதிய பொருளும், அன்பரெலா முண்ணவென்பதனால் அன்பரெலாம் உணற்பொருட்டு இஃதியற்றுக என்று உள்ளெழுந்து எதிரிட்டு நின்றது ஆசிரியரது பெருங்கருணையெனக் கருதப்படுதலிற் கேட்போரும், உள்ளத்தழிவிலடக்குந் தேனென்பதனாற் பயனும் புலப்படுமாகலின் அவை யிருந்தவாறு இங்ஙனமென்க.

☞ இச்சிறப்புப்பாயிரச் செய்யுள் முற்காலத்தது. இவ்வுரைசெய்தார் சிதம்பரம்-இராமலிங்கப்பிள்ளை யென்பவர்

---

உ

சிவமயம்.

# ஒழிவிலொடுக்கம்



## காப்பு.

### விநாயகர் தோத்திரம்.

நிம்ப நிழற்பா லும்பன் முகத்தார்
செம்பது மத்தா ளைம்பு கருத்தே.

### சுப்பிரமணியர் தோத்திரம்.

ஒழிவி லொடுக்கத் துரைவர நாயேற்குச்
செழிவிலொடுங் கருணை சேர்க்கு-முழுதின்பப்
பண்டைவள நாட்டும் பரமகுருப் போரூரன்
றண்டைவள நாட்டுதிருத் தாள்.

### திருஞான சம்பந்த சுவாமிகள் தோத்திரம்.

வள்ள லுரைத்த வழுவிலொழி விலொடுக்கத்
தெள்ளுமுரை யெல்லாந் தெரிவிக்கு-முள்ளமே
யெம்பந்த நீக்கு மிறைவன் றமிழ்க்காழிச்
சம்பந்தன் பூஞ்சதங்கைத் தாள்.

† ஆனைமுக னாறுமுக னம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியையுண் ணுடு.

☞ இத்தோத்திரச் செய்யுட்கள் உரையாசிரியரால் இந்நூற்கு உரை இனிது முடிதற்பொருட்டு இயற்றப்பட்டன.

---

* "துள்ளவுரை நாயேற்குறச்செய்யும்" என்றும் பாடம்.

† சில உரைப்பிரதிகளில் இது காணப்படவில்லை.

உ

சிவமயம்.

# ஒழிவிலொடுக்கம்

## உரைபாடம்.

## முதலதிகாரம்.

### வேதாகமப்

### பொதுவிலுபதேசம்.

ஆசாரியர் அநாசாரிய ரிலக்கண முதலியவற்றையும், இந்நூலிற் கூறிய கருத் தெல்லாவற்றையும் தொகுத்துப் பொதுவான் உபதேசமாகக் கூறினமையான், இவ்வதிகாரத் திற்குப் பொதுவி லுபதேசம் என்று பெயராயிற்று.

வெண்பா.

வேதா கமப்பவுரி வீசுங் களாசநிலை
ஆதார வெற்பி லபிடேகம்—போதத்
திருளிலெழு பாநு வெனதொழிவி லின்பக்
கருணைபொழி வானெடுத்த கை.

(உரை.) எனது ஒழிவில் இன்பக்கருணை பொழிவான் எடுத்த கை—எனது போதநாசத்தின்கண்ணே அருளாநந்தத்தைப் பொழியாநின்ற பிள்ளையார் உயர எடுத்துச் சுட்டோடு மெய்ப்பொருளைக் காட்டிய திருக் கரமானது;

வேதாகமப் பவுரி வீசும் களாசமிலே—வேதாகமங்களினது * பவுரிக்கூத்தினைப் பிரம்போடுங் கைவாரங் கொண்டு வீசி நிறுத்தும் ஓர் உண்மைநிலை;

ஆதாரவெற்பில் அபிடேகம்—ஆறு ஆதாரங்களாகிய பொருப்பரையன் முடியிற்சூட்டும் ஓர் மகுடம்;

போதத்து இருளில் எழு பாநு—ஆன்மபோதத்தின்கண்ணதாகிய ஆணவ இருளைக்கிழித்து எழாநின்ற ஞானசூரியன்.

(குறிப்பு.) அரங்கின்கண் நடிக்கின்ற கூத்தர் பலருக்கும் முதல்வனாகிய கூத்தன் வந்து கூத்தைக் கைவாரங்கொண்டு நிறுத்தி, அவ்வரங்கின்கண் உள்ள † குறுமன்னியர்கட்கெல்லாம் முதல்வனாகிய ‡ மகாமன்னியனையே புகழ்ந்துசுட்டி நின்றாற்போல, வேதாகமங்கள் கூறிய பல சமய நெறிகளையும் அச்சமயங்கட்குரிய கடவுளரையும் கடந்துநின்று, அக்கடவுளருக்கெல்லாம் முதல்வனையே பிள்ளையார் பரஞானக்கண்ணினால் உணர்ந்து புகழ்ந்து சுட்டி நின்றமையால் "வேதாகமப்பவுரி வீசுங் களாசமிலே" என்றும், நிராதாரமாகிய அருளினின்று

* வலமிடமாகச் சூழ்ந்தாடுங்கூத்து.

† சிலராலறிந்து மதிக்கப்படும் பிரபுத்துவமுடையோர்.

‡ பலராலு மறிந்து மதிக்கப்படும்பிரபுத்துவமுடையோன்.

நீதானமாகிய மெய்ப்பொருளில் சுட்டோடும் அதீதப்பட்டு நின்றமையால் "ஆதாரவெற்பிலபிடேகம்" என்றும், ஆன்ம போதத்தை மறைத்த ஆணவ இருளை நீக்கிச் சிவத்தை அறிவிக்குந் திருவருளைப்போல் இறைவனைப் பிறருக்கறிவித்தமையால் "போதத்திருளி லெழுபாநு" என்றுங் கூறினார்.

"தோடுடையசெவி யன்விடை யேறியோர் தூவெண் மதிசூடிக், காடுடையசுட லைப்பொடி பூசியென் னுள்ளங் கவர்கள்வன், ஏடுடையமல ரான்முனை நாட்பணிந் தேத்த வருள்செய்த, பீடுடையபிர மாபுர மேவிய பெம்மா னிவனன்றே"

என்னுந் * திருக்கடைக்காப்பான் மெய்ப்பொருளைத் தரித்துச் சுட்டிப்புகழ்ந்து நின்றபோது திருவுள்ளம் மெய்ப்பொருள் கிருபாநோக்கம் வைக்க அக்கிருபாநோக்கத்தின் வழித்தாய்ச் சென்று சிவத்தில் அதீதப்பட்டு நின்றார் என்பதும், பிறர்க்கறிவித்தார் என்பதும், முறையே "என துள்ளங் கவர்கள்வன்" என்பதனானும், "பெம்மானிவனன்றே" என்பதனானுங் காண்க. இத்திருக்கடைக்காப்பு பிள்ளையார் ஞானபோனகம் உண்டருளியபோது அருளிச்செய்யப்பட்டது.

† பிரளயாகலர்க் கநுக்கிரகித்தலும் இது.

* திருஞானசம்பந்தர் தேவாரம். திருக்கடையாப்பு என்று பாடங் கூறுவாரு முளர்.

† மும்மலங்களு ளொருமலநீத்தோர். நீத்தமலம் மாயாமலம். மாயையும் கன்மமும் நீத்தோர் விஞ்ஞானகலர். ஆணவம் கன்மம் மாயை மூன்றையு முடையோர் சகலர்.

வேதாகமங்களை முதற்பொருளாக்கி அவை ஒன்றோ டொன் றொவ்வாது கூறும் பல பேத சமயநெறிகளைக் கூத் தாக்கினார்.

ஆதாரம் ஆறையும் ஊடுருவிநின்ற சுழிமுனையை மேரு வென்றும், இடை பிங்கலைகளை அதனை வலம்வருஞ் சூரிய சந்திரரென்றும் யோகிகள் கூறுவர், ஆகலின் "ஆதாரவெற்பு" என்றார். முடிகூறினமையால் வெற்பென்னும் அஃறிணை உயர்திணையாகக் கூறப்பட்டது.

"கை" என்பதை மூன்றிடத்துங் கூட்டுக.

கைவாரங்கொள்ளுதல் - கூத்தை நிறுத்தற் பொருட்டு ஓகோ என்னும் அடுக்குமொழி கூறிக் கரம் உயர எடுத்து வீசுதல்.

களாசம்-பிரம்பு. பிரம்போடும் வீசுமெனக் கூட்டுக.

இத்திருவெண்பா குருதோத்திரம். (க)

தன்னிழப்பை யென்னகற்றுச் சாதிப்பான் சற்குருவா
மன்னு பெருஞ் சீய மதயானை - தன்னடைமேற் [ம்
சொற்பனத்தே தோன்றித் துடிப்பற்றுக் கேவலமாய்
நிற்பதுபோற் பாரா னெனின்.

(உரை.) சற்குருவாம் மன்னு பெரும் சீயம் மதயானை தன் நடைமேல் சொற்பனத்தே தோன்றி—ஞானாசாரியனாகிய அருள்நிலை பெற்ற பெரிய சிங்கம்போல்வான் சீடனாகிய மத

யானையினது மேலாம்பக்குவத்தால் பிரபஞ்சமாகிய சொப்பனத்தின்கண் தோன்றி,

துடிப்பு அற்றுக் கேவலமாய் நிற்பதுபோல்—மதம் பொழியாநின்ற யானையினது சொப்பனத்தின்கண் சிங்கந் தோன்ற அதனது மதகெர்வீதம் யாவுங்கெட்டு மருட்கேவலப்பட்டு நின்றாற்போலச் சிடனாகிய யானையினது உட்புறனாய்ச் சீவியாநின்ற போதப் பறைப்பெல்லாம் அற்று அருட்கேவலமாய் நிற்கும்படி,

பாரான் எனின்—அப்போதத்திற்கும் உட்புறனாகிய கிருபாநோக்கஞ் செய்யாநாயின்,

தன் இழப்பை என்ன கற்றுச் சாதிப்பான்—ஒருவன் தற்போத ஒழிவைச் சாத்திரங்களைக் கற்று அவற்றாற் கூறியவாறே தனது போதத்தால் நிட்டைகூடி எங்ஙனஞ் சாதித்தடைவான்?

(குறிப்பு) போத ஒழிவின்கண் மெய்ப்பொருள் இருத்தலின், மெய்ப்பொருளைத் "தன்னிழப்பு" என்றார்.

மெய்ப்போதத்தாற் பொய்ப்போதம் அழிவதன்றி இதனை இதனாலழிக்கத் தொடங்கின் மேன்மேல் வளர்ச்சியாய் அழிவு கூடாமையின், "தன்னிழப்பை யென்ன கற்றுச் சாதிப்பான்" என்றார்.

யானையைச் சிங்கம் கொல்வதுபோல ஞானத்தால் அஞ்ஞானத்தைக் கெடுத்தலின், "சற்குருவா மன்னு பெருஞ்சியம்"

என்றும், ஞாதுரு ஞான ஞேடமாய இவைகள் ஒன்றுந் தோன்றாது ஆன்மா அப்பார்வையால் சிவத்தில் அதீதப்படுத லின், "கேவலமாய் நிற்பதுபோற் பாரானெனின்" என்றுங் கூறினார்.

"குருவாஞ்சீயம்" என்றமையால், சீடனும் யானை என்று வருவிக்கப்பட்டது. "துடிப்பற்றுக் கேவலமாய்நிற்பதுபோல்" என்று உவமையாகக் கூறினமையால், ஈண்டும் யானையும் சிங்க மும் வருவிக்கப்பட்டன.

சிங்கம் போல்வான் பாராவயின் எங்ஙனஞ் சாதிப்பா னென முடிக்க.

நடை, பக்குவம், மேலாயபக்குவம் என மாறுக.

சீயம் பாரானெனின் என முடிந்தது, இராசசிங்கம் வந் தான் என்பதுபோலக் கொள்க.

இத்திருவெண்பாவால் அதிதீவிர பக்குவர்க்காயினும் ஞானாசாரியரால் அன்றிப் போதநாசங் கூடாதென்று கூறிய வாறு காண்க. (உ)

கூலித் தொழிலாளர் கொண்டுவிற்போர் போன்றகுரு
வேலைப் பகடிகளை மேவாதே - காலம்போற்
பார்த்திருக்க வைத்த பரமகுரு வைப்பரவ
வார்த்தையிலை தீண்டா மனம்.

* காண்பான் காட்சி காட்சிப்பொருள்.

(உரை.) கூலித் தொழிலாளர் கொண்டுவிற்போர் போன்ற குரு வேலைப் பகடிகளை மேவாதே—வேலைசெய்து கூலி வாங்கிக்கொள்ளுங் கூலித்தொழிலாளரையும், ஓர் பொருளைக் கொண்டு ஓர் பொருளைவிற்கும் வணிகரையும் போன்று, பிறர்க்குக் கிரியைகளைச்செய்து காட்டியும், உபதேசங்களைக் கூறியும், அவர் கையில் அருத்தம் பறிக்கும் தமக்கியையாத குருவென்னும் பெயர்கொண்ட தொழில்செய்யும்*பகடிக்கூத்தாடிகளை மாணு, நீ மெய்க்குருவென்று அடையாதே;

சாலம்போல் பார்த்திருக்க வைத்த பரமகுருவைப் பரவ வார்த்தை இலை தீண்டா மனம்—கதிர் வலம் வருதலால் கணம், நாழிகை, நாள், மாதம், இருது, வருடம், யுகம் முதலிய காலங்களும் அக்காலங்கள்தோறும் தோன்றும் பிரபஞ்சங்களும் அநந்தபேதமாய்த் திரியவும், தனக்கோர் திரிவின்றி அவற்றோடும் தாக்கற்றிருந்த காலதத்துவம்போல, மாயையில் தோற்றிய கருவிகளும் இக் கருவிகளால் காரியப்பட்ட பிரபஞ்சங்களும் அநந்தபேதமாய்த் திரியவும் தனக்கோர் திரிவின்றி இவற்றோடும் தாக்கற்றிருந்த அருளை வடிவாகக் கிருபாநோக்கம் வைத்து மாணுக்கனைச் சுட்டற்றிருக்கவைத்த மேலாகிய ஞானசாரியனைத் தோத்திரம் பண்ண ஓர் வசனமும் இல்லை, தியானிக்க எனின் மனமும் அவனைத் தீண்டாது, ஆகலின் அக்குருவை அடைதி.

---

* உள்ளதுபோன்றில்லாததைக் காட்டும் வெளிவேடம் அல்லது அகசியக்கூத்து.

(குறிப்பு.) கதிர் வலம் வருதலால், கண முதலிய காலபே தங்களும் பிரபஞ்ச பேதங்களும் நானாவாய்த் தோற்றினும், அவைகள் தோற்றற்கும் அது வலம் வருதற்கும் காலதத்து வம் ஏதுவானாற்போல, மாயையிற் கருவிகளும் பிரபஞ்சங்க ளும் நானாவாய்த் தோற்றினும், இவை தொழிற்படுதற்கும் இவை மாயையில் தோற்றுதற்கும் திருவருள் ஏதுவாயிற் றென்பது காண்க.

பரமகுரு * சூக்குமைவாக்கும் தற்போதமும் கடந்த சிவ மென் றறிவிக்கவேண்டி "வார்த்தையிலே தீண்டாமனம்" என்றார்.

இத்திருவெண்பாவால் ஆசாரியனையும் அநாசாரியனை யும் மாணாக்கனுக்கு அறிவித்தவாறு காண்க. (ரு)

குட்டித் திரிட்கரடி யாரொருமகக் கோன்குதித்துக்
கட்டிப் புதைந்த கதைபோகும் துட்ட மலப்
பித்திலே மூத்தவர்கள் பேய்பிதற்றும் பேதையர்க்குப்
புத்திபோற் காட்டும் பொருள்.

(உரை.) துட்ட மலப் பித்திலே மூத்தவர்கள் பேய்பித ற்று ஆம் பேதையர்க்குப் புத்திபோல் காட்டும் பொருள்—கொடி தாகிய மும்மலப் பைத்தியத்தால் முதிர்ந்த ஆசாரிய ரல்லார், ஒர்காற் கூறியது ஒர்காற் கூறாது பேய்பிடித்தாற்போலும் பித ற்றுகின்ற அடக்குவர்க்கு உபதேசம் போலுங் கூறிய அருத்தம்,

* வார்த்தை தோன்றற்கு முதற்காரணமாய் உந்தியிலே நாதவடிவாய் நிற்குமொரு சக்தி.

குட்டித்திரட் கரடி ஆறொழுகக் கோன் குதித்துக் கட்டிப் புதைந்த கதை ஆகும்—பல குட்டிகளோடுங் கரடியானது நதிவெள்ளத்தோடுஞ் செல்ல, அதனது கரைக்கண் நின்ற ஓரிடையன் அதனை ஆடெனக் கருதி அந்நீரிற் குதித்து அதனைப் பற்ற, அதுவும் இவனைப்பற்ற, அதுவும் இவனும் அவ்வெள்ளத்து ஆழ்ந்தனரென்று உலகத்தார் கூறுங் கதைபோல ஆகும்.

(குறிப்பு.) * பரஞானம் என்பது சிறிதும் இல்லாதார் † அபரஞானங்களைக் கற்றுக்கொண்டு, மனைவி முதலிய குடும்ப வெள்ளத்தில் ஆழ்ந்து கிடக்கின்றபோர் சிலர் இடம்ப நிமித்தங் கேட்க, அவர்க்கு அருத்த நிமித்தம் உபதேசிக்க, அந்த உபதேசப்பொருளால் இருவருக்குந் தோஷமேலிட்டுப் பிறவிச்சாகரத்து ஆழ்வர் ஆகலின், அக்கதையை இப்பொருளுக்கு உவமையாகக் கூறினர்.

இடையன் கரடியை ஆடென்றும் கரடி அவனை நதிகடத்தும் புணையென்றும் கருதினதுபோல, அபக்குவனைப் பக்குவனென்றும் அநாசாரியனை ஆசாரியனென்றும் இருவரு மாறுபாடாகக் கருதினர் என்பதுமாம்.

இத்திருவெண்பாவால் அநாசாரியனுக்கும் அவனிடத்து உபதேசங்கேட்ட அபக்குவனுக்கும் குற்றம் வருமென்று அறிவித்தவாறு காண்க. (௭)

---

* பரஞானம் - அநுபவஞானம். † அபரஞானம் - வாசகஞானம்.

குருட்டரிப்ப ஞர்க்குங் குபேரனென்று பேரோ
கருப்பிரத மோத்தையோ காட்டு - மருட்டரித்த
வாசானைப் போல்வரோ வாறாறுக் கப்புறத்தே
பேசா திருந்தவல்லாப் பேர்.

(உரை.) குருட்டு அரிப்பனார்க்கும் குபேரன் என்று பேரோ கருப்பிரதம் மோத்தையோ காட்டும்—பிறவி அந்த கனாகிய * அரிப்பாளனுக்கும் குபேரனென்று பெயருண்டு கொலோ? கரும்பினது இரதத்தை மோத்தை ஆடு அறிந்து கூறுமோ? அவைபோலும்;

ஆறாறுக்கு அப்புறத்தே பேசாது இருந்த அல்லாப் பேர் அருள் தரித்த ஆசானைப் போல்வரோ—அருள் வடிவம் அல்லாத மாயாவடிவங் கொண்ட அநாசாரியரானோர் முப்பத்தாறு தத்துவங்களையுங் கடந்துநின்ற சிவத்தோடு மாணாக்கனை இரண்டறக் கலப்பித்து மௌனமாய் வைக்க அருளே திருமேனியாகக்கொண் டெழுந்தருளி வந்த ஞானாசாரியரைப் போலு மாவரோ?

(குறிப்பு.) குருட்டரிப்பனுக்குக் கைப்பரிசமே அன்றிக் கட்பார்வை இன்மையால் பொற்பொடியே தோன்றாது, அங்ஙனம் இருப்ப அவனையும் செல்வத்தால் அளகேசன் என்று கூறக்கூடுமோ? அதுபோல அநாசாரியருக்குக் கிரியைத் தொழிலன்றி ஞானமேயில்லை, அங்ஙனம் இருப்ப அவரையுங் குரு

* குப்பை முதலியவற்றிற் பொன்முதலிய அரித்தெடுக் கின்றோன்

என்று கூறப்படுமோ? என்றும்; மோத்தை யாடு * "கொழுந் தாழை" தின்பதே அன்றிக் கரும்புதின்ன அறியாதாதலின் அதனது இரசத்தை அறிந்து இங்ஙனமென்று தனது குட்டிக்குக் காட்ட அறியுமோ? அதுபோல அநாசாரியர் ஆகமங்கள் கூறும் மந்திரகலை, தந்திரகலை, உபதேசகலைகளுள் உபதேசகலையைவிட்டு இருவகைக் கலைகளை ஆராய்ந்து அவற்றுள் கூறிய சரியாதிகளைச்செய்து அவற்றான் வரும் விடயாநந்தானுபவம் பெறுவதே அன்றிச் சிவாநந்தானுபவம் அணுவளவேனும் அறியார், அங்ஙனம் இருப்பப் பிறர்க்கு அச்சிவானந்தானுபவம் எங்ஙனங் கூறுவார்? என்றும், இந்த உவமைகளால் அறிவித்தவாறு காண்க.

அஃதன்றியும், ஆடோகாட்டும் என்னும் எதிர்மறை ஓகாரம் அவ்வாட்டை மறுத்து யானையைக் காட்டிநின்றதாகலின், கரும்பந்தோட்டத்தைப்போல் சிவாகமம், அதனுட் புகுதும் ஆடு யானைபோல் இதனுட்புகுதும் கிரியாகுரு ஞானகுரு.

ஆடு கரும்பைவிட்டு இலையைத்தின்று அதனது சுவையைத் தானும் அறிந்து தனதுகுட்டிக்குங் காட்டுதல்போலவும், யானை இலையைவிட்டுக் கரும்பைத்தின்று அதனது சுவையைத் தானும் அறிந்து தனது கன்றுக்குங் காட்டுதல்போலவும், கிரியாகுரு மந்திர தந்திரகலைகளை ஆராய்ந்து அவற்றுள் கூறிய சரியாதிகளை அநுஷ்டித்து அவற்றான்வரும் விடயாநந்தத்தை தானு மனுபவித்துத் தன்னை அடைந்த சிடனுக்கும் அவ்வுப

* கரும்பின் நுனித்தாழை.

தேசங்களால் அவ்வானந்தத்தை வருவிப்பனென்பதும், ஞான குரு மந்திர தந்திர கலைகளைவிட்டு உபதேசகலையை ஆராய்ந்து அதனாற் கூறிய ஞானானந்தத்தைத் தானும் பெற்றுத் தன்னை அடைந்த பக்குவனுக்கும் அந்த ஞானானந்தத்தை வருவிப்பனென்பதுங் காண்க.

* "புறம்பு காண்குவன் புல்லிய னீசனை
அறிந்த ஞானி யகமுறக் காண்பனால்
எறும்பி காண்குறி லின்கரும் பேகொளும்
செறிந்த வாடிலை தின்பன வென்பவே"

என்பது பிரபுலிங்கலீலை. அஜகஜாந்தரம் என்னுங் கிரந்த சமாதியும் அது.

குருட்டறிப்பனென்பதை "குருட்டறிப்பனர்" என்று இழிபின்கட் புன்மையாகக் கூறினர்.

கட்பார்வை இன்மைபோல் ஞானமின்மை, கைப்பரிசம் அறிதல் போல் கிரியைகளைச் செய்தல் என்பதுங் காண்க.

இத்திருவெண்பாவால் அநாசாரியர் இலக்கணமும் ஆசாரியர் இலக்கணமுங் கூறியவாறு காண்க. (ரு)

தன்னறிவு சாட்சியல்லாற் சாயுச்சி யப்பயனைச்
சொன்னபிழை கெட்டேன் றொலைப்பரோ - முன்னே
நடவா வழியொருவன் சொல்ல நடந்து
தடுமாறி நொந்தறியா தார்.

* சாதகாங்கதி - 7.

(உரை.) தன் அறிவு சாட்சி அல்லால் சாயுச்சியப் பயனைச் சொன்ன பிழை கெட்டேன் தொலைப்பரோ—சிவாநுபவம் நன்றாய் விளங்கிற்று என்பதற்கும் அஃது இன்றென்பதற்கும் தனக்குத் தன்னறிவுதானே சாட்சியாயிருக்கவும், பயனைக்குறித்து மயக்கத்தால் அந்த அநுபவந் தனக்குண்டுபோற் காட்டிப் பிறருக்கு வீடடையும் நெறியான உபதேசப்பொருளைக் கூறிய பாவங்களை, கெட்டேன்! எந்தக்காலம் நீக்கிக் கொள்வரோ?

முன்னே நடவாவழி ஒருவன் சொல்ல நடந்து தடுமாறி நொந்து அறியாதார்—அஃதன்றியும் தாம் முன்செல்லாத ஓரூர்க்குச் செல்லுங்கால் அவ்வூரடையும் நெறி யாதென்று அந்நெறிக்கண் தான் முன் நடவா ஒருவனைக் கேட்ப, அவன் அதன்கட் சென்றான்போன்று நெறி அல்லா நெறிகூற, அது உண்மையெனக் கருதி அந்நெறிக்கட் சென்று, முன்னிருந்த ஊரும் பின்னடையும் ஊரும் அன்றி நடுவிடைத் தடுமாறி மனம் உடல் வருந்தி அறிந்தவரலர்.

(குறிப்பு.) ஐபன், காளி சந்நிதிகளில் அசத்தியங் கூறினோர்க்கும் இம்மைக்கண்ணே துன்பம் வருதலின், பூரணசிவத்தின் சந்நிதியில் அசத்தியங் கூறிய பாவந் தொலையாது ஆகலின், "கெட்டேன் றொலைப்பரோ" என்றும், வாக்கால் கேட்டறிந்து காயத்தால் சென்றடையும் ஊர்க்கு நெறி அறியா ஒருவன் நெறி கூறக்கேட்டு அதன்கட்சென்றதனான் வரும் இடர் அனுபவித்தறிந்தவர் மனத்தானுஞ் சென்று கூடுதற்கரிய வீட

டையு நெறியைத் தாம் அறியாதிருந்தும் அறிந்தார்போன்று பிறர்க்குக் கூறுர் ஆகலின், இங்ஙனம் உவமித்துங் கூறினார்.

செறலின்கண் 'தம்' என்னும் பன்மை 'தன்' என்னும் ஒருமையாய் வந்தது.

"அல்லால்" என்பதை மயக்கத்தா லெனக் கொள்க.

"முன்னே" என்பதை இரண்டிடத்துங் கூட்டுக.

"கெட்டேன்" என்பது இரக்கக் குறிப்பின்கண் வந்த வழக்கச்சொல்.

இத்திருவெண்பாவால் சாத்தியனை அன்றி சாதகன் ஞானோபதேசம் பண்ணுதல் குற்றமென்று அறிவித்தவாறு காண்க. (சு)

பொய்போகப் போகப் பொருந்திப் பொருடானுஞ்
சைவயோக போக தரங்கத்தி — னையும்
பரிபாகங் கண்டு பதையாமற் பார்க்குங்
குருவேகாண் ஞானக் குரு.

(உரை.) பொய்போகப் போகப்பொருந்தி—பொய்யாகிய கருவிகள் முப்பத்தாறும் நீங்க நீங்கவே அவைகளைப் பகுத்தறிந்து நீங்கி நின்ற அறிவு தானென்று தன்னை அருளால் உள்ளபடி கண்டு, பின்பு அருள் தரிசனம், பரை தரிசனம், பரை யோகம் என்னும் இவற்றை அடைந்து,

பொருள் தான் ஆம் சையோக போக தரங்கத்தில் நையும் பரிபாகம் கண்டு பதையாமல் பார்க்கும் குருவே ஞானக்குரு—

மெய்ப்பொருள் தானாகிய அநுபவசத்தியில் தோன்றும் ஆநந்த போக சமுத்திரத்து அலையில் அவன் கரைந்துபோகுந் தீவிரதர பக்குவம் ஈதென்று கண்டு மாணாக்கனது போதம் அணுவளவேனும் பதையாது அடங்கக் கிருபாநோக்கம் வைக்கும் ஆசாரியனே ஞானாசாரியனாவான்.

(குறிப்பு.) சிவகரணம் பரையோகமளவுந் தொடர்தலின், "பொய்போகப்போக" என்றார்.

"சையோகம்" என்றது அனுபவசத்தி. அது பரையோகத்திற்கும் சுகாதீதத்திற்கும் இடையே தோன்றும் ஆநந்தப் பேற்றிற் கிடம்.

"போக தரங்கத்து" என்றமையால் சமுத்திரம் வருவிக்கப்பட்டது. தரங்கம் ஆநந்தமேலிடல். அவ்விடத்து ஆன்ம போதங் கெடுமாகலின், "சையும்" என்றார்.

அடிதொடங்கி அநுபவமுற்றுங்கூறினமையால், இவ்வநுபவமுற்றும் பெறுமவன் அதிதீவிர பக்குவன் என்பது காண்க.

காண் - அசை.

இத்திருவெண்பாவால் ஞானாசாரியராயினும் பக்குவரை அறிந்து போதியாராயின் அவரையும் ஆசாரியரலர் என்று கூறியவாறு காண்க. (எ)

தேனுண் டமிழுந் திறம்போற் சிவாநந்த
மோனந் ததும்பி மொழிகாலத் - தேதின்று

தோன்றிருது போலுமொன்றைச் சுட்டாது கேட்பவர்
கான்றதவம் வேத மது. [கட்

(உரை.) தேன் உண்டு உமிழும் திறம்போல் சிவாநந்த மோனம் ததும்பி மொழி காலத்தே—தேனை நிறைய உண்டு அதனை மீட்டும் கக்குந்தன்மைபோல், உட்புறனும் எங்கும் நிறைந்து மௌனமாயிருந்த சிவாநந்த வெள்ளம் காருணியத்தால் ததும்பி ஞானாசாரியர் உபதேசமொழிகளைக் கூறுங்காலத்தளவும்,

நின்று தோன்று இருதுபோலும் ஒன்றைச் சுட்டாது கேட்பவர்கட்கு ஆன்ற தவம் வேதம் அது—பணிவிடைசெய்து நின்று, தோன்றப்பட்ட இருதுகாலம் போலும் அது இது என்று ஒன்றையுஞ் சுட்டாது பதைப்பற இருந்து அதனைக் கேட்பவர்களுக்கு, மாட்சிமைப்பட்ட தவமுடிவும் வேதமுடிவும் அங்ஙனம் நின்று கேட்குங் கேள்வியாம்.

(குறிப்பு.) ஆசாரியர் மாணாக்கனது பக்குவம் அறிந்து வலியக் கூறுதலே அன்றி அவரை இவன் வலியக் கேட்கலாகாது ஆகலின், "மோனந்ததும்பி மொழிகாலத்தே" என்றும், இருதுவில் பத்திர புட்ப பலாதிகள் தோற்றினும் அவ்விருது விகாரம் இன்றி இருந்தாற்போலக் கருவிகளோடுங் கூடியிருந்தும் அவற்றுள் தாக்கற்று நின்று கேட்கவேண்டும் ஆகலின், "இருதுபோலுஞ்சுட்டாது கேட்பவர்கள்" என்றுங் கூறினார்.

மோனந்ததும்பி மொழிகாலத் தென்றமையானும், ஒன்றைச் சுட்டாது கேட்பவர்க ளென்றமையானும், சொல்லாமற் சொன்னதென்றும் கேளாமற் கேட்டதென்றும் ஆயிற்று.

சுட்டறநிற்க வந்தது தவப்பயன் ஆகலின், அதனைத் தவம் என்றும், * அங்ஙனம் நின்று கேட்கும்மொழியாகலின்,அதனை வேதம் என்றுங் கூறினார். அங்ஙனஞ் சொல்லுவதும் இங்ஙனங் கேட்பதும் சாம்பிரதாயம்.

இத்திருவெண்பாவால் ஆசாரியன் உபதேசங் கூறுமாறும் மாணாக்கன் ஏற்றுக்கொள்ளுமாறும் அறிவித்தவாறு காண்க. (அ)

இருளிற் சுடரென்ன விந்திரவி யென்ன
வருளைக் கடந்தபரா நந்தர் — திருவாக்
கமுதமழை யம்பரச்சொ னன்னிமித்த மாங்கே
மமதையிரா தென்றே மதி.

(உரை.) இருளில் சுடர் என்ன இந்து இரவி என்ன அருளைக் கடந்த பராநந்தர் திருவாக்கு—பூத இருளின்கண் தோற்றும் விளக்குப்போலும் சந்திரன்போலும் சூரியன்போலும் பிரகாசித்து, ஆணவ இருளை நீக்கும் திருவருளையுங் கடந்து, சிவாநந்தமயமாய் எங்கும் நிறைந்துள்ள ஞானாசாரியரது அழகிய வசனம்,

அமுத மழை அம்பரச்சொல் நல் நிமித்தம் ஆங்கே மமதை இராது என்றே மதி—அமுதமழைபோலும் ஆகாச வாக்குப் போலும் நல்ல நிமித்தம்போலுமாம்,அன்றி அதன்கண் சிறிதேனும் அகங்காரம் உண்டாகாதென்று அறிதி.

* 'அங்ஙனம் நின்றுகேட்கும் மொழி பிரமோபதேசமொழியாகலின்' என்பதும் பாடம்.

(குறிப்பு.) அருள் தோற்றுங்கால் மூவிதமாய்த் தோற்ற லானும், ஒன்றற்கொன்று அதிகமாய்ப் பிரகாசிக்கையானும், விளக்காதி முச்சுடரையும் உவமையாகக் கூறினர்.

இதனைத் தத்துவப்பிரகாசம் 'பொறிகரணங் களையுயிர்ப் போற் போதம்போ தத்தைப் பொருந்திடத் திடுஞ்செயலாற் போதவுணர் வுணர்ந்தே, அறிவினது செயலோநா மென வுணர்வுற் றிருப்ப வப்போது விளக்கெனவு மருணன்மதி யெனவும், கறைவிடியுங் காலமெனவொளிவந் துற்பவிக்கும்' என்பதனானுங் காண்க.

நீர்மழை கைம்மாறின்றிப் பொழியினும் உற்பத்திநாசம் உளவாகலின், அம்மழையை உவமை கூறாமல் அமுதமழை என்றும், ஆகாசவாக்கு உண்மை அறிவித்தல்போல் உண்மை யாகிய சிவத்தை அறிவித்தலின், அம்பரச்சொல் என்றும், நல்ல நிமித்தங் கேட்டோர்க்குத் தாங் கருதிய பொருள் கை கூடல்போல் இதனைக் கேட்டோர்க்குத் தாம் கருதிய வீடு கைகூடுதலின், நன்னிமித்தம் என்றுங் கூறினர்.

தற்போதத்தாற் கூறும் சொற்கட்கெல்லாம் மமதை இருத்தலின், "ஆங்கே மமதையிராது" என்றார். (௬)

சாயா புருடனைப்போ லாநந்த மேதடித்த
மாயா வயிரி மனமாண்ட - நேயவுரை
ஆவேசர் வீர ராசர் மடலாளர்
சாவாநந் தர்க்குச் சரி.

(உரை.) * சாயா புருடனைப்போல் ஆநந்தமே தடித்த மாயா வயிரி மனம் மாண்ட நேய உரை—வடிவம் இன்றிய ஆகாயத்தில் வடிவம்போல் தடித்த சாயாபுருடனைப்போல், வடிவம் இன்றிய பேராநந்தந்தானே காருணியத்தால் வடிவம் போற்காட்டி எழுந்தருளிவந்த மாயைக்கு ஓர் வயிரியன ஞானசாரியரது மனதீதமான கிருபா வசனம்,

ஆவேசர் வீரர் அரசர் மடலாளர் சாவாநந்தர்க்குச் சரி—ஆவேசம் எறினோர் மாவீரராயினோர் ஒருகுடைக்கீழ் ஆளும் அரசர் மடலெடுத்தவர் தாம் சாவது இன்பமாக் கருதினோர் ஆகிய இவர்களது மொழிகட்குச் சரியாம்.

(குறிப்பு.) ஆவேசமேறினோர் தற்செயல் இன்றிக் கூறுதல் போல முக்கரணங்களையும் தடிடத்து அடக்கிக்கொண்டு அருளாய் நின்று கூறினமையானும், மாவீரரானோர் எதிர்த்தாரைக் கொல்வதே கருத்தாகக் கூறுதல்போல் அறிவுக்கு எதிரீடாய்த் தோற்றுவன எல்லாம் அதனைக்கொல்வதே கருத்தாகக் கூறுதலானும், ஒரு குடைக்கீழ் ஆளும் அரசர் கூறிய மொழிப்படி இம்மைப்பய னுகுதல்போல் இவர் கூறிய மொழிப்படி மறுமைப்பயனுகுதலானும், மடலாளர் மற்றொன்றையுங் கூறாது தாம் நச்சிய மாதினையே புகழ்ந்து கூறுதல் போலச் சரியாதிகளைக் கூறாது தமது ஞானநந்தத்தையே புகழ்ந்து

* தம் நிழலைப்பார்த்துப் பின்னுகாயத்தை யுற்று நோக்கு கின்றோர்க்கு அவ்வாகாயத்தின்கண் புருடவடிவம்போல் தோன்றும் அந்நிழற்காட்சி.

கூறுதலானும், சாவாநந்தர் தாம் சாவதே இன்பமாகக் கூறுதல்போலத் தற்போத வொழிவையே இன்பமாகக் கூறுதலானும், ஆவேசமேறினோர் முதலிய ஐவர் மொழியையும் உவமையாகக் கூறினார். அவரது மொழிக்கு உவமை கூறினமையால் 'இவரதுமொழி' வருவிக்கப்பட்டது.

இவ்விரண்டு திருவெண்பாவானும் ஞானாசாரியரது திருவாக்குச் சிறப்புக்கூறியவாறு காண்க. (௧௦)

சத்தியநிர் வாணத்தாற் றற்போதத் தாக்கறுத்து
வைத்துவழி காட்டு மறைப்புலவன் - சுத்தன்
றமிழ்க்குரிசிற் சீகாழிச் சம்பந்த னென்பா
னெமக்கருளிச் செய்த திது.

(உரை.) சத்திய நிர்வாணத்தால் தற்போதத் தாக்கு அறுத்து வைத்து வழிகாட்டும்—சத்திய நிர்வாண தீக்கையால் எனது போதத்தை ஒன்றேனும் பற்றாது ஒழித்துச் சிவத்தோடு இரண்டறக் கலக்கவைத்து என்பால் வந்தடைந்தோர்க்கும் எனதுள்ளே தாமே நிறைந்திருந்து முத்திநெறியை அறிவிக்கும்,

மறைப்புலவன் சுத்தன் தமிழ்க்குரிசில் சீகாழிச் சம்பந்தன் என்பான் எமக்கு அருளிச்செய்தது இது—வேதங்களையெல்லாம் ஓதாமல் உணர்ந்த ஞானப்புலவர், மும்மலங்களையுங் கடந்து நின்ற நின்மலர், தமிழினது இலக்கணமெல்லாம் அளவிட்டறிந்த தமிழ்வேந்தர், சீகாழியென்னுந் திருப்பதியில் எழுந்தருளியிருந்த திருஞானசம்பந்தப் பிள்ளையாரென்று

யாவரும் புகழாநின்ற சுவாமிகள், எம்போல்வார் வீடடைந்து உய்யும் நிமித்தம் அருளிச்செய்தது இந்நூலின் அருத்தம்.

(குறிப்பு.) இந்நூல் பிறர்க்கு உபகாரமாகக் கூறினமையால், "வழிகாட்டும்" என்பது பிறர்க்கெனக் கொள்க.

"மறைப்புலவன்" "தமிழ்க்குரிசில்"என்றமையால்,உபய கலைகளையும் உடையானென் றறிக.

இத்திருவெண்பாவால் நூன்மரபு கூறியவாறு காண்க.()

தாக்கற்ற பூரணத்திற் சந்தற்ற தம்மைமல
நீக்குந் துயரகல நேசித்தோர் - பார்க்கும்
வழிபலநாம் பைமறித்த வாறுநீ மாளா
வொழிவி லொடுக்கமுரைப் போம்.

(உரை.) தாக்கு அற்ற பூரணத்தில் சந்து அற்ற தம்மை மலம் நீக்கும் துயர் அகல நேசித்தோர்—எல்லா வற்றோடும் கூடி நின்றும் அவைகள் ஒன்றோடும் தாக்கற்றிருந்த பரிபூரண சிவத்தோடு ஆணவம் நீங்கியவிடத்து இரண்டறக்கலந்து விளங்காநின்ற தம்மை அந்த ஐக்கியத்தைத் தெரியவொட்டாது மறைத்து இரண்டுபடுக்கும் அவ்வாணவமலத் துன்பம் அகன்று ஏக அன்புகொண்டோர்;

பார்க்கும் வழி பல நாம் பை மறித்த ஆறு நீ மாளா ஒழிவில் ஒடுக்கம் உரைப்போம்—ஆராய்ந்தறியும் சாத்திரநெறிகள் பற்பல உளவாம், அவைபோலும் மறைத்துக் கூறாது நாம் பையைவிரித்து அதனுள் இருந்த பொருள் ஈதென்று காட்டு

மாறு, மாணாக்கனே! * நீ ஒழியாமல் ஒழியுமிடத்து ஒடுங்கும் நெறியைக் கூறுவாம்.

(குறிப்பு.) ஆன்மாவிற்குச் சிவத்தோடு ஐக்கியம் மல மறைப்பால் தெரியாதிருத்தலின், "நீக்குந் துயரகல நேசித் தோர்" என்றார்.

"பார்க்கும் வழிபல" என்றது பேதம் அபேதம் பேதா பேதங்களாய்க் கூறு நெறிகளை.

அநுபவரகசியமெல்லா மறையாமல் கூறினமையால், † "பைமறித்தவாறு" என்றார்.

ஆன்மா கெடாது அதனது போதங் கெடுதலின், "மாளா வொழிவில்" என்றார். அவ்விடஞ் சுகாதீதம்; அதனுள் ஒடு ங்கும்நெறிஇதனுள் கூறினமையால், "ஒழிவிலொடுக்கமுரைப் போம்" என்றார்.

இத்திருவெண்பாவால் நூற்பயன்கூறியவாறு காண்க.()

சுருதி குருவாக்குச் சுவாநுபவ மூன்றும்
சரியொத்த போதமுனைச் சார்வைத் தெரிய
உரைத்தநூற் பேர்கே ளொழிவி லொடுக்கம்
விரித்தநூற் கெல்லாம் விதை.

(உரை.) குருவாக்கு சுருதி சுவாநுபவம் மூன்றும் சரி ஒத்த போதமுனைச் சார்வை—ஞானசாரியர் அருளிச்

* 'ஒழியாமல் நீயறுதியென ஒழியுமிடத்து' என்பதும் பாடம்.

† உள்ளிருந்த சரக்கு வெளிப்படப்பையைத் தொட்டு உட்புற மேற்பட்டும் வெளிப்புற முட்பட்டு மடங்க மடக்கல்.

செய்த உபதேசமொழிகளும், இம்மொழிகள்மேல் ஐயம் பிற வாது இவற்றைத் தெளிவிக்கும் வேதாகமங்களும், இவ்விரு வகை மொழிகளின் அருத்தப்படியே தம்முள் தோன்றுஞ் சுவாநுபவமும் ஆகிய மூவகையுஞ் சரியொத்த இடத்தில் தோன்றும் பேரறிவாகிய பதியையும், அவற்றான் இப்பதியை அறியும் பசுவையும், இப்பதியைப் பசுவிற்கு அறியவொட்டாது மறைத்துநின்ற பாசத்தையும்,

தெரிய உரைத்த நூல்பேர் கேள் ஒழிவிலொடுக்கம் விரித்த நூற்கு எல்லாம் விதை—உள்ளபடி விளங்கக்கூறிய இந்நூற்பெயரை, மாணுக்கனே! நீ கேட்டி, ஒழிவிலொடுக்கம் என்பதாம்; இம் முப்பொருளையும் பற்பலவாய் விரித்துக் கூறிய நூல்கட்கெல்லாம் இஃது ஓர் வித்தாம்.

(குறிப்பு.) குருமொழியே அமையும் எனினும் தீவிரதர பக்குவம் இன்றிய மற்றைய * மூவர்க்கும் அதன்மேல் ஐயம் பிறக்கும் ஆகலின் சுருதி வேண்டிற்று. குருவும் சுருதியும் உண்டாய்ச் சுவாநுபவம் இன்றாயின் அது பரஞானமன்று. ஆகலின், இம்மூன்றுஞ் "சரியொத்தபோதம்" என்றார். இக் குறிப்பால் இந்நூலும் இம்மூன்றும் ஒத்துக் கூறியதென்பது ஆயிற்று.

முப்பொருளினது இலக்கண விரிவையெல்லாம் சுருக்கித் தற்போத ஒழிவிற்கு உபாயமே விரித்துக் கூறலானும், போதவொழிவில் யாவுமொடுக்கிப் போதவிரிவில் யாவும் விரித்தலானும், இதனை "விரித்த நூற்கெல்லாம் விதை" என்றார்.

* மந்தம் மந்ததரம் தீவிர மென்னும் பக்குவத்தினர்.

இத்திருவெண்பாவால் நூற்பெயர் கூறியவாறு காண்க. (கரு)

தந்த்ரகலை மந்த்ரகலை சார்பழுந்தச் சாற்றுமது
மந்த்ர சரியாதி மார்க்கமிது - மூந்தைத்
தபதி விரத்தியரைச் சார்பழியச் சாற்று
முபதேச மென்றே யுணர்.

(உரை.) தந்த்ரகலை மந்த்ரகலை சார்பு அழுந்தச் சாற்றும் அது மந்த்ர சரியாதி மார்க்கம்—குண்டமண்டல வேதிகாதிகளைக் கூறுந் தந்திரகலைகளும், கிரியைகட்கு உரியவாகிய மந்திரங்களைக் கூறும் மந்திரகலைகளும், ஆன்மாவை மேன்மேலும் மலச்சார்போடு அழுந்தக் கூறும்; அக்கலைகள் மந்திர தந்திர கிரியா பாவனைகளாற் செய்யும் சரியை கிரியை யோக நெறிகளாகும்;

இது மூந்தைத் தபதி விரத்தியரைச் சார்பு அழியச் சாற்றும் உபதேசம் என்றே உணர்—இந்நூல் முற்பவங்களில்நிட்காமிய தவம்பண்ணின தபோதனர்க்கும், அத்தவத்தால் உட்பற் றறுதியுடையோர்க்கும் மலச்சார்பு அறும்படி கூறும் ஞானோபதேசம் என்று நீ அறிதி.

(குறிப்பு.) அக்கலைகளால் போதவிரிவே அன்றி ஒழிவின்மையால், "சார்பழுந்தச் சாற்றும்" என்றார்.

இது "தபதிவிரத்தியரைச் சார்பழியச் சாற்றும்" என்றமையால், மற்றையர்க்கு ஆகாதென்பது ஆயிற்று.

இத்திருவெண்பாவால் இந்நூல் உபதேசகலை யென்று அறிவித்தவாறு காண்க. (கச)

உடற்குயிர்போற் கட்கிமைபோ லூசிநூ லொத்து
விடிற்புலிதீ பாம்பினில்வீழ் வார்க்காம்-சுடச்சுடினும்
வாழைக்கா காவேதி மட்கலத்துக் காகாவா
றேழைக்கா காத திது.

(உரை.) உடற்கு உயிர்போல் கட்கு இமைபோல் ஊசி நூல் ஒத்து விடின் புலி தீபாம்பினில் வீழ்வார்க்கு ஆம்—உடம்பை உயிர் அபிமானித்தல் போலும், கண்ணை இமையானது காத்தல்போலும், ஊசி சென்ற இடந்தோறும் சரடு பின் சேறல்போலும், ஞானாசாரியரைப் பிரியாது நின்று, அவர் திருமேனியை அபிமானித்தும் பாதுகாத்தும் அவர் திருவுள்ளக் குறிப்பின்படியே சென்றும் வழிபட்டு அவர் பார்த்துப் புலி, தீ, பாம்பாதிகளிற் செலுத்தினும் பின்னிடையாது அவை மேல் விழும் அதிபக்குவர்க்கே இந்நூல் கொடுக்கலாகும்;

சுடச்சுடினும் வாழைக்கு ஆகா வேதி மட்கலத்துக்கு ஆகா ஆறு ஏழைக்கு ஆகாதது இது—மிகுந்த அக்கினியாற் சுடினும் வாழைத்தண்டைச் சுடக்கூடாதவாறு போலும், பரிசனவேதி மட்கலத்திற் பரிசித்துப் பொன்னாக்கக் கூடாதவாறுபோலும், அங்ஙனம் ஆசாரியனை வழிபடமாட்டாத அபக்குவர்க்கு இந்நூல் கொடுப்பினும் அநுபவஞ் சித்தியாது.

(குறிப்பு.) உயிரானது உடம்பைத் தானாய் அபிமானித்துத் துன்பந்துடைத்தல் ஒப்பனைசெய்தல் முதலிய உபசாரங்

களை அதற்குச் செய்வதுபோலும், அவர் திருமேனியைத் தம் தேகமாய் அபிமானித்துச் செய்யவேண்டும் உபசாரமெல்லாஞ் செய்யவேண்டும் ஆகலின், "உடற்குயிர்போல்" என்றும், இமையானது கண்ணைவிட்டு நீங்காதிருந்து அதன்கண் துரும்பாதி வந்துசார்வதற்கு முன்னேநின்றுபாதுகாத்தல்போலும், இரவும் பகலும் விட்டுநீங்காதிருந்து அவரைத் துட்டமிருக முதலிய வந்து சார்வதற்கு முன்னேநின்று பாதுகாக்கவேண்டும் ஆகலின், "கட்கிமைபோல்" என்றும் கூறினர்.

அதிபக்குவர் தேகாபிமானம்விட்டு அவரை மெய்ப்பொருளாகக் கருதினவர் ஆகலின், புலியாதிகண்மேற் செலுத்தினும் வீழ்வாரென்பது ஆயிற்று.

அக்கினிக்கும் பரிசனவேதிக்கும் விறகைச்சுடுதற்கும் உலோகங்களைப் பொன்னாக்குதற்குங் கூடுமேயன்றி வாழைத்தண்டையும் மட்கலத்தையும் அங்ஙனஞ் செய்யக்கூடாதது போல், இந்நூலால் பக்குவர்க்கு ஞானம் விளங்குமே அன்றி அபக்குவர்க்கு விளங்காதென்பது அறிக.

இத்திருவெண்பாவால் இந்நூற்கு அதிகாரிகளின் இலக்கணம் அறிவித்தவாறு காண்க. (௧௫)

ஆலிங் கனத்திலே யைந்திணையும் பாடுவோன்
மாலின்ப வாரி மறிதிரைபோற் - காலப்பூக்
கிண்கிணிவாய்ச் செய்ததுபோற் கின்னரிப்பாட்
கொண்டவர்போற் கண்டவர்க்கா குட். [டுல்லாசம்

(உரை.) ஆலிங்கனத்திலே ஐந்திணையும் பாடுவோன் மால் இன்ப வாரிமறி திரைபோல்—மாதர் கூட்டரவிற்செய்

யும் ஐவகை ஆலிங்கனத்தால் வரும் இன்பம்ஐந்தினையும் அநுபவித்தறிந்து ஒருவன் கூறிய பாட்டினைப் பாடும் ஓர் விடனுக்கு அக்கவி அருத்தத்தான் அவ்வின்பம் பெற்றான்போன்று உள்ளத்தின்கண் அம்மயக்க இன்பவாரி எழுந்து அலை மறிவதுபோலும்,

காலப்பூக் கிண்கிணிவாய்ச் செய்ததுபோல்—உதயகாலத்துத் தாமரை அரும்பு கிண்கிணிவாய்ச்செய்து அலர்ந்தாற்போலும்,

கின்னரிப்பாட்டு உல்லாசம் கொண்டவர்போல் கண்டவர்க்கு ஆகும்—மற்றொன்றினையுங் கேளாது ஒருவன் பாடும் கின்னரிப்பாட்டோசையையே உல்லாசமாய் உட்கொண்டவர்போலும் இந்நூலைக்கேட்டறிந்தோர்க்கே ஞானாநந்தம் உளதாம்.

(குறிப்பு.) ஐந்தினையும் பாடுவோனுக்கு அதனைப் பாடுந்தோறும் அவ்வின்பம் பெற்றான் போன்று உளத்து இன்பம் மேன்மேலெழுதலின், "மறிதிரை" என்றார். அவனைப்போல் இந்நூல் கேட்குந்தோறும் இவர்க்கும் சிவாநந்தம் பெற்றார் போன்று உள்ளத்தில் மேன்மேல் சந்தோஷம் தோன்றவேண்டும் ஆகலின், "மாலின்பவாரி மறிதிரைபோல்" என்றும், முகமலர்ச்சி தோன்றல்வேண்டும் ஆகலின், "காலப்பூக்*கிண்கிணிவாய்ச் செய்ததுபோல்" என்றும், மற்றொன்றையுங் கேளாது இதனையே கேட்கவேண்டும் ஆகலின், "கின்னரிப்பாட்டுல்லாசங் கொண்டவர்போல்" என்றும் இங்ஙனம் உவமை கூறினார்.

* வட்டவடிவாக முகங்கொண்டு மலர்தல்.

ஆலிங்கன பரிசபேதத்தால் சுகமும் ஐந்து பேதப்பட்டதெனக் கொள்க. அஃது ஐந்தென்பது "ஆலிங்கனமைந்து மிதழ் பானம் பதினொன்றும்" என்னுங் காமநூலிற் காண்க.

இத்திருவெண்பாவால் இந்நூல் கேட்கும் இலக்கணங் கூறியவாறு காண்க. (கசு)

வணங்கா வுரைக்கு வணக்கமிலை தீங்கை
வணங்கிவாழ்த் தென்னில் வளமியா - வணங்கினும்
எல்லார்க்கு நன்றா யிருப்பதிலை யாதொன்றும்
எல்லார்க்கும் பொல்லா திலை.

(உரை.) வணங்கா உரைக்கு வணக்கம் இலை தீங்கை வணங்கி வாழ்த்து என்னில் வளம் யா—போதம் அடங்காது ஏமாப்பாற் கூறும் நூலுக்கு அடக்கமே இல்லை, தீமைகளைச் செறித்து ஓர் நூலாக்கி அதற்கு அடக்கங் கூறி இதனை இகழாது புகழுங்கள் எனின், அதனால் வரும் நன்மை யாதொன்றும் இல்லை;

வணங்கினும் எல்லார்க்கும் நன்றாய் இருப்பது இலை யாது ஒன்றும் எல்லார்க்கும் பொல்லாது இலை—நன்மைகளைச் செறித்து ஓர் நூலாக்கி அதற்கு அடக்கங் கூறினும் யாவர்க்கும் நன்றாயிருப்பது இல்லை, இவைகள் அன்றி மற்றி யாதோர் நூலாயினும் யாவர்க்கும் பொல்லாங்காய் இருப்பதும் இல்லை.

(குறிப்பு.) * அடங்காவுரையெனவே அவன் அடக்கங் கூறினும் அடக்கம் அன்றென்பது ஆயிற்று.

---

* 'வணங்காவுரை'யென் றிருத்தல் வேண்டும்.

தீங்கினைச் செறித்து அடக்கங்கூறிப் புகழச் சொன்னமையால் வரும் நன்மை ஒன்றும் இன்றாயிற்று. நன்மைகள் யாவுஞ்செறித்து அடக்கங்கூறினும் பொறாமை முதலியவற்றால் சிலரால் இகழப்படுதலின், "எல்லார்க்கும் நன்றாயிருப்பது இலை" என்றும், பயன் இன்றாய்க்கூறும் யாதோர் நூலாயினுஞ் சிலர் அங்கீகரித்தலின், "எல்லார்க்கும் பொல்லாதிலை" என்றுங் கூறினார்.

தீமைநன்மைகளை முற்கூறினமையால், "யாதொன்றாய்" என்பது இவைகட்குப் பொதுவாயிருந்த உலக கதைகளைக் கூறும் நூல் எனக் கொள்க.

'உரை' என்பதும் 'தீங்கு' என்பதும் ஆகுபெயர். 'தீங்கு' என்றமையான் நன்மை என்று வருவிக்கப்பட்டது.

'வணக்கம்'= அடக்கம்.

'வளமியா' என்பது இகரக்குறுக்கம் ஆதலின் தளைதட்டாது என்பது காண்க.

இத்திருவெண்பாவால் இவைகள் இங்ஙனம் இருப்ப யாம் எங்ஙனம் அவையடக்கங் கூறுமாறென்று குறிப்பால் அவையடக்கங் கூறியவாறு காண்க. (கஎ)

அறைந்த பறைகுழற்கு மாடினர்க்கு மேற்க
மறந்தழுவார் வாய்ப்பாட்டு வாரா - திறங்கேளீர்
கூடக் கரைவதலாற் கூறிற் பயனில்லாப்
பாடற்கார் பார்ப்பார் பயன்.

(உரை.) அறைந்த பறை குழற்கும் ஆடினர்க்கும் ஏற்க மறந்து அழுவார் வாய்ப்பாட்டு வாரா—கரத்தால் அறையப்பட்ட மத்தளத் தொனிக்கும், இத்தொனிக்கு ஏற்ப ஊதுங் குழல் ஓசைக்கும், இவைகட்கு ஏற்ப நடனமிடுவோர்க்கும் ஏற்ப, தம்மை மறந்து அழும் மகளிரது அவ்வழுகையாகிய வாய்ப்பாட்டு ஒத்துவாராது(அதுபோலும், இந்நூல் தற்போதம் இழந்து நின்று கூறியது ஆகலின் எழுத்து முதலிய ஐந்து இலக்கணங்களோடு ஒத்துவாராது. அஃது அங்ஙனம் ஆயினும் அதன் கட் கூறியபொருள் தான் நன்குளதோ எனின்,)

திறம் கேளீர் கூடக்கரைவது அலால் கூறின் பயன் இல்லாப் பாடற்கு ஆர் பயன் பார்ப்பார்—இந்நூலின்பொருள் திறமையை நீர் கேட்பீராக, (அஃதெங்ஙனம் எனின்,)இப்பொருளைக்கேட்போர் இப்பொருளோடுங் கூடத் தாமும் கரைந்து போவதே யன்றிச் சொல்லுமிடத்துத் தாமுந் தமக்குவரும் இம்மை மறுமைப் பயன்களும் இல்லாத பாடற்கு யாவர் அருத்தம் பார்ப்பார்?

(குறிப்பு.) தாளமும் ஓசையுஞ்சரியொத்த நடனத்தோடு, துன்பமேலீட்டால் தம்மை மறந்து அதன் மயமா யிருந்து அழுவார் அழும் ஓசை ஒவ்வாததுபோல், இன்ப மேலீட்டால் தம்மை மறந்து இதன் மயமாயிருந்து கூறிய இப்பாடல் இலக்கணத்தோடு ஒவ்வாது என்பது குறிப்பால் அறியும்படி கூறினார்.

இதனது அருத்தம் போதவொழிவும் சிவாநந்தப் பேறும் ஆகலினும், இதனைக்கேட்ட அதிபக்குவர் அக்கணமே போதம்

அழிந்து ஆநந்த மயமாவர் ஆகலினும், "கூடக்கரைவது" என்றும், பயன் பெறும் போதம் ஒழிவதனால், "பயனில்லாப்பாடல்" என்றுங் கூறினர்.

இத்திருவெண்பாவால் சத்தத்திற்குப் பஞ்சவதிகார வழுவுண்டாயினும் அருத்தம் எல்லா நூல்களினது அருத்தங்கட்கும் முடிவென்று கூறியவாறு காண்க. (கஅ)

போத வொழிவையுரை போய்த்தீண்டா பூதலத்தோர்
பாதமனங் கண்போலப் பற்றுமோ - நீதெளியிற்
கண்ணாடி யிற்கடலைக் கைவசமாக் காட்டுதல்போற்
கண்ணாரி சன்னையைப்போற் காண்.

(உரை.) போத ஒழிவை உரை போய்த் தீண்டா பூதலத்தோர் பாதம் மனம் கண்போலப் பற்றுமோ—ஆன்மபோத ஒழிவில் தானாய் இருந்துள்ள சிவத்தை வேதாகம சாத்திரங்களால் அளவிட்டறியக் கூடாது, அஃதன்றிக் காலால் நடந்து சென்றும் மனத்தால் நினைந்தும் கண்ணாற் பார்த்தும் இப்பூதலத்தோர் ஒரோர் பொருளை அறிந்து பிடிப்பதுபோல் கருவிகளாலும் அதனை அறிந்து பிடிக்கக்கூடாது, (ஆதலின், அங்ஙனம் அறிந்து பற்றுவது அன்றி),

நீ தெளியின் கண்ணாடியில் கடலைக் கைவசமாக் காட்டுதல்போல் கண் நாரி சன்னையைப்போல் காண்—நீ அச்சிவத்தை அறியுமிடத்துச் சிறிதாகிய கண்ணாடியில் பெரிதாகிய கடலை மகவுக்குப் பிரத்தியக்ஷமாகக் காட்டு மாறுபோலும், ஓர்

நாரி ஓர் புருடனுக்குக் கண் சைகையால் கலவிக்கு இடங்காட்டுமாறுபோலும் யாம் அதனை அறிவிக்குங் குறிப்பால் நீ அறிதி.

(குறிப்பு.) போத ஒழிவை அப்போதத்தான் அறியும் கலைகளானும் கருவிகளானும் அறியக்கூடாதாகலின், "உரை போய்த்திண்டா" என்றும், "பாதமனக்கண்போலப் பற்றுமோ"என்றுங் கூறினார்.

பரிபூரணசிவத்தின் இலக்கணமெல்லாம் நன்றாய் விளங்கும்படி வேதாகம முடிவிற் கூறிய சில உபதேசமொழிகளையெடுத்து இந்நூலிற் கூறுதலின், "கண்ணாடியிற் கடலைக் கைவசமாக் காட்டுதல்போல்" என்றார், பூரணநோக்கம், மௌனமுத்திரை முதலிய குறிப்பான் அச்சிவத்தை அடைதற்கு உபாயம் அறிவித்தலால், "கண்ணாரி சன்னையைப் போல்" என்றுங் கூறினார். (கஅ)

ஆனைக்கை போலபின வத்துவிதா நந்தமா
மோனத்தை வாக்குமன முட்டுமோ — ஞானத்தாற்
காக்கை யிருந்தமனை கைமேற் பிறையென்ற
லாற்கருதி னீசிவமா வை.

(உரை.) ஆனைக்கை போல் அபின்ன அத்துவிதாநந்தம் ஆம் மோனத்தை வாக்கு மனம் முட்டுமோ—பரிசம் அறியுங் கையும் கந்தம் அறியும் நாசியும் ஒன்றாயிருக்கின்ற யானையினது துதிக்கைபோன்று, பின்னம் இன்றிச் சிவமும் ஆன்மா

வும் இரண்டற்றிருந்த அத்துவிதமாகிய மோனநந்தத்தை வாக்காற் கூறுங் கலைகளும் மனோபாவனைகளுந் தீண்டுமோ?

காக்கை இருந்த மனை கைமேல் பிறை என்றலால் ஞானத்தால் கருதின் நீ சிவம் ஆவை—ஓர் மனையையும் பிறையையும் ஒருவனுக்கு ஒருவன் அறிவிக்குங்கால், காக்கையிருந்த மனையென்றும் கைவிரல்மேற் பிறையென்றும் இங்ஙனம் அறிவித்தலான் அவன் அறிவதுபோலும், யாம் சிவத்தைக் குறிப்பான் அறிவிக்கும் உபதேசங்களை ஞானத்தால் கூர்ந்து விசாரித்து அறிதியெனின் நீயும் அச்சிவம் ஆவை.

(குறிப்பு.) கை நாசி என்று இரண்டுறுப்பாய் இரண்டு விடயங்களையும் வேறுபிரித்து அறிவதாயிருந்தும் பிரிபடாது அதுவே இதுவாய் இதுவே அதுவாய் இருப்பதுபோல, சிவமென்றும் ஆன்மாவென்றும் இரண்டு பொருட்—ப் இரண்டு ஞானங்களும் வேறாயிருந்தும் ஐக்கியத்துப் பிரிபடாது அதுவே இதுவாய் இதுவே அதுவாய் இருத்தலின், "ஆனைக் கைபோ லபினவத்துவிதம்" என்றார்

மனைகள் பலவற்றையுங் கடந்து சென்று காக்கையிருந்த மனையை நீ யடைதி என்று ஒருவன் அறிவிக்க அறிதல்போல், கருவிகள் பலவற்றையுங் கடந்துசென்று நாத தத்துவத்தின் முடிவில் நின்ற சைதன்னியம் நீ என்று அறிவிக்க அறிதலால், "காக்கையிருந்தமனை" என்றும், ஒருவனுக்கு ஒருவன் பிறையை அறிவிக்குங்கால் விரல்மேற் பிறை என்று சுட்டிக்காட்டி அறிவிக்க அவ்விரல் நேரேநோக்கி அப்பிறையைத் தரிசித்தல்

போல், நாதாந்தத்தின் முடிவில் நின்று நீ திருவருளை முன்னிட்டுக்கொண்டு சிவத்தைத் தரிசிக்கவேண்டும் என்று அறிவிக்க அம்முறையே சென்று சிவத்தைத் தரிசித்தலால், "கைமேற்பிறை" என்றுங் கூறினர்.

கண்போலும் ஆன்மா, விரல்போலுந் திருவருள், பிறைபோலுஞ் சிவம் எனக் கொள்க.

இவ்விரண்டு திருவெண்பாவானும் மெய்ப்பொருளை அறிவித்தற்கு உபாயங் கூறியவாறு காண்க. (உ0)

முலையுண்ணி நீருண்ணு மோட்டெருமை மூடர்
சலமின்றிச் சந்துரைப்பார் தர்க்கர்-பலதாரை
வட்டிலே போலுமவர் மாயோக வாசகத்தைக்
கிட்டி னரகங் கிடேர்.

(உரை.) முலை உண்ணி நீர் உண்ணும் மோட்டெருமை மூடர் சலம் இன்றிச் சந்து உரைப்பார் தர்க்கர்—பசுவினது விம்மிச்சுரந்த முலையிற் கடித்த உண்ணிபோலும், தடாகத்தில் நீர் அருந்தும் முதிர்ந்த எருமைபோலும், அறிவேதும் இன்றிய மூடர்போலும், நீர் இன்றிச் சந்தனம் உரைப்பார்போலும் ஆவார் தருக்கராயினோர்;

பல தாரை வட்டிலே போலும் அவர் மாயோக வாசகத்தைக் கிட்டின் நரகம் கிடேர்—பல்தொளை வட்டிலைப் போலும் பலபடக் கூறுநின்ற அவரது மாயைக் கூட்டரவாகிய மொழிகளைக் கேட்பினும் நிரயம் என்று அறிவீர்.

(குறிப்பு.) முலை உண்ணி பால் உண்ண அறியாது உதிரம் அருந்தல்போல், நூலாற் சிவாநந்தப்பேறு அடையாது இம்மைப் பயன் கோடலின், முலைஉண்ணி என்றும், தடாகத்தில் தன் தாகந் தீர்க்கும் நீர் அருந்தாது அதனுள் வீழ்ந்து சேறாக்கிச்செல்லும் எருமைபோல், ஞானிகள்பாற் செல்வினும் அவர் கூறும் ஞானமொழிகளைக் கொள்ளாது தருக்கமாடி அவர் சித்தத்தைக் கலக்கிச் சேறலின், எருமை என்றும், மூடர் யாவர் ஏது நன்கு கூறினும் தாம் பிடித்தபிடி விடாது நிற்றல்போல், தீதாயினும் தருக்கவலியால் தாம் பிடித்த பிடியை முற்றுஞ் சாதித்தலின், மூடர் என்றும், சலம் இன்றிச் சந்துரைப்பார்க்குக் கைவருத்தமே அன்றிப் பயன் இன்றாவது போல், இவர் பலரோடுந் தருக்கமாடலான் வருதல் வாய்வருத்தமே அன்றிப் பயன் வேறு இன்றாகலின், "சலம் இன்றிச் சந்துரைப்பார்" என்றும், பலதாரை வட்டிலின் நீர் தாரைகள் தோறுஞ் சேறல்போல் ஓர்நெறி கூறுங்கால் அதனை முற்றுப் பெறக்கூறாது பல்நெறியாய் மலைவுபெறக் கூறலின், "பலதாரைவட்டில்" என்றும், திருவருட்போதம் அன்றி மாயாபோதத்தால் கூறலின், "மாயோக வாசகம்" என்றுங் கூறினர்.

இதனால் கல்வி உடையோரேனும் பிரபஞ்சிகளினும கேடென்பது ஆயிற்று. கல்வி பொருள் என்னும் இரண்டு செல்வங்களும் நல்லோர்பால் வரின் நன்மையும் தீயோர்பால் வரின் தீமையும் மேன்மேல் வளர்தலின், இவர் தீயர் என்பது ஆயிற்று.

இவரது மொழிகளை உண்மையாகக் கொள்வோர்க்குந் தீதுவரும் ஆகலின், "கிட்டினரகம்" என்றார்.

இத்திருவெண்பாவால் தருக்கவாதிகள் துர்க்குணமும் அவரது மொழிகளைக் கேட்கல் ஆகாது என்பதும் அறிவித்தவாறு காண்க. (உக)

குன்றழலி னொந்துநீர் தேடுங் குருடரைப்போற் [றில்
கன்றுபசு வைப்பார்க்குங் காலம்போ - லொன்றொன்
வேட்டவதி மோகி விடயம்போற் சற்குருவைத்
தேட்டமதி பக்குவமாய்த் தேர்.

(உரை.) குன்று அழலின் நொந்து நீர் தேடும் குருடரைப் போல் கன்று பசுவைப் பார்க்கும் காலம்போல் ஒன்று ஒன்றில் வேட்ட அதிமோகி விடயம்போல்—முதிர்வேனிற் காலத்து மலைக்கட்படும் தீவெப்பத்தால் மெய்வருந்தி நீர் எங்குளதென்று தேடும் அந்தகரைப்போலும், ஆவின்கன்று தன்தாயைத் தேடும் காலம்போலும், விடயங்கள் பலவற்றுள்ளும் ஒரோர் விடயத்தை நச்சிய மிகுந்த அந்த விடயமோகிபோலும்,

சற்குருவைத் தேட்டம் அதிபக்குவம் ஆய்த் தேர்— ஞானாசாரியர் எங்குளர் என்று தேடும் தேட்டமே அதிதீவிரதர பக்குவம் என்று அறிதி.

(குறிப்பு.) அழலின் நொந்த குருடர் வெப்பத்துன்பந் தணிப்பான் நீர் தெரியாது தேடுமாறுபோல், மிகுந்த பக்குவர்க்குப் பிறவி துன்பமாய்த் தோற்றலின், இத்துன்பந் துடை

ப்பான் ஆசாரியரைத் தெரியாது தேடலின், "நீர்தேடுங் குருடரைப்போல்" என்றும், கன்று காலைமாலை யாகிய காலத்துத் தன்தாயை மிகுந்த அன்போடுந் தேடல்போல், முற்காலம் போல் அன்றி இக்காலத்தில் பிரபஞ்சம் பொய்யாய்த்தோற்றி மிகுந்த அன்போடு ஞானசாரியரைத் தேடலின், "கன்று பசுவைப் பார்க்குங்காலம்போல்" என்றும், ஓர்விடயத்தை நச்சிய அதிமோகி அதனால் வரும் இன்பத்தைக் கருதிக்கருதி அவ்விடயம் என்று கிடைக்குமோ என்று அதனையே தேடல்போல், பேரின்பத்தைக் கருதிக்கருதி இதனைக் கொடுக்கும் ஞானசாரியரை என்றைக்கு அடைவோம் என்று அவரையே தேடலான், "அதிமோகிவிடயம்போல்" என்றுங் கூறினார்.

விடயமோகிபோல் என்று கூட்டுக.

இத் திருவெண்பாவால் பக்குவ இலக்கணங் கூறியவாறு காண்க. (உஉ)

## பதி நிச்சயங் கூறல்.

பெண்ணா ணலியாய்ப் பிறந்துவளர்ந் தேயழியு
மெண்ணாத பேத மியல்பின்றிப் - பண்ணுங்காற்
காரணகத் தாவொருவ னுண்டவனைக் காட்டுநூ
லாரணமு மாகமமு மாம்.

(உரை.) இயல்பு இன்றி எண்ணாத பேதம் பெண் ஆண் அலியாய்ப் பிறந்து வளர்ந்தே அழியும் பண்ணுங்கால் காரண கத்தா ஒருவன் உண்டு—ஓர் இயல்பு இன்றி அநந்த பேதங்களாயும் பெண்வடிவமாயும் ஆண்வடிவமாயும் இவ்

விருவகையுங் கூடிய அவிவடிவமாகியும் தோன்றிநின்று அழி யப்பட்ட இத்தேகாதி பிரபஞ்சத்திற்குத் தற்சுதந்திரம் இன் மையால் தானே காரியப்பட மாட்டாது, ஆகலின், இதனை அநாதியிலே படைத்தற்கு நிமித்தகாரணனாகியகருத்தன் ஒருத் தன் உண்டு; (அஃது எங்ஙனம் எனின்),

அவனைக் காட்டும் நூல் ஆரணமும் ஆகமமும் ஆம்— அக்கருத்தனை அறிவிக்கும் நூல்கள் வேதாகமங்கள் ஆகும், (இவற்றான் அறிந்துகொள்ளுதி).

(குறிப்பு.) காரியங்கள் உண்டாவதற்குக் காரணம், முதற் காரணம், துணைக்காரணம், நிமித்தகாரணம் என மூன்றுவகை யாயிருக்கும். இவற்றுள், முதற்காரணம் மண், துணைக்காரணம் தண்ட சக்கரம், நிமித்தகாரணம் குலாலன். நிமித்தகாரணனா கிய குலாலன் முதற் காரணமாகிய மண்ணினின்றும் துணைக் காரணமாகிய தண்ட சக்கரங்களைக் கொண்டு, கட கலசாதி காரியங்களை உண்டாக்குவன். அதுபோல, குலாலன் போலும் நிமித்த காரணனாகிய சிவன், மண்போலும் முதற்காரணமாகி ய மாயையினின்றும் தண்ட சக்கரம்போலுந் துணைக்காரண மாகிய தனது கிரியாசத்தியால், தநு கரண புவன போகங்க ளாகிய காரியங்களை உண்டாக்குவனாகலினும், கட கலசாதி காரியங்களைக் கண்டு இவற்றைக் காரியப்படுத்துங் குலாலன் ஒருவன் உளனென்று அறிவது போலும் தநுகரணாதிகளைக் கண்டு இவற்றைக் காரியப்படுத்தும் கருத்தா ஒருத்தன் உள னென்று அறியவேண்டுமாகலினும், “பண்ணுங்காற் காரண கத்தா வொருவனுண்டு” என்றார்.

மற்றைய நூல்கள் இவற்றைப்போல் உண்மையாய் அவனை அறிவிக்கமாட்டாவாகலின், "அவனைக் காட்டுநூலாரணமு மாகமமுமாம்" என்றார்.

பெண் ஆண் என்னும் பன்மைபோல் அலியையும் பன்மையாகக் கூறினமையாற் பெண்ணுணுக்குரிய குறிகள் இருவகையும் இன்றிய புல் முதலியனவும் புழு முதலியனவும் அலியெனக்கொள்க.

'பண்ணுங்கால்' என்னும் ஏழனுருபை நான்கனுருபாகக் கொள்க.

* "காரியங் காரணங்கண் முதறுணை நிமித்தங் கண்டாம்
பாரின்மண் டிரிகை பண்ணு மவன்முத றுணைநி மித்தந்
தேரின்மண் மாயை யாகத் திரிகைதன் சத்தி யாக
வாரியன்குலால னய்நின் றாக்குவ னகில மெல்லாம்"

என்பது சித்தியார்.

இத் திருவெண்பாவால் பதி ஒன்று உளதென்று அறிவித்தவாறு காண்க. (உக)

தன்னை யறியாது வேறுண்டாய்த் தானறியா
துன்னிலொழி வாமுதிப்பீ றொன்றுமிலை-சந்நிதிக்கே
யஞ்சுதொழி லாமதனை யாநந்த வாக்காலே
கிஞ்சளவு கேட்கலுமா கும்.

(உரை.) தன்னை அறியாது வேறு உண்டாய்த் தான் அறியாது உன்னில் ஒழிவு ஆம் உதிப்பு ஈறு ஒன்றும்இலை—சந்

* சிவஞான சித்தியார்: சுபக்கம்: முதற் சூத்திரம்-18.

கூறிய சிவம் தன்னை அறிந்துகொண்டு இருக்குமோ எனின், மலரகிதமா யிருத்தலின், அது தன்னை அறியாது. மற்றோர் பொருளைத்தான் அறிந்துகொண்டு இருக்குமோ எனின், தனது பூரணத்தில் சகலமும் அடங்கியிருக்கும் ஆகலின், தனக்கு வேறாய் ஓர் பொருளுண்டாய் அதனை அறியாது. நினைவோடுதான் கூடியிருக்குமோ எனின், நினைப்பு உண்டெனின் மறப்பு உண்டு ஆகலின், அது நினைப்பும்மறப்பும் இன்றிய நிருவிகாரி. அதுதான் ஓர் காலத்து உண்டாயதோ எனின், உற்பத்தி உண்டெனின் நாசமும் உண்டு. அஃது அநாதி நித்தியம்ஆகலின், உற்பத்திநாசங்கள் ஒன்றும் இல்லை

(இங்ஙனம் மலரகிதமாய்ப் பரிபூரணமாய் நிருவிகாரியாய் அநாதி நித்தியமாய் இருந்துள்ள அச்சிவம் எங்ஙனம் மாயையையக் காரியப்படுத்தும் எனின்,)

சந்நிதிக்கே அஞ்சு தொழில் ஆம் அதனை ஆநந்தவாக் காலே கிஞ்சு அளவு கேட்கலும் ஆகும்—அச்சிவத்தின் சந்நிதிக்கண்ணே பஞ்சகிருத்தியங்கள் உளவாம், அக்கிருத்தியத்தை ஆன்மாக்கண்மேல் வைத்த காருணியத்தால் மௌனாநந்தந் ததும்பி அதுகூறும் ஆநந்தவாக்கால் சிறிதளவு கேட்கலும் ஆகும்.

(குறிப்பு.) சூரியன் இச்சாயத்தனம் இன்றி இருக்கவும் அவன் சந்நிதியில் ஒன்று மூகையாயும், ஒன்று அலர்ந்தும், ஒன்று உலர்ந்தும், தாமரை முத்தொழிற் படல்போல், சிவசந்நிதானத்திலே மாயையில் சிருட்டியாதி தோற்றலால், "சந்நிதிக்கே அஞ்சுதொழிலாம்" என்றார்.

ஆநந்தவாக்கு, வேதாகமங்கள்.

"கிஞ்சளவு கேட்கலுமாகும்" என்றமையால், பஞ்சகிருத்தியத்தின் பெருமையை அளவிடக்கூடாதென்பது ஆயிற்று.

உதியா துளதாகி யோங்கிப்பே ராம
லதிசூக்கு மங்குறைந்தா காமற் பறைதபாத
வாகாய மூங்காலும் போல வசைவற்ற
தேகாண் பரிபூ ரணம்.

(உரை.) உதியாது உளது ஆகி ஓங்கிப் பேராமல் அதிசூக்குமம் குறைந்து ஆகாமல்—தான் ஒன்றினால் உற்பத்தியாகாது எக்காலமும் உள்ளதாய், கருவிகள் முப்பத்தாறையும் கடந்திருப்பதாய், போக்குவரவு அற்றதாய், நுண்ணிய பொருள்கட்கெல்லாம் நுண்ணிதாய், ஓர் காலத்திற் குறைந்து ஓர் காலத்தில் வளராததாய்,

பறையாத ஆகாயமும் காலும்போல அசைவு அற்றதே பரிபூரணம்—முடிவுகாலத்தில் சலனம் இன்றாய், வாயுவும் ஆகாயமும் பிரிவற்று ஒன்றாயிருப்பதுபோலச் சடசித்துக்களாயுள்ள பிரபஞ்சமும் தானும் பிரிபடாது ஒன்றாய் அசைவற்று இருப்பதே அச்சிவத்தினது பரிபூரண சொரூபம்.

(குறிப்பு.) தநுவாதிகளை மாயையிற் றோற்றுவிப்பதும் ஆன்மாக்களை அவற்றிற் கூட்டுவிப்பதும் அஃதாகலினும், அதற்குமேல் மற்றொன்று இன்மையானும், "உதியாதுளதாகி" என்றும், அசலம் ஆகலின், "பேராமல்" என்றும், யாவைக்கும் தாரகமாய் உட்புறம்பாய் இருந்தும் ஒன்றோடும் தாக்கற்றிருந்

தலின், "அதிசூக்குமம்" என்றும், அகண்டாகாரமாய் இருத்த லின், "குறைந்தாகாமல்" என்றும்; ஆகாயத்தில் வாயு சரிக்கும் போது அவ்வாகாயத்தையும் வாயுவையும் இவ்வாயுக்கட் டோ ன்றும் சீதள உட்டண முதலியவற்றையும் பிரித்துக் காணப் படும்; அவற்றின் நடுநின்றவாயு அந்த ஆகாயத்தில் அசைவற நிற்பின் முன் தோன்றிய பகுப்புக்கள் இன்றி அவ்வாகாயந் தானாயிருக்கும். அதுபோல, பெத்தகாலத்து முப்பொருள் கட்குமா நடுநின்ற ஆன்மபோதம் சீவிக்கு மிடத்துச் சிவம் என்றும், பசு என்றும், பாசம் என்றும் பிரித்தறியப்படும்; முத்திகாலத்து அவ்வான்மபோதம் சீவியாது சிவத்துள் அடங் கின், முன் தோற்றிய பகுப்புக்கள் ஒன்றுந் தோற்றாது சிவந் தானாய் இருக்கும் ஆகலின், "ஆகாயமுங் காலும்போல அசை வற்றதேகாண் பரிபூரணம்" என்றுங் கூறினார்.

காண் - முன்னிலை அசை.

இவ்விரண்டு திருவெண்பாவானும் பதி இலக்கணங் கூறியவாறு காண்க. (உரு)

பதியானது சடசித்துக்கட்கெல்லாம் இடங்கொடுத்துக் கொண்டு எல்லாம் தானாயிருக்கும் என்றீர்; ஆனால், அட்டமூர் த்த முதலிய வடிவங்களும் அத்திருமேனிகளை வழிபடுவோர் க்கு அது கொடுக்கும் பயன் முதலியவும் யாவை எனின் மேற்கூறுகின்றார்.

எட்டுருவு மைந்தொழிலு மிச்சைவடி வும்பயனுஞ்
சுட்டரிய பூரணமுஞ் சுட்டுதலு - நிட்டைகளு

முன்னிழப்பி லின்ப முதித்தொடுங்கு மொன்றிரண்டும்
தன்னருட்கே யாமத் தனை.

(உரை.) எட்டு உருவும் ஐந் தொழிலும் இச்சைவடிவும் பயனும் சுட்ட அரிய பூரணமும் சுட்டுதலும்—பிரபஞ்சம் எல்லாம் ஓர் வடிவமாய்க் கொண்டருளிய அட்டமூர்த்தமும், ரூபாரூபமாகிய சதாசிவம் செய்யும் ஐந்தொழில்களும், தமது சுதந்திர இச்சையால் திருமேனிகொண்ட உருவமாகிய மயேசுர வடிவும், இவ்வடிவுகளை வழிபடுவோர்க்கு இவரால் கொடுக்கப்படும் பதப்பிரயோசனங்களும், இவ்வடிவங்கள் எல்லாம் கடந்து ஆன்மபோதத்தால் சுட்டி அறிதற்கு அரிய அரூபமாகிய பரிபூரண சொரூபமும், சுட்டி அறியும்படி எழுந்தருளி வந்த குருவடிவும்,

நிட்டைகளும் உன் இழப்பில் இன்பம் உதித்து ஒடுங்கும ஒன்று இரண்டும் அத்தனை தன் அருட்கே ஆம்—வீட்டையும் நெறியாகக்கூறிய உபாய நிட்டைகளில் தோற்றுவனவும், உனது போத ஒழிவில் ஆநந்தந் தோற்ற அதனை அறிந்து அதனுள் அதீதப்படும் அத்துவிதம் என்பதும், இங்ஙனம் அதீதப்படுவதன்முன் தோற்றும் துவிதம் என்பதும், ஆகிய இவை அத்தனையும் அச்சிவத்தினது அருட்சத்தியால் உண்டாம்.

(குறிப்பு.) "எட்டுரு" என்றது பஞ்சபூதங்களும் சந்திர சூரியரும் ஆன்மாவும் எனக்கொள்க.

இத் திருவெண்பாவால் பதியினது அருட்சத்தி இலக்கணங் கூறியவாறு காண்க. (உசு)

உனையுணர்த்திற் பாசமுதவி யுடையோன்
றனையுணர்த்தி னீயே தலமாங்-கனலை
விறகிடமாய்க் காணிலதன் வெம்மையை வேறாக்கி
யறியகிலாப் போலதுநீ யாம்.

(உரை.) உனை உணர்த்தின் பாசம் உதவி உடையோன் தனை உணர்த்தின் நீயே தலம்·ஆம்—பசுவாகிய உன்னை அறிவிக்கு மிடத்தும், உன்னை அநாதியிலே மறைத்து நின்ற பாசத்தை அறிவிக்கு மிடத்தும், பெத்தமுத்தி என்னும் இரண்டு காலத்தும் உயிர்த் துணையாய் இருந்து உனக்கு உபகரிக்கும் பதியை அறிவிக்கு மிடத்தும், நீயே மற்றைய இரண்டிற்கும் இடமாகும்; (அஃதெங்ஙனமெனில்,)

கனலை விறகு இடம் ஆய்க் காணில் அதன் வெம்மையை வேறு ஆக்கி அறியகிலாப்போல் அது நீ ஆம்—அக்கினியைக் காட்டத்தினிடமாய்க் கடைந்துகாணின், அவ்வக்கினி வேறு உட்டணம் வேறாய்ப் பிரித்து அறியக்கூடாததுபோலச் சுவாநுபவத்தால் மலத்தினை நீங்கி உன்னை உள்ளபடி அறியின், நீவேறு சிவம்வேறாய்த் தோற்றாது ஆகலின், அச்சிவம் நீயாகும்.

(குறிப்பு.) காட்டத்தில் அடங்கியிருந்த தீ கடைந்தபோது தோற்றினாற்போல், முன் மலபந்தத்தால் தோற்றாதிருந்த ஆன்மா இப்போது சுருதி குரு சுவாநுபவத்தால் தோற்றலின்; "கனலைவிறகிடமாய்க்காணில்" என்றும், அதில் தோற்றிய தீயில் உட்டணமும் பிரகாசமும் இருத்தல்போல், தன்னை

உள்ளபடி கண்ட ஆன்மாவினிடத்து ஆநந்தமும் அவ்வாநந்தம் மேன்மேல் விளைவதும் இருத்தலின், "அதன்வெம்மையை வேமுக்கி யறியகிலாப்போல்" என்றும், இரண்டிற்கும் "நீயே தலம்" என்றுங் கூறினர்.

அக்கினியைப்போல் பசு, சூடுபோல் சிவம், பிரகாசம்போல்பாசம் என அறிக. ஆநந்தம் சிவம், ஆநந்தத்தை யநுபவிப்பது ஆன்மா, ஆனந்தத்தை விளைப்பது மலம் என அறிக.

தத்துவமசி வாக்கியார்த்தமும் இங்ஙனம் காண்க என்று "அதுநீயாம்" என்றார்.

இத் திருவெண்பாவால் முத்தியிலும் மும்முதலும் பிரிவற்றிருக்கும் என்று அறிவித்தவாறு காண்க. (உஎ)

விடாதவத்தை மூடி விடம்புசித்தாற் போலச்
செடாதிகளுஞ் சேதனனுஞ் சேர்ந்து-படாதுபடு
மச்சைக் கழற்றி னருள்வழி யவ்வழியு
னிச்சைப் பொருண்மலமென் றெண்.

(உரை) விடாது அவத்தை மூடி விடம் புசித்தால் போலச் செடாதிகளும் சேதனனும் சேர்ந்து படாதுபடும்—அணுவளவேனும் இடைவிடாது அவத்தைகள் மூட அவ்வவத்தைகள்தோறும் வேறுவேறாய் இருந்துள்ள உடம்பு முதலிய கருவிகளும் ஆன்மாவும் கலந்து, விடமருந்தினாற்போல் படாததுன்பங்கள் எல்லாம் படும்; (ஆகலின் அங்ஙனம் என்றறிந்து),

அச்சைக்கழற்றின் அருள்வழி நீ அவ்வழி உன் இச்சைப் பொருள் மலம் என்று எண்—அந்த அவத்தைகளாகிய உடம்

புகலை நீங்குதி எனின், நீ அருளிடம் ஆவை, அவ் வவத்தைக ளிடம் உன்னால் இச்சிக்கப்பட்ட பொய்ப்பொருள்கள், அஃ தன்றி உன்னை வாதிக்கும் மலமும் அவையென்று அறிதி.

(குறிப்பு.) சாக்கிராவத்தையில் இருக்கும்போது அதனுள் தோன்றும் கருவிகள் யாதொன்று யாதொன்று அடுத்தது அதனதன் மயமாயும், அதனதன்கணின்று சொப்பனாதிகளில் செல்லும்போது ஆண்டாண்டுத் தோன்றும் கருவிகள் மய மாயும், மீண்டு வரும்போதும் அந்த அவத்தைகள் தோறும் முற்கூறிய கருவிகளைச் சார்ந்து வரலானும், அந்த அவத்தை களைவிட ஆன்மாவிற்கு வேறிடம் இன்மையானும், "விடாத வத்தை மூடி" என்றார்.

விடம் அருந்தினோனை அவ்விடம் வாதிப்பதுபோல் அவ த்தை தன்னைச்சேர்ந்த ஆன்மாவை வாதித்தலான், அங்ஙனங் கூறினார்.

உடம்பும் விடயமும் ஆகிய இச்சைப் பொருளால் மற்றை அவத்தைகள் மேன்மேல் தொடர்தலின் எல்லாவற்றையுங் கூட்டி "அவ்வழியுன்னிச்சைப்பொருள்" என்றார்.

யாதோரவத்தை அடுத்தது அந்த அவத்தை வடிவாய் ஆன்மா இருத்தலின், அதனை "அச்சு" என்றார்.

இத் திருவெண்பாவால் ஆன்மா சார்போதன் என்பதும் இச் சார்போதத்தால் துன்பமே அன்றி இன்பம் இன்று என்ப தும் அறிவித்தவாறு காண்க. (உஅ)

தன்னையறி வார்க்கெதிருந் தானும் பயனுமிலை
யென்னிற் சிவனையறி வென்போமோ - சின்னாத
தீதகற்று மாற்றொளிபோற் றேய்ந்துசிவ மாயிருக்கப்
போதகத்தை நாமொழிவிப் போம்.

(உரை.) தன்னை அறிவார்க்கு எதிரும் தானும் பயனும் இலை என்னின் சிவனை அறிவு என்போமோ—கருவிகள் முப்பத்தாறையும் நீங்கித் தன்னை உள்ளபடி உணர்ந்தோர்க்கு முன் அறிவிற்கு எதிரீடாய்த் தோன்றின கருவிகளும் இல்லை, தேகமாகியதானும் இல்லை, இத்தேகத்தால் அநுபவிக்கும் விடயப்பயனும் இல்லை, என்று வேதாகமங்கள் கூறும் எனின், அவ்வான்மாவில் அக்கினிக்கு உட்டணம்போல் பிரிபடாதிருந்த சிவத்தை எதிரிட்டு அறியத் தொடங்கின் என்ன விபரீதமாய்ப் போமோ? (யாம் அறிகிலோம்);

சின்னாத தீது அகற்றும் மாற்று ஒளிபோல் தேய்ந்து சிவம் ஆய் இருக்கப் போதகத்தை நாம் ஒழிவிப்போம்—ஞானநாதனே, புடம்போட்டுக் கருமசம் அகற்றும் பொன்னுக்கு மாற்றொளி மிகுதல்போல்,உன் போதங்குறைந்து நீ சிவப்பிரகாசந்தானு யிருக்க நானு உபாயங்களானும் அப்போதத்தை யாம் ஒழிவிப்போம், (யாம்ஒழிவித்தபடியே நீஒழிந்துபோதி).

(குறிப்பு.) பொன்னும் கல்லும் சரியொத்தபோது இருபுறனும் சாயாது மேல்முள் நேரேநிற்கும் கீழ்முள்போல, தன்னை உள்ளபடி உணர்ந்தோனுக்குக் கேவல சகலங்களிற் சென்று அதன் அதன் மயமாய் இருந்த அறிவு அவைகளைச் சாராது

பிரிந்து அருள்நாட்டத்தில் அசைவற நிற்றலால், "தன்னை யறிவார்க் கெதிருமில்லை" என்றும், தேகம் தானாயிருந்த அறிவு அதனைப்பிரிந்து அறிவாய்நிற்றலால், "தானுமில்லை" என்றும், அருட்பூரணம் என்றைக்கு விளங்குமோ என்று அவ்வருள் மேல் இச்சையைவைத்து விடய இச்சையை நீங்கி நிற்றலால் "பயனுமில்லை" என்றுங் கூறினர்.

புடம் போடுந்தோறும் இடைகுறைந்து மாற்று உயர்தல் போல, தற்போதத்தால் சிவத்தை எதிரிட்டு அறியாது அறிந்து அசைவற நிற்குந்தோறும் அப்போதங் குறைந்து சிவப்பிரகாசம் மேலிடலால், "தீதகற்றுமாற்றொளிபோல்" என்று உவமை கூறினர்.

இத் திருவெண்பாவால் சிவத்தை எதிரிட்டு அறியக்கூடாதென்று அறிவித்தவாறு காண்க. (உக)

பூரணவா நந்தமாந் தானே புறம்புபால்
வாரியின்மீன் போன்ற மலவாழ்வைப் - பாரீ
ருதியாது நின்ற வொளியையிரு ளாக்கு
மதுகாணு மக்கினித்தம் பம்.

(உரை.) பூரண ஆநந்தம் ஆம் தானே புறம்பு பால் வாரியில் மீன்போன்ற மல வாழ்வைப் பாரீர்—உள் புறம் நடு கீழ் மேல் பக்கம் என்று கூறப்பட்ட எவ்விடத்தும் நிறைந்துள்ள பரிபூரண சுகமாகிய சிவந்தானே அதனைவிட்டு நீங்காத ஆன்மாவிற்குப் புறம்பு? பாற்கடலிற் சஞ்சரித்தும் அப்பாலைப்

புசிக்க அறியாது ஜெந்துக்களைப் புசிக்கும் மீன்போலும் அப் பூரணானந்தத் திருந்தும் அதனை அநுபவிக்க அறியாது மாயா மலமாகிய விஷயங்களை அநுபவிக்கும் இந்த ஆன்மாக்களினது மலவாழ்க்கையைக் கண்டீர்கொலோ! (அஃதன்றி).

உதியாது நின்ற ஒளியை இருள் ஆக்கும் அது அக்கினித் தம்பம்—உதய அத்தமனம் இன்றி எக்காலத்தும் ஓர் இயல்பாய் நின்ற ஞானசூரியனைத் தெரியவொட்டாது இருள்போற் காட்டும் அது அக்கினித் தம்ப மந்திரம்போலும் ஆன்மாவை அநாதியே மறைத்திருந்த ஆணவமானது

(குறிப்பு) கூகைக்கு விழிக்கண் இருந்த குற்றத்தால் சூரியப் பிரகாசம் இருளாய்த் தோற்றியதுபோல், ஆணவமலக் குற்றத்தால் ஆன்மாவிற்கு ஞானவொளி இருளாய்த் தோன்றினமையால், "ஒளியை யிருளாக்கும்" என்றும், அக்கினியோடு மந்திரம் அபின்னமா யிருந்து அவ் வக்கினிமுழு மறையாது அதனது சுட்டை மறைத்ததுபோல், ஆன்மாவோடு ஆணவம் அபின்னமா யிருந்து அவ் வான்மா முழுது மறையாது அதனது ஞானத்தை மறைத்தலான், "அதுகாணு மக்கினித் தம்பம்" என்றுங் கூறினர்.

காணும் - அசை.

இத் திருவெண்பாவால் மலத்தடையல் ஆன்மாவிற்கு ஆநந்தமும் திருவருளும் தோற்றா திருந்தன என்று அறிவித்தவாறு காண்க. (௩0)

கடல்சிவநீ ரான்மா வுப்புமலங் கன்ம
மடர்வாயுப் போத மலைகா - ணிடைவிடா

தவ்வாதி யுட்கரணை மைம்பொறியிற் பம்பரம்போ
லிவ்வா றுனைச்சுழற்று மெண்.

(உரை.) கடல் சிவம் நீர் ஆன்மா உப்பு மலம் அடர் வாயு கன்மம் அலை போதம்—கடல்போலுஞ் சிவம், அதனுள் நீர்போலும் ஆன்மா, அந்நீருள் பிரிபடாதிருந்த உப்புப்போலும் ஆணவம், அந்நீரின்மேல் வீசுங் காற்றுப்போலும் கன்மம், அக்காற்றான் எழும் அலைபோலும் போதம்; (ஆகிய இவற்றுள்),

இடைவிடாது அவ்வாதி உட்கரணம் ஐம்பொறியில் பம்பரம்போல் இவ்வாறு உனைச் சுழற்றும் எண்—காற்றைப்போன்ற கன்மத்துக் கீடாய் இச்சா ஞானக் கிரியைகள் பஞ்சமூர்த்திகளைச் செலுத்த, இப்பஞ்ச மூர்த்திகள் அகாரமுதலிய அக்கரங்களைச் செலுத்த, இந்த அக்கரங்கள் மன முதலிய உட்கரணங்களைச் செலுத்த, இவ்வுட்கரணங்கள் ஐம்பொறிகளிடத்து இடைவிடாத உன்னைப் பம்பரச் சுழல்போலும் இங்ஙனம் எக்காலும் சுழற்றும் என்று அறிதி.

(குறிப்பு.) அவ்வாதிகளைக் கூறினமையால் இவற்றிற்கு முதற்காரணமாகிய இச்சா ஞானக்கிரியை முதலிய வருவிக்கப்பட்டன.

காற்றான் அலை எழல்போல் ஆன்மாக்கள் கன்மத்துக் கீடாய்ப் போதம் பலபட விரிதலின் அங்ஙனங் கூறினார்.

காண் - அசை.

இத்திரு வெண்பாவால் திருவருள் ஆன்மாக்களைக் கன்மத்துக்கீடாய் நடத்துமாறும், அவ்வான்மாக்கள் கரணங்களோடுங் கூடி இந்திரியவழிச்சென்று விடயங்களைப் புசிக்குமாறும் இங்ஙனம் என்று அறிவித்தவாறு காண்க. (௩௧)

மண்ணாதி சத்தாதி வாக்கு மனமாதி
கண்ணாதி நாதாந்தங் கண்டகன்ற - வுண்மை
தனையணுவென் றேயுணர்த்துஞ் சார்பினையுங் கண்ட
வுனையறிவென் றுள்ளே யுணர்.

(உரை.) மண் ஆதி சத்தாதி வாக்கு மனம் ஆதி கண் ஆதி நாதாந்தம் கண்டு அகன்ற உண்மைதனை—பிருதிவி முதலிய பஞ்சபூதங்களும், சத்தாதி விடயங்களும், வாக்காதி கன்மேந்திரியங்களும், மனமாதி அந்தக் கரணங்களும், சட்சுவாதி ஞானேந்திரியங்களும், காலமாதி வித்தியா தத்துவங்களும், சுத்தவித்தை ஆதி நாதம் ஈருய்ச் சொல்லப்பட்ட சிவதத்துவங்களும், ஆகிய இம் முப்பத்தாறையும் அடிதொடங்கி வேறு வேருய் ரூபதரிசனம்பண்ணி அறிந்து, அவையெல்லாம் தான் அன்றென்று நீங்கி, அவற்றின் முடிவில்நின்ற சைதன்னியத்தை,

அணு என்றே உணர்த்தும் சார்பினையும் கண்ட உனை அறிவு என்று உள்ளே உணர்—ஆன்மா என்று உனக்கு அறிவிக்கும் திருவருளையும், அவ்வருளால் முன்கண்டு நீங்கிய கருவிகள் இவை என்றும், கண்ட உன்னை அறிவென்று உனக்குள்ளே அறி.

(குறிப்பு.) கருவிகள் முப்பத்தாறும் ஒன்றை ஒன்று அறியாமையானும், தத்தம் குணங்களைத் தாம் அறியாமையானும், காட்சி கண்ணை அறியாததுபோல் அவைகள் ஆன்மாவை அறியா ஆகலானும், கண் காட்சிகளை அறிவதுபோலக் கருவிகளை ஈது ஈதென்று பகுத்து அறிந்து நீங்கிநின்றது ஆன்மா ஆகலானும், "நாதாந்தங் கண்டகன்ற உண்மைதனை" என்றார்.

தன்னால் அறியப்பட்ட கருவிகளைச் சடமென்றும், அவற்றைத் தனக்கு அறிவித்தது அருளென்றும், அக்கருவிகள்போல் சடமும் அன்றித் திருவருளைப்போல் பேரறிவும அன்றி நின்று அறிந்த அறிவு தான் என்றும், தன்னையும் பாசத்தையும் திருவருளையும் அவ்வருளால் கண்டமையால், "உணர்த்துஞ்சார்பினையும்" என்றார்.

தத்துவங்களை எல்லாம் பகுத்துக் கூறினமையால் வித்தியாதத்துவம் வருவிக்கப்பட்டது.

அறிவோடுங்கூடி அறிவாயிருத்தலின் ஆன்மாவையும் அறிவென்றார்.

இத் திருவெண்பாவால் ஆன்மா ஈதென்று அறிவித்தவாறு காண்க. (கூஉ)

அஞ்சுதொழி லாவதுவே யஞ்சவத்தை கிஞ்சவிலா
வஞ்சிடத்துங் கொள்ளிவட்ட மாகவே-பஞ்சவன்னம்
வைத்த படிகம்போன் மாறு துனைமயக்கல்
சித்திரக்கூத் தாகத் தெளி.

(உரை.) அஞ்சுதொழில் ஆவதுவே அஞ்சு அவத்தை கிஞ்சல் இலா அஞ்சு இடத்தும் கொள்ளிவட்டம் ஆகவே—சிவனது பஞ்ச கிருத்தியங்கள் யாவை எனின், சாக்கிரமுதலிய அஞ்சவத்தைகளுமாம். சுருக்கமில்லாத இவ் வஞ்சவத்தைக ளிடத்தும் கொள்ளிவட்டம் போலாக அதிசீக்கிரமாய் மாறி மாறிவரச் சுழற்றி,

பஞ்சவன்னம் வைத்த படிகம்போல் மாருது உனைமயக் கல் சித்திரக் கூத்து ஆகத் தெளி—வைக்கப்பட்ட பஞ்சவன்ன த்தின் மயமாம் படிகம்போல நீசேர்ந்த அவத்தை யாது அதன் மயமாக்கி இடையருது உன்னை மயக்குதல் அவனது அழகிய திருக்கூத்தாக அறிதி.

(குறிப்பு.)முப்பத்தாறு கருவிகளோடும் ஆன்மா தேகபோ கங்களை அறிதலின், சாக்கிரத்தைச் சிருஷ்டியாயும், இச் சாக் கிரத்தில் புசித்த வாசனை சொப்பனத்தும் அறிந்து நிற்ற லான், இதனைத் திதியாயும், இச்சொப்பனம்போல் சிறிது நிழ லெழத்தோன்றி மறைதலால், சுழுத்தியைச் சங்காரமாயும், பிராணவாயு இயக்கம் இன்றி ஒன்றுந் தோன்ருது இருத்த லால்,துரியத்தைத் திரோபாவமாயும், அதீதம் கருவிகள் ஏதும் இன்றி ஆணவ இருளா யிருந்ததாயினும் அதன் நிமித்தமாய் மாயையில் தநுவாதி கொடுத்தல், இருவினை ஒப்பு வருவித்தல், ஆசாரிய மூர்த்தமாய்வந்து உபதேசித்தல் முதலிய அநுக்கிர கம் பெறுதலின், இவ் வதீதத்தை அநுக்கிரகமாயுங் கூறினர்.

"கிஞ்சலிலா"என்கிற விதப்பான்,உடல் தோன்றி நின்று அழிவது, சிருஷ்டி திதி சங்காரம். உயிருள் மயக்கமும் தெளி

வும் வருவன திரோபவ அநுக்கிரகம். இங்ஙனம் உடலின் மூன்றும், உயிரின் இரண்டுமாக வருவனவும்,

ஓர் இந்திரியத்தில் ஆன்மா பிரவேசித்தல் சிருஷ்டி, அதனால் அறியும் விஷயத்தை அநுபவித்தல் திதி, அவ் விஷய மயமாய் அழுந்துதல் சங்காரம், அதனில் ருசிப்பித்தல் திரோபவம், அதனைத் தெளிந்து கோடல் அநுக்கிரகம், இங்ஙனம் இந்திரியங்கள் தோறும் வருவனவும்,

மனத்தான் ஓர் பொருளை நினைத்தல் சிருஷ்டி, அப்பொருளில் பிரியம் பிறத்தல் திதி, அஃது எப்போது வருமென்று திகைத்து நிற்றல் சங்காரம், அப்பொருளில் மயங்குதல் திரோபவம், அதனைத் தெளிந்துகோடல் அநுக்கிரகம், இங்ஙனங் கரணத்தில் வருவனவும்; இவைமுதலிய பெந்தத்தில் வரும் பஞ்சகிருத்தியங்களும்,

முத்தியில் அருள் வடிவமாதல் சிருஷ்டி, ஆநந்தப்பேறு திதி, இதில் அதீதப்படுதல் சங்காரம், ஞாதுரு ஞான ஞேயமென்னும் மூன்றுந் தோன்றாதிருத்தல் திரோபவம், இவை நான்கும் எக்காலமும் விளங்கல் அநுக்கிரகம், ஆகிய இம்முறையே வருவனவுங் கொள்க.

இத் திருவெண்பாவால் பஞ்சகிருத்தியத்தால் அவத்தைகள் நிகழ்வன என்று அறிவித்தவாறு காண்க. (௧௧)

மாயா விகார மதுபானம் போன்றுமயக்
கோயாத துன்றொ லொழியுமோ—நீயதுவாய்ப்

போகாம லாடும் பவுரியவன் பொய்க்காட்சி
யாகாது போலே யறி.

(உரை.) மாயாவிகாரம் மதுபானம் போன்று மயக்கு ஓயாது அது உன்ஞல் ஒழியுமோ—முற்கூறிய அவத்தை மாயாகாரியமாகிய கருவிக் கூட்டங்களினது சேட்டை. அது, மதுபானங் கொண்டவனது நற்குணத்தை மாறுபடுத்தித் தனது லகிரிமேலிட்டு அவனை மயக்குதல்போன்று, உனது ஞானகுணத்தை மாறுபடுத்தித் தனதுகுண மேலிட்டு உன்னை ஒழிவற நின்று மயக்கும்; அதனை உன்ஞல் ஒழிக்கக்கூடுமோ?

(ஆஞல் நீர் இங்ஙனங் கூறிய ஆற்ருன் அதனை ஒழிக்க வேண்டாவோ எனின், அதனை ஒழியாது ஒழித்தற்கு உபாயம் உண்டு, அஃது எங்ஙனம் எனின்),

நீ அது ஆய்ப்போகாமல் ஆடும் பவுரியவன் பொய்க்காட்சி ஆகாதுபோலே அறி—ஆடப்பட்ட ஓர் பார்ப்பனக் கூத்தன் தோட்டிவேடம் போட்டான் ஆயினும், அப்பொய் வேடக் காட்சி தான் ஆகாது தன்னை வேறு கண்டு நின்ருற்போல், அவத்தையுள் இருத்தி எனினும் நீ அதன்மயமாய்ப் போகாது உன்னை வேறுபிரித்து அறிதி எனின், அஃது உன்னை மயக்காது என்று அறிதி.

(குறிப்பு.) இங்ஙனம் பிரித்துநிற்றல் சாக்கிராவத்தையில் அன்றிச் சொப்பனுதிகளில் கூடாதெனினும், அச்சாக்கிராவத்தையைப் பிரித்து நிற்பின் திருவருள் தோற்றும், இத்தோற்றம் மேலிடின் அச்சாக்கிராவத்தை மறையும், அது மறைய

வே அதனது வாசனையான சொப்பனுதிகள் தோன்ரு; ஆக லின், பொதுப்படக் கூறினர்.

இத் திருவெண்பாவால் அவத்தை நீங்கி நிற்றற்கு உபாயங் கூறியவாறு காண்க. (௩௪)

பஞ்ச கிருத்தியத்தான் உண்டாம் அஞ்சவத்தையுங் கடந்து சிவத்தில் அதீதப்பட்டு நின்ருர்க்கு ஒரோர் காலத்து ஒரோ ரவத்தைகள் தோன்ருவோ எனின், மேற் கூறுகின்ருர்.

பழுதையைப்பாம் பென்ற பயம்போனற் பாவித்
தழுதுடம்பை யாட்டினு மாமோ—தொழிலொழிவி
னின்றசிவ யோகி நினைத்தொருகா னீவாரா
யென்றழைத்தா லும்பதையா தென்.

(உரை.) பழுதையைப் பாம்பு என்ற பயம் போனல் பாவித்து அழுது உடம்பை ஆட்டினும் ஆமோ—இருளால் பழுதையைப் பாம்பென்று கண்ட பயகம்பனுதிகள் சுடரால் பழுதையென்று அறிந்து போனல் இப்போது சுடரால் அறிந்த பழுதையில் முன்னிருளால் தோற்றிய பாம்பு இருப்பதாய்ப் பாவித்துப் பயந்ததுபோல் அழுது உடலை நடுக்கினும் முன்போலும் பயகம்பனுதிகள் உண்டாகா ; (அதுபோலும்),

தொழில் ஒழிவில் நின்ற சிவயோகி நினைத்து ஒருகால் நீவாராய் என்று அழைத்தாலும் பதையாது என்—முன் மல இருளால் மெய்போல் தோற்றிய அவத்தைகளை எலலாம் இட்

போது ஞானசூரியனால் பொய்யாகக்கண்டு அவ்வவத்தைகளை நடத்தும் பஞ்ச கிருத்தியங்களையும் கடந்து மேல்நின்ற சிவத்தில்அதீதப்பட்ட சிவயோகி கருதி,அவத்தாய்! ஒருதரம் மீட்டு இங்கு நீ வருதி என்று அழைப்பினும், (முன் அழையாதிருக்கவும் தானேவந்து கொள்ளிவட்டம்போல் சுழன்றது) இப்போது அணுவளவேனும் அசையாதிருந்தது, ஈதென்கொலோ! (யாம் அறிகிலோம்).

(குறிப்பு.) சிவயோகிக்குச் சிவகாருணிய முதலியவற்றால் மௌனானந்தம் ததும்பிற்றாயினும், திருவருள் வடிவாய் நிற்பதன்றி மாயாவடிவம் ஆகான் ஆகலினும், சூரியப்பிரகாசத்து இருள் தோற்றாது அதுபோல ஞானப்பிரகாசத்தில் மாயாந்தகாரம் தோற்றமாட்டாது ஆகலினும், "அழைத்தாலும்" என்றும், "பதையாது" என்றுங் கூறினார்.

இத்திருவெண்பாவால் சிவயோகியை அவத்தைகள் சாரமாட்டா என்று அறிவித்தவாறு காண்க. (௩௫)

இங்ஙனம் இருந்த சிவயோகிக்கு உபதேசித்தல் முதலியவற்றால் தான் பிறர் என்று தோற்றுவது என்னெனின், மேற் கூறுகின்றார்.

கன்னிக் கதலிதனை நார்கழிப்பான் கண்போலத்
தன்னையறி யாவறிவே தான்மீளச்-சொன்னானு
நாவென்ற நாவேபோ னானென்ற சொல்லளவே
யாமன்றித் தானென்றிரா கா.

(உரை.) கன்னிக் கதலிதனை நார் கழிப்பான் கண்போலத் தன்னை அறியா அறிவே தான்மீளச் சொன்னாலும்—ஈனாவாழையினது மட்டைநார் கழிக்கத் தொடங்கினோன் கண் அம்மட்டை உளது உளதென்று ... டப் பார்க்குந்தோறும் அவனது கை மட்டைகளை எல்லாம் கழித்துச்சென்று அதனுள் இருந்த குருத்தையும் விரித்து விடுத்தபோது ஆண்டு முன் போற் சுட்டுதற்கு வேறொன்றும் இன்றிச் சும்மா இருந்த அக்கண் போலும், ஆசாரியன் விவேகத்தால் முப்பத்தாறு கருவிகளையும் விடுவிக்கத் தான் கடந்துசென்று அவற்றின் முடிவில் நின்ற அருளையும் பரையையும் கடந்து அதன்மேல் தோன்றும் ஆநந்தத்தையும் எதிரிடாது அதனுள் அதீதப்பட்டு இருந்த சிவயோகி தன்னை அறியா அறிவே ஆவன், அவ்வறிவாயிருந்தோன் மீட்டும் நீ நான் என்று பிரித்து அவ்வறிவு ஏற்றற்பொருட்டு மாணாக்கனுக்கு அறிவித்தான் எனினும்,

நா என்ற நாவே போல் நான் என்றசொல் அளவே ஆம் அன்றித் தான் எதிர் ஆகா—நாவானது தன் பெயரை நாவென்று கூறினும் அப்பெயர்க்கு உரியபொருள் வேறின்றித் தானாயிருந்த அந்நாவைப்போலும், நீ நான் என்று சொல் மாத்திரமே ஆம் அன்றித் தானும் எதிரும் அவனுக்கு உண்டாகா.

(குறிப்பு.) தன்னையறியா அறிவு சிவம், இதனைத் *"தன்னையறியாது வேறுண்டாய்த் தானறியா" தென்று முற்கூறிய பாட்டானுங் காண்க.

* பொதுவிலுபதேசம் - 24.

சிவயோகி தற்போதம்போய்ச் சிவமாய் இருத்தலின், தானென்பதும், அச்சிவப்பிரகாசத்திற் பிரபஞ்சமறைதலின், பிறரென்பதும் அவனுக்கில்லை ஆகலின், "தானெதிராகா" என்றார்.

இத்திருவெண்பாவால் சிவயோகி தான் பிறர்போற் கூறினும் இவை அவனுக்கு இல்லையென்று அறிவித்தவாறு காண்க. (௩௬)

தன்னைத்தான் உள்ளபடி அறிவது எங்ஙனம் எனின், மேற் கூறுகின்றார்.

தம்மா லறிந்ததெல்லாந் தாமல்ல வென்றுரைத்தாற்
சும்மா திருப்பதுவாய்த் தோன்றுமோ - விம்மி
யரிந்ததலை வாயடங்கு மவ்வளவே யல்லாற்
றெரிந்திடுமோ நீயே தெளி.

(உரை.) தம்மால் அறிந்தது எல்லாம் தாம் அல்ல என்று உரைத்தால் சும்மாது இருப்பது ஆய்த் தோன்றுமோ—தமதுபோதத்தால் ஈது ஈதென்று பகுத்தறிந்து நீங்கிய கருவிகள் எல்லாம் தாம் அல்ல என்று வேதாகமங்கள் கூறும் எனில், அவற்றைப் பகுத்தறிந்து நீங்கிநின்ற அறிவு தாமென அருளால் அறிந்து மௌனமா யிருப்பதாய்த் தோற்றுமோ? (ஆனால் தம்மை அறிந்த அநுபவஞ்சொல்வது எங்ஙனம் எனின்),

அரிந்த தலை வாய் விம்மி அடங்கும் அவ்வளவே அல்லால் தெரிந்திடுமோ நீயே தெளி-உறுப்புகட் கெல்லாம் முத

லாய் தலையை அரிந்தபோது அவ்வாய் திறந்தடங்கும் அவ்வள வே அன்றித் தலை போயிற்றென்று கூற அறியாது; அதுபோ லும், கருவிகள் முப்பத்தாறையும் நீக்கி அவற்றின்மேல் நின்ற முத்திச் சகலமும் முத்திக் கேவலமும் நீங்கி ஆன்மா அருளால் தம்மை மாத்திரம் அறிந்திருக்குமிடத்து ஆண்டுவேறோர் அநு பவம் தெரிந்திடுமோ? நீயே இதனைத் தெளிந்தறிதி.

(குறிப்பு.) தத்துவங்கள் முடிவில் தோன்றும் முத்திச் சகலம் முத்திக்கேவலம் இன்மையால், "அரிந்ததலை" என்றும், இங்ஙனம் நின்ற அறிவுக்கு வடிவு இன்மையால் சொல்லக் கூடாது ஆகவின், "வாயடங்கும்" என்றும் கூறினார் தத்து வங்களை அங்கமாயும் முத்திச்சகல கேவலங்களைத் தலையாயும் வைத்து, இத்தலை போயவிடத்து ஆன்மா அவ்வநுபவங் கள் ஒன்றும் இன்றிச் சும்மா இருத்தலின், "அரிந்ததலை வாய டங்கு மவ்வளவே யன்றித் தெரிந்திடுமோ நீயேதெளி" என் றார்.

அரிந்ததலை விம்மியடங்குமெனக் கூட்டுக. (கூஎ)

மறவாத தம்மை யறிவார் மருளோ
வறிவோ விடயம்போ லாகி - லறிவை
யறிவதறி வாகையினா லாறுறுந் தத்த
மறிவையறி யாபோ லறி.

(உரை.) மறவாத தம்மை அறிவார் விடயம்போல் ஆகில் மருளோ அறிவோ—சகல கேவலங்களாகிய நினைப்பும் மறப் பும் கடந்து அறிவாய் மறவாதிருந்த தம்மை மறந்ததுபோல்

நினைத்து அறியத்தொடங்குவோர்க்கு எதிரிட்டறியும் விடயம் போல் தம்மைத் தமக்குத் தோற்றுமானால் அது மருட்போத மோ அருட்போதமோ?

அறிவை அறிவது அறிவு ஆகையினால் ஆறாறும் தத்தம் அறிவை அறியாபோல் அறி—அறிவாயிருந்த தம்மை அறியத் தொடங்குவது தம் அறிவைக்கொண்டு ஆகலின், முப்பத்தாறு தத்துவங்களும் தத்தம் அறிவைத் தாம் அறியாதிருப்பன போல் தம்மைப் பிரித்தறியாது சும்மா இருப்பதுவே தம்மை அறிவதென்று அறி நீ.

(குறிப்பு.) முன் சகல கேவலமாயிருந்த ஆன்மா தன்னை யாரென்று பார்த்தபோது தான் வேறு அவைவேறாய்ப் பிரிந் தாற்போல், இப்போது சுத்தமயமாயிருந்த ஆன்மா தன்னை எதிரிட்டுப்பார்ப்பின் இச்சுத்தம் பிரிந்து கேவல சகலங்களிற் செல்லும் ஆகலின், "ஆறாறுந்தத்த மறிவை யறியாபோலறி" என்றார். நினைப்பு மறப்பு இன்றி அறிவாயிருத்தலின், "மற வாத தம்மை" என்றார்.

இவையிரண்டு திருவெண்பாவானும் தம்மை அறிவது இங்ஙனம் என்று அறிவித்தவாறு காண்க. (௯அ)

ஊன்றி னிலமசையி னூதெ மொழிந்தசிவந்
தோன்றாத் துணையுனக்குத் தோன்றுமோ-தோன்றின்
விரனுதியைத் தீண்டுவபோல் வாய் முகத்தை மென்று
சிரிப்பதுபோற் பார்த்துத் தெளி.

(உரை.) ஊன்றின் நிலம் அசையின் நாதம் ஒழிந்த சிவம் தோன்றாத் துணை உனக்குத் தோன்றுமோ தோன்றிச் —ஓர் தண்டால் ஊன்றின் சடமாய் உள்ள நிலமும் அசையும் எனின், எல்லாத் தத்துவங்களுக்கும் முடிவாகிய நாத தத்துவத்தையுங் கடந்து உனதுயிர்க்குள் தோன்றாத் துணையாயிருந்த சிவத்தை உன்போதத்தை ஊன்றி நின்று அறிவேன் எனின், அஃதுனக்குத் தோன்றுமோ ? உன் போதத்துக்கு அது தோற்றும் எனின்,

விரல் நுதியைத் தீண்டுவபோல் வாய்முகத்தை மென்று சிரிப்பதுபோல் பார்த்துத் தெளி—ஓர் விரல் தன்னுனியைத் தான் தொடல்போலும், முகத்தின்கண் இருந்த வாய் அம்முகத்தை எதிரிட்டுக் கறித்து மென்று சிரிப்பதுபோலும் ஆம்; இதனை ஆராய்ந்து தெளிந்து அறிதி.

(குறிப்பு.) நுட்பத்தான் ஆன்மாவுள்ளும், பூரணத்தால் அதற்குப் புறம்புமாய்ப் பிரிபடாது சிவம் இருத்தலின், ஆன்மாவால் அதனைப் பிரித்தறியக் கூடாது ஆகலின், இங்ஙனம் உவமை கூறினார்.

"சிரிப்பது"-யான் சிவத்தை அறிந்தேன் என்று பிறருக்குக் கூறி மகிழ்தல். (௯க)

பற்றியது தானும் படிகநீ பற்றுவிடப்
பற்றை யெதிரிட்டுப் பார்த்தாலென் - சற்றும்
பிறியாச் சிவனைப் பிறித்தறியத் தேடு
மறியாமை காணு னவம்.

(உரை.) பற்றியது தான் ஆம் படிகம் நீ பற்றுவிடப் பற்றை எதிரிட்டுப் பார்த்தால் என்—தன்னைச் சார்ந்த நிறம் யாது அந்நிறம் தானாயிருக்கும் படிகம்போலும், யாதோர் கருவி அடுத்தது அதன் மயமாவை நீ, அக்கருவிகள் நீங்குதற்பொருட்டு உனக்குள் இருந்த சிவமாகிய பற்றை எதிரிட்டுப் பார்த்ததனால் பயன் என்னை யுளது

சற்றும் பிரியாச் சிவனைப் பிறித்து அறியத்தேடும் அறியாமை ஆணவம்—ஓரணுவளவேனும் உன்னைவிட்டுப் பிரியாதிருந்த சிவத்தை உன்போதத்தாற் பிரித்து உன்னைவிட அன்னதோர் முதலாய்க்கண்டு அதனை அறியத்தேடும் பேதைமை ஆணவமாவது.

(குறிப்பு.) கேவலசகலங்களை நீக்கி அருளால் தன்னை உள்ளபடி அறிந்த ஆன்மா தனக்கு வேறற இருந்த சிவத்தையும் அவ்வருளால் அறியவேண்டும். அதனைக் குரு உபதேசத்தால் அறிந்துகொள்க. அருளால் அறியவேண்டு மென்பதனை, * "அறியாமை யறிவகற்றி யறிவினுள்ளே யறிவுதனை யருளினா லறியாதே யறிந்து" என்னும் சித்தியாருள்ளுங் காண்க.

சிவத்தைப் பிரியாது அதனுள் அடங்கின் கருவிகள் தொடரா, அதனைப் பிரிக்கின் தொடரும், ஆகலின், "பற்றுவிடப் பற்றை எதிரிட்டுப் பார்த்தாலென்" என்றார்.

ஆங்கு மலம் இன்றாயினும் அதனது வாசனையால் போதம் எழுதலின், "அறியாமைகா ணவம்" என்றார்.

* எட்டாஞ்சூத்திரம் - 30.

ஆன்மாவைப் பற்றுவிடாதிருத்தலின்,சிவத்தைப்"பற்று" என்றார்.

காண் - அசை.

இவ்விரண்டு திருவெண்பாவானும் திருவருளால் சிவத்தை அறியும்போதும் சிறிதும் போதஞ் சீவியாது நின்று அறியவேண்டுமென்று கூறியவாறு காண்க. (௪0)

அந்தச் சிவத்தைச் சென்று அடையும் இடம் எவ்விடம் எனின், மேற் கூறுகின்றார்.

அருளாலே தம்மை யறிந்தருளா யந்தப்
பரிபூ ரணமே பரையாய்ப் - பரையொழிவி
லானந்தா தீதமா மத்துவித சித்தாந்த
மோனம்வே தாந்த முடிவு.

(உரை) அருளாலே தம்மை அறிந்து அருள் ஆய் அந்தப் பரிபூரணமே பரை ஆய்—முப்பத்தாறு தத்துவங்களையுங் கடந்து நின்ற இடத்துப் பாசம் ஈது அருள் ஈது என்று பகுத்தறிந்த அறிவு தாம் என்று தம்மை அருளால் அறிந்து, பின்னர்த் தம்மையும் அவ்வருளையும் பிரித்துப்பாராது அவ்வருள் தாமாயிருந்து, பின்னர்த் தம்மைச் சிறிதுந் தோற்றாத அந்தப் * பரிபூரணமாகிய பரையே ஆகி,

பரை ஒழிவில் ஆநந்தாதீதம் ஆம் அத்துவித சித்தாந்த மோனம் வேதாந்த முடிவு—பின்னர் அப்பரை நீக்கத்தில்

* பரிபூரணமே பரையாய் என்பது பரிபூரணப் பரையே யாய் எனக் கூட்டப்பட்டது.

தோன்றும் ஆநந்த மயமாகி, அவ்வாநந்தத்தையும் இங்ஙனம் என்று அறியாது அதனுள் அதீதப்படுவதாகும் அத்துவிதமான ஆகம முடிவாகிய மௌனம் வேதமுடிவிற்கு முடிவாம்.

(குறிப்பு) தனது இச்சைப்படி ஆன்மா இச்சையைச் செலுத்தியும், தனது ஞானத்தால் அதன் ஞானத்தை மறைத்தும், தனது கிரியையால் அதனது கிரியையை அடக்கியும், இங்ஙனம் அவ்வான்மபோதஞ் சிவியா தடக்குவது அருள். அங்ஙனம் அதனது போதம் அடங்கின விடத்து முன்தோற்றிய இச்சா ஞானக் கிரியைகள் விரியாது நீங்கினவிடம் பரை. ஆகலின், "அருள்" என்றும் "பரை" என்றும் கூறினர்.

வேதாந்திக்குப் பெத்தநிலைபோல் முத்தியிலும் நானென்பது தொடர்தலின், "வேதாந்தமுடிவு" என்றார்.

இத் திருவெண்பாவால் ஆன்மா சிவத்தோடு இரண்டறக் கலந்த அத்துவிதம் இவ்விடம் என்பதும், இது வேதாநத முடிவு என்பதும் அறிவித்தவாறு காண்க. (சக)

தன்மையு முன்னிலையுந் தானாய்ப் படர்க்கையுமா
யென்றெழிவி லின்புமா யின்புமிது - வென்றதை
வேதாந்த சித்தாந்த மேபிறவா வீடென்று
ஓதாமல் வேதமுணர்ந் தோன்.

(உரை.) தன்மையும் முன்னிலையும் தான் ஆய்ப் படர்க்கையும் ஆய் என் ஒழிவில் இன்பும் ஆய் இன்பும் இது என்றதை—உயிருக்கு உயிராயிருந்து அறிவிக்கும் திருவருளாகிய தன்மையும் தாமாகி, அவ்வருளே திருமேனியாகக் கொண்டு

எழுந்தருளிவந்த ஆசாரியராகிய முன்னிலையும் தாமாகி, அவ்வருள் மிகுந்த கூறப்பட்ட வேதாகமங்களாகிய படர்க்கையும் தாமாகி, இச் சுருதி குரு சுவாநுபவங்களால் எனது போத வொழிவில் தோன்றும் ஆநந்தமும் தாமாகி, அவ்வாநந்தம் இதுவென்று கூறக்கூடாத ஆநந்தாதீதமும் தாமாகி எழுந்தருளியிருந்த,

ஓதாமல் வேதம் உணர்ந்தோன் வேதாந்த சித்தாந்தமே பிறவாவீடு என்றான்—ஓதி அறியாமல் தமது திருவருள் ஞானத்தால் நான்கு வேதங்களையும் முழுதுணர்ந்த திருஞானசம்பந்தப் பிள்ளையார் இந்த அநுபவ முற்றும் உண்டான வேதத்தின் முடிவாகிய சித்தாந்தமே மீண்டு வாரா முத்தி என்று அருளிச்செய்தார்.

(குறிப்பு.) எல்லாம் தாமாகி என்றது அவரது சுதந்திரம் அறிவித்தது.

ஓதி உணர்ந்தோரைப் பற்ற ஓதாமல் உணர்ந்தோர்க்கு உண்மை யெல்லாம் உள்ளபடி தெரியும். இங்ஙனம் ஓதாமல் உணர்ந்தோரே இதுவே பிறவா வீடென்று கூறினமையால் இஃது உண்மை முத்தியென்று அறிந்துகொள்க.

வியாசர் முதலியோர் ஓதாமல் உணரினும் அவர்க்கு விட்டுணு பரமென்றும் அகம் பிரமம் என்றும் பின்னர் மலைவு பிறந்தது ஆகலின், இவரைப்போலும் அவர் சுதந்திர அறிவிலர் எனக்கொள்க.

இங்ஙனம் செய்யுட்கண் "தானாய்" என்னும் ஒருமையை உரைக்கண் "தாமாகி"யெனப் பன்மையாகக் கூறியது என்னை

யெனின், பிள்ளையார் என்னுந் திருவருட் பெயரின் பெருமை நோக்கி யென்க. (சஉ)

மலையேறிப் போவார்க்கு மாநிலமாய்த் தோன்றிக்
கலையாதி யைக்கழற்றிக் காட்டித் - தொலைவிலே
காட்சியொழித் தென்னைக் கரந்தகலா வாதனையின்
மாட்சிசொலின் மோனமாம் வந்து.

(உரை.) மலைஏறிப்போவார்க்கு மாநிலமாய்த்தோன்றிக் கலை ஆதியைக் கழற்றிக் காட்டித் தொலைவிலே காட்சி ஒழித்து—மாநிலத்திருந்து மலைமேல் ஏறிச் செல்வோர்க்கு ஆண்டு மாநிலமாய்த் தோற்றி அம்மலை முடிமேல் ஏறிநின்று மீண்டு பார்க்குமிடத்து முன்னிருந்த மாநிலமும் பின்வந்த மலையிடமும் தாம் நின்ற இடத்திற்குக் கீழ்ப்பட்டு அருகில் தோற்றுமாப்போலும், கலை முதலிய ஆறத்துவாவையுஞ் சோதனை பண்ணி நீக்கி இவற்றின் முடிவில் நின்ற ஆன்மாவை அறிதல் முதலிய அநுபவங்களைக் காட்டி, இவ்வநுபவ முடிவிலே முன்தோன்றிய கருவிகளும் பின்தோன்றிய அநுபவங்களும் ஆகிய காட்சிகள் எனக்குத் தோற்றுவாறு ஒழித்து,

வாதனையில் என்னைக் கரந்து அகலா மாட்சி சொலின் வந்து மோனம் ஆம்—எனக்கு ஓர் வாதனையும் இல்லாது என்னைத் தமது பூரணாநந்தத்து ஒளித்து உள்ளும் புறம்புமாய் எழுந்தருளியிருந்த எனது ஆசாரியரது பெருமையைச் சொல்லுமிடத்து அதனைச் சொல்லவொட்டாது என்னைப் பேராநந்தம் வந்து மௌனம் ஆக்கும், (இதென்கொலோ அறிகிலேன்)

(குறிப்பு.) "தொலைவிலே காட்சியொழித்து" என்றமையால், மலைமுடிமேல் ஏறிநின்று பார்க்குமிடத்து என்றும் வருவிக்கப்பட்டது.

கலையாதி ஆறு அத்துவா வாவண மந்திரம் பதினொன்றும், பதம் எண்பத்தொன்றும், வன்னம் ஐம்பத்தொன்றும், புவனம் இருநூற்றிருபத்துநாலும், தத்துவம் முப்பத்தாறும், கலை ஐந்தும் எனக்கொள்க.

அநுபவ முடிவு சொல்லக் கூடாமையின், "மோனமாம் வந்து" என்றார். (௬௩)

இதுவென்ற தெல்லாம்பொய் யென்றா னெனக்குப்
பொதுவன்றித் தங்குமிடம் போச்சு - வதுநாங்கா
ணென்றா னதன்பே ரிரவைப் பகலாக்கு
மொன்றே பரமசுக மோ.

(உரை.) இது என்றது எல்லாம் பொய் என்றான் எனக்குப் பொது அன்றித் தங்கும் இடம்போச்சு—ஈது ஈதென்று உன் போதத்தால் சுட்டி அறிந்தது யாது அவையெல்லாம் பொய் என்றார், இங்ஙனம் அருளிச்செய்த வாற்றான் என் போதத்தால் சுட்டி அறிதற்கு அரிதாய் எல்லாவற்றுள்ளும் பொதுவாய் இருந்த திருவருளிடமே அன்றி முன்னர்க் கருவிகள்தோறும் அதனதன் மயமாய்த் தங்கும் இடமெல்லாம் இப்போது போயிற்று.

அது நாம் என்றான் அதன்பேர் இரவைப் பகல் ஆக்கும் ஒன்றே பரமசுகமோ—(முன் கருவிகளோடுங் கூடிக் கருவி

மயமாயும், இப்போது அருளோடெங்கூடி அருள்மயமாயும், அவற்றைப் பாசமென்றும் இதனை அருளென்றும் இருந்தறிந்த ஓரறிவு உண்டே) அவ்வறிவு எம்மைவிட வேறோர்முதல் அன்று, அதுவே நாம் என்று எமதாசாரியர் அருளிச்செய்தார். அங்ஙனம் அருளிச்செய்த திருப்பெயருக்கு அருத்தம் என்னை? இற்றைவரையும் மறைத்திருந்த ஆணவ இரவைப் பகலாக்கும் ஞானசூரியனோ? அஃதன்றி என்றால் ஒழிக்கக்கூடாதிருந்த தற்போதத்தை விழுங்கி எழுந்த பரமாநந்த சாகரமோ? (யான் அறிகிலேன்).

(குறிப்பு.) பகுப்பின்றி எல்லாவற்றுள்ளும் பொதுவாய் இருத்தலின், அருளைப் "பொது" என்றார்.

"அது நாங்காண்" என்றது ஆன்மாவைச் சிவத்தோடு இரண்டற்ற ஐக்கியங் கூட்டியது எனக்கொள்க. (௯௪)

அறிவித்தா லன்றி யறியாய்நீ யென்றான்
மறவைக் கதுவே மருந்தா - யறியவெனி
லாகாய மெய்யவைத்த வம்பா மறிவெனிலு
மாகாய வாக்கா மது.

(உரை.) அறிவித்தால் அன்றி அறியாய் நீ என்றான் மறவைக்கு அதுவே மருந்து ஆய் அறிய எனில் ஆகாய் எய்ய வைத்த அம்பு ஆம்—உனது உயிருக்கு உயிராயிருந்து யாம் ஒன்றினை அறிவித்தால் நீ அறிவதே அன்றி உன் சுதந்திரமாய் ஒன்றினையும் அறியாய் என்று அருளிச்செய்தார். யான் எனது என்று எழும் மலப்பிணியை நீக்குதற்கு அத்திருவாக்கே மருந்

தாய் இங்ஙனம் அறிவிக்குந் தம்மை யான் அறியத்தொடங்கின், யான் இருத்தற்கு இடமும் தம்மை அறிதற்கு எழும் போதத்திற்கு இடமும் தமதிடமே அன்றி வேறு காணேன் ஆகலின், ஆகாயம் இலக்காய் அதனை எய்ய வைத்த அம்புபோலும் ஆகும்;

(இங்ஙனம் உயிர்க் குயிராயிருந்து அறிவிப்பதாய் எதிரிட்டு அறியக் கூடாததாய் இருந்த அறிவின்கண் வாக்குத் தோற்றுவது எங்ஙனம் எனின்),

அறிவு எனிலும் ஆகாயவாக்கு ஆம் அது—அவர் அங்ஙனம் இருந்த அறிவே எனினும் அவ்வறிவின்கண் நின்ற காருண்ணியத்தால் தோற்றும் வாக்கும் அவ்வாகாய வாக்குப்போலும்.

(குறிப்பு.) அம்பிற்கு எய்யாமுன் நிற்பதற்கு இடமும் எய்தபின் சேறற்கு இடமும் அவ்வாகாயமே அன்றி வேறு இன்மையால், இதனை அதற்கு உவமையாகக் கூறினர்.

வாக்காற் கூறியதுபோற் பிறர்க்குத் தோற்றுவதே அன்றி அவர்க்குத் தோற்றாது ஆகலின், "ஆகாய வாக்காமது" என்றார்.

"தன்மையும் முன்னிலையும்" என்னும் திருவெண்பா முதல் இந்நான்கு திருவெண்பாவானும் தமது ஆசாரியர் தமக்கு அருளிச்செய்த நிலை கூறியவாறு காண்க. (௬௫)

மலமாயை கன்ம மயக்க விகற்ப
நிலைபோகப் போயொழிந்த நிட்டை - பலவோ

வறிவுக் கெதிரில்லை யாகாய நீழ
லறநிற்கு மாபோணிற் பாய்.

(உரை.) மலமயக்கம் மாயை விகற்பம் கன்ம நிலை போகப் போய் ஒழிந்த நிட்டை பலவோ—ஆணவ மலமாகிய மயக்கத்தைக் கேவலாவத்தையாற் போகச்செய்து, மாயையாகியவிகற்பத்தைக் குருலிங்க சங்கம வழிபாட்டாற் போகச்செய்து, கன்மத்தைச் சுத்தநிலையாகிய அருளாற் போகச்செய்து, ஆன்மா இந்த அருள் வழிச்சென்று சிவாநந்தத்தில் தற்போதம் அற்ற உண்மைநிட்டை பலவிதமோ?

அறிவுக்கு எதிர் இல்லை ஆகாய நீழல்அற நிற்குமாபோல் நிற்பாய்—இங்ஙனம் தற்போதம் அற்றுச் சிவம் என்றும் தான் என்றும் இரண்டற இருந்த அறிவிற்கு எதிரீடாய்த் தோற்றுவது ஒன்றும் இல்லை; ஆகாயம் எல்லாப்பொருள்களோடுங் கூடியிருப்பினும் அப்பொருள்களின் சாயை தன்னுள்தாக்காது நின்றாற்போல், எல்லாக் கருவிகளோடுங் கூடியிருப்பினும் அக்கருவிகளின் குணம் உன்னைச்சாராது நீ நிற்றி.

(குறிப்பு.) கேவலாவத்தையைத் தரிசிக்கவே ஆணவம் நீங்கும் ஆகலானும், மனவாக்குக் காயங்களாற் குருலிங்க சங்கமத்தை வழிபடவே அம் மனவாக்குக் காயங்களாய் விரிந்த விகற்பரூபமாகிய மாயை நீங்கும் ஆகலானும், இவற்றைநீங்கிச் சுத்தநிலையில் தோன்றுந் திருவருளைத் தரிசித்து அந்தத் திருவருளே பெத்த முத்தியினும் எமக்கு உபகரிப்பது என்று அறிந்து தான் பிறர் என்னும் முன்னிலைச்சுட் டொழிந்து நிற்கவே

ன்மம் நீங்கும் ஆகலானும், "மலமாயைகன்ம மயக்கவிகற்ப
லேபோக" என்றார்.

சகல கேவலங்கள் நீங்கி ஆன்மபோதமும் ஒழிந்த நிட்டை
குமேல் வேறுநிட்டை இன்றாகலின், "பலவோ" என்றார்.

ஆகாயம் தனது நுண்ணிய குணத்தில் திரிவு இன்றி இரு
தமையால் மற்றைப்பொருள்களின் நிழல் தாக்காது இருந்த
ுபோல், ஆன்மா தனது போதஞ் சீவியாது நுட்பகுணத்
'தாடு இருந்தது எனின் சிவத்தோடு கலப்புக்கூடும், தூலமா
'ய கருவிகளும் அதனைத் தாக்கமாட்டா என்பது அறிக.(சகு)

;பாதம் பதைப்பறவே பூரணமாம் பூரணமும்
'பாதம் பதைத்தளவே பொய்யாகு-மீது
ிழித்திமைப்பா நின்றால் வெளியசைந்தாற் காற்றும்
'ழுக்கமதைச் சாட்சியைப்போற் பார்.

(உரை.) போதம் பதைப்பு அறவே பூரணம் ஆம் பூரண
ும் போதம் பதைத்த அளவே பொய் ஆகும் ஈது நின்றால்
ிழித்து இமைப்பு ஆம்—ஆன்மபோதம் சீவியாது அடங்கின்
;வ்வான்மா தோற்றாமல் அருட்பூரணம் தானாயிருக்கும், அப்
,ரணமும் அப்போதம் சீவித்தமாத்திரத்தில் தான் தோற்றாது
றையும், அவ்வான்மாவா யிருக்கும், இங்ஙனம் இப்போதம்
ப டங்கியும் விரிந்தும் நின்றால் அப்பூரணம் ஓர்கால் தோற்றியும்
ர்கால் மறைந்தும் விழித்தல்போலும் இமைத்தல் போலும்
;ும்; (அஃது எங்ஙனம் எனின்),

வெளி அசைந்தால் காற்று ஆம் பழக்கமதைச் சாட்சியைப் போல் பார்—வெளியில்அடங்கிய காற்றுத் தான் வேறொரு பொருளாய்த் தோற்றாமல் வெளியே ஆம், அவ்வெளியில் நின்றும் அசைந்தால் அதனைவிடத் தான் ஒருபொருளாய்க் காற்றென்பதாம், இக்காற்றாகிய சாட்சியைப்போல் உனதுபோதம் அருளில் அடங்கியும் விரிந்தும் நின்ற பழக்கமதையும் பார்த்து அறிதி.

(குறிப்பு.) போதம் அடங்கின்அருளாகியும்,அஃது அசையின்ஆன்மாவாகியும், இங்ஙனம் வருதலின், அதனைச் சிறிதுந் தோன்றாது அடக்கவேண்டுமென்பது கருத்து.

இவையிரண்டு திருவெண்பாவானும் மும்மலங்களை நீக்கி அவ்வான்மா தற்போதமுங் கெட்டு ஆநந்தாதீதப்பட்டால் அதற்குமேல் வேறுகிட்டை இன்றென்பதும், ஆன்ம கருவிகள் தாக்காது நிற்றற்கு உபாயமும்,அடங்கிய போதம் மீட்டும் விரியாது அடக்கவேண்டும் என்பதும் அறிவித்தவாறு காண்க. ()

வேதாந்தம் போலிருக்கும் வேதாந்த சித்தாந்த
நாதாந்த போத நழுவினர்க்கு - நேதி
தனைக்கழன் றூ தற்போதஞ் சார்பழியுஞ் சந்தி
லுனக்கறிவா நந்தமுதிக் கும்.

(உரை.) நாதர்ந்த போதம் நழுவினர்க்கு வேதாந்தம் போல் இருக்கும் வேதாந்த சித்தாந்தம்—நாத தத்துவத்தின் முடிவாயிருந்தஅருளையுங் கடந்த மெய்ஞ்ஞானிகட்கு வேதாந்தம்போல் துவிதநாட்டம் இன்றி இருக்கும் வேதத்தின் முடிவாகியஇச்சித்தாந்த நூல் ஆகலின்,

நேதிதனைக் கழன்று தற்போதம் சார்பு அழியும் சந்தில் உனக்கு அறிவு ஆநந்தம் உதிக்கும்—நீக்குவதாய் உள்ள தத்துவ முப்பத்தாறையுங் கழன்று அவற்றின் முடிவில் நின்ற அருளையும் பரையையும் துவிதநாட்டம் இன்றிக் கழன்று நிற்றி எனின், நின் தற்போதமும் ஆணவ வாசனையாகிய சார்பும் ஒழியும், இவை ஒழிந்த இடத்திற்கும் அதீதத்திற்கும் இடையாகிய சந்தியில் உனக்கு ஞானாநந்தம் தோன்றும்.

(குறிப்பு.) முப்பத்தாறு தத்துவங்களையும் நீங்குமளவும் ஆன்மபோதஞ் சிவித்தறிவது, அருள்தரிசனமுதல் ஆநந்தாதீதப் படிமளவும் அப்போதஞ் சிவியாதடங்கி அவ்வநுபவங்களைப் பெறவேண்டும் ஆகலின், "வேதாந்தம்போலிருக்கும்" என்றார்.

இத்திருவெண்பாவால் ஆநந்தம் தோன்றுமிடம் அறிவித்தவாறு காண்க. (சஅ)

தத்துவா தீதத் திமிர்ப்படங்கித் தற்செலவு
மத்தின் வரத்து மசையாத - சுத்தத்தை
யொன்றென்று னீசற் றுளதாவை யாதலினு
லன்றென்ற தென்றே யறி.

(உரை.) தத்துவாதீதத் திமிர்ப்பு அடங்கித் தன் செலவும் அத்தின்வரத்தும் அசையாத—முப்பத்தாறு தத்துவத்திற்கும் அதீதமாயிருந்த ஆணவமல வாசனை எல்லாம் நீங்கியவிடத்து ஆன்மா சிவத்தைச்சென்று கூடுதலும், சிவம் ஆன்மாவை

வந்து பொருந்துதலும் ஆகிய இருவகை அசைவும் இன்றி இரண்டற்று இருந்த,

சுத்தத்தை ஒன்று என்றால் நீ சற்று உளது ஆவை ஆதவினால் அன்று என்றது என்றே அறி—முத்திக்கண் சிவம் ஒன்றுமே என்று கூறுதி எனின், அச்சிவம் ஒன்றென்று அறிந்து கூறிய நீயும் சிறிது உண்டாவை ஆகலின், அம்முத்திக்கண் அங்ஙனங் கூறுவதும் அன்றென்றது என்று அறிதி.

(குறிப்பு.) உடம்பின் குணம் அன்றி அதன்கண் ஏறியிருந்த திமிர்ப்புப்போல், உயிரின் குணம் அன்றி இதன்கண் ஏறியிருந்தமையால், ஆணவத்தைத் "திமிர்ப்பு" என்றார். திமிர்ப்பு அடங்காவிடத்துக் கூடினது போன்றும் பிரிந்ததுபோன்றும் அநுபவந் தோன்றலின், அங்ஙனங் கூறினார். (சுக)

வெற்றவெறு மாநந்த மேலீடே கேவலத்தி
னிற்பதுபோ லந்த நிலைகழன்றோர் - சிற்போத
வண்டங் கடந்த வமுதத்தி னேலெவும்
வெண்டிங்க ளுங்கிரண மும்.

(உரை.) வெற்ற வெறும் ஆநந்த மேல் ஈடே கேவலத்தில் நிற்பதுபோல் அந்த நிலை கழன்றோர்—நியதியிட்ட இடமெல்லாங் கழன்று சென்று தற்போதம் ஒழிந்ததெல்லாம் ஆநந்தமயமாய்த் தோற்றும்ஆகலின், வெற்றவெறும் ஆநந்த மேலீடாகிய இடமே கேவலாவத்தைப்பட்டு நிற்பதுபோலத் தோன்றும், இங்ஙனந் தோற்றும் அவ்வாநந்த மேலீடாகிய நிலையும் நீங்கினோர்,

சிற்போத அண்டம் கடந்த அமுதத்திேைடு உலவும் வெள் திங்களும் கிரணமும்—அருளும் பரையும் ஆகிய ஞாஞ காசத்தைக் கடந்துநின்ற ஆநந்தாமிர்தத்தோடு விளங்காநின்ற சிவசந்திரனேடும் தாம் அதனைவிட்டு நீங்காத அந்த ஆநந்தா மிர்த கிரணமாகி நிற்பர்.

(குறிப்பு.) ஆநந்தம் மேலிட்டபோது பிரபஞ்சமெல்லாம் ஆநந்தமயமாய்த் தோற்றும் ஆகலின், "வெற்றவெறு மாநந் தம்" என்ருர். ஆநந்த மேலீடு விட்டுதியாமல் தோற்றுவது.

கேவலாவத்தை அநுபவத்தை அறிந்து ஒன்றுந்தோன்ரு திருந்ததென்று சொல்ல வருதல்போல், ஆநந்தாநுபவம் சொல்லவருதலால், "கேவலத்தினிற்பது போல்" என்ருர். அநாதியில் ஆணவமலத்தால் மறைபட்டிருந்த உயிர்க்கு அநு பவஞ் சொல்லக்கூடாததுபோல், சிவத்தில் இரண்டறக் கல ந்துநின்ற அநுபவஞ் சொல்லக்கூடாது ஆகலின், ஆநந்தாநு பவத்திற்கு உவமை கேவலாவத்தையைக் கூறினர்.

"வெண்டிங்களுங் கிரணமும்" என்று உவமை கூறின மையால் சந்திரனைப்போலச் சிவம், அவனைவிட்டு நீங்காத அமுதம்போல் ஆநந்தம், அவனையும் அமுதத்தையும்விட்டு நீங் காத கிரணம்போல் ஆன்மா சிவத்தோடு இரண்டறக் கலந்து நின்ற நிலை எனக்கொள்க.

இவையிரண்டு திருவெண்பாவானும் முத்தியில் ஒன்றெ ன்றும் இரண்டென்றுங் கூறக்கூடாதென்று அறிவித்தவாறு காண்க. (௯0)

நினைப்பு மறப்பறுத்து நீயறலை நீக்கா
துனைக்கரைய நில்லங்ஙனங்ங - னெனக்கதற்றல்
விப்பிரட்ட மந்திரட்டம் வேலையிலே போட்டசுரை
செப்படித்தன் ஞானச் சிறை.

(உரை.) நினைப்பு மறப்பு அறுத்து நீ அறலை நீக்காது உனைக் கரைய நில் அங்ஙன் அங்ஙன் எனக் * கதற்றல்—முன்னர் நினைப்பு மறப்பு ஆகிய சகல கேவலங்களை அறிவித்து நீக்கி, தன்னை அறிவித்து, பின்னர்த் தனக்கு உயிர்க்குயிராய் நின்ற திருவருளைத் தரிசிப்பித்து, இத்திருவருளோடுங்கூடி அறிகின்ற போதம் தற்சுதந்திரமாய் ஒன்றைப் பகுத்தறியாது ஆகலின் அருளை முன்னிட்டுக்கொண்டு தற்போத ஒழிவைப் பெறுதற்கு உபாயங்கூறி, அதனை நீக்காது, அந்நினைப்பு மறப்பு ஆகிய சகல கேவலங்களுள்வைத்து, உன் போதங்கரைய நீ அப்படிநில் அப்படிநில் என்று மாணுக்கனுக்கு ஓர் கிட்டை போலுங் கூறுதல்,

விப்பிரட்டம் மந்திரட்டம் வேலையிலே போட்ட சுரை செப்படித்தல் ஞானச்சிறை—மிகவும் பிரட்டமும், மந்திரத்தால் ஒருவனுக்கு விநோதங்காட்டலும், கடற்கண் போட்டது சுரை ஓடும், செப்படிவித்தையும், ஞானத்திற்குத் தடையாய் உள்ள மலபோதமும் ஆம்.

(குறிப்பு.) அந்த நிட்டை கூடுவோர் ஞானமும் அன்றி, முற்செய்த கிரியை யாதிகளும் அன்றி உபயபிரஷ்டராய்

* கதறல் கதற்றலென விகாரமாயிற்று.

கருவிகளோடும் மயங்கலின், "விப்பிரட்டம்" என்றும், ஒருவன் யந்திரத்தால் விநோதவித்தை தோற்றுவதுபோல், உள்ளே நானாவாகிய மாயாவிநோதங்கள் தோற்றலின், "மந்திரட்டம்" என்றும், சுரை ஓடு ஓர் துறைக்கண் சேராது அலையோடு மறிதல்போல், அறிவு ஓர் நிலை நில்லாது நினைவோடுஞ் சுழல்வதனால்; "வேலையிலே போட்டசுரை" என்றும், ஓர் பந்து முன்தோற்றிப் பின் அதில் பற்பல பந்து தோற்றுதல்போல், ஓர் காட்சிபோல் முன் தோற்றி அது முற்றும் நில்லாது பற்பல காட்சியாய் விரிதலின், "செப்படித்தல்" என்றும், இங்ஙனந் தோற்றுவன சகல கேவலபோதம் ஆகலின், "ஞானச்சிறை" என்றுங் கூறினர். அங்ஙனங் கூறியது நிட்டை அன்று ஆகலின், கதற்றல் என்றார்.

இத்திருவெண்பாவால் மாணாக்கனுக்குச் சகல கேவலங்களை முன்னர் அறிவித்து நீக்கி, பின்னர்ப் போதம் ஒழித்தற்கு உபாயங் கூறாது அச்சகல கேவலங்களுள் அந்நிட்டை கூறுதல் ஆகாதென்று அறிவித்தவாறு காண்க. (௬௧)

சத்தாதி தத்துவம்போய்த் தானுமெதி ருங்கழன்றாற்
சித்தாந்த வேதாந்தச் சீர்மையிலை - முத்தி
யசிர்வசன மின்ப வதீதமெனி லாங்கே
பினமிடுதல் கன்மம் பிளாய்.

(உரை.) சத்தாதி தத்துவம்போய்த் தானும் எதிரும் கழன்றால் சித்தாந்த வேதாந்தச் சீர்மை இலை—சத்த முதலிய முப்பத்தாறு தத்துவங்களையும் நீங்கி அவற்றின் முடிவில்

நின்ற தானும் திருவருள்தரிசனமுதல் ஆநந்தாநுபவம் ஈருய் அவ்வருளால் தான் அறியாது அறியும் அநுபவங்களாகிய எதிரும் கழன்று, ஆநந்தாதீதப்பட்டால் இரண்டென்று கூறும் சித்தாந்தச் சிறப்பும் ஒன்றென்று கூறும் வேதாந்தச் சிறப்பும் ஆங்கு இல்லை ;

முத்தி அநிர்வசனம் இன்ப அதீதம் எனில் ஆங்கே பினம் இடுதல் கன்மம் பிளாய்—அங்ஙனம் அதீதப்பட்ட முத்தி சொல் இறந்த சுகாதீதம் என்ருல், பிள்ளாய்! ஒன்றென்றும் இரண்டென்றும் அம்முத்தியைப் பின்னப்படக் கூறுதல் போதச்சேட்டை ஆம்.

(குறிப்பு.) சத்தாதி விடயங்களின்மேல் ஆன்மாவுக்கு அநிச்சை பிறந்தபோது சோத்திராதி பஞ்சேந்திரியங்களும் விடயங்களை அபகரியாது நீங்கும். இவை நீங்கவே, முன் அபகரித்தபோது வசன கமன தான விசர்க்காநந்தங்களை விடயீகரிக்கும் வாக்காதி கன்மேந்திரியங்கள் ஐந்தும் நீங்கும். இவை நீங்கவே, அப்பத்து இந்திரியங்கட்கும் இடமாய் நின்ற பூதங்கள் நீங்கும். இவை நீங்கவே, விடயங்களைப்பற்றி நிச்சயித்து அபிமானித்துச் சிந்தித்து நிற்கும் அந்தக்கரண வாசனை நீங்கும். இது ீங்கவே, விடயங்களைப் புசித்தற்கு ஒரெல்லையும், அவ்வெல்லையில் உண்டாம் விடயப்பயனும், அவ்விடயத்தைப் புசிக்கும்போது ஓர்காலங்களினும் அறியாததுபோலப் புதுமையும், மேலும் இவ்விடயம் அனுபவிக்கவேண்டும் என்னுங் கருத்தும் உண்டாக்குங் காலதத்துவமும் நீங்கும். இது நீங்கவே, விடயங்

களைப் புசிக்கும்போது இவனுக்கு இவ்வளவு புசிப்பென்னும் மட்டறிந்து வரைந்து நிற்கும் நியதி நீங்கும். இது நீங்கவே, ஆன்மா விடயங்களை இச்சித்துப் பகுத்தறிந்து பற்றி அநுபவிக்க அவ்வான்மாவுக்கு இச்சா ஞானக் கிரியைகளை எழுப்பும் இராகம் வித்தை கலை என்னும் இம்மூன்றும் நீங்கும். இவை நீங்கவே, ஆன்மாவைப் பஞ்சேந்திரியங்களினும் கறங்குபோற் கொண்டு சுழற்றும் புருடன் நீங்கும். இது நீங்கவே, அவ்விடயங்களைப் புசிக்குமிடத்து அவ்விடயம் என்றுந் தான் என்றும் இரண்டற மயக்கிநிற்கும் மாயை நீங்கும். இங்ஙனம் வித்தியா தத்துவங்கள் நீங்கவே, இவற்றைப் * பிரேரகம் பண்ணுஞ் சுத்த தத்துவங்கள் ஐந்தும் நீங்கும்.

இங்ஙனம் தத்துவம் முப்பத்தாறும் நீங்கினவிடத்து, ஆன்மாவின் இச்சை, பெத்தத்தில் விடயத்தின்மேல் சனித்தது போல், சிவத்தின்மேல் சனிக்கும். ஞானம், விடயாநந்தம் அசுத்தம் துக்கம் அநித்தியம் என்றும், சிவாநந்தம் சுத்தம் சுகம் நித்தியம் என்றும் பகுத்தறிந்துகொண்டு நிற்கும். கிரியை பழைய பழக்கத்தால் விடயங்கண்மேற் செல்லினும் அவற்றிற் செல்லாது மறுத்து நீங்கிச் சிவத்தையே நாடி நிற்கும்.

ஆன்மாவின் இச்சாஞானக் கிரியைகள் சிவன் ஆன்மாக்களை முத்தியிலே அடைவிக்கவேண்டும் என்னும் இச்சைப்படி நிற்பன ஆகலின், திருவருள்பதியும். இத்திருவருளை முன்னிட்டுக்கொண்டு அறியும் பரை தரிசன முதலிய அநுபவங்களா

* காரியப்படுத்துகை.

ரிய எதிரும், அவைகளை அறிந்த தானும், கழன்று ஆநந்தாதி தப்படால், இரண்டென்றும் ஒன்றென்றும் கூறக்கூடாது ஆகலின், "சித்தாந்த வேதாந்தச் சீர்மையிலே" என்றார்.

கன்மம் என்பது சேட்டைமே லேறிற்று.

ஆன்மா சத்தாதிகளைத் துரிசற விடுத்தபோது மற்றைத் தத்துவம் முப்பத்தொன்றும் இங்ஙனம் நீங்கலின், சத்தாதிகளை முன்வைத்துக் கூறினர்.

முத்தியை அறிவிப்பது வேதாகம முடிவாகலின், "சீர்மை" என்றும், அம்முத்தியில் அதனை அறிந்து கூறும் போதம் இன்மையால், "அநிர்வசனம்" என்றுங் கூறினர்.

* மருவிய பொறியி லொன்று மாபூத மைந்தி லொன்றுங்
கருவிக ளொன்கு நீக்காக் கலாதிக ளைந்துங் கூடி
யொருபுல னுகரு மிந்த வொழுங்கொழிந் துயிரு மொன்றைத்
தெரிவுறு தவறொ ழிந்தத் திரள்களுஞ் செயலி லாவே"
என்னும் சிவப்பிரகாசத்தானும்,

† "சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு".

என்னும் திருவள்ளுவரானும் மற்றும் வருவனவற்றானுங் காண்க.

இத் திருவெண்பாவால் சித்தாந்த முத்தியோ வேதாந்த முத்தியோ உண்மை என்று ஐயுறுகின்ற மாணாக்கனுக்குக் காண்பானும் காட்சியும் அற்ற விடத்து இரண்டுஞ் சரியென்று அறிவித்தவாறு காண்க. (௫உ

* ஐந்தாஞ் சூத்திரம்-1. † திருக்குறள்-27.

சிந்தை பயமிலச்சை சீல மருவருப்பு
அந்தைவிடுஞ் சாந்திகுல மாசார - மிந்தவழி
யெட்டுஞ் சிவயோகிக் கில்லையென மாமறைக
டட்டும் பெருமுரசந் தான்.

(உரை.) சிந்தை பயம் இலச்சை சீலம் அருவருப்பு * அந்தைவிடும் சாந்தி குலம் ஆசாரம் இந்த வழி எட்டும்—எனக்கு இன்னதுவேண்டும் என்னுஞ் சிந்தனையும், துஷ்டமிருகாதி தோன்றியக்கால் அச்சமும், இன்னோர் இன்னது சொல்லப் போகிறார் என்னும் நாணமும், சாந்திராயண விரத முதலிய சீலமும், ஈது அசுத்தமென்னும் அருவருப்பும், அகந்தையாற் செய்த பாவத்திற்கும் புண்ணியம் ஈதென்று செய்யுஞ் சாந்தியும், குலாசாரமும் சமயாசாரமும் ஆகிய இந்த மார்க்கம் எண்ணையும்,—

சிவயோகிக்கு இல்லை என மாமறைகள் பெருமுரசம் தட்டும்-சிவத்தோடு இரண்டறக்கூடி நின்ற சிவயோகிக்கு இல்லையென்று மாமறைகளாகிய பெரிய பேரிகை முழக்கும்.

(குறிப்பு.) "மாமறைகள் தட்டும் பெருமுரசம்" என்றது அவர்க்கில்லை என்று பலபடக்கூறுதல். இவை எட்டும் சிவத்திற்கு இன்றாகலின், அதனை அடைந்த சிவயோகிக்கும் இன்றென்பது ஆயிற்று. தான் - அசை. (ருக)

தத்துவத்தா ரல்லார் சலசந் திரனொப்பார்
தத்துவத்தார் செய்யுந் தவாதவங்கள் - சுத்தக்

* அகந்தை அந்தை யென்றிடைக் குறையாயிற்று.

ககனமழை யாற்கழுவிக் காற்றைக் கனலாற்
றகனஞ் செயல்போற் றெளி.

(உரை.) தத்துவத்தார் அல்லார் சலசந்திரன் ஒப்பார் தத்துவத்தார் செய்யும் தவாதவங்கள்—மெய்ப்பொருளாகிய பரதத்துவத்தை அடையாதார் தற்போதத்தால் செய்யும் தவாதவங்களினாலும், இவற்றின் பயன்களினாலும், உயர்ந்தும் தாழ்ந்தும் சலத்தில் பிரதிபலிதமான சந்திரனைப்போலும் ஆவர்; அப்பரதத்துவத்தை அடைந்தோர் அருள்வடிவாயிருந்து செய்யும் தவங்களும் அவங்களும் இவற்றான் வரும்பயன்களும் இவர்க்கு எங்ஙனம் ஆம் எனின்,

சுத்தக் ககனம் மழையால் கழுவிக் காற்றைக் கனலால் தகனம் செயல் போல் தெளி—நிர்மலமாய் உள்ள ஆகாயத்தை மழையாற் கழுவிக் காற்றைக் கனலாற் சுடுவதுபோலும் ஆம் என்று அறிதி.

(குறிப்பு.) ககனத்தை மழையாற் கழுவுதலும் காற்றைக் கனலாற் சுடுதலும் இன்றாயின வாறுபோல், தற்போதம் போய்ப் பேய் பிடியுண்டவரைப்போலும் திருவருளே வடிவாயிருந்த மெய்ஞ்ஞானிகள் திருமேனியில் நிகழும் தவாதவங்கள், அவ்வருள் விளையாட்டே அன்றி, அவர் அவற்றைச் செய்வதும் அவற்றின் பயன் அவரைச் சார்வதும் இன்றென்பது ஆயிற்று.

தவாதவங்கள் தத்துவத்தார் அல்லார்க்கு வருவிக்கப்பட்டன. தத்துவம் என்றது ஈண்டுச் சிவத்தை. (௫௭)

காலனுக்குப் பாவமென்றுங் காற்றுங் கதிரவனும்
சீலமிலா ரென்றுஞ் சிவயோகி - மேலொன்றைச்
சுட்டுவதுந் தம்மைச் சுழற்றிவிடா தாட்டுமலக்
கட்டின் பிராந்திவலுக் காண்.

(உரை.) காலனுக்குப் பாவம் என்றும் காற்றும் கதிரவனும் சீலம் இலார் என்றும் சிவயோகி மேல் ஒன்றைச் சுட்டுவதும்—உயிர்களைக் கோறலால் காலனுக்குப் பாவம் உண்டென்றும், அசுத்த நிலத்தில் சலித்தலானும் அந்நிலத்து எறித்தலானும் காற்றுங் கதிரவனும் ஆசாரம் இலர் என்றுங் கூறுதல் போல், சிவபூசையாதி நன்மார்க்கங்களைச் செய்திலர் என்று, நீராடலாதி ஆசாரம் இலரென்றும், இவை முதலிய குணதோஷங்களைச் சிவயோகிகள்மேற் சுட்டிக் கூறுவது,

தம்மைச் சுழற்றி விடாது ஆட்டும் மலக்கட்டின் பிராந்தி வலு—தம்மைவிடாது பற்றிநின்று அவத்தைகள்தோறும் சுழற்றி ஆட்டப்பட்ட மலபந்தத்தினால் தோற்றும் பிராந்தியினது சாமர்த்தியமாம்.

(குறிப்பு.) சரியை கிரியை யோக ஞானங்களுள் ஞானம் ஒன்றுமே முத்திக்கு ஏதுவாகலின், இஞ் ஞானத்தால் முத்தியை அடைந்திருத்தலாற் சரியாதிகளும், உடம்பாதி அசுத்தங்களை எல்லாங் கடந்து சுத்தமாயுள்ள ஆநந்தவெள்ளத்தில் மூழ்கியிருத்தலால் நீராடலாதி ஆசாரங்களுஞ் செய்வது இன்றிச் சிவயோகி சும்மா இருப்பன். அங்ஙனம் இருப்பது சரியாதிகளைச் செய்வோர்க்கு மலமறைப்பால் தெரியாது, தம்மைப்

போல் பார்த்து அவனை அவர் இகழ்தலான், "மலக்கட்டின் பிராந்திவலுக்காண்" என்றார்.

காலனுக்குப் பாவமும், காற்றிற்கும் கதிரவனுக்கும் அசுத்தமும் இன்றாயதுபோல், நன்மார்க்கஞ் செய்யாமையால் பாவமும், ஆசாரம் இன்மையால் அசுத்தமும் அவர்க்கு இன்றென்பதுங் காண்க.

காண் - அசை. (௩௩)

நாயேறி வீழ்ந்தென் னடாத்துகிலென் ஞானிக்குப்
பேயாஞ் சகம்பழித்தென் பேணுகிலென் - றோயார்
பெருமை சிறுமையிலை பின்னுமுன்னு மில்லை
வரைவற்று வேண்டியசெய் வார்.

(உரை.) நாய் ஏறி வீழ்ந்து என் நடாத்துகில் என் ஞானிக்குப் பேய் ஆம் சகம் பழித்து என் பேணுகில் என தோயார்—நாய்மேல் இவர்ந்தோன் அதில் நின்றும் வீழ்ந்ததனால் இகழ்ச்சி என்னை? வீழாதிருந்து அதனை நடாத்தியதால் புகழ்ச்சி என்னை? அதுபோல் ஞானிகட்குப் பேய்க் கூத்துப்போல் தோற்றும் இச்சகத்திலுள்ளார் இகழ்ந்தால் அவர்க்கோர் சேதம் என்னை? புகழ்ந்தால் ஓர் இலாபம் என்னை? அவர் ஒன்றோடுந் தோயார்;

பெருமை சிறுமை இலை பின்னும் முன்னும் இல்லை வரைவு அற்று வேண்டிய செய்வார்—அஃதன்றி உயர்சசி வந்ததென்று பெருமையும் தாழ்ச்சி வந்ததென்று சிறுமையும் அவர்க்கில்லை, பின்னாகிய சகலமும் முன்னாகிய கேவலமும்

இல்லை, ஆகலின் சுத்தமாகிய அருள் வடிவாயிருந்து அளவின்றித் தாம் வேண்டியவாறே திருவிளையாட்டு ஆடுவார்.

(குறிப்பு.) இகழ்ச்சியாய் உள்ள நாய் ஏறிக்கு வீழ்ந்தாலும் நடாத்தினாலும் இகழ்ச்சிபுகழ்ச்சி இன்றாயவா போல், ஞானிகள் தமக்கு இகழ்ச்சியாயிருந்த உடம்பை இகழ்ந்தாலும் புகழ்ந்தாலும் அவை அவர்க்கு இன்றென்பது ஆயிற்று.

செம்பிற் காளிதம்போன்று உயிரை அநாதியிற் பற்றியிருந்த சகசமலம் நீக்கற்கொருப்பட்டு மாயையில் தனுவாதி கொடுத்தலின், சகலத்தைப் பின்னென்றும் ஆணவ சம்பந்தமான கேவலத்தை முன்னென்றுங் கூறினார்.

“சிந்தை டயமிலச்சை” என்னுந் திருவெண்பாமுதல் இந்நான்கு திருவெண்பாவானும் சிவஞானி மகிமையை அறிவித்தவாறு காண்க. (௫௮)

சன்மார்க்க மேமுதலாத் தாதமார்க் கத்தளவுந்
தன்மார்க்க மானவெங்கள் சம்பந்தன் - றன்னைத்
துறவி யரசு சகியோகி போகி
யறவன் மறவனென லாம்.

(உரை.) சன்மார்க்கமே முதலாத் தாசமார்க்கத்து அளவுந் தன்மார்க்கம் ஆன எங்கள் சம்பந்தன் தன்னை — ஞான முதல் சரியை ஈறாய்ச் சொல்லப்பட்ட நான்கு பாதத்திற்கும் உரியவாகிய சன்மார்க்கமுதல் தாசமார்க்கம் ஈறாய்ச் சொல்லப்பட்ட இந்நான்கினையும் தமது அருள்நெறியால் ....

டாகச் செய்தருளிய எமது சுவாமிகளாகிய திருஞான சம்பந் தப்பிள்ளையாரை,

துறவி அரசு சுகி யோகி போகி அறவன் மறவன் எனல் ஆம்—எல்லாவற்றோடுங் கூடியிருந்தும் அவற்றோடு தாக் கற்று நிற்றலின் துறவி என்றும், சகல புவனங்களையுந் தாமே யிருந்து நடத்தலின் அரசு என்றும், ஆநந்தமயரா யிருத்தலின் சுகி என்றும், சிவயோகத்தை அநுக்கிரகித்தலின் யோகி என்றும், ஆன்மபோதங்களை விழுங்கிக் கோடலின் போகி என்றும், சகல தருமங்களும் ஓர் வடிவாயிருத்தலின் அறவன் என்றும், அடைந்தோர் மும்மலங்களைக் கோறலான் மறவன் என்றுஞ் சொல்லலாம்.

(குறிப்பு.) சன்மார்க்கம் சகமார்க்கம் சற்புத்திரமார்க்கம் தாதமார்க்கம் என நான்கு. இவற்றுள், சன்மார்க்கமாவது, நீயே நான் நானே நீ என்பது. சகமார்க்கமாவது, தோழனும் தோழனும் என்பது. சற்புத்திர மார்க்கமாவது, பிதாவும் புத் திரனும் என்பது. தாதமார்க்கமாவது, ஆண்டவனும் அடியா னும் என்பது.

ஞானம் பெற்றோரைப் புகழ்ந்து கூறிய பின்னர், இத் திருவெண்பாவால் அந்த ஞானத்தை அருளிச்செய்தற்குத் தலைவராகிய பிள்ளையாரைப் புகழ்ந்து கூறியவாறு காண்க. ()

ஞானல்லர் தன்னதல்லர் தத்துவசா லத்தலைவர்
மோனசுகா நந்தம் விளையுமிடம்-யானைக்கை
போலே யிவருடம்பிற் போகமெலாம் பூசையிது
வேலை சகம்பிழைக்கு மெண்.

(உரை.) நான் அல்லர் தன்னது அல்லர் தத்துவ சால த்தலைவர் மேனி சதாநந்தம் விளையும் இடம்—தனுகரண புவன போகங்களாய் உள்ள தத்துவங்கள் எல்லாம் தமக்கு அயல் ஆகலின், அவை தாமும் அல்லாமல், அசுத்தம் துக்கம் அநித்தியமா யிருத்தலின், அவை தமதும் அல்லாமல், அத்தத்துவங்களோடு கூடியும் கூடாத * சாலத்தோடும்அவற்றிற்குத் தலைவ ராயிருந்த மெய்ஞ்ஞானிகள் திருமேனி சதாநந்தம் மென்மேலும் உண்டாகும் ஓரிடம்; (ஆகலின்),

ஆனைக்கை போலே இவர் உடம்பின் போகம் எல்லாம் பூசை இதனாலே சகம் பிழைக்கும் எண்—எடுத்த பொருளின் பரிசமறிவதுபோல்தோற்றித் தன்னுள் இருந்த நாசிக்குக் கந்த விடயமுமாக இருந்த யானைக்கைபோல், இந்த ஞானிகளது திருமேனியால் அநுபவிக்கும் போகமெல்லாம் இத்திருமேனி அநுபவிப்பதுபோல் இருந்து இத்திருமேனியுள் இருந்த பரிபூரண சிவத்திற்கும் பூசை ஆம், இப்பூசையினாலே சகத்தி லுள்ளார் பிறவித் துன்பத்திற்குத் தப்பி வீட்டின்பத்தை எய்துவர் என்று அறிதி.

(குறிப்பு.) முன் தனுகரணங்களை யாம் என்றும், புவன போகங்களை எமது என்றுங் கருதிநின்ற தற்போதங்கெட்டு இப்போது அறிவு தாமாய் ஆநந்தம் தமதாயிருத்தலின், "நானல்லர் தன்னதல்லர்" என்றார்.

---

* தத்துவசாலம் தத்துவக் கூட்டமெனக்கொண்டு அவற்றிற்குத் தலைவரெனப் பொருள் விரித்தலுமாம்.

தேகத்திருந்த போதத்தையும் கருவிகளையும் விழுங்கிக் கொண்டு அதனுள் சிவங் குடியா யிருத்தலின், "மேனிசதா நந்தம் விளையுமிடம்" என்றும், "போகமெலாம் பூசை" என்றுங் கூறினர்.

இத் திரு வெண்பாவால் ஞானிகட்குப் பத்திசெய்வார் வீடடைவார் என்று அறிவித்தவாறு காண்க. (௬அ)

பூசி முடிப்பனவும் பூண்பனவும் பொற்றுகிலு
மாசை மிகுந்த வரசியர்க்காம்-காசிற்ற
முண்டையர்க்காகாசிவன் முத்தனுக்குப்போகமலாற்
குண்டையொப்பார்க் கேனிதுவா கும்.

(உரை.) பூசி முடிப்பனவும் பூண்பனவும் பொன் துகிலும் ஆசை மிகுந்த அரசியர்க்கு ஆம்—சந்தனமாதி பூசப்படுவனவும், மல்லிகையாதி முடிக்கப்படுவனவும், கொந்தளப் பொன்னோலையாதி பூணப் படுவனவும், பொற்சரிகைச் சேலையாதி உடுக்கப்படுவனவும், ஆகிய இவைமுதலிய போகங்களெல்லாம் அரையனால் மிகவும் இச்சிக்கப்பட்ட சுமங்கலைகளாகிய அரசியர்க்கே ஆகும்; (அதுபோலும்),

சிவன் முத்தனுக்குப் போகம் அலால் காசு இற்ற முண்டையர்க்கு ஆகா குண்டை ஒப்பார்க்கு என் இது ஆகும்—சிவனது இச்சைப்படியே அவனது திருவடிசேர்ந்த சிவன் முத்தனுக்கே போகம் அன்றி, மங்கல நீங்கிய அமங்கலைக்குப் போகங்களில் ஒன்றேனும் ஆகா வாறுபோலும், சிவனடி சேராது தவம் பண்ணுவோர்க்கும் அத்தவத்திற்கு உரிய

விரதஞ் செய்து முடிப்பதே அன்றிப் போகங்களில் ஒன்றேனும் அநுபவிக்க லாகாது, அஃதன்றிக் குண்டையைப்போலும் சரியையாதி தொழில் செய்வோர்க்கும் இப்போகம் அநுபவிப்பது என் ஆகும்?

(குறிப்பு.) தம்முதலாகிய சிவத்தை இழந்து தவம் பண்ணுவோரை முண்டையர் என்று குறிப்பாற் கூறினர்.

குண்டைக்குத் தொழில்செய்வதே அன்றி அரையனோடும் கூட்டரவு இன்மைபோல், சரியையாதிகளைச் செய்வோர்க்கு இத்தொழில் செய்வதே அன்றிச் சிவத்தோடும் கூட்டரவு இன்மையால், இவரைக் "குண்டையொப்பார்" என்றார்.

இத்திரு வெண்பாவால் திருவடியை அடைந்தோர்க்கே போகம் அநுபவிப்பது ஆம், மற்றையர் தமக்குச் சொன்ன நெறி நிற்பதே அன்றிப் போகம் அநுபவிக்கலாகாது என்று அறிவித்தவாறு காண்க. (நிகூ)

ஆனைமதப் பட்டா லலங்கார மன்றிநாய்
தானுமதப் பட்டாற் சரியாமோ - ஞானி
தடைமீறி னுஞ்சதுரா குங்கன்மி
கடைமீற லாகாது காண்.

(பதவுரை.) ஆனை மதப்பட்டால் அலங்காரம் அன்றி நாய் தானும் மதப்பட்டால் சரி ஆமோ—மதமேறா முன்னும் சிறப்புள்ள யானை பின் மதமேறித் தன் தடை கடந்து மேறினும் சிறப்பேயாம், அன்றிப் பேய் ஏறா முன்னும் இழிவுள்ள

நாய்தானும் பின் பேய் ஏறினால் அதுபோலும் சிறப்பாமோ? (அவைபோலும்),

ஞானி தடைமீறினாலும் சதுர் ஆகும் கன்மி கடைமீறல் ஆகாது—முன் நின்றநிலை கடவாதிருந்தபோதும் சிறப்புள்ள மெய்ஞ்ஞானி பின் ஆநந்த மேலீட்டால் அந்நிலை கடந்து சேறினும் சிறப்பே ஆகும், கருமி நிலைகடவா முன்னும் அம்மெய்ஞ்ஞானிகட்கு இழிவாவன், தற்போதத்தால் அந்நிலை கடந்தபோதும் இழிவாவன். ஆகலின், தன்னிலை கடக்கலாகாது.

(குறிப்பு) ஆனைமதமேறினால் மிகவுஞ் சிறப்பு; நாய் பேயேறினால் மிகவும் இழிவு; அவைபோல, ஞானி தடை மீறினால் மிகவும் சிறப்பு, கன்மி கடைமீறினால் மிகவும் இழிவென்பதுங் காண்க.

காண்-அசை.

இத் திருவெண்பாவால் ஞானி கிரியை செய்யினும் செய்யாவிடினுஞ் சிறப்பாவன் என்பதும், கன்மி கிரியை செய்யாவிடின் மிகவும் இழிவாவன் என்பதும் அறிவித்தவாறு காண்க.

அதிபக்கு வத்தாற் கநுக்கிரகஞ் செய்யும்
புதுமைக்குச் சாத்திரங்கள் போதா-திதுவென்றுப்
பேறெ யநந்தம் பிரகாரம் வந்தானும்
வேறெ யநந்த விதம்,

(உரை.) அதிபக்குவத்தாற்கு அநுக்கிரகஞ் செய்யும் புதுமைக்குச் சாத்திரங்கள் போதாது—தீவிரதர பக்குவம் உடை

யானுக்கு ஞானானுக்கிரகம் டண்ணும் அதிசயத்திற்கு வெவ்வேறு வகைப்பட்ட சாத்திரங்கள் எல்லாம் போதா; (அஃது எங்ஙனம் எனின்),

இது என்னும் பேறே அநந்தம் பிரகாரம் வந்தாலும் வேறே அநந்தவிதம்—இது என்று ஒன்றைச் சுட்டுதற்கு இடம் வைக்காதுகூறும் உபதேசப்பேறே அவனுக்கு அநந்த விதமாய்க்கூறும் சாத்திரங்கள் ஆகும், இங்ஙனம் வந்த பக்குவனும் அநந்தம் பெயர்களுள்ளும் வேறு, இவனை ஒழிந்த பக்குவர்களும் அநந்தவிதம் ஆவார்கள்.

(குறிப்பு.) தீவிரதர பக்குவனது அறிவு சிவத்தையே அன்றி மற்றொன்றையும் பகுத்து நாடாது ஆகலின், "சாத்திரங்கள் போதாது" என்றார்.

மந்தம், மந்ததரம், தீவிரம் என்னும் இம்மூன்று பக்குவரும் நானாபேதமாய் வருதலினும், இவர்க்கு உபதேசம் நானாபேதமாகக் கூறிப் பக்குவப் படுத்தவேண்டும் ஆகலினும், "அநந்தவிதம்" என்றார்.

இத்திரு வெண்பாவால் தீவிரதர பக்குவனுக்குக் கூறும் உபதேசமே போதுமென்பதும் மற்றைய மூவர்க்கும் அவர் கூறும் உபதேச மொழியும் அன்றி வேதாகமங்களால் உணர்த்தவேண்டும் என்பதும் அறிவித்தவாறு காண்க. (சுக)

அறியாமை நீங்கி யறிவா யறிவே
யறியாம லாயிரண்டு மற்றுப் - பிறியாதார்

தன்னிழப்பின் ஞான சமாதிக்குச் சாதகரா
மந்நிலைக்கே சீவன்முத்த ராம்.

(உரை.) அறியாமை நீங்கி அறிவாய் அறிவே அறியா மல் ஆய் இரண்டும் அற்றுப் பிறியாதார்—சகலகேவலம் ஆகிய அறியாமை நீங்கித் தம்மை அருளாற்கண்டு அவ்வருளறிவாகி, முன் மலமாகிய அறியாமையில் மறைந்திருந்தாற்போல் அவ் வறிவு தானே அறியாமையாகி அதனுள் மறைந்து, இவ்வறி வென்பதும் தாமென்பதும் ஆகிய இரண்டும் அற்று இதனைப் பிரியா திருப்போர்,

தன் இழப்பில் ஞான சமாதிக்குச் சாதகர் ஆம் அந்நி லைக்கே சீவன்முத்தர் ஆம்—அங்ஙனம் இருக்கவே தற்சுதந் திரபோதம் அறும், அஃது அறவே பணிதானாகிய ஞானசமா திக்குச் சாதகர் ஆவர், இச் சாதகம் வந்த அக்கணமே சீவன் முத்தரும் ஆவர்.

(குறிப்பு.) இம்முறைவந்து பணியோகத்தில் நின்றோர்க் குச் சுகப்பேறும் சுகாதிதமும் தாமே கிடைக்கும் ஆகலின், "அந்நிலைக்கே சீவன் முத்தராம்" என்றார்.

இத்திரு வெண்பாவால் பணியோகத்தில் நிற்போரும் சீவன்முத்த ராவர் என்று அறிவித்தவாறு காண்க. (கஉ)

மகவான்கண் பார்த்தவர்க்கு மாண்பாய்த் தனக்குப்
பகமா யிலச்சைவிடாப் பண்பாய்ச் - சகமாணக்
கண்ணாரி போல்மேடைக் கண்ணாடி காட்டுதவ
மெண்ணாழி காலமிருந் தென்.

(உரை.) மகவான் கண் பார்த்தவர்க்கு மாண்பு ஆய்த் தனக்குப் பகம் ஆய் இலச்சை விடாப் பண்பு ஆய்-இந்திரனது கண்களைப் பார்த்தபெயர்க்கு மாட்சிமையாய் அவ்விந்திரனுக்கு அல்குலாய் அவனது உள்ளே நாணம் விடா முறைமையா யிருந்ததுபோல,

சகம் மாணக் கண்ணுறிபோல் வேடக் கண்ணுடி காட்டு தவம் எண் ஊழிகாலம் இருந்து என்—தவவேடத்தைப் பார்க்கின்ற சகத்தோர்க்கு மாட்சிமையா யிருப்ப இவ்வேடத்திற்கு உரிய ஞானம் தமக்கு இன்றென்று தம்முள்ளே நாணமுற வெசிபோல் மினுக்கிய வேடமாகிய கண்ணுடி காட்டப்பட்ட தவத்தார் அளவிறந்த காலம் இருப்பினும் அவ்வேடத்தால் பயன் அவர்க்கு என்னை உளது?

(குறிப்பு.) அவனுக்குக் கண்களைப் பார்க்குந்தோறும் இலச்சைவரால், "இலச்சைவிடா" என்றார். அவனை இவர்க்கு உவமை கூறினமையால், இவர்க்கும் இவ்வேடத்தைப் பார்க்குந்தோறும் இலச்சைவரும் என்பது ஆயிற்று.

தவத்தோர்க்கு உரிய உள்ளொழுக்கமான ஞானசாரம் ஒன்றும் தோற்றாது வடிவமாத்திரையே தோற்றினமையால், "வேடக்கண்ணுடி காட்டுதவம்" என்றார்.

இத்திரு வெண்பாவால் சிவஞானம் இல்லார்க்குச் சிவவேடத்தால் பயன் இன்று என்று அறிவித்தவாறு காண்க. ()

மூலதிகாரம்
வேதாகமப் பொதுவிலுபதேசம்
முற்றும்.

## இரண்டாம் அதிகாரம்.

# சத்திநிபாதத்

## துத்தமரொழிவு.



நால்வகைச் சத்திநிபாதத்து உத்தமர்களது பிரபஞ்சப் பற்றொழிவை முறையே கூறினமையால் இவ்வதிகாரத்திற்குச் த்திநிபாதத் துத்தமரொழிவு என்று பெயர் ஆயிற்று.

இவர் இந்நூற்கு உரியவர் ஆகலின் வேதாகமப் பொது விலுபதேச வதிகாரத்தின்பின் இவ்வதிகாரம் வைக்கப்பட்டது.

சரியாதி நான்கினுக்குஞ் சாலோக மாதி
வருமா றெனக்களித்த வள்ளல் - குருராயன்
ஞானத்திற் பக்குவர்க ளானவர்க் குபதேச
மானத் தையுநிகழ்த்தி னான்.

(உரை.) சரியாதி நான்கினுக்கும் சாலோகம் ஆதி வரும் ஆறு எனக்கு அளித்த வள்ளல் குருராயன்—சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் இந்நான்கு பாதத்திற்கும் சாலோகம் சாமீபம் சாரூபம் சாயுச்சியம் என்னும் இந்நான்கு பதமும் வரும் முறைமையை எனக்கு அருளிச்செய்த வள்ளல் குருராயனாகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார்

ஞானத்தில் பக்குவர்கள் நால்வர்க்கு உபதேசம் ஆன, தையும் நிகழ்த்தினன்—ஞானபாதத்திற்கு உரிய மந்தம், மந்த தரம், தீவிரம், தீவிரதரம் என்னும் இப்பக்குவம் உடையார் நால்வரது இலக்கணமும், அவர்க்கு உபதேசிக்கு முறைமையும் அருளிச்செய்தார்.

(குறிப்பு.) முப்பத்தாறு தத்துவங்களையும் நியதிகளைவது சரியை; அவற்றை அறிந்து நீங்கிய தன்னை அருளால் அறிந்து அவற்றின் முடிவில் நிற்பது சாலோக பதம். ஆங்குத் தனக்கு அறிவித்த அவ் அருளைத் தரிசித்துப் பின் அருள் என்றும் தான் என்றும் பிரித்து நோக்காது தற்போதத்தை அடக்குவது கிரியை; அவ் அருளே வடிவாயிருப்பது சாமீப பதம். அங்ஙனம் இருந்து தற்போதஞ் சிறிதும் தோன்றாது ஒழிப்பது யோகம்; ஆங்குப் பரை தானா யிருப்பது சாரூப பதம். அப்பரை நீக்கத்தில் தோன்றும் ஞானநந்தத்தைப் பெறுவது ஞானம்; அந்த ஆநந்தத்தில் அதீதப்படுவது சாயுச்சிய பதம். ஆகலின், "சரியாதி நான்கினுக்குஞ் சாலோகமாதி வருமாறு" இங்ஙனம் எனக்கொள்க. (க)

கின்னரியைத் தொட்டவர்போற் கேட்டவளவுக்களவு
சொன்னதல வெங்கள் சுவாமியுரை-மன்னடத்தி
லானந்த மூர்ச்சிதர்கை யாடகயாழ் தன்னிலை
தானுநலம் போலமொழிந் தான்

(உரை.) கின்னரியைத் தொட்டவர்போல் கேட்ட அளவுக்கு அளவு சொன்னது அல எங்கள் சுவாமி உரை—வருடி

-ஆசிட்டார் தாம் நினைத்துக் கேட்ட பாட்டின் அளவுக்கு அளவு கூறும் கின்னரியைப் போன்று யான் நினைத்து வினவியமட்டிற்கு இம்மட்டு விடை கூறியது அன்று, எமது சுவாமிகளாகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருவாக்கு ; (அஃது எங்ஙனம் எனின்),

மன் நடத்தில் ஆநந்த மூர்ச்சிதர் கை ஆடக யாழ் தன்னிலே தானும் நலம்போல மொழிந்தான் — பரமேசுரன் திரு நடனத்தில் அந்நடன அதிசயத்தைப்பார்த்து ஆநந்த பரவசராய் நிற்போர் கைப்பிடித்த பொன்னினால் இயற்றப்பட்ட யாழ் தன்னிலே தான் வாசிக்கும் நலம்போல் யான் கேளாது கேட்க எனக்கு உபதேசமொழிகளை அருளிச்செய்தார்.

(குறிப்பு.) அவர் ஆநந்த பரவசராய் நிற்கவும் தெய்வ யாழ் வருடாது வாசித்தல்போல, பிள்ளையார் ஆநந்தாதீதரைப் எழுந்தருளி யிருக்கவும் அவரது தெய்வவாக்கு நினையாது கூறிற்றென்பது அறிக,

“கின்னரியைத் தொட்டவர்போற் கேட்ட அளவுக்களவு சொன்னதல” என்றமையால், கடாவும் விடையுந் தாமே அருளிச்செய்தார் என்பது ஆயிற்று.

தெய்வயாழிற்குமேல் வேறுயாழ் இன்மைபோல் இந்த ஆசாரியர்க்குமேல் வேறு ஆசாரியர் இலர் என்பதும் காண்க.

யாழ் உன்னி வாசியாதிருக்கவும் பிறர்க்கு அங்ஙனம் செய்ததுபோல் தோற்றலின், “தானுநலம்போல மொழிந்தான்” என்று திருவாக்குக்கு அதனை உவமையாகக் கூறினார்

இவையிரண்டு திருவெண்பாவானும் தமது ஆசிரியர் ஞானபக்குவர் நால்வர்க்கும் உபதேசிக்கு முறைமையைத் தமக்கு அருளிச் செய்யும்போதும் ஆநந்தாதீதராய் எழுந்தருளியிருந்தே அருளிச்செய்தாரென்று அறிவித்தவாறு காண்க. ()

சும்மாதே பார்த்திருக்கச் சத்தியா முத்தயர்க்குத்
தம்மாய்வார்க் கோருரையே சஞ்சீவ - மென்மேலு
மாற்றஞ் சகுனப்புள் வாக்கு மதுவுண்ட
தோற்றும்பி யின்பாட்டுப் போல்.

(உரை.) உத்தமர்க்குச் சும்மாதே பார்த்து இருக்கச் சத்தி ஆம் தம் ஆய்வார்க்கு ஓர் உரையே சஞ்சீவம்—தீவிரதர பக்குவர்க்கு ஓர் மொழியும் கூறாது ஞானாசாரியர் மௌனாநந்த நோக்கால் பார்த்திருக்கவே ஆன்மசத்தியாம், தீவிரபக்குவமுடையராய்த் தற்போதம் ஒழிப்போர்க்கு அப்போதஞ் சிறிதேனும் பதையாது ஒழிதற்கு ஏதுவாய்க் கூறும் ஓர் மொழியே சஞ்சீவம் போன்று சத்தி ஆம்;

மென்மேலும் மாற்றம் சகுனப்புள் வாக்கு போல் மது உண்ட தும்பியின்பாட்டுப்போல்—மந்ததரபக்குவர்க்கு *விட்டு இசையாது இசைக்கும் சகுனப்புள் வாக்குப் போலச் சிற்சில சொற்களால் தெளிவிக்கச் சத்தியாம். மந்த பக்குவர்க்கு மதுவை நிறைய உண்ட தும்பி இடையறாது பாடும் பாட்டுப் போல வேதாகம சாத்திரங்களாலும் நானாவுபாய யுத்திகளாலும் இடையறாது அறிவிக்கச் சத்தியாம்.

* நடுவே நில்லாமல் ஒலித்தல்.

(குறிப்பு.) திருநோக்கக் குறிப்பால் அந்நிலை தெரிந்து கோடலின், "சும்மாதே பார்த்திருக்க" என்றும், சஞ்சீவத்தால் உடலம் சுத்தியாவதுபோல ஓர் உரையால் ஆன்மசுத்தி பெறுதலின், "சஞ்சீவம்" என்றும், சகுனப்புள் வாக்கால் தான் நினைத்தபொருள் கிடைத்தல்போல் சிற்சில சொற்களால் மெய்ப்பொருளைத் தெரிந்து கோடலின், "சகுனப்புள் வாக்குப்போல்" என்றும், மூர்ச்சித்துக் கிடந்த பெண் தும்பியை ஆண் தும்பி சூழ்ந்துகொண்டு இடையறாது பாடி ஆடவே அதற்கு அம்மூர்ச்சை தெளிந்து இதனோடு பறந்து கூடல் போல, நானா வுபாய யுத்திகளான் இடைவிடாது அறிவித்து அறிவினது ஆணவமூர்ச்சையை நீக்கித் தம்மோடு சேர்த்தலான், "தும்பியின் பாட்டுப்போல்" என்றுங் கூறினர்.

சுத்தியாவது சகல கேவலங்களை நீக்கி அவற்றின் வாசனையோடு எழுந்த தற்போதமும் ஒழிதல்.

"மென்மேலு யாற்றுஞ் சகுனப்புள்" என்றதனால் ஆஞ்ஞை என்பதாயிற்று.

சகுனப்புள் வாக்குப்போல் என்றும் மதுவுண்ட தும்பியின் பாட்டுப்போல் என்றுங் கூட்டுக.

இத் திருவெண்பாவால் ஞானசாரியர் உபதேசத்தால் நால்வகைப் பக்குவரும் தெளிந்துகொள்ளு முறைமையை அறிவித்தவாறு கண்க. (௯)

மூலமுதிர நாண முதிர்ந்தடங்கி மூடிக்
கல்வியிலே நக்கினத்தைக் காட்டல் - சலனபய

றானும் தம்பனைசெய் தாநந்த மாக்குவது
போலா மிந்தப் பொருள்.

(உரை.) முலை முதிர நாணம் முதிர்ந்து அடங்கி மூடிக் கலவியிலே நக்கினத்தைக் காட்டல்—ஓர் பேதைப்பெண் தனது முலை முதிரமுதிர நாணம் மேன்மேலும் முதிர்ந்து, பிறபுருடரோடு முன்போல் நகையாடலாதி செய்யாது அடங்கி, அம்முலையினை மறைத்துத் தனது சுயபுருடனுக்குக் கூட்டுறவின்கண் * நக்கினத்தைக் காட்டுவதுபோலும், ஒருவன் அறிவு முதிரமுதிர முன்போல விடயங்களிற் செல்வதற்கு நாணமுதிர்ந்து அவ்விடயங்களிற் செல்லும் போதத்தை உள்ளடக்கித் திருவருளில் மறைத்து ஆநந்தத்திற் கொப்பித்து நிற்றல்; (அப்போதத்தை ஆநந்தத்திற்கு ஒப்பிக்க எனின் அங்ஙனம் ஒப்பிக்குமாறே நில்லாமல்),

சலனை பயன் ஆறும் தம்பனை செய்து ஆநந்தம் ஆக்குவதுபோறல் இந்தப்பொருள் ஆம்—போதச்சலனை ஆறும், விடயப்பயனை அநுபவிப்பதாறுலும், இவ்விடயப்பயனை நீக்கி அப்போதச் சலனையை அடக்கி அப்போதத்தை ஆநந்தமய மாக்குவதாறுலும், இவ் வாநந்தப்பொருள் ஓர் இயல்பிற்றாய்த் தோற்றாது, அங்ஙனம் செய்வன போம் ஆயின், இப்பொருள் ஓர் இயல்பிற்றாய்த் தோற்றுவதாம்.'

(குறிப்பு.) முலை முதிர்ந்த பெண் அம் முலையையும் அல்குலையும் பிறபுருடருக்குக் காட்டாது மறைத்துச் சுயபுருட

* திருவாணம்.

னுக்குக் காட்டுதல்போல், அறிவு முதிர்ந்தோர் தற்போதத்தை விடயங்களிற் செல்லவொட்டாது மீட்டு உள்ளடக்கி அதனைச் சிவாநந்தத்திற்கு ஒப்பிக்கவேண்டும் ஆகலின், அங்ஙனம் உவமை கூறினார்.

போதம் விஷயங்களிற் சென்று அழுந்தியும் ஆநந்தத்திற் சென்று அழுந்தியும் இங்ஙனம் மாறிநிற்கும் எனின், ஆநந்தமும் மாறித்தோன்றும் ஆகலின், "ஆநந்தமாக்குவது போறலா மிந்தப்பொருள்" என்றார்.

"ஆறலும்" என்பதனைச் சலனை என்பதனோடும் ஆநந்தமாக்குவ தென்பதனோடுங் கூட்டுக.

இத் திருவெண்பாவால் அறிவாநந்தத்து அழுந்திய போதம் விரிந்து விடயாநந்தத்திற் செல்லாது ஓரியல்பிற் றாய் நின்றோர்க்கே அவ்வாநந்தம் மாறாது கிடைக்கும் என்று அறிவித்தவாறு காண்க. (௬)

பஞ்ச மலமும் பசுவநந்த மும்பதியு
மஞ்சு தொழிலு மவத்தைகளுங் - கிஞ்சறிவுங்
கேட்டுச் சரியாதி செய்துநிலை சங்கெடாக்
காட்சிமெழு கிற்கனகங் காண்.

(உரை.) பஞ்சமலமும் பசு அநந்தமும் பதியும் அஞ்சு தொழிலும் அவத்தைகளும் கிஞ்சு அறிவும் கேட்டு—ஆணவம், மாயை, காமியம், திரோதை, மாமாயை என்று கூறப்பட்ட பஞ்சமலங்களினது இலக்கணமும், இம் மலங்களால் மறை

பட்டிருந்த அநேகமாயுள்ள பசுவினது இலக்கணமும், இப்பசு பாசங்கட்கு முதன்மையாய் ஏகமாயிருந்த பதியினது இலக்கணமும், அப்பதி செய்யாநின்ற பஞ்சகிருத்திய இலக்கணமும், இப்பஞ்ச கிருத்தியத்தால் நடக்கும் சாக்கிராதி அஞ்சவத்தையினது இலக்கணமும், இவ் அஞ்சவத்தைகள் தோறும் சுழலும் ஆன்மபோத இலக்கணமுங் கேட்டறிந்தும்,

சரியாதி செய்து கிலேசம் கெடாக் காட்சி மெழுகில் கனகம்—சரியை கிரியை யோகங்களைச் செய்தும், அப்பாசத்தை நீங்கிப் பதியை அடைந்து பிறவித் துன்பத்தை நீக்கமாட்டாதார் அறிவு மாற்று அறி மெழுகில் அடங்கிய கனகம் போலும் ஆம்.

(குறிப்பு) உரைத்து ஒட்ட ஏறிய கனகம் உருக்கி எடாமையின் மெழுகில் மறைந்தாற்போலத் திரி பதார்த்தங்களினது உண்மையைக் கேட்டறிந்த அறிவு சுவாநுபவத்தால் வெளியாகாது மலத்துள் மறைந்தமையால், "மெழுகிற் கனகங்காண்" என்றார்.

அவ்வறிவுபிறர்க்குக்காட்சியாய்த் தோற்றலான், அதனைக் "காட்சி" என்றார்.

காண் - அசை.

இத் திருவெண்பாவால் பதி பசு பாசங்களினது உண்மையை வேதாகமங்களால் உணர்ந்தாலும் அப்பதியைச் சுவாநுபவத்தால் உணரார்க்குப் பயனில்லை என்று அறிவித்தவாறு காண்க. (கூ)

வாதி வடத்தினமு மாமருத்து வன்பிணியும்
சாதித்த வீரன்மேற் றம்பலமுந் - தீததுபோன்
ஞானத்தி லின்மை நசிப்பித்து நானனுவா
மூனத்தை யாரொழிவிப் போர்.

(உரை.) வாதி வடத்தினமும் மா மருத்தவன் பிணியும் சாதித்த வீரன்மேல் தம்பலமும் தீது அதுபோல்—பஞ்சலோகங்களையும் பொன்னுக்கினேன் என்று கூறும் இரதவாதி மிடியனுயிருத்தலும், பிறர் பிணிகளை எல்லாம் போக்கினேன் என்று கூறும் மகாவயித்தியன் பிணியனுயிருத்தலும், பகைகளை எல்லாம் வென்று சாதித்தேன் என்று கூறும் மகா வீரன்மேற் பிறர்போட்ட தம்பலம் இருத்தலுங் குற்றமாம். அதுபோல,

ஞானத்தில் இன்மை நசிப்பித்து நான் அநுபவிக்கும் ஊனத்தை யார் ஒழிவிப்போர்—சுவாநுபவத்தால்* ஞானாநந்தத்தை அடைதற்கு ஏதுவாகக்கூறும் ஞானசாத்திரங்களைக் கேட்டறிந்தமாத்திரத்தில் அவ்வானந்தம் பெருது அதனை விடயச் சேற்ருல் கெடுப்பித்து இவ்விடயச் சேற்றில் அழுந்தி நின்று நான் அவ்வாநந்தத்தின் மயமானேன் என்று கூறுங் குற்றத்தை யாவர் நீக்குகிற்பார் ?

* ஞானாநந்தத்தைப் பெருது அதனை விடயச் சேற்ருற் கெடுப்பித்து இவ்விடயச்சேற்றில் அழுந்தி நின்று அவ்வானந்தத்தை அடைதற்கு ஏதுவாகக்கூறும் ஞான சாத்திரங்களைக் கேட்டறிந்த மாத்திரத்தில் நான் அவ்வானந்த மயமானேன்—பாடபேதம்.

(குறிப்பு.) மிடி பிணி தம்பலம் அவரிடத்திருத்தலால் தாம் சொன்னவாறு செய்பவர் அலர் என்று அறிந்தாற்போல, விடயப்பற்று விடாமையால் இவர் இங்ஙனங்கூறுதலே அன்றி அதனை அடைந்திலர் என்பதறிக.

மிடியாதி அவர்க்குக் கூறினமையால் விடயம் இவர்க்கு வருவிக்கப்பட்டது.

இங்ஙனங்கூறுதல் மிகவுந் தோஷமாகலின், "ஊனத்தை யாரொழிவிப்போர்" என்றார்.

இத் திருவெண்பாவால் சிவாநந்தத்தைப் பெறாதிருந்தும் பெற்றேமென்று அசத்தியங் கூறல் மிகவும் பாவமென்று அறிவித்தவாறு காண்க. (௬)

மயலற்றார் கேட்க மகிழ்ந்துரைத்த வார்த்தை
யயலுக் குபதேச மாகுந்-துயிலாத்
தொறுவனைப் போ னின்றுகே சேழுக்கு நோயு
மறுமுரைத்தோ னாமுரைப்ப தை.

(உரை.) மயல் அற்றார் கேட்க மகிழ்ந்து உரைத்த வார்த்தை அயலுக்கு உபதேசம் ஆகும்—தேகாதி பிரபஞ்சங்களை யான் எனது என்று கருதும் மயக்கம் அற்ற அதிபக்குவத்தார் கேட்க ஞானாசாரியர் ஆநந்த மகிழ்ச்சியால் அருளிச்செய்த உபதேசமொழிகள் அப்பக்குவர்க்கு அன்றி அயலில் இருந்தோர்க்கும் உபதேசமாகும்; (ஆகலின் அம்மொழிகளை),

துயிலாத் தொறுவனைப்போல் நின்று கேள் தூசு அழுக்கு நோயும்அறும் நாம் உரைப்பதை உரைத்தோம்—சாக்கிரத்தில் நில்லாது சொப்பனத்துஞ் செல்லாது இடையான தன்மையாய்த் துயின்றும் துயிலாத இடையனைப்போன்று கேவல சகலங்களில் தாக்கற்று நின்று கேட்டி, இங்ஙனங் கேட்டி எனின், தூசின்மேல் ஏறும் அழுக்குப்போன்று ஏறுவதாய ஆகாமிய துன்பமும் ஒழியும், உனக்குச் சொல்லவேண்டிய புத்தியைச் சொன்னோம், (இதனை நீ அறிதி).

(குறிப்பு.) இடையன் கோற்கண் துயிலாது துயின்று மாட்டுமணி அரவத்தைக் கேளாதுகேட்கும் முறைமைபோல், இப்போது ஞானோபதேசம் கேட்கும்போதே சகல கேவலங்கள் தாக்காது கேட்போன் அநுபவமுற்றும் பெற்று முன்னிலைச் சுட்டும் ஒழிந்து நிற்பன் ஆகலின், "தூசழுக்கு நோயுமறும்" என்றார்.

தூசழுக்கு நோயுமறும் என்ற உம்மையால் சஞ்சித பிராரத்தமும் அறும் என்பதாயிற்று. அஃது எங்ஙனம் எனில், கருவிகள் சடமாகலின் அவைகள் ஆன்மாவை அறிந்து கூட்டமாட்டா, ஆன்மா கேவலத்தில் மறைபட்டுக் கிடத்தலின் அவைகளைச் சென்று கூடமாட்டான். கருவிகளை பிரேரகம்பண்ணி இக் கேவல மறைப்பை நீக்கிச் சகலத்தில் வைத்துப் பெத்தத்தில் தேகாதி பிரபஞ்சங்களை அறிவிப்பது போலவும், கீழாலவத்தைப் படுத்திக் கேவலத்தில் வைப்பது போலவும், முத்தியில் இக்கேவல சகலங்கள் தாக்காது வைத்துச் சுத்தாவத்தையிற் செலுத்திச் சுத்தத்தில் வைப்பதும்

திருவருளே என்றும், இஃதன்றிக் கருவிகளைக் கூட்டுவித்த போது ஆன்மாவிற்குச் சுதந்திர அறிவுதோன்றித் தான் அல்லாத தேகத்தைத் தானெனக் கருதி நின்று யானே எல்லாவற்றையும் அறிவேன், எல்லாவற்றையுஞ் செய்து முடிப்பேன், எனக்கு எதிரொருவரும் இன்றென நிற்கும், இங்ஙனம் நிற்பதனால் இதாகிதங்களும் இவற்றான்வரும் இருவினைகளும் தொடரும், இத்தொடர்ச்சியால் அளவிறந்த பிறவிகளில் நெடுங்காலம் சுழல்வது இங்ஙனம் என்று அந்தப்புல்லறிவைவிட்டு நீங்கி, கானலை நீரென்று மயங்கிக்கண்டபோதும் நீரை நீரென்று உள்ளபடி கண்டபோதும் தனக்குக் காட்டிநின்றது கதிரொளி என்று கண்கண்டு நின்றாற்போல், ஆன்மா பொய்யை மெய்யென்று மயங்கிநின்று அறிந்தபோதும், மெய்யை மெய்யென்று தெளிந்துநின்று அறிந்த போதும், திரோபவித்தும் அநுக்கிரகித்தும் அறிவித்து நின்றதும் திருவருளே என்றும் உள்ளபடி அறியில் தானென்பதும், இந்த முறையே அவன் அவள் அது என்னும் மூன்னிலைக் கண்ணும் திருவருள் நடப்பிக்கின்றது என்றுகண்டு அம்முன்னிலைகளால் தனக்கோர் இதாகிதங்கள் வந்தகாலை அம்முன்னிலைகளை நாடாது வினைக்கீடாய்த் திருவருள் நடப்பிக்கின்றதென்று அத்திருவருளை நாடி நிற்றலான், பிறரென்பதும் போய், எங்குந் திருவருளாய்க் காண்டலால் ஆகாமியம் அறும் என்பதும், ஞானாசாரியர் கிருபாநோக்கத்தால் சஞ்சிதம் அறும் என்பதும் உண்மை. முற் சனனம் புரிந்த வல்வினை உடலுடன் அகலும்என்றும்,* "வினைப்போகமே யுறுந்

* பட்டினத்துப்பிள்ளையார்.

தேகங்கண்டாய் வினைதாமொழிந்தால், தினைப்போதளவு நில்லாதுகண்டாய்" என்றும் இங்ஙனம் ஈசுவரவாக்கியம் ஞானிகள் வாக்கியங்கள் இருக்க, நீர் பிராரத்தவினையும் போம் என்றது என்னை எனின், ஈண்டுக் கூறியமுறையே நின்று யான் பிறர் என்பது ஒழிந்து திருவருளே கண்ணாகச்சென்று சிவதரிசனம் பண்ணி அதில் அதீதப்பட்டு நின்ற சிவயோகி பஞ்ச கிருத்தியங்களையுங் கடந்து பரமுத்தனைப்போல் இருப்பன் ஆகலினும், அவன் பிராரத்தம் வருவதுபோல் தோன்றி அழிவதே அன்றி அவனை வாதியாது ஆகலினும், அவனுக்குப் பிராரத்தம் இன்றென்பதறிக. இன்னும் அப்பர் மாணிக்கவாசகர் முதலாயினோர் சரித்திரங்களினுலுங் காண்க.

யான்பிறர் என்பதனுல் வினை ஏறும் என்பது,

"நானலா தொன்று தன்னைத் தானெனக் கருதிக்கொண்டே
யானலாஞ் செய்தேனென்னு ஞானமஞ் ஞான மத்தா
லீனமாம் வினையி ரண்டா மிருவினை யாலு டம்பா
மூனமா ருடம்பா லூழா மூழினலாகா துண்டோ"

என்னுந் திரட்டானும்.

* "யான்செய்தேன் பிறர்செய்தா ரென்னதியா னென்னு
மிக்கோணை ஞானவெறி யால் வெதுப்பி நிமிர்த்துத்
தான்செவ்வே நின்றிடவத் தத்துவன்று னேரே
தனையளித்து முன்னிற்கும் வினையொளித்திட் டோடும்
நான்செய்தே னெனுமவர்க்குத் தானங் கின்றி
நண்ணுவிக்கும் போகத்தைப் பண்ணுவிக்கும் கன்மம்

* பத்தாம் சூத்திரம் - 2.

ஊன்செய்யா ஞானந்தா னுதிப்பினல்லா
லொருவருக்கும் யானெனதிங் கொழியா வன்றே"
என்னும் சித்தியாரானும்.

* "யான்செய்தேன் பிறர்செய்தா ரெனுங்கோ ணீங்கி"
என்னும் சிவஞானதீபத்தானும் மற்றும் வருவனவற்று ளுங் காண்க.

பிராரத்தம் இன்றென்பதனை,

† "மும்மைதரும் வினைகண் மூளாவா மூதறிவார்க்
கம்மையு மிம்மையே யாம்"
என்னும் திருவருட்பயனுற் காண்க.

இத் திருவெண்பாவால் ஆசாரியர் உபதேசங் கூறமிடத்து மாணாக்கன் சகல கேவலங்களில் தாக்கற்று நின்று கேட்பின் மூவகை வினைகளும் அறுமென்று அறிவித்தவாறு காண்க. (எ)

அண்ட முதலா யநந்தம் பிறப்பின் விதங்
கொண்டுநர ராய்வினைகள் கூறொத்துத்-தொண்டிற்
சரியாதி செய்து தவச்சார்பி னிற்போர்க்
கரிதான பக்குவநா லாம்.

(உரை.) அண்டம் முதல் ஆய் அநந்தம் பிறப்பின் விதம் கொண்டு நரர் ஆய்த் தொண்டில் சரியாதி செய்து வினைகள் கூறு ஒத்து—அண்டசம் சுவேதசம் உற்பீசம் சராயுசம் என்

* உண்மை-80.

† அணைந்தோர்தன்மை - 9.

னும் இந்நான்கினில் தோற்றும் எழுவகைப் பிறவியில் உண்டாகிய எண்பத்து நான்கு நூறுயிரயோனி பேதங்களினும் அநந்தம் உருக்கொண்டு மாறிமாறிச் சுழன்று அவை தொலைத்துப் பின்பு நரவடிவுகொண்டு இவ்வடிவு அநந்தங் கோடியில் சிவபுண்ணிய நேரிட்டு அச்சிவ புண்ணியத்தால் சிவத்தொண்டு பூண்டு இச் சிவத்தொண்டிஞல் சரியை கிரியை யோகங்களைச் செய்து இச் சரியை கிரியை யோகங்களால் இருவினை ஒப்பு மலபரிபாகம் பிறந்து,

தவச்சார்பில் நிற்போர்க்கு அரிது ஆன பக்குவம் நாலாம் —உயிர்ச்சார்பு பொருட்சார்புகளை நீத்துத் தவச்சார்பில் நிற்போர்க்குக் கிடைத்தற்கு அரிதாகிய மந்தம் மந்ததரம் தீவிரம் தீவிரதரம் எனப் பக்குவம் நான்கு உள.

இத் திருவெண்பாவால் இருவினையொப்பு மலபரிபாகம் உடையோர்க்குப் பக்குவம் நால்வகையா யிருக்கும் என்று அறிவித்தவாறு காண்க. (அ)

மேலைச் சுகம்வெறுத்து மேலொடுகீ ழற்றுவெறுஞ்
சாலப்பொய் யாயுடலார் தாஞர்தன்—மூலமா
ரென்றுதெரி விப்பாரை யெய்துவோ மென்றிரண்டா
யொன்றுபடத் தேட்டமுதிக் கும்.

(உரை.) மேலைச் சுகம் வெறுத்து மேலொடு கீழ் அற்று வெறும் சாலப் பொய் ஆய் உடல் ஆர் தான் ஆர் தன் மூலம் ஆர் என்று—மேலாகிய அணிமாதி சுகங்களை வெறுத்து, இனிமேல் அடையும் பத முத்திகளினும் பூலோக போகத்திலும்

விருப்பற்று, அவைகளை எல்லாம் மிகவும் வெறும் பொய்யாய்க் கண்டு, இவ்வுடல்தான் யாது? இதனுள் இருந்த நான் யாவன்? எனக்கு முதலாய் உள்ள பதி யாது? என்று விசாரித்து, (இவை எம்மால் அறியக் கூடுவதில்லை ஆகலின்),

தெரிவிப்பாரை எய்துவோம் என்று இரண்டு ஆய் ஒன்று படத்தேட்டம் உதிக்கும்—இவற்றை அறிவிக்கும் ஞானாசாரியரை அடைவோம் என்று கருதித் தான் என்றும் சிவம் என்றும் இரண்டாய்ப் பகுத்தறிவது ஆய பின்னர் அச்சிவத்தோடு ஒன்றாக இங்ஙனம் பகுத்தறிவது ஒன்றாங்கும் அந்த ஞானாசாரியர் எங்குளர் என்று தேடுந்தேட்டம் பிறக்கும்.

(குறிப்பு.) முன்போல் மெய்யாய்த் தோன்றாமையின், "வெறுஞ்சாலப் பொய்யாய்" என்றார்.

இத் திருவெண்பாவால் பக்குவர்க்கு ஞானசாரியரைத்தேடுந் தேட்டம் இங்ஙனம் பிறக்கும் என்று அறிவித்தவாறு காண்க.

வேர்க்குங்கண் ணீர்ததும்புங் கம்பிக்குமெய்நடுங்கும்
வார்த்தை குழறு மனம்பதறும் - கார்க்கதமாய்க்
காந்து முரோமாஞ் சலியாகுங் காதலித்தார்க்
கேய்ந்தகுணங் காணிவைமெய் யட்டும்.

(உரை.) வேர்க்கும் கண் நீர் ததும்பும் கம்பிக்கும் மெய் நடுங்கும் வார்த்தை குழறும் மனம் பதறும் சார்க்கதம் ஆய் காந்தும் உரோமாஞ்சலி ஆகும்—உடற்கண் வேர்வை அரும்பும், கண்களில் ஆநந்தநீர் பெருகும், உள் நடுக்கும், உடல் நடுங்

கும், வசனம் குழறும், ஆசாரியரை என்றைக்கு அடைவோம் என்று மனம் விரைந்து நாடும், மேகம்போல் உள்ளே சுழுறி உளமெல்லாம் வெதுட்பும், உடல் மயிர்க்குச் செறியும்;

இவை எட்டும் காதலித்தார்க்கு எய்ந்த குணம்—ஆகிய இவை எண்வகையும் ஞானாசாரியரை விரும்பித் தேடுவோர்க்கு இயைந்த குணங்களாம்.

காண் - அசை.

இத் திருவெண்பாவால் ஞானாசாரியரைத் தேடும்போது பிறக்குங் குணம் அறிவித்தவாறு காண்க. (௧௦)

அரைநோட்டஞ் சிந்தை பெருமூச் சறியாச்
சுரமூட்ட மெல்லாந் துறந்த - லுரைதோற்று
மான மவுனம் விகள மறவைசா
வானவிவை பத்துமவத் தை.

(உரை.) அரைநோட்டம் சிந்தை பெருமூச்சு அறியாச் சுரம் ஊட்டம் எல்லாம் துறத்தல் உரை தோற்று மானம்—மனம் சக முகத்தைவிட்டு அகமுகமாய் நிற்றலின் அருகிய நோக்கமும், எப்போது ஞானாசாரியரை அறிந்து அடைவோம் என்னும் சிந்தனையும், அவரை நினைக்குந்தோறும் நெட்டுயிர்ப்பெறிதலும், இந்நினைவு மேலீட்டால் பிறரால் அறியக்கூடாத சுரம் மேலெழுதலும், இதனால் ஊண் உறக்கமுதலிய எல்லாம் துறத்தலும், இதனைப் பிறருக்கு யாதென்று சொல்கோம் என்று சொல்லாது அடக்கும் மானமும்,

மவுனம் விகளம் மறவை சாவு ஆன இவைபத்தும் அவத்தை—இம்மானத்தால் ஒருவரோடு ஒன்றுஞ் சொல்லாதிருக்கும் மௌனமும், இங்ஙனங் கூறும் விசாரமேலீட்டாற் பித்தமேறலும், இந்த அவத்தைகள் படுங்காலத்தும் அந்த ஞானசாரியர் எதிர்ப்படாராயின் மூர்ச்சித்தலும், இறத்தலும் ஆகிய இவை பத்தும் பக்குவர்க்குத் தோற்றும் அவத்தைகளாம்.

(குறிப்பு.) மறவை சாவு என்னும் இரண்டவத்தையும் தீவிரதர பக்குவர்க் கெனக் கொள்க.

இத் திருவெண்பாவால் ஞானசாரியர் எதிர்ப்படாத போது அவர்க்கு இங்ஙனம் அவத்தைகள் தோற்றும் என்று அறிவித்தவாறு காண்க. (கக)

தேட்டந் திரண்ட திருமேனி யுட்புறம்பாய்க்
காட்டு மளவே கரைபுரண்டு-கேட்ட
வதிபக் குவத்தார்க் ககம்புறமென் றாறு
விதிவைத்த தீக்கையா மெண்.

(உரை.) தேட்டம் திரண்ட திருமேனி உள் புறம்பு ஆய் காட்டும் அளவே—தமது உயிருள் இருந்தும் தெரியாது தாம் தேடும் தேட்டமாகிய பேராநந்தந்தானே திரண்ட ஞானசாரியர் தமது திருமேனியை அவர் கண்ணாரக் காணும்படி புறம்பாய்க் காட்டு மாத்திரத்திலே,

கரைபுரண்டு கேட்ட அதிபக்குவத்தார்க்கு அகம் புறம் என்று ஆறு விதிவைத்த தீக்கை ஆம் எண்—அன்பென்னும் ஆறு கரைபுரண்டெழுந்து உந்த அவ் ஆசாரியரைப் பலதரம்

வலம்வந்து அட்டாங்கமூதலிய வணக்கஞ்செய்து பின்னெழுந்து அஞ்சலி யத்தராய் நின்று ஆநந்தக்கண்ணீர் ஒழுக அநேக தோத்திரம் பண்ணி, எமது சுவாமிகளே! அடியேங்கட்கு இவ்வுடல் வந்தவாறு யாது? இவற்றள் இருந்த யாம் ஆர்? எமக்கு முதலாயுள்ள மெய்ப்பொருள் யாது? என்று கேட்ட அதிபக்குவ முடையோர்க்கு வேதாகமங்களில் விதித்துவைத்தபடி அவர் பண்ணுந்தீக்கை அகத்தீக்கை மூன்று புறத்தீக்கை மூன்று என்று ஆறுவகையா யிருக்கும் என்று அறிதி.

(குறிப்பு.) தீக்கைகள் ஆறுவன திருநோக்கம், பரிசம், வாக்கு,பாவனை, நூல், யோகம் என்பன; இவற்றுள் திருநோக்கம், பாவனை, யோகம் என்னும் இம்மூன்றும் அகத்தீக்கை; பரிசம், வாக்கு, நூல் என்னும் இம்மூன்றும் புறத்தீக்கை எனக்கொள்க.

உள்ளென்பதை உயிருள்ளிருந்தும் எனக்கொள்க.

இத் திருவெண்பாவால் ஞானசாரியர் தமக்கு எதிரே எழுந்தருளியபோது பக்குவர் வணங்கி வினவு முறைமையும், இவர்க்கு அவர் பண்ணுந் தீக்கை இவை என்பதும் அறிவித்தவாறு காண்க. (கஉ)

பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்து மலமாயை
கருமத்தை யெல்லாங் கழற்றிச்-சரியாதி
வாதனையாம் போத மயக்கத்தை வாக்காலே
பேதைசெய்து போக்கிவிடப் போம்.

(உரை.) பரிசித்தும் சிந்தித்தும் பார்த்தும் மலம் மாயை கருமத்தை எல்லாம் கழற்றி—பறவை முட்டையைச் செட்

டையாற் * பரிசித்தல்போல் மாணாக்கனைக் கரசரணங்க ளால் பரிசித்தும், ஆமை கரைக்கண் இருந்த முட்டையைத் தன்மனத்திற் பாவித்தல்போல் அவனைத் தமது அருளுருவாய் பாவித்தும், மீன் தனது சினையைப் பார்த்தல்போல் அவனைத் தமது கிருபைப் பார்வையாற் பார்த்தும், ஆணவமலம் மாயா மலம் கன்மமலமாகிய இவையெல்லாம் நீக்கி,

சரியாதி வாசனை ஆம் போத மயக்கத்தை வாக்காலே போதைசெய்து போக்கிவிடப்போம்—சரியை கிரியை யோக ங்களைச் செய்யும் வாசனை ஆகிய தற்போத மயக்கத்தை நீக்குத ற்கு ஏதுவாகிய உபதேசமொழிகளைத் திருவாக்கால் போதித்து நீக்கப் போம்.

(குறிப்பு.) யோகத்தைப் பாவனையுள் அடக்கி நூலை வாக் கில் அடக்கி தீக்கை ஆறையும் ஈண்டு நான்காய்க் கூறினர்.

இத் திருவெண்பாவால் ஞானசாரியர் மாணாக்கனுக்குத் தீக்கையால் மும்மலங்களையும் தற்போதத்தையும் நீக்கு முறை மையை அறிவித்தவாறு காண்க. (கரு)

காலமறை தேசமறை கன்மமறைபோற் காண்பாரும்
பாலுணும்புள் ளிப்பிமீன் பக்கிதீக்-காலு
மிரும்பினீர் மின்னலிலே யேற்றபணம் பார்ப்பார்
தரும்பொருளைக் கொள்ளுவார் தாம்.

* செட்டையாற் பரிசித்தல் முதலியன அவ்வம்முட்டை தத்தம் பருவம் அடைதற் கென்றறிக.

(உரை.) காலமறை தேசமறை கல்மறைபோல் காண்பாரும்—முன் ஓர்காலத்து ஒரு பொருளை அறியாதிருந்து பின் ஓர் காலத்து அதனை அறிந்துகொள்ளும் காலமறைபோலும், ஓர் தேசத்து அறியாதிருந்த பொருளை ஓர்தேசத்து அறிந்து கொள்ளும் தேசமறைபோலும், முன் மணியென்று அறியாதிருந்தும் பின் அதின் நோட்டம் அறிவாரோடும் பழகி மணி என்று அறிந்துகொள்ளும் கல்மறைபோலும், ஆசாரியர் அநுக்கிரகித்தபொருளை அறிந்துகொள்ளுவாரும் உளர்; (அஃதன்றி),

பால் உணும் புள் இப்பி மீன் பக்கி தீக்காலும் இரும்பின் நீர் மின்னலிலே ஏற்றபணம் பார்ப்பார் தரும்பொருளைக் கொள்ளுவார் தாம்—பாலுண்ணும் அன்னப் புள்போலும், சிப்பி போலும், மீன் உண்ணுங் கொக்குப் போலும், உலையில் நெருப்பெழக் காய்ந்த இரும்பின் நீர்போலும், மின்னலொளியில் ஏற்கப்பட்ட பணநோட்டம் அறிவார்போலும், அ நருளாசமிசெய்த பொருளை அங்ஙனம் ஏற்றுக்கொள்ளும் பக்குவரும் உளர்.

(குறிப்பு.) ஆசாரியர் அநுக்கிரகித்த பொருள் அக்காலத்துத் தோற்றுதிருந்து சின்னாட்குப் பின்னர் தம்முள்ளே தெரிந்து கோடலால், காலமறை என்றும், அவர் கொடுத்த நூலில் தெரியாதிருந்துஅந்நூற்பொருளைக்கூறும் மற்றோர் நூலில் தெரிந்து கோடலால், தேசமறை என்றும், தாம்கற்ற நூல்கற்றாரோடும் பழகித் தெரிந்து கோடலால், கன்மறை என்றும் உவமை கூறினர்.

அன்னம் நீரை நீக்கிப் பாலை உண்டாற்போல் சரியாதிகளை நீக்கி ஞானமொழியைக் கோடலான், பாலுண்

ணும்புள் என்றும், சிப்பி சோதிமழைக்கு அங்காந்திருந்து துளிவிழுந்த மாத்திரத்தில் வாய்மூடிக் கொள்ளுதல்போல் எப்போது கூறுவார் என்று இதயம் மலர்ந்துகேட்டு அங்ஙனம் கேட்டபொருளை உள்ளடக்கிப் பயன்படுத்திக் கோடலான் இப்பி என்றும், கொக்குத் துறைக்கண் அசைவற நின்று மீன் வந்துழிக் கவருதல்போல் சித்திரப்பாவைபோல் அசைவற இருந்து பயன்தருமொழி வருந்தோறும் ஏற்றுக்கோடலான் மீன்பக்கி என்றும், இரும்பு தான் ஏற்கும் நீர் மாத்திரம் எடுத்துக்கொண்டு அதனை மீளவிடா திருத்தல்போலத் தமக்கு வேண்டிய உபதேசமொழிகளை ஏற்றுக்கொண்டு மீளவிடா திருத்தலான், இரும்பினீர் என்றும், கட்கூர்மையால் விரைந்து மின்னல் ஒளியில் பணம் பார்ப்பதுபோல் அறிவுக்கூர்மையால் அதிசீக்கிரத்தில் கூறிய மொழிகளின் அருத்தமெல்லாம் அறிந்து கோடலின், மின்னலிலே யேற்றபணம் பார்ப்பார் என்றும் கூறினர்.

காலமறையாதி மூன்றற்கும் இன்ன காலத்து இன்ன பொருள் உளதென்றும், இன்ன தேசத்தில் இன்ன பொருள் உளதென்றும், இன்ன மலைக்கு அப்பால் இன்ன பொருள் உளதென்றும், தமக்கு ஆப்தனுயுள்ளவன் கூற அம்மொழியை உண்மையாகக் காண்பார்போற் காண்பாரும் உளரென்று பொருளுரைத்தலும் ஆம்.

இத் திருவெண்பாவால் ஆசாரியர் உபதேசித்த பொருள்களை மாணுக்கர் இம்முறைமைகளாய் ஏற்றுக்கொள்வார் என்று அறிவித்தவாறு காண்க. (கஃ

பதியிறக்கக் கேட்டிறந்த பத்தினிபோற் பால்போ
லதிமோகி தீப்புகல்போ லன்பாம் - விதவையர்போற்
கன்னன் கடையிற் கொடைபோலக் காணலாந்
தன்னையிழ வாதிழந்த ருன்.

(உரை.) பதி இறக்கக் கேட்டு இறந்த பத்தினிபோல் பால்போல் அதிமோகி தீப்புகல்போல்—பதி இறந்தான் என்று பிறர் கூறக்கேட்ட அக்கணத்தில் தானும் இறந்த பதிவிரதை போலும், கடைகாலில் இருந்து கவிழ்ந்த பால்போலும், தனது புருடன்மேல் அதிமோகியாயிருந்தவள் அவன் இறந்தகாலத்து அவனோடும் அக்கினிப் பிரவேச மாதல் போலும்,

அன்பு ஆம் விதவையர்போல் கன்னன் கடையில் கொடைபோலத் தன்னை இழவாது இழத்தல் காணல் ஆம்—புருடன் இறந்துபோய பின்னரும் முன்னர் அன்பு விடாதிருந்த விதவையர்போலும், மறுமை குறித்து ஈட்டிய புண்ணியமெல்லாம் அந்தணனுக்குக் கன்னன் தன் தேகாந்தத்திற் கொடுத்த கொடை போலும், ஆசாரியர் உபதேசித்த மொழிகளை உட்கொண்ட பக்குவர் தம்மை ஒழியாதொழிக்கும் முறைமை காணப்படும்.

(குறிப்பு.) கேட்ட அக்கணத்து இறந்தாளைப்போல் உபதேசமொழியைக் கேட்ட அக்கணத்தில் போதமிறத்தலின், "பதியிறக்கக் கேட்டிறந்த பத்தினிபோல்" என்றும், பால் எல்லாங் கவிழ்ந்தது ஆயினும் அதனுள் வாசனை இருத்தல்போல் போதம் இறந்தது ஆயினும் அப்போத வாசனையிருத்தலின்,

"பால்போல்" என்றும், சில நாழிகை சென்ற பின்னர்த் திப்பு கல்போல் சிலநாளில் போதம் இறத்தலின், "அதிமோகி திப்பு கல்போல்" என்றும், புருடனோடு இறவாதிருந்து தேகபோகங்களை வெறுத்து இருத்தல்போல் யான் எனது என்று எழும் போத எழுச்சியை அடக்கி யிருத்தலின், "விதவையர்போல்" என்றும், ஒன்றையுங் குறியாது கொடுத்தல்போல் ஒன்றையுங் கருதாது எல்லாவற்றையும் விடுத்தலின், "கன்னன் கையிற் கொடைபோல்" என்றுங் கூறினார்.

தான்-அசை.

இத் திருவெண்பாவால் ஆசாரியர் உபதேசித்தபொருளை உட்கொண்ட பக்குவர் தற்போதம் ஒழிக்கும் முறைமையை இங்ஙனமென்று அறிவித்தவாறு காண்க. (க௫)

மாற்றுபலவகையாம் பொன்னோடை வைப்பான்போற்
றேற்றிச் சிவாகமத்தாற் செப்புகினு - மேற்ற
பரிபாகத் தாலே பழுப்பாம் பலவும்
மொருபாக மன்றென் றுணர்.

(உரை.) பலவகை ஆம் பொன்மாற்று ஓட வைப்பான் போல் சிவாகமத்தால் தேற்றிச் செப்புகினும்— பலவகையாய்த் தோற்றும் மாற்றுப்பொன்களைப் பத்துமாற்று ஆக்குதற் பொருட்டுப் புடம் போடும் ஒருவனைப்போலும், பக்குவர் நால்வர்க்கும் ஓர் படித்தாற் சிவாகமத்தாற் தெளிவித்துக் கூறினும்;

ஏற்ற பரிபாகத்தாலே பழுப்பு ஆம் பலவும் ஒருபாகம் அன்று என்று உணர்— மாற்று ஏற்றமாயிருந்த பொன் டரி

பாகத்தால் முன் பழுப்பாகும் அன்றிக் குறைந்த மாற்று உயர்ந்த மாற்றுக்களாகிய பல பொன்களும் ஒரு பாகமாய்ப் பழுப்பாகுவ அல்ல. அதுபோல, உயர்ந்த பக்குவனுக்கு முன்னர் ஞானம் ஏறுமன்றி எல்லார்க்கும் ஓர் பிரகாரமாய் ஞானம் ஏறுமென்று அறிதி.

(குறிப்பு.) தாழ்ந்த மாற்றுப் பொன்களைப் புடம் போடுந்தோறும் எடை குறைந்து மாற்றுயர்தல்போல, தாழ்ந்த பக்குவர்க்குச் சிவாகமத்திற் கூறும் நானா உபாய யுத்திகளை உபதேசிக்குந்தோறும் பாசங் குறைந்து ஞானமேறும் என்பதுங் காண்க.

இத் திருவெண்பாவால் ஆசாரியர் உபதேசிக்கும் மொழி ஓர் பிரகாரம் ஆயினும் பக்குவ உயர்ச்சி தாழ்ச்சிப்படி ஞானம் ஏறுவதன்றி ஓர் படித்தாய் ஞானம் ஏறுமென்று அறிவித்தவாறு காண்க. (கசு)

கல்லையுரு வாக்குங் கழற்றியிலே யில்வாழ்க்கை
சில்லநீர் போலத் தெளிந்துவரும் - தொல்லுலகங்
கான்றசோ றருகுங் கதலித்தண் டைக்கனலி
லூன்றல்போன் ஞானமுதிக் கும்.

(உரை.) கல்லை உரு ஆக்கும் கழற்றியிலே இல்வாழ்க்கை சில்லம் நீ போலத் தெளிந்துவரும்—கல்லினை ஓர் பாவை வடிவாக்கும் முறைமைபோல், அருள் வடிவாக்குதற்பொருட்டு மந்த பக்குவர்க்கு உபதேச மொழிகளால் பாசத்தை நீக்

குமிடத்துத் * தேறிட்ட நீர் தெளிந்து வருதல்போல், அவர்க்கு இல்வாழ்க்கை இஃது ஆர் யாம் ஆர் என்று தெளிவு பிறந்துவரும்;

தொல் உலகம் கான்ற சோறு ஆகும் கதலித் தண்டைக் கனலில் ஊன்றல்போல் ஞானம் உதிக்கும்—பழையதாகவரும் இப் பிரபஞ்சம் சக்கின சோறுபோல் அருவருப்பாகத் தோற்றும், வாழைத்தண்டை அக்கினியிற் சுடுதல்போல் அவர்க்கு ஞானந்தோன்றும்.

(குறிப்பு) பிரிந்த சேறும் தெளிந்தநீரும் கலந்து வருதல்போல் இல்வாழ்க்கையில் பற்றும் பற்றின்மையும் கலந்து வருதலின், "தெளிந்துவரும்" என்றார்.

வாழைத்தண்டைப் பன்னாள்பலகாட்டத்தால் சுடல்போல் இவர்க்குப் பன்னாளில் பற்பல உபதேசமொழிகளால் ஞானம் ஏறும் என்பதறிக. (கஎ)

இரும்பை வடிவாக்கு மியல்பினர்க்குப் பச்சை
மரஞ்சுடுமா போன்ஞானம் வாய்க்கு - மிருந்தவிட
நிர்த்தா மனையிலே போ னீங்கு முலகமெலாம்
பேய்த்தேர்போற் றோன்றும் பிரிந்து.

(உரை) இரும்பை வடிவு ஆக்கும் இயல்பினர்க்குப் பச்சைமரம் சுடுமாறுபோல் ஞானம் வாய்க்கும் — இரும்பினை ஓர் பாவை வடிவாக்கும் முறைமைபோல் பாசத்தைநீக்கிஅருள்

* தேற்றாங்கொட்டையால் தெளிவிக்கப்பட்டநீர்.

வடிவாக்சப்பட்ட மந்ததர பக்குவர்க்குப் பச்சைமரத்தை அக்கினியால் சுடுமாறுபோல் ஞானம் பலிக்கும்;

இருந்த இடம் தாமரையிலை நீர்போல் நீங்கும் உலகம் எலாம் பிரிந்து பேய்த்தேர்போல் தோன்றும்—தாம் இருந்த இல்வாழ்க்கையில் தாமரையிலை நீர்போல்கூடியிருந்தும் அதிற் கூடாது நீங்குவர், பிரபஞ்சமெல்லாம் அவர்க்கு அந்நியமாகக் கானற் சலம்போல் தோன்றும்.

(குறிப்பு.) சிலகாட்டத்தால் பச்சைமரம் சுடல்போல் சில உபதேச மொழிகளால் இவர்க்கு ஞானம் ஏறும் என்பதறிக.()

மரப்பாவை போலுடம்பின் வாதனையை மாற்றிக்
கரித்தீக் கவர்வதுவாங் காமித்-திருந்த
மனைபொதுவின் மண்டபமாம் வானோர்கள் வாழ்வுங்
கனவெனவே தோன்றியிடுங் காண்,

(உரை.) மரப்பாவைபோல் உடம்பின் வாதனையை மாற்றிக் கரித்தீக் கவர்வது ஆம்—மரத்தினை ஓர் பாவைவடிவாக்குதல்போல், அருள்வடிவாக்குதற் பொருட்டுத் தீவிரபக்குவர்க்கு உடம்பின் வாதனையாய பொறிகரண முதலியவற்றைநீக்கி ஞானத்தை உணர்த்தக் கரி தீ ஏற்றுக்கொள்ளல் போல் ஞானம் உண்டாம்;

காமித்து இருந்த மனை பொதுவின் மண்டபம் ஆம் வானோர்கள் வாழ்வும் கனவு எனவே தோன்றியிடும்—தான் இச்சித்திருந்த மனைவாழ்க்கை நாலுபேருங் கூடியிருக்கும் பொதுமண்டபம் போலாகும், கேள்வியால் அறியப்பட்ட இச்

திராதி தேவர்கள் செல்வமும் சொப்பனம்போல் தோற்றும்,

(குறிப்பு.) உடம்பின் வாதனையை மாற்றி என்றமையான், இவர்க்குப் போகவாதனை மாற்றவேண்டுவது இன்றென்பது ஆயிற்று. "வானோர்கள் வாழ்வுங் கனவெனவே தோன்றும்" என்றமையான், நரர்வாழ்வு சுழுத்திக்காட்சிபோல் தோன்றும் என்பதாயிற்று.

இருந்த என்பது இருத்த என்று வலித்தல் விகாரமாய் வந்தது. காண்-அசை. (கக)

வெண்ணெயுறு பாவையர்க்கு ஞானம் விளக்கின்மே
லண்ணின் மயிர் பஞ்சாகு மாசையிலை - கண்ணீ
ரொழுகு பொழுதறியா துள்ளுருகி விம்மி
யழுதுசிரிப் பார்புளக மாம்.

(உரை.) வெண்ணெய் உறு பாவையர்க்கு ஞானம் விளக்கின்மேல் அணில் மயிர் பஞ்சு ஆகும் ஆசை இலை—வெண்ணெயினைப் பொருந்தாநின்ற ஓர் பாவை ஆக்குதல் போல் அருள்வடிவாக்கப்பட்ட தீவிரதர பக்குவர்க்கு விளக்கின் கொழுந்திற் பிடித்த அணிலின் மயிர்போலும் பன்னிய பஞ்சுபோலும் பாசநீங்கி ஞானம் உண்டாம், அவர்க்கு ஒன்றினும் ஆசை இன்று;

கண்ணீர் ஒழுகும்பொழுது அறியாது உள் உருகி விம்மி அழுது சிரிப்பார் புளகம் ஆம்—ஆநந்தக்கண்ணீர் ஓடும்போது

தாமறியாது உள்ளமெல்லாம் நெக்கு நெக்குருகி விம்மி விம்மி அழுது சிரிப்பார், அவர்க்கு உடம்பெல்லாம் உரோமாஞ்சலி ஆம்.

(குறிப்பு.) அழுவது முன்பட்ட பிறவித்துன்பங்களை நோக்கி; சிரிப்பது துன்பங்களை எல்லாம் ஒருகணத்தில் மாற்றிய ஆசாரியரது அதிசயத்தை நோக்கி எனக்கொள்க.

பிரபஞ்சத்தின்மேல் இல்வாழ்க்கைமேல் உடம்பின்மேல் ஆகிய மூன்றிடத்தும் அவர்க்கு ஆசை இன்மையால், பொதுப்பட "ஆசையிலை" என்றார்.

கல்லை என்னும் திருவெண்பா முதல் இந்நான்கு திருவெண்பாவானும் மந்தமுதலிய நான்கு பக்குவங்களையும் உடையோரை ஞானாசாரியர் பக்குவப்படுத்தி அவர்க்கு ஞானம் ஏற்றும் முறைமை இங்ஙனம் என்று அறிவித்தவாறு காண்க ()

இங்ஙனம் கூறும் பக்குவர்க்கே அன்றி மற்றையர்க்கு ஞானம் போதித்தால் ஏறாதோ எனின், மேற்கூறுகின்றார்.

புளிசேர் பழமானாற் போற்புறம்போ டுள்ளின்
முளைதானும் வேறாய் முளைபோய்த் - துளைமாண்ட
ஆசிக்குப் பாச மொழிந்ததுபோ லொப்பாருக்
காசைக்கே டாநந்த மாம்.

(உரை.) புளி சேர் பழம் ஆனால் போல் புறம்போடு உள்ளின் முளைதானும் வேறு ஆய் முளைபோய்—முன்னர்ப் பிஞ்சாய் இருந்தபோது ஓடும் வித்தும் பிரிபடாது ஒன்றாய்ச் சேர்

ந்த புளி அவ்வோடும் வித்தும் பிரிபடும் பழம் ஆனாற்போல், முன்னர் அறிவு முதிராமையின் பிரிபடாதிருந்த மும்மலங்களும் இப்போது அவ்வறிவு முதிர்ந்தமையால் மாயை கன்மம் ஆகிய புறம்போடு உயிருள் இருந்த முளையாகிய ஆணவமும் தமக்கு அந்நியமாய் நீங்கி இவற்றான் ஏறுவதாய ஆகாமிய முளையும்போய்;

துளைமாண்ட ஊசிக்குப் பாசம் ஒழிந்ததுபோல் ஒப்பாருக்கு ஆசைக்கேடு ஆநந்தம் ஆம்—காதற்ற ஊசிக்குச்சரடு ஒழிந்ததுபோல் தற்போதத்தோடு எல்லாப் பாசங்களையும் இங்ஙனம் ஒழிந்தோர்க்கு அப்போதத்தால் தோற்றும் ஆசை நாசமே சிவாநந்தப்பேறும்.

(குறிப்பு.) மாயையும் கன்மமும் புறம்பாய்க் காணப்படுதலின், "புறம்பு" என்றும், அவை நீங்கியபோதும் தான் நீங்காது உயிருள் இருத்தலின், ஆணவத்தை "உள்ளின்முளை" என்றும், ஆகாமியம் பிறவிக்கு ஏது ஆகலின், இதனையும் "முளை" என்றுங் கூறினர்.

காது அறு முன் தொடர்ந்த பாசம் அஃது அற்றபோது ஒழிந்தாற்போல், போதம் அறு முன் தொடர்ந்த பாசம் அஃது அற்றபோது ஒழிதலின், "ஊசிக்குப்பாச மொழிந்தாற்போலொப்பாருக்கு" என்றார்.

தேகபோகங்களாகிய துன்பத்தை இன்பம்போல் மாறுபாடாய்த் தோற்றுவித்து உயிர்க்குஆசைஉண்டாக்குவதுஆணவம். அதனது வாசனை போதம் ஒழியும் அளவும் இருத்தலின்

அதன் காரியமாகிய ஆசைகெடவேகாரணமாகிய அவ்வாணவ வாசனையும் அவ்வாசனையால் எழும் போதமும் கெடும் ஆக லின், "ஆசைக்கேடாநந்தமாம்" என்றார்.

இத் திருவெண்பாவால் பக்குவம் உடையோர்க்கே ஞானம் போதித்தால் பாசநீக்கி ஆநந்தப்பேறு உளதாம் அன்றி, மற்றையர்க்கு அங்ஙனம் உண்டாகாதென்று அறிவித்தவாறு காண்க. (உக)

அருணனுதயம்போற் றாம்வீழ்வா ராசை
பெருகுவபோற் கப்பல் பிழைத்துக் - கரைகாணு
மாபோற் சிறையு மரும்பிணியு நீங்கியிடு
மாபோ லதிசயம்போ லாம்.

(உரை.) அருணன் உதயம்போல் தாம் வீழ்வார் ஆசை பெருகுவபோல் கப்பல் பிழைத்துக் கரைகாணுமா போல்—மழையிருளில் நெறிதெரியாது உழல்வோர்க்குச் சூரியன் உதயமானதுபோலும், தம்மால் விரும்பப்பட்ட மாதர்மேல் ஆசை உள்ளமும் மறைய மேன்மேல் வளர்தல்போலும், திசைதவறிய கப்பல் தப்பித் துறை சேரக் காணுமாறுபோலும்;

சிறையும் அரும்பிணியும் நீங்கியிடுமாபோல் அதிசயம் போல் ஆம்—விடாச்சிறை இருந்தோர்க்கு அச்சிறை நீங்கியவாறு போலும், மாறா நோயர்க்கு அந்நோய் நீங்கியவாறு போலும், ஓர் காலமுங் காணாத அதிசயங் கண்டதுபோலும், திருவருள் ஞானம் பெற்றோர்க்குத் தோற்றும்.

(குறிப்பு.) முன்னர் ஆணவ இருளால் பொய் இது மெய் இதுஎன்று ஒன்றுந் தோன்றா திருந்தோர்க்கு இப்போது அருளொளியால் எல்லாம் சிவமாய்த் தோற்றலின், "அருணனுதயம்போல்" என்றும், அவ்வருள் ஞானத்தால் தோன்றும் ஆனந்தத்தில் தாம் மேன்மேல் மறைதலின், "தாம்வீழ்வா ராமை பெருகுவபோல்" என்றும், இந்த ஞானாநந்தத்தை என்றைக்கு அடைவோம் என்று இருந்த தமக்குஇப்போது கிடைத்தலின் "கப்பல் கரைகாணுமாபோல்" என்றும், முன் உடலாயிருந்த தாம் இப்போது அதற்கு உட்புறனாய்விளங்கும் சிவமாயிருத்தலின், "சிறைநீங்குமாபோல்" என்றும், முன் இருந்த பிறவித் துன்பம் இப்போது நீங்கலின், "பிணிநீங்குமாபோல்" என்றும், ஓர் காலங்களினும் கண்டறியாத காட்சியாகலின், "அதிசயம்போல்" என்றும் கூறினார்.

இத் திருவெண்பாவால் பக்குவர்க்குப் பாசநீங்கி ஞானோதயமானபோது தோற்றும் அதிசயகுணம் இவை என்று அறிவித்தவாறு காண்க. (உஉ)

பாசநீங்கி ஞானந்தோன்றினால் அவர்க்கு இக்குணங்கள் தோற்றுவது என்னை எனின், மேற்கூறுகின்றார்.

உடல்பொறிக ளுட்கரணத் தோடுகுணம் வாயு
விடவிடவே நாதாந்த வீடும்-நடுநிலையாய்த்
தன்னொழிவும் பேரின்ப சாகரமுஞ் சந்தழிவா
ரென்னபடார் கண்டறியா ரே.

(உரை.) உடல் பொறிகள் உட்கரணத்தோடு குணம் வாயு விடவிடவே நாதாந்த வீடும்—உடலமும் பொறிகளும் அந்தக்கரணங்களும் அவற்றுடனே குணங்களும் பிராண வாயுவும் ஆகிய இவ்வைந்தையும் ஒவ்வொன்றாய் அறிந்து நீங்க நீங்கவே வரும் நாத தத்துவத்தின் முடிவாகிய விடுதலையையும்,

நடுநிலை ஆய்த் தன் ஒழிவுபோர் இன்ப சாகரமும் சந்தழி வார் என்ன படார் கண்டு அறியார் — அவ்விடுதலைக்கும் சுகாதீதத்திற்கும் நடுநிலையாய்த் தோன்றும் தன் தரிசனம், திருவருள் தரிசனம், பரைதரிசனம், பரையோகம், பரையோக நீக்கத்தையும், அவற்றின்மேல் தற்போத ஒழிவையும், அதன் மேல் ஆநந்தசாகரத்தையும், அநுபவமாகக் கண்டு அதன்மேல் சிவத்தோடு இரண்டற்றிருக்கின்றார் என்னஆச்சரியப்படார் முன்னோர் காலங்களினும் அவற்றைக்கண்டறியாதார்.

(குறிப்பு.)உடலத்தை உள்ளபடிஅறிந்து நீங்கவே பஞ்சபூத காரியமாகிய புறக்கருவிகள் இருபத்தைந்தும், ஈடணைத்திரயங்களும் தசநாடிகளும் நீங்கும். ஞானேந்திரியங்களை உள்ளபடி அறிந்து நீங்கவே அவற்றான் அபகரிக்கப்பட்ட சத்தாதிகள் ஐந்தும், அவ்விந்திரியங்கள் அவ்விடயங்களை அபகரித்த போது தொழிற்படும் கன்மேந்திரியங்கள் ஐந்தும், விடயீகரிக்கப்பட்ட வசநாதிகள் ஐந்தும், இவ் விருவகை இந்திரியங்கட்கும் இடமாய் நின்ற பூதங்கள் ஐந்தும் நீங்கும். அந்தக்கரணங்களை உள்ளபடி அறிந்து நீங்கவே சூக்குமையாதி வாக்கு நான்கும் நீங்கும். முக்குணங்களை உள்ளபடி அறிந்து நீங்கவே இம்முக்குணகாரணமான மூலப்பிரகிருதிநீங்கும். மூல

ட்பிரகிருதி நீங்கவே இதாகிதங்களாய் வரும் கன்மம் சீவனமி-ன்றி நிற்குமாதலின், அக்கன்மத்தைக் கூட்டாநின்ற காலமும் அதனை வரைந்துநிற்கின்ற நியதியும் நீங்கும். இவை நீங்கவே ஆன்மாவிற்குப் புசிப்பின்மையால் இச்சா ஞானக்கிரியை சீவியாது. ஆகலின், கிரியையை எழுப்பும் கலையும் அறிவை எழுப்பும் வித்தையும் ஆசையை எழுப்பும் இராகமும் ஆசைப்பட்ட பதார்த்தத்தில் மயங்கும் புருடனும் நீங்கும். இங்ஙனம் கலாதிகள் நீங்கவே காலத்தையும் நியதியையும் கலையையும் பிரேரித்த சத்திதத்துவமும், வித்தையைப் பிரேரித்த சுத்தவித்தையும், இராகத்தைப் பிரேரித்த ஈச்சுரதத்துவமும், புருடனைப் பிரேரித்த சிவதத்துவமும், மூலப்பிரகிருதியைப் பிரேரித்த சாதாக்கிய தத்துவமும் நீங்கும். இங்ஙனம் சுத்ததத்துவங்கள் நீங்கவே பிராணவாயுமாத்திரம் இயங்கும். இப்பிராணவாயுவை உள்ளடுடி அறிந்து நீங்கவே தசவாயுக்களும் அசபைநாதமும் நீங்கும். இம்முறையே தத்துவம் தொண்ணூற்றாறும் நீங்கும். ஆகலின், "விடவிடவே நாதாந்த வீடும்" என்றார்.

"நடுநிலையாய்" என்றதனானும், "பேரின்பசாகரமும்" என்றதனானும், தற்றரிசன முதலிய வருவிக்கப்பட்டன.

கண்டத்தானத்தில் அந்தக்கரணங்களோடும் கூடி மத்திமை வாக்கு நன்றாய் அறியப்படுதலின், மத்திமைவாக்குக்குக் காரணமாகிய சூக்குமை பைசந்தியும், மத்திமையால் காரியப்பட்ட வைகரியும் அந்தக்கரணங்கள் நீங்கவே நீங்கும் ஆகலின், அந்தக்கரணங்களை நீங்கவே சூக்குமையாதி வாக்குகள் நீங்கும் என்று சொல்லப்பட்டது.

. பிராணவாயு இயக்கத்தை அடக்கத்தொடங்கின் அடங்காது மேன்மேலியங்கும் ஆகலின் அவ்வியக்கம் தன்னால் அறியப்படுதலானும், தன்னை அஃது அறியாமையானும், அதனைச் சடம் என்றும், அதனை அறிந்த அறிவு தான் என்றும், தனக்கறிவித்தது திருவருளென்றும் அறிந்து தான் திருவருள் நாட்டத்தில் நிற்கவே அது நீங்கும் எனக்கொள்க. ஏ - ஈற்றசை.

"கண்டறியாரே" என்றதனால், இப்போது கண்டென்பது வருவிக்கப்பட்டது.

உடல் பொறிகரண முதலிய கருவிகளை உள்ளபடி அறிந்து நீங்குதலை, * "ஐம்புலனலா மந்தக்கரண, முக்குணமிருவளி யொருங்கிய வானோ, ரேத்த நின்றனை" என்னும் திருவெழுகூற்றிருக்கையாற் காண்க.

இத்திருவெண்பாவால் முன் ஒர் காலங்களினும் கண்டறியார் ஆகலின், இப்போது அக்குணங்கள் அவர்க்குத் தோற்றுமென்று அறிவித்தவாறு காண்க. (உரு)

இங்ஙனம் ஞானத்தால் பாசத்தை நீங்கிப் பதியை அடைந்தோரை மீட்டும் அப்பாசம் மயக்காதோ எனின், மேற்கூறுகின்றார்.

அறிவுமறி வானு மறியா மலையு
மறியிற் றடையே தவர்க்குப் - பிறிவரோ
வாகாயஞ் சூறைகொளி லஞ்சி யடுக்கலைக்குட்
போகாது போலாம் பொருள்.

* ஞானசம்பந்தர் தேவாரம்.

(உரை.) அறிவும் அறிவானும் அறியாமலையும் அறியின் அவர்க்குத் தடை ஏது பிறிவரோ—உயிர்க்குயிராய்உள்ளும்புறம்பும் ஓரணுவளவேனும் விட்டு நீங்காதிருந்து அறிவிக்கும் அறிவாகிய பதியையும், தற் சுதந்திரமாய் ஒன்றினையு மறியாது அப் பதி அறிவிக்க அறிவதாகிய பசுவையும், இங்ஙனம் அறியும் பசுவிற்குத் தன்னையும் தனக் கறிவிக்கும் பதியையும் அறிய வொட்டாது மறைத்திருந்த அறியாமையாகிய பாசத்தையும் அப்பதியால் உள்ளபடி அறியின், அவர்க்கு முன்போலும் தடை யாது ? அஃதன்றி, அப்பதியை ஓர் கணமேனும் பிரிவரோ? (ஆனல் அப்பதியை அவர் பிரியாது நாடிக்கொண்டு நிற்பரோ எனின்),

ஆகாயம் குறைகொளில் அஞ்சி அடுக்களைக்குள் போகாதுபோல் ஆம் பொருள்—எல்லாப் பொருள்கட்கும்இடங்கொடுத்திருந்த ஆகாயந் தானே அப்பொருள்களைக் கொள்ளைகொள்ளும் எனின், அதற்கு அஞ்சி அடுக்களை வீட்டில் புகுந்தொளிக்கக்கூடாது; அதுபோல், அவ்வாகாய முதலிய எப்பொருள்கட்கும் ஆதாரமாகி யிருந்துள்ள மெய்ப்பொருள் தன்னை அறிந்தோர்க்கு இடம் வேறின்மையான் அவரை விழுங்கிக்கொள்வதாம்.

(குறிப்பு.) பாசத்தை அறியும்போது முப்பத்தாறு கருவிகளையும் இஃது ஈதென்று அறிந்துசென்று அவற்றின் முடிவில் நின்ற தன்னால் அவை அறியப்படலானும், தன்னை அவை அறியாமையானும், தனக்கு அந்நியமென்றும் சடமென்றும் அறியப்

டும். தன்னை அறியும்போது அக்கருவிகளை எல்லாம் அறிந்து அவற்றை நீங்கிநின்ற அறிவு தான் என்றும், திருவருளால் அன்றித் தற் சுதந்திரமாய் அறிவதிலன் என்றும், தான் கருவிகளோடு கூடியபோது அவை மயமாயும் அவற்றை நீங்கித் திருவருளோடு கூடியபோது இதன் மயமாயும் இருத்தலின், தான் பாச அறிவும் அன்று, பதி அறிவும் அன்று என்று அறியப்படும்.

பதியை அறியும்போது பெத்தமுத்திகாலத்தினும் தன்னை விட்டு நீங்காதிருப்பதென்றும், தனக்கு அறிவிப்பதென்றும் பாசத்தைப் பிரேரகம் பண்ணுவதென்றும், ஞானநந்த சொரூபமென்றும் அறியப்படும்.

இங்ஙனம் நடுநின்று அறிந்த பசுபாசத்தை நீங்கிப் பரிபூரணமாகிய பதியை அடைந்து அப் பூரணமெல்லாந் தானாயிருத்தலின், "அறியிற் றடையே தவர்க்கு" என்றும். பிரிதற்கு ஏதுவாயபோதம் இறத்தலின், "பிறிவரோ" என்றும, இங்ஙனம் பிரியாதிருந்தோரை மெய்ப்பொருள் தன்மயமாய்க் கோடலின், "அடிக்களைக்குட் போகாது போலாம் பொருள்" என்றுங் கூறினர். (உச)

பொய்போல மெய்யு மறியப் பெறுப்பேச
சைவேயாகர்க் கொன்றேனுஞ் சார்பில்லை - துய்ய
விழிக்கு ளுதித்த விரிகதிர்போற் றம்மை
யழித்ததுவே யாச்சரிய மாம்.

(உரை.) பொய்போல மெய்யும் அறியப்பெறுப் பேச்சைவேயாகர்க்கு ஒன்றேனும் சார்புஇல்லை—முன்னர்ப்பொய்யா

ிய உடலத்தோடுங் கூடியபோது அவ்வுடலமென்றுந் தாமெ ன்றும் பிரித்தறியாது அதன் மயமாயிருந்ததுபோல், இப்போது மெய்ப்பொருளையுந் தம்மையும் பிரிக்கப்பெறாது இம் மெய்ப் பொருள் ஆநந்தத்தோடுங் கூடிக் கலந்திருந்தோர்க்கு ஒருபொ ருளோடுஞ் சார்பில்லை; (அஃது எங்ஙனம் எனின்);

துய்ய விழிக்குள் உதித்த விரி கதிர்போல் தம்மை அழித் ததுவே ஆச்சரியம் ஆம்—எல்லாவற்றையும் எதிரிட்டறியும் மா சற்ற விழிக்குள்ளே முன்போல் எதிரிட ஒட்டாது உதித்த சூரியனைப்போல், ஞாதுரு ஞான ஞேயம் என்னும் முப்பொரு ளையும் எதிரிட்டறிந்த ஆன்மபோதத்தை அங்ஙனம் எதிரிட வொட்டாது இதனுள் சிவசூரியன் உதித்து அப்போதத்தை அழித்துத் தானாயிருந்ததுவே மிகவும் அதிசயமாம்.

(குறிப்பு.) கதிர்புறம்பு உதித்தபோது கண்ட கண்ணுள் உதித்தபோது காண்டற்கு இடமின்மைபோல், போதத்தால் புறம்புபோல் தோற்றிய ஞானசூரியன் இப்போத ஒளியைத் தன் ஒளியால்மறைத்து உயிர்க்குள் உதித்தமைபான் இதற்கும் எதிரிடுதற்கு இடம் இன்றென்பதறிக. (௨௫)

தன்னையிழப் பார்க்கென்ன சார்வூழி சங்கார
மென்னிலொளித் தெங்கே யிருக்கலா - முன்னே
புலிபார்க்கப் போனகதை போலிமையா நாட்டஞ்
சலியாமன் மூடுந் தனை..

(உரை.) தன்னை இழப்பார்க்குச் சார்வு என்ன ஊழி சங் காரம் என்னில் ஒளித்து எங்கே இருக்கல் ஆம்—தற்போதம்

ஒழிப்பாக்கு மற்றைச் சாதகர் என்னை உள்ளார? முப்பத்தாறு தத்துவம் என்பதும், அவற்றின் முடிவில் நின்ற தாம் என்பதும், தமக்கு அறிவித்த அருள் என்பதும், இதனைக் கடந்த ஆநந்தம் என்பதும் இன்றி ஆநந்தாதீதராயிருத்தலின், அவர்க்கு இதுவே சர்வசங்கார காலமென்று மெய்ஞ்ஞானிகள் சொல்லுவார் எனின், அவர்க்கு எவ்விடத்து ஒளித்திருக்கலாகும்? (ஆனால் சிவத்தை அருளால் அறிந்து அடையவேண்டும் என்பது என்னை எனின்),

முன்னே புலிபார்க்கப்போன கதைபோல் தனை இமைபாநாட்டம் நலியாமல் மூடும்—முன்னே புலியினைப்பார்த்து அறியச்சென்று ஓர் புருடன் அதிருந்த முழைநுழைந்து எதிர்ப்படும் தறுவாயில் அவன் தேகப் பதைப்பற அது பிடித்துக் கொண்டதென்று கூறும் கதைபோல், சிவத்தை அறியவேண்டும் என்று முப்பத்தாறு கருவிகளையும் கடந்துசென்று அருள் நேர் நிற்கும் தறுவாயில் இவன்றன்னை இமையாநாட்டமாகிய அச் சிவந்தானே இவனது போதப்பதைப்பு அறப்படி மூடிக்கொள்ளும்.

(குறிப்பு.) இமைத்தல் விழித்தல் இன்றிய இமையாநாட்டம்போல் மறப்பு நினைப்பு இன்றிய பேரறிவு ஆகலின், சிவத்தை "இமையாநாட்டம்" என்றார். புலிமுழைவாய் நின்றோரை அது மூடிக்கொளல்போல், அருள் நேர் நின்றோரைச் சிவம் மூடிக்கோடலான், அங்ஙனம் உவமை கூறினார்.

"அறிவு மறிவானும்" என்னுந் திருவெண்பா முதல் இவை மூன்று திருவெண்பாவானும் தற்போதம் இழந்த ஞா

னிகள் சிவமயமா யிருப்பாரே அன்றி அவரை மீட்டும் பாசப் மபக்காது என்று அறிவித்தவாறு காண்க. (உகூ)

அறிந்ததுவாய் நின்ற வறியாமை கண்டு
மறந்தறியார் வாழாது வாழ்ந்த - வெறும்பாழ்
விளைந்தசுகஞ் சொல்லில் வெளியைப் படியா
லளந்தறியு மாபோல வாம்.

(உரை.) அறிந்து அது ஆய் நின்ற அறியாமை கண்டு மறந்து. அறியார் வாழாது வாழ்ந்த—முப்பத்தாறு கருவிகளையும் நீங்கி அவற்றின் முடிவில் நின்ற தம்மை அருளால் அறிந்து, அவ்வருள் தரிசனம் பரைதரிசனம் ஆநந்தப்பேறு ஆகிய இவற்றையும் கடந்து சிவமயமாய் முன் நீங்கிநின்ற கருவிகளை மீட்டுங் கண்டு அச்சிவத்தை மறந்து பின்னும் இக்கருவிகளை நீக்கி அச்சிவத்தை அறியாதார் இப்பிரபஞ்சம் சிறிதும் தோன்றாது அச்சிவத்தோடும் வாழ்வற வாழ்ந்த,

வெறும் பாழ் விளைந்த சுகம் சொல்லில் வெளியைப் படியால் அளந்து அறியுமாறுபோல ஆம்—ஓா பொருளோடும் தொடர்வு இன்றிய வெற்றவெறுஞ் சூனியத்தில் உண்டாகிய பேராநந்தத்தைச் சொல்வோம் எனின், ஆகாயத்தை நாழியால் அளந்து அளவிடுமாறு போலுமாம்.

(குறிப்பு.) "அறியாமைகண்டு மறந்தறியார்" என்றமையால் கருவிகளின் மீளாது சிவமயமாய் எக்காலமும் இருப்பார் என்பதாயிற்று. வெளியை அளக்கும் படிக்குள் அவ் வெளி

நிறைந்திருத்தலின், அதனை அளக்கக்கூடாததுபோல், கருதிக் கூறும் மனவாக்கெல்லாம் அவ்வாறே நிறைந்திருத்தலின், அதனைக் கூறக் கூடாதென்பது அறிக.

இத்திரு வெண்பாவால் அங்ஙனம் இருந்த ஞானிகள் பெற்ற இன்பத்தை இங்ஙனம் இருக்குமென்று அவரால் கூறக் கூடாதென்று அறிவித்தவாறு காண்க. (உஎ)

அறிவுக் கறிவென்னு மாகமங்கள் சுத்த
வறிவென்னும் வேதத்தி னந்தம்-பிறியா
நிலைக்குச் சரியாகு நீயென்று நானென்
றலைக்கு மரிபிரம னை.

(உரை.) அறிவுக்கு அறிவு என்னும் ஆகமங்கள் வேதத்தின் அந்தம் சுத்த அறிவு என்னும் பிறியா நிலைக்குச் சரி ஆகும் —சச்சிதானந்த சிவத்தை உயிராகிய அறிவுக்கு அறிவிக்கும அறிவென்று கூறும் ஆகமாந்தங்கள்; வேதாந்தங்கள் அறியும் அறிவும் அறிவிக்கும் அறிவும் சுத்த அறிவுதானே என்று கூறும்; தற்போதம்போய்ச் சிவத்தைப் பிரியாத நிலைக்கும், சீவத்துவம் போய்ப் பிரமத்தைப் பிரியாத நிலைக்கும், அவ்வாகம வேதங்கள் கூறிய வாக்கியஞ் சரியே ஆகும்;

நீ என்றால் நான் என்று அரி பிரமனை அலைக்கும்— அந்நிலை நில்லாது வாசகஞானமாக நீ அது என்றால் அது நான் என்று இங்ஙனம் விஷ்ணு பிரமாதிகளையும் அலைக்கும்.

(குறிப்பு.) நீ அது என்பது ஆகமம். அது நான் என்பது வேதம்.

இத்திருவெண்பாவால் பரஞானத்தாற் சிவத்தைக் கூடிப் பிரியாதிருந்தோர்க்கு வேதாகமங்கள் கூறும் ஞானம் இரண்டும் சரியென்பதும் அபரஞானிகட்குச் சரியின்றென்பதும் அறிவித்தவாறு காண்க. (உ௮)

## இரண்டாம் அதிகாரம்.

## சத்திநிபாதத் துக்கொழிவு

முற்றும்.

மூன்றும் அதிகாரம்.

# யோகக் கழற்றி.

சரியாதியில் நிற்போர்களுள் ஒவ்வொருவர் முன்விட்ட குறையால் ஞானத்திற்குப் பக்குவராய் வருவார்கள். அவர்கட்குத் தற்போதத்தை ஒழித்து ஞானம் வருவித்தற் பொருட்டு அத் தற்போதத்தால் செய்யும் சரியாதிகளைப் போதனைகளால் நீக்கவேண்டும். ஆகலின், அவ்வதிகாரத்தின் பின்னர் இவ்வதிகாரங்கள் வைக்கப்பட்டன. ஆயின், முறையே வைத்துக்கூறாது யோகக்கழற்றியை முதற்கண் வைத்தது என்னை எனின், யோகம் ஞானத்திற் கணுகமாகலினும் இவ் யோகத்தினின்ற ஞான பக்குவன் அதிபக்குவனாகலினும் முதற்கண் வைக்கப்பட்டது.

இவ்வதிகாரம் யோகத்தைக் கழலப் பண்ணினமையான் இதற்கு யோகக்கழற்றி என்று பெயராயிற்று. இதன் பின்னர்க் கூறும் இரண்டதிகாரத்திற்கும் அதிகார வரைவும் பெயரும் இம்முறையே கொள்க.

சரியை கிரியைகளைச் சற்றாக்கிச் சாகாக்
கருமயோகத்தைக் கழற்ற - வரிதவர்க்குத்
தோன்றியது பொய்யாகக் காண்கையிலே தோன்றாத
வுன்றியபோ தங்கழலு மோ.

(உரை.) சரியை கிரியைகளைச் சற்று ஆக்கிச் சாகாக் கரு ம யோகத்தைக் கழற்ற அரிது—சரியை கிரியைகளைச்செய்வது அற்பமெனக் கருதி உடல் நாசமாகாவகை செய்யும் யோகிக ளது கிரியாயோகத்தை யாவராலும் நீக்குதற்கு அரிது;

அவர்க்குத் தோன்றியது பொய்யாசக் காண்கையிலே தோன்றாத ஊன்றிய போதம் கழலுமோ—அக் கிரியா யோகி களுக்கு ஆறாதாரங்களினும் ஓர்மூர்த்தியைத் தியானித்து அத னைவிட்டு மற்றோர் மூர்த்தியைத் தியானிக்கும்போது முன் தியானித்தது பொய்ப்பொருளாய்ப் போகத் தமக்கு அநுபவ மாகக் காணுமிடத்தும் தெரியாது அதனை மெய்ப்பொருளாய்ப் பிடித்த போதம் எங்ஙனங் கழலும்?

இத் திருவெண்பாவால் போதம் யாதொன்றினைப் பற்றி னும் விடாதென்பதும், அப்பற்றைப் பிறராலும் விடுவித்தல் அரிதென்பதும் அறிவித்தவாறு காண்க. (க)

அட்டமா சித்திகளு மத்துவா மூர்த்திகளுங்
கிட்டிலதற் கங்கங்கே கீழ்மேலாய் - விட்டு
வரும்போதுந் துக்கமாய் வந்துவந்து மாய்ந்து
பெரும்பாலுஞ் செய்யப் பெறும்.

(உரை.) அட்டமாசித்திகளும் அத்துவா மூர்த்திகளும் கிட்டில்—அக்கிரியா யோகத்தால் அணிமாமுதலிய அட்டமா சித்திகளும் தமக்குக் கைவல்லியமாகக் கிடைப்பினும், விநாய கன் முதலிய ஆறு அத்துவா மூர்த்திகளையும் சடாதாரங்களில் வழுவறத் தியானிக்கக் கிடைப்பினும்,

அதற்கு அங்கு அங்கே கீழ்மேல் ஆய் விட்டு வரும் போதும் துக்கம் ஆய் வந்துவந்து மாய்ந்து பெரும்பாவம் செய்யப்பெறும்—அச்சித்திகளால் எடுக்கும் உருவுகளுள் ஒரு ருவிற்கு ஒருருவு தாழ்ந்தும் உயர்ந்தும் தோற்ற அவ்வுருவுகளை ஆங்காங்கு விடுத்து வரும்போது துக்கமாயும், மூர்த்திகளை ஆறுதாரங்களினும் வெவ்வேறாய் ஆங்காங்குக் கீழுமேலுமா ய்த் தியானித்து விடுத்து வரும்போதும் துக்கமாய், அவ்வுரு வெடுக்கும்போதும் அதனை விடுக்கும்போதும் அம்மூர்த்தி களைத் தியானிக்கும்போதும் விடுக்கும்போதும் பிறந்து பிற ந்து இறந்து இறந்து இவற்றால் மிகுந்த பாவங்கள் செய்யப் படும்.

(குறிப்பு.) சித்தியால் ஒருருவை மறைத்து ஓருருவைக் காட்டலும், தியானத்தால் ஓராதாரம் விடுத்து ஓராதாரஞ் சேற லும், ஓர் பிறவியை நீக்கி ஓர் பிறவியை எய்தலும், ஓரவத்தை யை நீங்கி ஓரவத்தையை எய்தலும்போல் இருத்தலின், "வந்து வந்து மாய்ந்து" என்றும், சித்தியால் சாபாநுக்கிரகம் உள வாகலின் முனிவு பிறந்தபோது பிறரைச் சபித்தலானும், தம் மைப்படைத்தழிக்கும் மூர்த்தியைத் தாம் படைத்து அழித்தலா னும், பாவம் வருதலின், "பெரும்பாவஞ் செய்யப்பெறும்" என்றுங் கூறினர்.

"வரும்போதும் துக்கம்" என்பதனை ஆஜ்ஞாசக்கிர மளவுஞ்சென்று மீண்டுவரும்போதும் எனக்கொள்க. சகமுகத் தில் செய்யும் தொழில்போன்று அகமுகத்துஞ் செய்தலால் துக்கம் என்றார்.

அட்டமாசித்திகளாவன: அணிமா, இலகிமா, கரிமா, மகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் ஆகிய இவை எண்வகையும் எனக்கொள்க.

அதற்கென்றும் நான்கனுருபை அதனொடென்று மூன்றனுருபாக்கொள்க. (உ)

அறிவடங்கா வாயு வடங்கவசை வற்றுத்
தறியிருந்தாற் போலச் சமாதி - பெறுகி
னடந்த குருட்டூம னஞ்சருந்திப் பாழூர்க்
கிடந்தகுழிப் புக்கதினுங் கேடு.

(உரை.) அறிவு அடங்கா வாயு அடங்க அசைவு அற்றுத் தறி இருந்தாற்போலச் சமாதி பெறுகில்—தமது அறிவால் அதன் இச்சைப்படி சென்று அடங்காத பிராணவாயுவைத் தமது இச்சைப்படி இரேசித்தும் பூரித்தும் கும்பித்தும் உள்ளடங்கச்செய்து தாமும் அதனோடு அசைவற்றுக் கம்பம் இருந்ததுபோல் சமாதி பெறுவர் ஆயின், (இச்சமாதி)

நடந்த குருட்டு ஊமன் நஞ்சு அருந்தி பாழ் ஊர் கிடந்த குழிபுக்க அதினும் கேடு—நடக்கப்பட்ட பிறவி அந்தகனாகிய ஒரு ஊமையன் விடத்தினைப் புசித்துக் குடிபோகிய ஊரின் கண் உள்ள பாழுங்கிணற்றில் எடுப்பாரற்று வீழ்ந்து கிடந்த அதனினும் கேடாம்.

(குறிப்பு.) வாயு அடக்கல் முதலிய தொழில் செய்தலின், "நடந்த" என்றும், அதற்கு மேலாய ஞானமின்மையால்,

குருடு" என்றும், அந்தஞானங் கூறும் சாத்திரம் அறியாமை யால், "ஊமன்" என்றும், சடமாயுள்ள வாயுவுடன் கூடினமை யால், "நஞ்சருந்தி" என்றும், முன்செய்த தொழில் மறந்தமை யாலும் ஆண்டுத் திருவருள் விளக்காமையானும், "பாழூர்க் கிடந்த குழிப்புக்கு" என்றும், இங்ஙனம் உவமை கூறினார். இவற்றுள், "நடந்த குருட்டேடன்" என்பது அவர்க்கு உவமை யும், "நஞ்சருந்திப் பாழூர்க்கிடந்த குழிப்புக்கு" என்பது அவர் சமாதிக்கு உவமையும் எனக்கொள்க. அவன் அறியாது வீழ்ந் தவன் இவர் அறிந்து வீழ்ந்தவர் ஆகலின், "அதினுங் கேடு" என்றார்.

இவ்விரண்டு திருவெண்பாவானுங் கிரியாயோகஞ் செய் வது துன்பமென்றும், அங்ஙனம் துன்பப்பட்டுச் செய்யினும் ஆன்மலாபம் இன்றென்றும், தனது கருத்தை எடுத்து அறிவி த்து அவ் யோகத்தை மறுத்தவாறு காண்க. (௩)

கவிப்பயனு மாதனமுங் கண்சிமிட்டா நோக்குந்
தவப்பகடி யாட்டங்கான் சார்வைத் - தவிர்க்கின்
மறந்தறிய லாகா மலட்டறிவாய் வான்போ
னிறைந்து துளும்பாம னில்.

(உரை.) கவிப்பயனும் ஆதனமும் கண் சிமிட்டா நோக் கும் தவப்பகடி ஆட்டம் சார்வைத் தவிர்க்கின்—யோகநூலைக் கற்றுக்கொண்டு பிறர்க்கு அதன் அருத்தங் கூறுதலும், பதுமா தன முதலிய ஆதனங் கட்டலும், மனத்தை ஓர் தானத்தில் நிறுத்தி இமையா நாட்டமாய்ப் பார்த்திருத்தலும், இவை முத

வியநீ செய்யும் தொழில்கள் ஞானதபோதனர் முன்னர்த் தவப்பகடிக் கூத்துச்கட்டி ஆடுவதாம்; இனி இவ் யோக வாதனையை நீங்குதி எனின் (நேரே வீட்டைடைதற்கு ஒருபாய முண்டு; அஃது எங்ஙனம் எனின்),

மறந்து அறியல் ஆகா மலட்டறிவு ஆய்வான் போல் நிறைந்து துளும்பாமல் நில்—நீ யோக சமாதி கூடும்போது ஓர்கால் நினைந்தும் ஓர்கால்மறந்தும் முன்னர் அறிந்ததுபோல் அறியாது, இப்போது அந் நினைப்பு மறப்பு முதலிய ஒன்றும் தோன்றாத அறிவாய் எங்கும் பூரணமாய் ஒன்றோடும் தாக்கற்று அசைவற்றிருந்த ஆகாயம்போல் நீயும் எங்கும் பூரணமாய் ஒன்றோடும் தாக்கற்று அசைவற்று நிற்றி.

(குறிப்பு.) "கண்சிமிட்டாநோக்கும்" என்றது, நாசிநுனி புருவமத்தியங்களில் பார்த்துக்கொண்டிருத்தல்.

நல்ல கூத்தாடுவான் முன்னர் அவன் வேடம் தானும் போட்டுக்கொண்டு அக்கூத்திற்கு மாறாய அசியக்கூத்து ஆடுவானைப்போல ஞானிகளைப்போலும் வேடமும் நடையும் காட்டி, அவரது பூரண அறிவுக்கு மாறாகக் கிஞ்சிஞ்ஞ அறிவனாயிருத்தலின், "தவப்பகடியாட்டம்" என்றார்.

மலட்டறிவு-ஒன்றுங் கலவாத அறிவு. காண்-அசை.

இத் திருவெண்பாவால் கேவல சகலங்கள் தாக்காது அருள்வடிவாய் நிற்றற்கு உபாயங் கூறியவாறு காண்க. (௪)

இங்ஙனம் இருவருக்கும் சமாதி கூடுதல் சரியெனின் யோகிகளை ஞானிகள் இழந்து கூறுவது என்னை எனின், மேற் கூறுகின்றார்.

தத்துவமுட் டாக்காய்ச் சமாதியினைச் சார்போதப்
பித்தனென்பார் பேரிற் பிழையுண்டோ-புத்திபோய்க்
கம்பக் களிறுகட்டக் கல்லினார் காணுமிவ
ரம்பரத்தை வந்துபிடிப் பார்.

(உரை.) தத்துவம் முட்டாக்கு ஆய்ச் சமாதியினை சார் போதப் பித்தன் என்பார் பேரில் பிழை உண்டோ—தத்துவங்களை எல்லாம் நியதிபண்ணி நீங்கித் தம்மை அருளால் அறியும் அறிவின்றி, அத் தத்துவங்களைத் தன்மேல் முட்டாக்காய் மூடிக்கொண்டு, சமாதி கூடும் கிரியா யோகியைச் சார்போதனாகிய பித்தன் என்று கூறும் ஞானிகள்மேல் குற்றம் யாது ?

புத்திபோய்க் கம்பக் களிறு கட்டக் கல்லில் நார் காணும் அம்பரத்தை வந்து பிடிப்பார் இவர்—யூகபுத்தி இன்றிக் கம்பத்தின்கண் அடங்கா மதகளிற்றைக் கட்டுதற்குக் கல்லின் கண் நார் உரிப்பாரும், தாம் இருத்தற்கு இடங்கொடுத்திருந்த ஆகாயத்தைச் சென்று பிடிப்பாரும் இவர்.

(குறிப்பு.) "தத்துவ முட்டாக்காய்ச் சமாதி" என்றது மனத்தால் வாயுவை வாங்கி உள் நிறுத்தி அதனுள் தாம் மறைந்திருத்தலின். இங்ஙனம் இருப்போர்க்கு அறிவிக்க அறியும் போதமே இன்மையால், எங்ஙனம் சிவத்தை அறிவார் என்பது குறித்து, "கம்பக்களிறு கட்டக் கல்லினார்" என்றும், தம் உயிருள் பூரணமாயிருந்த சிவத்தை அறியாது மற்றோரிடத்து இருப்பதாய்க் கருதி அதனைப் பிடிக்கச் சேறலின், "அம்பரத்தை வந்துபிடிப்பார்" என்றுங் கூறினார்.

சார்போதம்-சேர்ந்த கருவிமயமா யிருத்தல்.

மனமும் பிராணவாயுவும் இருந்த இடத்து எல்லாக் கருவிகளும் இருக்கும் ஆதலின், "தத்துவம்" என்று பொதுப்படக் கூறினர்.

இத் திருவெண்பாவால் சமாதி கூடுதல் இருவருக்கும் ஒத்ததாயினும், யோகி இங்ஙனம் செய்தலால் ஞானிகளால் இகழ்ந்து கூறப்பட்டான் என்று அறிவித்தவாறு காண்க. (௫).

நெய்யி னிழல்போ னிழலிற் புருடனைப்போல்
பொய்யில் விகற்பம் புகுவதுவுந் - தூய்ய
வொலியோசை யாகி யொடுங்குவதுந் தம்மைத்
தெளியாதார் செய்யுஞ் செயல்.

(உரை.) நெய்யில் நிழல்போல் நிழலில் புருடனைப்போல் பொய்யில் விகற்பம் புகுவதும்—நெய்யின்கண் தோற்றும் நிழலைப்போலும், அந்நிழலைப்பார்த்து ஆகாயத்தைப் பார்க்கில் அந்நிழல்போல் தோற்றும் சாயா புருடனைப்போலும், கருவிகளாகிய பொய்யிற் கூடிய தற்போத விகற்பத்தால் தாமும் தம்மால் தியானிக்கப்பட்ட மூர்த்திகளுமாய் ஆருதாரங்களில் தோற்றுவதும்,

தூய்ய ஒளி ஓசை ஆகி ஒடுங்குவதும் தம்மைத் தெளியாதார் செய்யும் செயல்—நிருமலமாகிய விந்து தரிசனமும் நாத தரிசனமுமாய்த் தோற்றி, அங்ஙனம் தோற்றிய வாறே நில்லாது, மீட்டும் ஒடுங்குவதும் ஆகிய இச் செயல்கள் எல்லாம்

தம்மை அருளால் தெளிந்து அறியாதார் செய்யும் செயல்களாம்.

(குறிப்பு.) நெய்போல் கருவிகள்; அதில் தோற்றும் நிழலுர், அந்நிழலபோல் ஆகாயத்தில் தோற்றும் சாயா புருடனும் போல் தாமும், தம்மால் தியானிக்கப்படும் மூர்த்தியும் என்பதறிக.

விந்துநாத தரிசனம் மாயையுள் தோற்றுவது ஆகலின், அது பொருளன்று என்பதுங் காண்க. (௫)

சாக்கிரத்தே கேவலத்தைச் சார்ந்துவிடத் தத்துவத்தை
நூக்கியொழிப் பார்போ னுழைவதையு - நீக்கியே
கண்ணாடி பார்த்த குரக்கறிவாய்க் காண்பதையு
மெண்ணா ரவத்தையயு யில்.

(உரை.) சாக்கிரத்தே கேவலத்தைச் சார்ந்துவிடத் தத்துவத்தை நூக்கி ஒழிப்பார்போல் நுழைவதையும்—சாக்கிரத்தில் அதீதத்தைப் பெறும் பொருட்டுத் தத்துவங்களைத் தள்ளி ஒழிப்பார் போன்று, அவற்றுள் தாம் மறைந்திருப்பதையும்,

கண்ணாடி பார்த்த குரக்கு அறிவாய்க் காண்பதையும் அவத்தை அறிவில் நீக்கி எண்ணார்—கண்ணாடி பார்த்த குரங்கு அதனுள் தோற்றிய உடலைத் தன் நிழல் என்று எண்ணாது, மற்றோர் குரங்கென்று அதனை மெய்யாகக் கருதும் அதன் அறிவு போல, சற்போதத்தால் தியானித்தறியும் பொருளை அத் தியானத்தின்படி கருவிகளில் தோற்றுவதென்று அறியாது, அதனை மெய்ப்பொருளாய்க் காண்பதையும், சுத்தாவத்தையின் இலக்

கணம் அறிவார் எனின், அவர் பொய்யென நீக்கி ஓர் பொரு ளாய் எண்ணார்.

(குறிப்பு.) ஆதாரம் ஆறையும் ஊடுருவி நிற்கின்றோம், தத்துவங்களை எல்லாம் கடந்தோம் என்று கருதிப் பிராண வாயுவில் மறைந்திருத்தலின், "தூக்கி யொழிப்பார்போ னுழைவதையும்" என்றார்.

சுத்தாவத்தையில் அருள் மயமாய் நிற்போர்க்கு எதிரிட்டவை எல்லாம் பொய்யாகலின், "அவத்தையறியிலெண்ணார்" என்றார்.

ஏ - அசை.

இவ்விரண்டு திருவெண்பாவானும் சகல கேவலங்களை நீக்கித் தம்மை அருளால் அறிந்து சுத்தாவத்தையில் நிற்போர் யோகி கருதிய பொருளை எண்ணரென்று அறிவித்தவாறு காண்க. (எ)

உபதேசப் பித்தோ வுபமானப் பித்தோ
விபரீத மோபழக்கோ வேறோ - தபசிநீ
கண்மூடா விண்மூடத் தேடுங் கவுசனைபோ
லெண்மூடா யோகமிது வென்.

(உரை.) உபதேசப் பித்தோ உபமானப் பித்தோ விபரீதமோ பழக்கோ வேறோ தபசி நீ—உனக்குக் குருசொன்ன உபதேசப் பித்தமோ? சாத்திரங் கூறிய உபமானப் பித்தமோ? உனது விபரீத புத்திதானோ? முற்சனனங்களில் தொ

ன்றுதொட்டு நீ செய்துவந்த பழக்கந்தானோ? அஃதன்றிப் பிறர்செய்வது கண்டு பாவனையாகச் செய்தல் முதலிய மற்று யாதோ? தவவேடம் பூண்டு தவத்தைப் பண்ணுகின்ற நீ, (அத்தவத்திற்கு உரிய ஞானயோகம் புரியாது),

கண்மூடா விண் மூடத் தேடும் கவுசனைபோல் எண்மூடா யோகம் இது என்—விண்ணை மூடவேண்டினோன் அதனை நாடுங் கண்ணை மூடாது வைத்து, அவ்விண்ணை மூடுதற்குக் * கவுசனை தேடுதல்போன்று, எண்ணுகின்ற மூடனே! பஞ்ச பூதாதி கருவிகளை ஒழிக்கத்தொடங்கிய நீ அவற்றை நாடும் தற்போதத்தைக் கண்ணுக்கு இமைபோல் உனது உயிரைவிட்டு நீங்காதிருந்த அருளில் மறைந்து அடக்காது, இத் தற்போதத்தால் அப் பஞ்சபூதாதி கருவிகளை ஒழிப்பல் என்று கருதிப் பிராணவாயுவை உள்மறித்து, இதனோடும்போராடிச் செய்யும் யோகம் இதென்னை கொல்?

(குறிப்பு.) அருளில் மறைந்து அசைந்தோனுக்கு அவ்வருளே தோன்றும்; கருவியில் மறைந்து அசைந்தோனுக்கு அக் கருவியே தோன்றும்; ஆகலின், அவ் யோகத்திற்கும் இவ் யோகத்திற்கும் பேதம் இவ்வநுபவத்தானுங் காண்க.

ஓகாரம் அசைநிலை வந்து இது என் என முடிந்தது. (அ)

வாலை முகமாய் வரவானை யேறினன்
போலேயுன் போதமோ போய்த்தீண்டும் - சாலப்

---

* யாதாயினுமோர் பொருளை உள்வைத்து மறைய மேன் மூடிக்கட்டும் மேற்கட்டு.

பெருஞ் சிரிப்பாந் தன்னைப் பிடித்தாட்டும் பேயைத் தெரிந்திருக்கத் தேடுஞ் செயல்.

(உரை.) வாலே முகமாய் வர ஆனை ஏறினன் போலே உன் போதமோ போய்த் தீண்டும்—தான் கருதிய ஊருக்குச் செல்லத் தலைப்புறத்தைப் பின்னிட்டு வாற்புற முகமாய்ஆனையேறினானைப்போலும், நீ கருதிய சிவத்தை அடைதற்கு அருளைப் பின்னிட்டு உன் போதத்தை முன்னிட்டுச்சென்று, உன் போதமோ அச்சிவத்தைப் போய்த் தீண்டுவது? (ஆயின், அவ்வருளைத் தான் அடையவேண்டாவோ எனின்),

தன்னைப் பிடித்து ஆட்டும் பேயைத் தெரிந்து இருக்கத் தேடும் செயல் சால பெருஞ் சிரிப்பு ஆம்—தன்னை விடாது பற்றிநின்று அதனது இச்சைப்படி ஆட்டும் பேயை எதிரிட்டு அறிந்திருக்க, அஃது எங்குளதென்று தேடும் ஒருவனது அறியாமைபோல. பெத்த முத்திகளினும் உனது உயிரைவிட்டு நீங்காதிருந்து ஊட்டி உறக்கி உபகரித்து வீட்டைக் கொடுக்கும் திருவருளை வேறுபிரித்து, இஃது எங்குளதென்று தேடுவது இத் திருவருள்ஞானம் பெற்றோர்க்கு மிகவும் நகையாம்.

(குறிப்பு.) வாற்புறமுகமாய் ஏறினானை அவன் கருதிய ஊருக்கு மாறாகிய ஊரைச்சார்விக்கும், தலைப்புறமுகமாய் ஏறினானை அவன் கருதிய ஊருக்கு நேரே சார்விக்கும்; அதுபோல், அருளைப்பின்னிட்டுப் போதத்தை முன்னிட்டுச் சென்றானைக் கருவிகளைச் சார்விக்கும், அத் திருவருளை முன்னிட்டுப் போதத்தைப் பின்னிட்டுச் சென்றானைச் சிவத்தைச் சார்விக்கும் என்பதறிக. (௯)

குறங்கு குத்திக்கொண்டு குரேக்கைகத்திக் கூட்டை
மறந்தழைத்தாற் றூக்கம் வருமோ - வெறுங்கெடுவீர்
தன்னை யழித்தெழுந்த சச்சிதா நந்தத்தை
யுன்னி லொளித்துவிடா தோ.

(உரை.) குறங்கு குத்திக்கொண்டு குரேக்கை கத்திக் கூட்டை மறந்து அழைத்தால் தூக்கம் வருமோ—பாயலில் படுத்துக்கொண்டு, துடை குத்திக்கொண்டு, குரேக்கை விட்டுக்கொண்டு, உடம்பை மறந்ததாகப் பாவித்துக்கொண்டு, தூக்கமே! நீ வாராய் என்று அழைத்தால், அத் தூக்கம் அங்ஙனம் நினைத்துச் செய்யும் நினைவை அழித்தெழும் கேவலம் வந்தாலன்றி வருமோ? அதுபோலும், உன் போதத்தால் பிராணவாயுவை மறித்து நீ செய்யும் யோகத்தால் ஆனந்த நித்திரையை வரச்சொன்னால், அந்நித்திரை அப்போதத்தை அழித்தெழாநின்ற அருட்கேவலம் வந்தாலன்றி வருமோ? (அவ்வருட்கேவலம் எங்ஙனம் வரும் எனின்),

வெறுங்கெடுவீர் தன்னை அழித்து எழுந்த சச்சிதாநந்தத்தை உன்னில் ஒளித்துவிடாதோ—அந்தோ! வெறுங்கெடுவீர்! தற்போதத்தை ஒழித்துத் தானாயிருக்கும் சச்சிதானந்த வடிவாகிய சிவத்தை உன்போதத்தால் உன்னில், உன்னை யறியாது உனக்குள் ஒளித்துத் தன்னைவிட உன்னை ஒரு முதலாக்கிப் பிரித்துவிடும்; ஆகலின், உனது உயிர்க்குள் இருந்து அறிவிக்கும் பூரணம் எனக் காண்டி.

(குறிப்பு.) சுபாவ நித்திரை பண்ணுவோன் செயலெல்லாங் காட்டி நித்திரைபண்ணு திருந்தானைப்போல், ஏகாந்த

த்து இருத்தல் ஆதனங்கட்டல் அசைவற இருத்தல் முதலிய ஞானிகள் நடையைச்காட்டி, அவரைப்போலும் ஆநந்த நித்திரை பண்ணுது தற்போதத்தோடும் இருத்தலின், இங்ஙனம் உவமை கூறினர்.

"உபதேசப் பித்தோ" என்னும் திருவெண்பா முதல் இவை மூன்று திருவெண்பாவானும் திருவருளை அறிதற்கும் தற்போதம் ஒழித்தற்கும் உபாயம் யாது கூறினும் தெளிந்து கொள்ளாத யோகியைப்பார்த்து வெறுத்துப் போதத்தை அறிந்து அடக்கினலன்றிக் கரவிகள் அடங்காது என்பதும், அப்போதத்தைப் பின்னிட்டு அருளை முன்னிட்டுச் செல்லவேண்டும் என்பதும், அவ்வருளை முன்னிட்டுச் சென்றபோதும் அருளைத் தற்போதத்தால் எதிரிட்டுப் பார்க்கலாகாது என்பதும் அறிவித்தவாறு காண்க. (கப)

நீர் கூறியவாறே யோகியரும் சிவம் வாக்கு மனதீத கோசரம் என்று கூற நீர் அவரை மறுப்பதென்னை எனின், மேல் கூறுகின்றார்.

மனவாக்குக் காயத்தான் மாய்ந்தளவை மாண்ட
தெனவாய்ப் பறையறையி லென்னு - நினைவதெலாஞ்
சாக்கிரப்பொய் தானுந் தனியனலன் றற்பரமு
நீக்கமற்ற பூரணமென் னில்.

(உரை.) மனம் வாக்குக் காயத்தால் மாய்ந்து அளவை மாண்டது என வாய்ப்பறை அறையில் என் ஆம் நினைவது எலாம் சாக்கிரப்பொய்—மனம் வாக்குக் காயத்தால் வருந்த

யோகசமாதி கூடிச் சிவத்தைப் பெருது, அம்மனம் வாக்குக் காயங்களால் அளவிடப்பட்ட அளவைகளை எல்லாங்கடந்தது அச்சிவம் எனப் பிறர்க்கு வாய்ப்பறை அறைந்து கூறிய ஆற்ருன், அவர்க்குப் பயனென்னை உண்டாம்? அவர் பாவிப்பதெல்லாம் சாக்கிரப்பொய்யாகலின்,

தானும் தனியன் அலன் தர்பரமும் நீக்கம் அற்ற பூரணம் என்னில்—ஆன்மாவும் சிவத்தைவிட ஓர் தனிமுதல்வன் அல்லன் என்றும், அச்சிவமும் ஆன்மாவை விட்டு நீங்காது உட்புறம்பாய் நிறைந்துள்ள பரிபூரணம் என்றும் வேதாகமங்கள் கூறும் எனின்.

(குறிப்பு.) கூறும் எனின், பொய்யாகலின், பயனென்னை உண்டாம் என முடித்துக்கொள்க.

மனத்தால் வருந்துவது வாயுவை உள்மறுத்தல்; வாக்கால் வருந்துவது சாத்திரம் பார்த்தல்; காயத்தால் வருந்துவது ஆதனங்கட்டல் ஔடதம் புசித்தல் முதலியன.

அளவை என்பது காட்சி அநுமானம் ஆகமம் முதலியன. அவ்வளவை மாண்டது ஆன்மாவும் சிவமும் இரண்டற்றிருந்த இடம். அதனை அறியாது மானதக்காட்சியில் நின்று அளவை மாண்டது என்றமையால், "வாய்ப்பறை யறையிலென்ரும்" என்ருர்.

இத் திருவெண்பாவால் அவர் அங்ஙனம் கூறிஞராயினும் மனுதிகளைக் கடந்துநின்ற பூரணத்தை உணர்ந்தவர் அலர் என்று அறிவித்தவாறு காண்க. (கக

வாயுமனங் கண்ணசையா வா றடக்கி மக்கினமாய்
நீபுதைந்து போய்க்கூட னீதியோ - காயத்துக்
குட்புறம்பாய் நீதாமு யுண்டில்லை யாயதற்கு
மப்புறமாய்த் தாக்கற் றதை.

(உரை.) காயத்துக்கு உள் புறம்பு ஆய் நீ தான் ஆய் உண்டு இல்லை ஆய் அதற்கும் அப்புறம்ஆய் தாக்கு அற்றதை—(வறுங் கடத்திருந்த ஆகாயம் போன்று) இக்காயத்திற்கு உள்ளும் புறம்புமாய், நீ அருள் தாமுகிய காலத்து உண்டென்றும் இல்லையென்றும் சொல்லப்பட்ட அநுபவமாய், அதற்கும் அப்பாலாய் ஒன்றோடும் தாக்கற்றிருந்த சிவத்தை,

வாயு மனம் கண் அசையா ஆறு அடக்கி மக்கினம் ஆய் நீ புதைந்து போய்க்கூடல் நீதியோ—வாயுவும் மனமும் கண்ணும் சிறிதும் அசையாவாறு அடக்கி, அங்ஙனம் அடக்கிய போதமுந் தோன்றுது அவற்றுள் மறைந்து, நீ சென்று அடையத் தொடங்குதல் முறைமையோ?

(குறிப்பு.) ஆன்மா அருள்வயப் பட்டபோதெல்லாம் அவ் வருள் வடிவாய்த் தோற்றலான், "உண்டு" என்றும், அங்ஙனந் தோற்றிய அருளை இன்ன பிரகாரமாய் இருக்கின்றது என்று சொலக் கூடாமையான், "இல்லை" என்றும், அதனையுங் கழன்று சுகாதீதப்படுதலின், "அதற்கும் அப்புறமாய் என்றும் கூறினர்.

இத் திருவெண்பாவால் பூரணத்தை அடைதற்கு ஈது உபாயம் அன்றென்று அறிவித்தவாறு காண்க. (கஉ)

ஒட்டா திருக்கவென்று லொட்டா துறக்கமாஞ்
சுட்டா திருக்கிற் சுடர்க்கொழுந்தாந் - துட்ட
மனத்தோடு வாயுவைநீர் மண்டையிலே வைக்க
நினைப்பீரி தென்ன நிலை.

(உரை.) ஒட்டாது இருக்க என்றால் ஒட்டாது உறக்கம் ஆம் சுட்டாது இருக்கின் சுடர்க்கொழுந்து ஆம்—உமது யோகத்தால் கருவிகள் ஒன்றும் தாக்காது ஒழிந்திருப்போம் என்று நீர் கருதினல், அக்கருவிகள் ஒழிந்தபடி நிற்கவொட்டாது கேவலம் வந்து சாரும், அக்கருவிகள் ஒன்றையும் எதிரிடாது பார்த்திருப்போம் எனில் ஆண்டு ஓர் ஒளிதோற்றும், (மனத்தால் வாயுவை அடக்கி நிற்பின் அங்ஙனமாம் எனின்),

துட்ட மனத்தோடு வாயுவை நீர் மண்டையிலே வைக்க நினைப்பீர் இது என்ன நிலை—அக்கொடிய மனத்துடனே வாயுவையும் பிரமரந்திரத்தில் நிறுத்துதலே முத்தி என்று அப் பிரமரந்திரத்தில் அவற்றை நிறுத்தக் கருதுவீர்! இஃதென்ன உண்மைநிலை!

(குறிப்பு.) மனத்தையும் வாயுவையும் பிரமரந்திரத்தில் நிறுத்தினல் கருவிகளெல்லாம் ஒழியும்; அவை ஒழியவே கேவலம் மூடும்; அது மூடவே தம்மோடு தமக்குள் இருந்து அறிவிக்கும் திருவருளும் தெரியாது; ஆகலின், அந்நிலையை "ஈதென்ன நிலை" என்றார்.

இத் திருவெண்பாவால் யோகியாது கருத்தை எடுத்துக் காட்டி இங்ஙனம் நிற்பின் அங்ஙனம் தோற்றும் எனின்;

எங்ஙனம் நிலையைப் பெறுவீர் என்று அவரை மறுத்தவாறு காண்க. (கூ)

வாயுவைவிட்டு மனத்தை மாத்திரம் நிறுத்தினால் சிவத்தைப் பெறலாமோ எனின், மேற் கூறுகின்றார்.

கூட்டிற் குரங்கைநிழற் கோரணிக்கூத் தாடமனத்தை
யாட்டிப் பிடித்தா ரடக்குவார் - காட்சியறச்
சும்மா திருக்கி லசையாது சுற்றுவிறி
சம்மானை பம்பரங்கா ணும்.

(உரை.) காட்சி அற சும்மாது இருக்கில் அசையாது சுற்று விறிசு அம்மானை பம்பரம்—போதம் ஒன்றையும் எதிரிட்டு நாடாது சும்மா இருப்பினும், ஒருவர் பிடித்து அசைக்காது தானே சுற்றுகின்ற விறிசுபோலும், ஒருவர் எறிந்து பிடியாது தானே சுழலும் அம்மானைபோலும், ஒருவர் ஆட்டாது ஆடும் பம்பரம்போலும் (தானே விரைந்து எழுந்து அசைவது எனின்),

கூட்டில் குரங்கை நிழல் கோரணிக்கூத்து ஆம் மனத்தை ஆட்டிப் பிடித்து ஆர் அடக்குவார்—கூட்டில் அடைத்துவைத்த குரங்கைப்போலும், நிழற்பாவைக்கோரணிக் கூத்துப்போலும், ஒருவர் பிடியாதிருக்கவும் தானே சேட்டிக்கும் மனத்தினைப் போதத்தால் பற்றிப்பிடித்து ஆட்டி யாவர் அடக்கிக்கொள்வார்?

(குறிப்பு.) உடம்பில் நின்று சேட்டித்தலின், "கூட்டிற் குரங்கை" என்றும், நிழற்கோரணிக் கூத்தைக் காண்டல் மா

த்திரம் அன்றிப் பிடிக்கக் கூடாததுபோல் மனத்தினது போக்குவரத்து அறிவதே அன்றி அதனை அறிந்து பற்றக்கூடாமையின், "நிழற்கோரணிக்கூத்து" என்றும், குதித்துக் குதித்து எழலின், "அம்மனை" என்றும், ஓர் கணத்தில் அநேகஞ் சுழலாச் சுழல்வதனால், "பம்பரம்" என்றுங் கூறினர்.

கூட்டிற் குரங்கசைவும் நிழற்கூத்தசைவும் தூலமாகலின், போதம் அசைந்தவிடத்து அதனது அசைவிற்கு உவமையும், விரிசு அம்மானை பம்பரத்தசைவு சூக்குமம் ஆகலின், போதம் சிறிதடங்கிய இடத்து அம்மனத்தின் அசைவிற்கு உவமையுமாகக் கொள்க.

காணும் - அசை. (கச)

பற்றாத போதும் பதறும் பழக்கமதைக்
கற்றா லென்னாகக் கலக்காது - சற்றேநீ
தீண்டிவிடிற் றான்காண் செனன மரணமது
மாண்டுவிடி னீசிவமா வை.

(உரை.) பற்றாதபோதும் பதறும் பழக்கமதைக் கற்றால் என் ஆகக் கலக்காது—ஓர் பொருளையும் போதங் கருதாது அசைவற்றிருந்தபோதும் முன்னர் அசைந்த அப்போதத்தோடுங் கூடிய பழக்கத்தான் விரைந்தெழும் மனத்தைப் போதத்தால் பிடித்துச் சாதித்து அடக்குவென் எனின், உன்னை எம்மனம் மயங்கக் கலக்காது?

சற்றே நீ தீண்டிவிடின் தான் செனனமரணம் அது மாண்டுவிடின் நீ சிவமாவை—நீ உன்போதத்தால் அம்மனத்தினை

க்கணப்போதாயினும் பிடித்து விடுத்தி எனின், அது தானே பிறப்பும் இறப்பும் ஆம், அங்ஙனம் பிடித்து விடுக்கும் போதம் இறக்கும் உபாயம் அறிந்து இறந்தி எனின், அம்மனமும் இறக்கும் நீயும் சிவமாவை.

(குறிப்பு.) பிடித்தபோது நினைப்பும் விடுத்தபோது மறப்பும் வருதலின், "செனனமரணம்" என்றார்.

காண்-அசை.

இவையிரண்டு திருவெண்பாவானும் தற்போதத்தால் மனத்தை அடக்கக் கூடாதென்று அறிவித்தவாறு காண்க. ()

அறிவா யிரீர்மயக்க மாகா தசையில்
விறிசாய் விடாதோ விகற்பம் - பிறியாத்
தராசி னுனிபோற் சமாதிவரின் ஞான
விராசனுமக் கொப்பா ரெவர்.

(உரை.) அறிவு ஆய் இரீர் மயக்கம் ஆகாது அசையில் விகற்பம் விறிசு ஆய் விடாதோ—கருவிகளை எல்லாம் நீங்கி நின்ற உயிரறிவை விட்டு நீங்காத அருளறிவா யிருங்கோள், அங்ஙனம் இருப்பீர் எனின், மயக்கம் வந்தடாது; அவ்வுயிர றிவைப் பிரியா அறிவைத் தற்போதத்தால் எதிரிட்டுப் பார்ப்பதாய் அசையில் விகற்பஞ் சுழல் விறிசுபோலாய்ச் சுழலும்; (ஆகலின் அங்ஙனம் பார்த்து அசையாது),

பிறியாத் தராசின் நுனிபோல் சமாதிவரில் ஞான இராசன் உமக்கு ஒப்பார் எவர்—இரண்டு தட்டிலும் இட்ட பொன்னும் கல்லும் சரியானபோது கீழ்நின்றமுள் ஓர்பால் சாயாது

மேல்நின்ற முள்ளைப் பிரியாதிருந்த அத்தராசின் முள்நுனி போல், மயக்கமும் விகற்பமும் அடாது அவ்வருளறிவின் நேரே உமது போதம் அசைவற்று இருக்கும் சமாதி வருமாயின், அப்போது நீர் ஞானராசா ஆவீர், அஃதன்றி இவ்வுலகத்து உமக்கொப்பாரும் யாவர் ?

(குறிப்பு.) கல்போலும் கேவலம், பொன்போலும் சகலம், அக்கல் மிகுந்தபோது கல் தட்டுப் புறத்தும் பொன் மிகுந்தபோது பொன்தட்டுப் புறத்தும் சாயும் கீழ்நின்ற முள்போல் ஆன்மா, இம்முள் சாய்ந்தபோதுஞ் சாயாது அசைவற நேரே நின்றபோதும் அசைவற்று மேல்நின்ற முள்போல் அருள் என அறிக. மேல்நின்ற முள்போல் கீழ்நின்ற முள்ளும் அசைவற நேரே நிற்றல்போல், ஆன்மா அருளில் அசைவற நிற்கவேண்டுமாகலின், "தராசுநுனிபோல்" என்றார். இங்ஙனம் நிற்கின்ற சமாதி வருதல் அரிதாகலின், "வரின்" என்றார்.

இத் திருவெண்பாவால் கேவல சகலங்கள் தாக்காது திருவருட்கண் நிற்றற்கு உபாயங் கூறியவாறு காண்க. (கசு)

இங்ஙனம் கேவல சகலங்களை நீக்கித் திருவருளில் அசைவற நிற்கக் கூடாதாயினும், அந்தக்கரணங்களை அடக்குதற்கு உபாயம் மேற் கூறுகின்றார்.

நீர்க்குப் பதமு நெருப்புச் சுடுந்தொழிலுங்
காற்றைச் சலிக்கவுமார் கற்பித்தா - ரார்க்குமிது
போகா மனதி புதைக்குநிழல் போலாநீ
யாகாயம் போற்பா ராறும்.

(உரை.) நீர்க்குப்பதமும் நெருப்புச் சுடும் தொழிலும் காற்றைச் சலிக்கவும் ஆர் கற்பித்தார் ஆர்க்கும் இது மனோதி போகா—நீர்க்குக் குளிர்ந்து பதஞ்செய்யும் குணமும், நெருப்பிற்குச் சுட்டு ஒன்றுவிக்கும் குணமும், காற்றிற்குச் சலித்துத் திரட்டும் குணமும் கற்பித்தார் யாவர்? அவற்றிற்கு இக்குணங்கள் இயல்பான வாறுபோல் மனத்திற்கு ஓர் பொருளைப் பற்றும் குணமும், புத்திக்கு அது பற்றியபொருளை நிச்சயிக்கும் குணமும், அகங்காரத்திற்கு அது நிச்சயித்த பொருளை அபிமானிக்கும் குணமும், சித்தத்துக்கு அஃது அபிமானித்த பொருளைச் சிந்திக்கும் குணமும் இயல்பாம் ஆகலின்,யாவர்க்கும் இம்மனமாதி அந்தக்கரணங்கள் நீங்கா. (ஆயின் நீர் இங்ஙனங் கூறிய ஆற்றான் அக்கரணங்கள் அங்ஙனம் இருப்பன அன்றிஅவற்றை நீக்கவேண்டாவோ எனின்),

புதைக்கும் நிழல்போல் ஆம் நீ ஆகாயம்போல் பார் அறும்—தன்னைப் புதைக்க மண் போடுந்தோறும் அம் மண்மீது மேன்மேல் எழுப்பட்ட புதைக்கும் நிழல் போலும் அக் கரணங்களை உன் போதத்தால் அடக்குந் தோறும் இப் போதத்தின்மீது மேன்மேல் எழுவதாம்; ஆகலின், உனது உயிருள் பிரிவற்றிருந்த அருளை, உட்புறமாய் ஒன்றேடும் தாக்கற்றிருந்த ஆகாயம்போல், அவ்வருள்ஞானக் கண்ணால் தேகாதி பிரபஞ்சங்களில் எல்லாம் உட்புறமாய் நிரந்தரமாய்ப் பார்; இங்ஙனம் பார்த்தபோது அக் கரணங்கள் அறும்.

(குறிப்பு.) இதனால் அந்தக்கரணம் பொறிவழிச்சென்று பிரபஞ்சத்தை நாடும்பொழுதும், அங்ஙனம் செல்லா விடத்து.

அவ்வாசனையால் உள்ளே அசையும்போதும், தற்போதத்தால் அடக்கின் அடங்காது மேன்மேல் எழும். ஆகலின், புறம்பும் உள்ளும் திருவருளைப் பரிபூரணமாய்க் காணின் அக்கரணங்கள் அடங்கும் என்பதாயிற்று.

நீராதி இயற்கைக் குணங்களைப் போதத்தால் அடக்கக் கூடாதது போல் பசுநதி இயற்கைக் குணங்களையும் இதனால் அடக்கக் கூடாதென்பது காண்க.

இத் திருவெண்பாவால் திருவருளை உள்ளும் புறனும் பரிபூரணமாய்ப் பாவித்தாற் கரணம் அடங்குமென்று அறிவித்தவாறு காண்க. (கஎ)

இங்ஙனம் உள்ளும் புறனும் பரிபூரணமாய்ப் பாவிப்பது அருளன்றோ எனின், மேற்கூறுகின்றார்.

மண்ணை மலையை மறிகடலை வானகத்தை
யெண்ணி லளந்தறிய வெய்துமோ-வுண்மையை நீ
யுண்டென்னி லோர்வார்த்தை யுண்டல்லா துன்னொழி
கண்டறியி லன்னியமாங் காண். [வைக்

(உரை.) மண்ணை மலையை மறிகடலை வானகத்தை எண்ணில் அளந்து அறிய எய்துமோ—மண்ணக முழுதையும் வானக முழுதையும் நீட்டல் அளவையானும், மலையை எடுத்தல் அளவையானும், மறிகடலை முகத்தல் அளவையானும் எண்ணுமிடத்து ஒருவரால் இவ்வளவென்று அளவிட்டு அறியக் கூடுமே? அதுபோல,

உண்மையை நீ உண்டு என்னில் ஓர் வார்த்தை உண்டு அல்லாது உன் ஒழிவைக் கண்டு அறியில் அன்னியம் ஆம்-

இருநூற் றிருபத்துநாலு புவனங்கட்கும் அவற்றுள் இருந்த சர அசர உயிர்கட்கும் உள்ளும் புறம்புமாய் நிறைந்துள்ள திருவருளை நீ உண்டென்று சொற்றி எனின், அவ்வோர் சொல்லும் உண்டாவது அன்றி இச்சொல்லுக்குப் பொருள் இது என்று உன்போதத்தால் இதனது நாசத்தில் தோற்றும் அவ்வருளைக்கண்டு அளவிட்டு அறியக் கூடுமோ? அங்ஙனம் அன்று அளவிட்டறிவேன் எனில், உனக்கு அநந்நியமாய் இருந்த அவ்வருள் அந்நியமாய் நீங்கும்.

(குறிப்பு.) இதனால் போதத்தாற் சிறிது அளவிடப்படும் மண்ணாதி பொய்ப்பொருளையே முற்றும் அளவிடக்கூடாது எனின், அப்போது நாசத்திருந்த மெய்ப்பொருளை எங்ஙனம் அளவிடக்கூடும் என்பதாயிற்று.

அருள அந்நியமா யிருந்துள்ளதாயினும், போதந் தடித்த போது மலவாசனை தோன்றும், இம்மலவாசனையோடுங்கூடிய போதத்திற்கு மலரகிதமா யிருந்துள்ள அவ்வருள் தோற்றாது ஆகலின், "அன்னியமாங்காண்" என்றார். காண்-அசை.

இத் திருவெண்பாவால் அருளை எதிரிட்டு அறியின் அந்நியமாம் என்று அறிவித்தவாறு காண்க. (கஅ)

உதித்தொடுங்கும் பொய்க்கா ருபாதான மென்று
துதிப்பை யுதிப்பா லொடுக்கிற் - பதைத்தெழுந்த
பந்தன்றோ சாட்சியைப்போற் பார்வேர் பறித்தமரங்
கொந்தலர்ந்து காயாதொக் கும்.

(உரை.) உதித்து ஒடுங்கும் பொய் கார் உபாதானம் என்றது உதிப்பை உதிப்பால் ஒடுக்கின் புடைத்து எழுந்த பந்து அன்றோ சாட்சியைப்போல் பார்—ஆகாயத்தில் தோன்றி மறையும் கார்போல், மாயையில் தோன்றி ஒடுங்கும் பொய்யாகிய கரணங்களையும் அம்மாயை என்று அருளால் கண்டுநீக்காது, அதனை மெய்போல் கருதி அக் கரணங்களைப் போதத்தால் அடக்கில், அவை கரத்தால் அறையுந்தோறும் விரைந்தெழுந்த பந்துபோல் ஆகாவோ? அப்பந்தைக் கரத்தால் அறையாது விடுத்தால் நிலத்திற் கிடக்குமாகலின், இதன் சாட்சியைப்போல் உன்போதத்தால் அவற்றை அடக்கின் மேன்மேலெழும் என்பதையும் பார்த்தறிதி; (அஃதன்றியும்)

வேர் பறித்த மரம் கொந்து அலர்ந்து காயாது ஒக்கும்—நிலத்தில் ஊன்றிய முதல்வேர் பறிந்தமரம் பூத்துக் காயாது, அதுபோலும் உன்போதம் அற்றபோது கரண இந்திரியங்கள் ஒன்றும் தோன்றாது அறும்.

(குறிப்பு.) உபாதானம் என்றது மாயையை; அது காரியத்தைக் காரணமாகக்கூறியது.

கரணம்போல் தோன்றி மறைதலின், போதத்தையும் "உதிப்பு" என்றார்.

கரணங்கள் போதம் இருந்தபோது இருந்தும் இறந்தபோது இறந்தும் வருதலின், போதத்தை வேர்க்கு உவமையாகக் கூறினார்.

இத் திருவெண்பாவால் அருளால் கருவிகளினது உண்மையை அறிந்து நீக்கினால் நீங்கும் என்பதும், போதத்தால்

அடக்கின் மேன்மேலும் எழும் என்பதும், கருவிகளை நியதி களைந்து தற்போதத்தையும் அடக்கினால் மீட்டும் கருவிகள் தோற்ற என்பதும் அறிவித்தவாறு காண்க. (கக)

இங்ஙனம் கருவிகளும் போதமும் இறந்து நின்ற இடத்து வரும் இலாபம் என்னை எனின், மேற்கூறுகின்றார்.

சுட்டுப்போ தங்கழன்ற சுத்தமரை மாத்திரையின்
மட்டுத்தா னற்றநிட்டை வாய்க்குமேற் - கெட்டேன்
றலைச்செய்யு மாநந்தஞ் சற்றோ பால்வாரி
மூலைக்கண்ணிற் றோன்று முறை.

(உரை.) சுட்டுப்போதம் கழன்ற சுத்தம் அரைமாத்திரையில் மட்டு அற்ற நிட்டை வாய்க்குமேல் கெட்டேன் தலைச் செய்யும் ஆநந்தம் சற்றோ—அரைக்கணப்போது ஆயினும் இது அது என்று சுட்டி அறியும் தற்போதம் ஒழிந்த ஓர் வரம்பின்றிய சுத்தமாகிய நிட்டை வாய்க்கும் ஆயின், கெட்டேன்! ஆண்டுப் பிரவேசிக்கும் பேரானந்தம் அற்பமோ?

மூலைக்கண்ணில் பால்வாரி தோன்றும் முறை—மூலையினது சிறியகண் துவாரத்தில் பெரிய பாற்கடல் உதயமான முறைமைபோல் பரிபூரணமாய்த் தோற்றும்.

(குறிப்பு) ஈண்டுச் சுத்தம் என்றது பரையோகம். இப் பரையோகத்தில் ஆன்மபோதம் மிகவும் தேய்ந்திருத்தலின், அதனை "மூலைக்கண்" என்றும், இங்ஙனம் இருந்தபோது அரைக்கணத்தில் அப் பரையோகம் நீங்கிப் பரிபூரணானந்தம்

அநுபவமாய்த் தோற்றலின், அதனை "பால்வாரி" என்றுங் கூறினு

தான்-அசை.

இத் திருவெண்பாவால் கருவிகளும் போதமும் இறந்த சுத்த நிலையில் நின்றால் ஆநந்தலாபம் உண்டென்று அறிவித்த வாறு காண்க. (உ0)

ஆகாயத் தேகபலவுந் தோன்றி யடங்காதோ
நீகாயத் தோடழுந்தி நீங்கியரு - ளாகாதோ
வென்றுசலிப் பானே னெதிரற்ற பூரணத்தே
யொன்று மிலைகா ணுனக்கு.

(உரை) நீ காயத்தோடு அழுந்தி நீங்கி அருள் ஆகாதோ என்று சலிப்பான் என்—நீ காயத்தோடு பொருந்தி இருப்பதாய்க் கருதி இக்காயம் நீங்கி எனக்கு ஓர் காலம் திருவருள் வடிவம் ஆகாதோ என்று சலித்துத் துயர் உறுவானேன்?

ஆகாயத்தே பலவும் தோன்றி அடங்காதோ எதிர் அற்ற பூரணத்தே உனக்கு ஒன்றும் இலை—ஆகாயத்தினிடமாய்ச் சர அசர தேகங்கள் பற்பலவும் தோன்றி நின்று அழியாவோ? அதுபோல், உன்போதம் ஓர் பொருளையும் எதிரிடாது அற்ற போது உன்னை விழுங்கிநின்ற அருட்பூரணத்தில் உனக்கு அத்தேகாதி பிரபஞ்சங்கள் ஒன்றும் இல்லை.

(குறிப்பு.) ஆகாயத்தினிடமாய்த்தோன்றி ஒடுங்கும் காயங்கள் அவ்வாகாயத்திற்கு அந்நியமானதுபோல், முன் தேகாதிகளை யான் எனது என்று பற்றிநின்ற போதம் திருவருளில்

அழுந்திப் பூரணமாய்ப்போகத் தேகாதி பிரபஞ்சங்கள் அந்நியமாய்த் தோற்றும் ஆகலின், "ஆகாயத்தே பலவுந்தோன்றி யடங்காதோ" என்றும், பொய்யாய்த் தோற்றலின், "ஒன்று மிலைகாண்" என்றுங் கூறினார்.

காண்-அசை.

இத் திருவெண்பாவால் அருள்வடிவமாய் என்றைக்கிருப்பன் என்கிற மாணாக்கனுக்கு அவ்வருள் பூரணமென்றும், உன் சுட்டுப்போதம் அற்றால் அதனைவிட நீ ஒருமுதல் அன்று என்றும் அறிவித்து, அவனது துயரை மாற்றியவாறுகாண்க. (உக)

அவன் யோகப்பழக்கம் நீங்கற் பொருட்டுப் பழக்க இலக்கணம் எடுத்து மேற்கூறுகின்றார்.

பழக்கங் கொடியதுபார் பாறையினுங் கோழி
கிழிக்கும் பொலியைக் கிளறும் - விழித்துங்
குருடர்க் கொளிபகையாய்க் கூசிக்கோல் போடா
ரருளைப் பருக்குமான் மா.

(உரை.) பழக்கம் கொடியது பார் பாறையினும் கோழி கிழிக்கும் பொலியைக் கிளறும்—யாவர்க்கும் பன்னாள் தொன்று தொட்டுவரும் பழக்கம் நீக்கக்கூடாமையின் மிகவும் கொடியது, அதனை நீ பார்த்தறிதி, அஃது எங்ஙனம் எனின், பன்னாள் குப்பைசீத்த பழக்கத்தால் கோழி கற்பாறையாயினும் சீக்கும், * நெற்பொலிமேல் விடுப்பினும் சீக்கும்; (அஃதன்றி),

* தூற்றுநெல்.

விழித்தும் குருடர்க்கு ஒளி பகை ஆய்க் கூசிக் கோல் போடார் அருளை ஆன்மா பகுக்கும்—காசநோய் படர்ந்த குருடர் கண்ணோய்தீர்ந்து விழித்தபோதும் கதிரொளி இருட்பகை போலாய்க் கூசி முன்பிடித்தகோலைக் கைவிடார், அவர்போல் அருளை அடையாமுன் அது இது என்று நானுவாய்ப் பகுத்தற்கு இடம் இன்றி எங்குந் தானுயிருந்த அவ்வருளை அடைந்தும், ஆன்மா அதனைப் பகுத்துநாடும்.

(குறிப்பு.) சீக்கக்கூடாத பாறையைச் சீத்தல்போல், பகுக்கக் கூடாத அருளைப் பகுத்தலானும்; கிளற வேண்டுவதின்றி நின்று தின்னுது பொலியைக் கிளறுதல்போல், பகுக்க வேண்டுவதின்றி யிருந்து அருளாநந்தத்தை அநுபவியாது அவ்வருளைப் பகுத்தலானும்; காசமிருந்தபோது கூசிப்பிடித்த கோலை அக் காசம் நீங்கிக் கதிரொளி கண்டும், இவ்வொளி முன்தோன்றிய இருளாய்க்கூசிக் கைவிடார்போலும்,முன்னர் ஆணவமறைப்பான் அது இது என்று பகுத்த போதத்தை இப்போது அவ்வாணவம் நீங்கி அருளொளி கண்டும், இவ்வருளொளியை முன்னர் ஆணவ இருள்போல் பாவித்து விடாராகலினும், இங்ஙனம் உவமை கூறினர்.

தேகாதி பிரபஞ்சங்களை யெல்லாந் திருவருள் வடிவாய்க்காண்பதே அன்றி, அவற்றை நானுவாய்ப் பகுப்பினும் இவ்வருளைப் பகுப்பதாமென்பது காண்க. (உஉ)

கட்டியநாண் விட்டாலுங் கந்தகலாக் கன்றுகளைத்
தட்டிப் புறப்படுத்துந் தன்மைபோ-லொட்டொழித்து

நின்றாற்போ னீசிவமாய் நில்லென்று நீக்கமறுத்
தொன்றாக்கி லொன்றிரண்டாகும்.

(உரை.) கட்டிய நாண் விட்டாலும் கந்து அகலாக் கன்று களைத் தட்டிப் புறப்படுத்தும் தன்மைபோல்—தறியோடுங் கட்டிய தும்பைத் *தெறித்து விடுப்பினும் முன் கட்டியிருந்தது போல் கருதி, அத்தறியை விட்டு நீங்காத கன்றுகளைக் கரத் தால் தட்டி ஓட்டி வெளியில் புறப்படுத்தும் முறைமைபோல,

ஓட்டு ஒழித்து நின்றால்போல் நீ சிவம் ஆய் நில் என்று நீக்கம் அறுத்து ஒன்று ஆக்கில் ஒன்று இரண்டு ஆகும்—முன் பந்தமாயிருந்துள்ள முப்பத்தாறு கருவிகளையும் விடுத்துத் தன் னையும் திருவருளையும் அறிவித்து அவ்வருளோடும் சேர்த்து அவ்வருள் அசைவற நின்றாற்போல் நீ உன்போதம் அசைவற் றுச் சிவமுமாய் நிலையென்று கூறிச் சிவத்தைவிடத் தானொரு முதல் என்று கருதும் துவிதபாவனையை மாற்றி அச்சிவத் தோடு ஒன்றாக்கினும், போத ஒழிவால் அதனோடு ஒன்றான ஆன்மா போத அசைவால் இரண்டாகும் ஆகலின், அதனது போதம் இருந்தவாறு என்னை

(குறிப்பு.) தும்புதெறித்து விடுத்தபோதே தாயைச்செ ன்று கூடிப் பால் உண்ணும் கன்றுபோல், ஒட்டொழித்தபோ தே தற்போதம் ஒழிந்து அருள்வழிச்சென்று சிவத்தைஅடை ந்து பேரின்பத்தைப்பெறும் பக்குவர் போலாகாது, கட்டிய நாண் விட்டாலுங் கந்து அகலாது நின்ற கன்றுகளைக் கரத்

* அவிழ்த்து.

தால் தட்டி வெளியில் புறப்படுத்தித் தாயோடுஞ் சேர்த்து முலையைப் பிடித்து உண்ண விடுப்பினும் அவை உண்ணாது மீளுமாறுபோல், ஒட்டொழித்தலுமன்றி அருளோடுஞ் சேர்த்துத் துவிதபாவனையை மாற்றிச் சிவத்தோடு ஒன்றாக்கினும் அச்சிவத்தோடு இரண்டற்றிருந்து ஆநந்தப்பேற்றை அடையாது தற்போத அசைவால் இரண்டாகலான், இவர்க்கு அக்கன்றுகளை உவமை கூறினார். (உரு)

குரங்கை நினையா திருவென்று கூறத்
திரும்பி யதுவே தியானம் - வருங்கதைபோ
னீசிவமாய் நில்லென்றா னீங்கியது வாய்நினைந்து
மாய்வையது வன்றோ மலம்.

(உ-ரை.) குரங்கை நினையாது இரு என்று கூறத் திரும்பி அதுவே தியானம் வரும் கதை போல்—ஓர் புருடன் ஓர் பேதைக்குக் குரங்கினை நினையாதிருக்கி யென்று கூற அவன் அங்ஙனங்கூறிய மாத்திரத்தில் மீண்டு அக்குரங்குத் தியானமே அவனுக்கு மனத்தில் குடியாயிருந்தது என்று உலகத்தில் வழங்கும் கதைபோல்,

நீ சிவம் ஆய் நில் என்றால் நீங்கி அது ஆய் நினைந்து மாய்வை அது அன்றோ மலம்—நீ ஒன்றையும் எதிரிடாது சிவமயமாய் நில்லென்று கூறினால், அங்ஙனம் எதிரிடும்போதம் ஒழிவதே அச்சிவமயமாய் நிற்பது என்று அறியாது, போதத்தால் சிவத்தை எதிரிட்டுப் பார்த்து யான் சிவமயமாயினேன் ஆயினேன் என்று கருதி வருந்துவாய்; இங்ஙனம் கருதி வருந்தப் பண்ணுவது அன்றோ மலமாவது?

(குறிப்பு.) கூரியபுத்தி உடையோனுக்கு நீ குரங்கை நினையாதிரு என்று கூறினால்,அக்கணமே அந்நினைவை ஒழித்திருப்பன், அதுபோல,தீவிரதர பக்குவனுக்கு நீ சிவமாய் நில்லென்றால் அக்கணமே சிவம் என்றுந் தான் என்றும் கருதும் துவிதபோதம் ஒழிந்து சிவமாய் நிற்பன் என்று அதற்கு எதிர் மறையும் வருவித்துக் காண்க. (உ௪)

மணிப்பாம் பிருளின் மறைந்திருக்கத் தேடுங்
கணக்காந்தற் போதத்தைக் காட்டி - யுணர்த்துகினு
நீரிற் கிணறு நிழலுயுத்த மும்போலா
மாரித்தை நீக்கியிருப் பார்.

(உரை.) மணிப்பாம்பு இருளில் மறைந்து இருக்கத் தேடும் கணக்கு ஆம் தற்போதத்தைக் காட்டி உணர்த்துகினும்—தன்னியின்மீது மணியையுடைய பாம்பு தான் இருளிடத்து மறைந்திருப்ப இருளைத்தேடும் முறைமை போலாகும் நி உன் போதத்தை முன்னிட்டு அருளிடத்து மறைந்திருப்ப அருளைத்தேடு முறைமை, என்று போதஞ் சிவிப்பதைக் காட்டி, அருளையும் உன்னைவிட்டு நீங்காத பரிபூரணம் என்று அறிவிப்பினும் தெளிந்து கொள்ளாது,

நீரில் கிணறும் நிழல் உயுத்தமும் போல் ஆம் ஆர் இத்தை நீக்கி இருப்பார்—பிரளயமாய்க்கோத்து நின்ற சுத்தசலத்தில் கிணறுதொட்டு நீர் தேடும் ஒருவனைப்போலும், தனது நிழலை எதிராய்க் கருதி அதனோடு யுத்தஞ்செய்யும் ஒருவனைப்போலும், பின்னரும் உன் போதஞ் சீவியாநிற்கும்; ஆகலின், இப்போதத்தை நீக்கிச் சிவமாயிருப்பார் யாவர்!

(குறிப்பு.) சென்னியின்மீது மணிச்சுடரை உடைய பாம்பு இருளைத்தேடுந் தோறும் அவ்விருள் நீங்குவதன்றி நில்லாது, அதுபோல, தற்போதத்தை முன்னிட்டு அருளைத் தேடுந்தோறும் இவ்வருள் நீங்குவதன்றி நில்லாது என்பதும்; அப்பாம்பு சென்னிமணியைப் புரைவழிக்கொணர்ந்து வாய்க்குள்அடக்கின் இருள் தேட வேண்டுவது இன்று, அது போல், முன்னிட்ட போதத்தைப் பின்னிட்டால் அருள் தேட வேண்டுவது இன்று என்பதும்; அவ்விருள் நிறைந்தாற்போல இவ்வருள் நிறைந்திருப்பது என்பதும்; நீர் வெள்ளமாயிருக்கவும் அந்நீரில் கிணறு தொட்டு நீர் சம்பாதிக்கத் தொடங்கினவனைப்போல், அருள் எங்கும் பிரிவற்ற பூரணமாயிருக்கவும், அவ்வருள் தேடி அருளைச் சம்பாதிக்கத் தொடங்கினேன் என்பதும்; தன் தேக அசைவால் நிழல் அசைவது என்று அறியாது அதற்கு ஓர் அசைவு வேறுளது என்று கருதி அதனோடு யுத்தஞ் செய்வானைப்போல், தன் போத அசைவால் கருவிகள் அசைவது என்று அறியாது அவற்றிற்கு ஓர் அசைவு வேறுளது என்று கருதி அவற்றை அடக்கத் தொடங்கினேன் என்பதும், இவ்வுவமைக் குறிப்புகளாற் காண்க.

இங்ஙனம் எழும் போதம் ஒழிப்பார் அரியர் ஆகலின், 'ஆரித்தை நீக்கியிருப்பார்'' என்றார்.

''மணிப்பாம்பிரு''ளென்பது தற்போதத்தை முன்னிட்டு அருளை நாடுதற்கு உவமை, ''நீரிற்கிணறு'' என்பது அருளை ஏகதேசமாக நாடுதற்கு உவமை, ''நிழலுயுத்தம்'' என்பது தன்

லை அருளுக்கு ஊணுகக்கொடுத்து நிற்கவே கருவிகள் ஒழியும் என்று அறியாது, தற்போதத்தால் அவற்றை அடக்கத் தொடங்குவதற்கு உவமை எனக்கொள்க.

"பழக்கங்கொடியதுபார்" என்னும் திருவெண்பா முதல் இவைநான்கு திருவெண்பாவானும் அளவில்காலம் தற்போதத்தால் அத் துவித நாட்டத்தில் பழகிவருதலின், அப்போத மொழித்துச் சிவத்தோடு இரண்டற்று இருத்தற்கு உபாயம் யாது கூறினும், பழக்க மிகுதியால் ஆன்மாக்கள் அத் துவித நாட்டம் ஒழித்து நிற்றல் மிகவும் அரிதென்று அறிவித்தவாறு காண்க. (உரு)

ஆயின் இப்பழக்கம் நீக்குமாறு எங்ஙனம் எனின், மேற் கூறுகின்றார்.

உட்புறம்பாம் பூசனையு மியோக சமாதிகளுஞ்
சுட்டறிவு கெட்டவர்போற் றூங்குவதும் - விட்டுப்
பகல்விளக்கு முச்சிப் படிகமும்போற் பாச
மகலநிற்பார்க் கார்சரியொப் பார்.

(உரை.) உள் புறம்பு ஆம் பூசனையும் யோக சமாதிகளும் சுட்டு அறிவு கெட்டவர்போல் தூங்குவதும் விட்டு—அந்தரியாகம் பகிரியாகமாய்ச் செய்யும் பூசைகளும், ஆறுதார பாவனை யோக சமாதி கூடுதலும், இது அது என்று சுட்டி அறியும் தற்போதங் கெட்டுப் பரமாநந்த நித்திரை பண்ணும் மெய்ஞ்ஞானிகளைப்போல் மனத்தால் பிராணவாயுவை உள்மறித்துப் பிரமரந்திரத்தில் அதனுள் மறைந்து தூங்குவதும், ஆகிய இவற்றை எல்லாம் பொய்யென்று விட்டு நீக்கி,

பகல் விளக்கும் உச்சிப் படிகமும் போல் பாசம்அகல நிற் பார்க்கு ஆர் சரி ஒப்பார்—பகற்காலத்து ஏற்றிய தீபம்போலும் உச்சிக் காலத்துப் படிகம்போலும், கருவிகள் முப்பத்தாறும் அகன்றுபோகத் திருவருளில் அசைவற நிற்போர்க்கு இணை ஒப்பார் யாவர்?

(குறிப்பு.) இருளில் தோன்றியதுபோ லன்றிச் சூரியப்பிர காசத்தால் முதல்கெடாது ஒளிகெட்ட பகல் விளக்குப்போல், முன்னர் ஆணவ அந்தகாரத்தில் தோன்றியதுபோ லன்றி அருட்பிரகாசத்தால் முதல்கெடாது போதங்கெட்டு நிற்றலின், "பகல் விளக்குப்போல்" என்றும், பொழுதேறுங் காலத்தும் சாயங்காலத்து மன்றி உச்சிக்காலத்தில் பஞ்ச வன்னங்களையும் கவராதபடிகம்போல்,சகல கேவலத்தன்றிச் சுத்தமாகிய அருள் நேரே கருவிகள் ஒன்றேனும் தாக்கற்று நிற்றலின், "உச்சிப்ப டிகம்போல்" என்றும், "பாசமகல நிற்பார்" என்றுங் கூறினார்.

பகல்விளக்கென்றது தற்போதம் கெடாது அருளில் நிற் றற்கு உவமையும், உச்சிப்படிகமென்றது கருவிகள்ஒன்றேனும் தாக்கற்று நிற்றற்கு உவமையுமாகக் கொள்க.

இத் திருவெண்பாவால் நீ இந்நாட் பழகிய யோகப்பழக்க த்தை விட்டு ஞானயோகத்தில் பழகுதி எனின் சிவத்தைப் பெறலாம் என்று அறிவித்தவாறு காண்க. (உகூ)

ஆயின் ஒன்றையும் கருதாது சும்மாநிற்பின் சிவத்தை அடைவது எங்ஙனம் எனின், மேற் கூறுகின்றார்.

இருட்கேவலத்தின் றெழுப்பியெதி ரிட்ட
மருட்கேவலசகல மாற்றித் - திரிச்சுடர்போற்

றன்னறிவு தின்னிக்குத் தானுணவாய்ப் போவதல்லா
லுன்னுதலை யோட்டுதல்கா ணும்.

(உ-ரை.) இருள் கேவலத்து இன்று எழுப்பி எதிரிட்ட மருள் கேவல சகலம் மாற்றி—கருவிகள் முப்பத்தாறும் இறந்து ஆன்மபோதமும் இறந்து அந்தகாரமாயிருந்த கேவலத்தினின்றும் இப்போது தனது அருட்சத்தியால் கருவிகளைக்கூடப்பண்ணித் தற்போதத்தை எழுப்பிச் சுருதிகுருவாகிய படர்க்கை முன்னிலையாய் நின்று ஞானசமாதி கூடப்பண்ணி அத்தற்போதத்திற்கு எதிரிட்ட மருளாகிய கேவல சகலங்களைப் பூரணமாகிய தன்மையாய் நின்று மாற்றி,

திரிச்சுடர்போல் தன் அறிவு தின்னிக்குத் தான் உணவாய்ப் போவது அல்லால் உன்னுதலை ஓட்டுதல்—விளக்குத் திரிமேலேறிய சுடர் சிறுகச் சிறுகத் தின்று வந்து முடிவில் அத் திரிமுழுதையும் விழுங்குதல்போல, தன்னை அருளால் அறிவித்தபோது தான் இவ்வருள் வழி வரவரச் சிறுகச் சிறுகத் தின்று முடிவில் தனது போதமெல்லாம் விழுங்கித் தானாயிருக்கும் சிவத்திற்குத் தான் புசிப்பாய்ப் போவதன்றித் தான் வேறொரு முதலாய் நின்று அச்சிவத்தை எதிரிட்டு நாடுதலை அதனை நீக்குதல்.

(குறிப்பு.) கருவிகளும் போதமும் இறந்து கேவல இருளிற் கிடந்த நீ கிஞ்சிஞ்ஞனாகலின், அவ்விருளை நீக்கிக் கருவிகளைக் கூடமாட்டாய், கருவிகள் சடமாகலின் உன்னை அவை வந்து கூடி எழுப்பமாட்டா. ஆகலின், சுதந்திரமாயுள்ள அரு

ட்சத்தி கருவிகளைக் கூட்டி உன்னை எழுப்ப இக்கருவிக ளோடுங் கூடி நீ சுசிர்தனுவை. இங்ஙனம் உனக்குப் பெத்த நிலையில் சுதந்திரம் இன்மைபோல் முத்திநிலையினும் இன் றாகலின், நீ உன்போதத்தால் ஒன்றையும் எதிரிடாது அசை வற நிற்றி எனின், அச்சிவம் தானே உன்னை விழுங்கிக் கொண்டு நிற்கும் என்று அறிவிக்கவேண்டி, "இருட்கேவலத் தின் றெழுப்பி" என்றும், "தன்னறிவுநின்னி" என்றுங் கூறினார்.

"இன்றெழுப்பி" என்றதனால் அநாதியில் எழுப்பியதும் இவ்வாறெனக் கொள்க.

காணும் - அசை.

இத் திருவெண்பாவால் சுட்டற்றிருந்தாலன்றிச் சிவத்தை ப்பெறக்கூடாது என்பதும், அங்ஙனம் நிற்பின் சிவம் தானே விழுங்கிக்கொள்ளும் என்பதும், அறிவித்தவாறு காண்க. (உஎ)

ஆயின் நீர் இங்ஙனங்கூறியவாற்றான் வேதாந்த நிலையே நன்று என்ற மாணாக்கனை நோக்கி மேற் கூறுகின்றார்.

அறிந்தவெல்லாம் பொய்யென்ற வத்துவிதி யார்க்கும்
வெறும்பாழி லூன்றல் விடாது - பிறந்திறப்பை
யானு னதொழிவு மாகந்த மாமுத்திப்பும்
போனாற்கா னும்பிறப்பும் போம்.

(உரை.) அறிந்தது எல்லாம் பொய் என்ற அத்துவிதி யார்க்கும் வெறும்பாழில் ஊன்றல்விடாது பிறந்து இறப்பை

ஆனால்—கண்ணினால் அறிந்த காட்சி எல்லாம் கண்ணாகாத வாறுபோல், எம்மால் எதிரிட்டு அறிந்தவெல்லாம் யாம் அல்லோம், இவை மித்தியாரூபம் என்று அவற்றை நீக்கி நின்ற வேதாந்தியாருக்கும், அங்ஙனம் எதிரீடாய்த் தோற்றுவன யாவும் இன்றிச் சர்வசூனியமாயிருந்த பிரமம் நாம் என்று இச் சூனியத்தில் தற்போதம் ஊன்றி நிற்றல் விடாது, ஆகவினால், நீ அவர்போல் நிற்றி யாயினும், சனனமரணப்படுவை; இங்ஙனம் நிற்பினும் உற்பத்தி நாசம் உள வென்றீர், இனி உற்பத்தி நாசம் இன்றாய முத்தி யாது எனின்,

உனது ஒழிவும் ஆநந்தம் ஆம் உதிப்பும் போனால் உன் பிறப்பும் போம்—உனது போத ஒழிவாகிய பரையோகமும் இப்பரையோகத்தில் மேலிடும் ஆநந்தோதயமும் போனால் அப்போது உன் பிறப்பும் போம்.

(குறிப்பு.) பரையோகமும் ஆநந்தப்பேறும் ஆன்மாவிற்கு அநுபவமாய்த் தோற்றலானும், அவ்விடங்களில் ஆன்மாவிற்குச் சிவத்தோடு அத்துவிதம் இன்றாகலானும், "போனாற்கா ணுன்பிறப்பும் போம்" என்றார். அவை போனவிடஞ் சுகாதீதம்.

காண் - அசை.

இத் திருவெண்பாவால் வேதாந்தியர் இங்ஙனம் நிற்றலின் அவர்க்கும பிறப்பு நீங்காதென்பதும், பிறப்பும் இறப்பும் நீங்கும் இடம் இவ்விடம் என்பதும், அறிவித்தவாறு காண்க.

அறிவுக் கறிவா யகண்டமாய் நின்ற
நிறைவைக் குறைய நினைந்து - மறவையுமாய்த்

தாமே சிவத்தைப் படைத்தழிப்பார் தற்றோடம்
போமா றிலைபிறப்பேன் போம்.

(உரை.) அறிவுக்கு அறிவு ஆய் அகண்டம் ஆய் நின்ற நிறைவைக் குறைய நினைந்து மறவையும் ஆய்—உயிர்க்கு உயிராய் நின்று அறிவிக்கும் அறிவாய், கண்டிதமெல்லாங் கடந்ததாய், திரிவு இன்றி ஓரியல்பினராய் எக்காலமும் விளங்காநின்ற பரிபூரண சிவத்தை ஏகதேச வடிவாய்த் தற்போதத்தால் தியானித்து, அங்ஙனம் தியானித்த வடிவை மறந்து போம் தன்மை யுடையருமாகி,

தாமே சிவத்தைப் படைத்து அழிப்பார் தன் தோடம் போம் ஆறு இலை பிறப்பு என் போம்—தம்மைப் படைத்தழிக்கும் சிவத்தைத் தாமே படைத்தழிப்பார் ஆகலின், இவர் இங்ஙனஞ் செய்தலான் வரும் தமது பாவமே நீங்குமாறு இல்லை எனின், பிறப்பு என் நீங்கும்?

(குறிப்பு.) தியானித்தபோது வடிவு தோன்றியும், விடுத்தபோது அவ்வடிவு நீங்கியும் வருதலின், "படைத்தழிப்பார்" என்றும், சிவத்தைப் படைத்தழிப்பது தோஷமாகலின், "தோடம்" என்றுங் கூறினார்.

இத் திருவெண்பாவால் யோகியினது கருத்தை எடுத்துக் காட்டி, இங்ஙனம் ஞானபக்குவன் செய்வது பாவம் என்று அறிவித்தவாறு காண்க. (உக)

மறப்பு நினைப்பு மயக்கும் விகற்பம்
வெறுப்பும் விருப்பும் விடாமல் - விறப்பேனைப்

பானுவும் வேதியும்போற் பார்த்தும் பரிசித்தும் ஞானபந்தன் ருனாக்கினான்.

(உரை.) மறப்பும் நினைப்பும் மயக்கும் விகற்பும் வெறுப்பும் விருப்பும் விடாமல் விறப்பேனை—மறப்பும் நினைப்புமயுள்ள கேவலமும் சகலமும் மாறிமாறி வரலால், தேகாதி பிரபஞ்சங்கள்மேல் விருப்பும் வெறுப்பும் சனனங்கள்தோறும் விட்டு நீங்காமல் துன்பத்தை அநுபவிக்கையினும் அதனை ஆணவத்தால் இன்பமெனக் கருதி இறுமாந்து கொண்டிருப்பேனை,

பானுவும் வேதியும் போல் பார்த்தும் பரிசித்தும் ஞானபந்தன் தான் ஆக்கினான்—பூதவிருளை நீக்கும் பானுவையும் தன்னைச் சேர்ந்த செம்பைப் பொன்னாக்கும் பரிசன வேதியையும் போன்று, தமது ஞானப்பிரகாச நோக்கத்தால் பார்த்தும், கரசரணங்களால் பரிசித்தும், மும்மலங்களையும் நீக்கி, திருவருளால் எடுத்துத் திருஞான சம்பந்தப் பிள்ளையார் தமது திருவடியில் ஒன்றாக்கினார்.

(குறிப்பு.) தான் அல்லாத தேகத்தை யானென்றும் தனது அல்லாத போகத்தை எனதென்றும் கருதப் பண்ணுவது மயக்கம், அத்தேக போகங்களில் வெறுப்பும் விருப்பும் வரச்செய்வது விகற்பம், ஆகலின், இவற்றைத் தொடர்ந்து நின்று இருவினைகளும், இவ்விருவினைகளால் பிறப்பிறப்பும் விடாது வரலால், "மயக்கும் விகற்பும் வெறுப்பும் விருப்பும் விடாமல்" என்று இம்முறை வைத்துக் கூறினார்.

ஞானதிக்கை பண்ணும்போது கிருபாநோக்கம் வைத்துத் திருவடிசூட்ட வேண்டுமாகலின், "பார்த்தும் பரிசித்தும்" என்றார். அங்ஙனம் பண்ணுந் தீக்கையில் பாவனையும் இருத்தலின், அது கூறாராயினார். அப்பாவனையால் தம்மோடு ஐக்கியம் பண்ணிக் கோடலின், "தானாக்கினான்" என்றார்.

இத்திருவெண்பாவால் தமதாசாரியர் தீக்கையினால் தம்மைத் திருவடிக்கண் ஐக்கியமாக்கிய முறைமை அறிவித்து; நீயும் ஞானதீக்கை பண்ணிக்கொள்ளுதி என்று அறிவித்தவாறு காண்க. (௩௦)

மூன்றுமதிகாரம்

யோகக்கழற்றி

முற்றும்.

## நான்காம் அதிகாரம்.

# கிரியைக் கழற்றி.



தத்துவத்தை யெல்லாஞ் சடமென்று தாக்கற்றுச்
செத்தசத்தின் கண்போற் றிரியாது-வைத்தெடுத்தும்
பூரணமே யென்றழைத்துந் தேடிப் புரண்டழுதுங்
கோரணிகாட் டும்பேய்க் குவால்.

(உரை.) தத்துவத்தை எல்லாம் சடம் என்று தாக்கு அற்றுச் செத்த அசத்தின் கண்போல் திரியாது—தத்துவங்கள் எல்லாம் இது இது என்று தன்னால் அறியப்படலானும், தன்னை அவை அறியாமையானும், அவற்றைச் சடமென்று அறிந்து அவைகள் ஒன்றோடும் தாக்கற்றுச் செத்த ஆட்டுக் கண்போல் சுட்டறிவு கெட்டுச் சும்மா திரியாமல்,

வைத்து எடுத்தும் பூரணமே என்று அழைத்தும் தேடிப் புரண்டு அழுதும் கோரணி காட்டும் பேய்க்குவால்—தற்போத நாசத்து இருந்த பூரணசிவத்தை அப்போதத்தால் ஓர் வடிவில் ஆவாகனம் பண்ணி, அதனை மீட்டும் தியானம்பண்ணி, இங்ஙனம் பூசனை புரிந்தும், அவ்வடிவைப் பரிபூரண சொரூபமே என்று ஓலமிட்டழைத்தும், அச்சிவம் எங்கணும் இல்லை மகா தலங்களில் உண்டென்று கருதி அத்தலங்களில் தேடிச்சென்

றும், நிலத்தில் வீழ்ந்து புரண்டழுதும், இங்ஙனம் கிரியையா ளரென்னும் பேய்க்கூட்டங்கள் கோரணிக் கூத்தாடிக்காட்டும்.

(குறிப்பு.) செத்த அஜத்தின் கண் உயிரஜத்தின் கண் போல் இருப்பினும் இதனது சுட்டறிவு அதற்கு இன்மைபோல், மெய்ஞ்ஞானிகள் பிரபஞ்சிகள்போல் இருப்பினும் இவரது சுட்டறிவு அவர்க்கு இன்றி இருப்பர். அவர்போல் நீரும் இராது என்னை செய்கின்றீர் என்று அவரது நடையை இவர்க்கு அறிவிக்கவேண்டி, அந் நடையின்றிய இவரைப்பார்த்து, "செத்தசத்தின் கண்போற் றிரியாது" என்றார்.

சுட்டறிவு கெடுதது நிற்பது அருள், சுட்டச்செய்வது மருள் ஆகலின், இவரைப் "பேய்க்குவால்" என்றும், இவர்தொழிலைக் "கோரணி" என்றும், இவர்க்கு ஆன்மலாபம் இன்மையால், பிறர்க்குக் "காட்டும்" என்றுங் கூறினார்.

இத் திருவெண்பாவால் கிரியையாளரைப்பார்த்து ஞானிகள் நடையை எடுத்துக்காட்டி, இவரைப்போல் நீரும் செய்யாது என் செய்கின்றீர் என்று இகழ்ந்து கூறியவாறு காண்க.

கிரியைக் கிளைத்துவந்து கேட்டவர்க்குச் சும்மா
திரியச் சுகம்விளைத்த சீமான் - குருவன்றிச்
சற்றேறு பதைப்பத் தரினுஞ் சுகம்படைக்கக்
கற்றானுங் காலனுயாங் காண்.

(உரை.) கிரியைக்கு இளைத்துவந்து கேட்டவர்க்குச் சும்மா திரியச் சுகம் விளைத்த சீமான் குரு அன்றி—மனத்தால் டாவிக்

கும் தொழிலும், வாக்கால் தோத்திரம் பண்ணும் தொழிலும், காயத்தால் அருச்சனையாதி செய்யும் தொழிலும் ஆகிய இக்கிரியைகளால் மிகவும் மெலிந்து இவற்றை வெறுத்து, ஞானத்தை விரும்பி வந்தடைந்து கேட்ட அதிபக்குவர்க்கு, இம் மன வாக்குக் காயங்கள் அசைதற்கு ஏதுவாய தற்போத அசைவை ஒழித்து அருள்வடிவாக்கி, எனக்கு இன்னது வேண்டும் என்பது ஒன்றும் இன்றிச் சும்மா சஞ்சரிக்க வைத்துப் பேரின்பத்தை உண்டாக்கிய இவ்வாநந்தச் செல்வனே ஞானகுரு வன்றி,

சற்றே பதைப்பத் தரினும் சகம் படைக்கக் கற்றானும் காலனும் ஆம் காண்—அப்பக்குவர்க்கு ஓரணுவளவேனும் தற்போதம் அசைதற்கு ஏதுவாய உபதேசங்களைக் கொடுப்பினும், அக்குரு சகத்தைப் படைத்தற்குக் கற்றுள்ள பிரமனும், இவனால் படைத்துள்ள சகத்தில் உண்டாகிய உடல்களை அழிக்கும் காலனும் ஆவனன்றி ஞானகுரு அலன் என்று அறிதி.

(குறிப்பு.) போதம் பதைத்தற்கு ஏதுவாகிய உபதேசங்களைக் கூறலின், சகல கேவலங்கள் நீங்கா; இவை நீங்காமையால் பிறப்பு இறப்பு உண்டாகும்; ஆகலின், "சகம் படைக்கக் கற்றானுங் காலனுமாங் காண்" என்றார்.

சீவன்முத்தனாய் நிலத்திற் சஞ்சரித்தலின், "திரிய" என்றார்.

இத் திருவெண்பாவால் ஞானபக்குவனுக்கு முன்னிருந்த சரியையாதி வாதனைகளை எல்லாம் போக்கி, தற்போதம் பதையாது மௌனமா யிருக்கும்படி போதிப்பவனே ஞானகுரு

என்றும், போதஞ் சிறிதேனும் பதைப்பக் கூறுமவன் குரு அலன் என்றும் அறிவித்தவாறு காண்க. (உ)

அக்கினி தேவற் கசீர்த்தியென் றுசுக்கரைத்து
வைக்கோலான் மூடி மலையடுப்பிற் - றுக்கியாய்
நீரைக் கழுவி நிழலைப் புதைத்தளப்பா
ராரைப்போல் வாரென்ன லாம்.

(உரை.) அக்கினிதேவற்கு அசீர்த்தி என்று சுக்கு அரைத்து வைக்கோலால் மூடி மலை அடுப்பின் துக்கி ஆய்—அக்கினிதேவனுக்கு அசீரணம் பிறந்ததென்று கருதி, அது போதற்குச் சுக்கரைத்துக் கொடுத்து, சீதளம் பிறந்ததென்று அவனை வைக்கோலால் மூடி அவனுக்கு முன்னரே இக்கனம் செய்யாதிருந்தோம் என்று மலை வந்து தம்மேல் அடுத்ததுபோலும் துக்கத்தை உடையவராகி,

நீரைக் கழுவி நிழலைப் புதைத்து அளப்பார் ஆரைப்போல் வார் என்னல் ஆம்—நீரை நீரால் கழுவித் தமது நிழலை மண்ணுட்புதைத்து அந்நிழலைத் தம் மடியால் அளந்து இவ்வளவு என்று அளவிடுவாரை யாவரைப்போல்வார் என்று கூறலாம்?

(குறிப்பு.) எவரெவர் புசித்த புசிப்புக்களையெல்லாம் அவரவர் வயிற்றாடிருந்து சீரணிக்கப்பண்ணும் அக்கினி தேவனுக்கு அசீரணம் பிறந்ததென்று உபசரிக்கும்முறைமைபோல், உயிர்கட்கெல்லாம் உயிராயிருந்து ஊட்டி உறக்கி உபசரிக்கும்

சச்சிதாநந்த ரூபமாயுள்ள சிவத்திற்கு ஓர் குறை உள்ளது போற் கருதி, அட்டவிதார்ச்சனை சோடச உபசாரங்களைச் செய்தலான், "அக்கினிதேவற் கசீர்த்தியென்று சுக்கரைத்து வைக்கோலான்மூடி" என்றும்; இன்றைக்கு இந்நாழிகை அளவும் பூசைநைவேத்திய உபசாரங்களைச் செய்திலம் என்று மனத்தில் துயருறலால், "நுக்கியாய்" என்றும்; அசுத்தத்தை யெல்லாம் சுத்தமாக்கும் நீரைக் கழுவிச் சுத்தமாக்கத் தொடங்குவான்போன்று, தன்னைச் சேர்ந்த உயிர்களினது மும்மலங்களையும் துடைத்து நின்மலமாக்கும் சிவத்தை நீராட்டி நின்மலமாக்கத் தொடங்கினாராகலின், "நீரைக்கழுவி" என்றும், புதைப்பதற்கு அகப்படா நிழலைப் புதைக்கத் தொடங்கினாற்போல், ஒன்றிற்கும் அகப்படாத பொருளைத் தற்போதத்தால் அகப்பட்டதுபோல் பாவித்து ஆவாகனம் பண்ணலின், "நிழலைப்புதைத்து" என்றும், தனது நிழலை அளந்து செல்லுந்தோறும் அந்நிழல் கடந்து கடந்து சேறல்போல், இங்ஙனம் இருக்கும் என்று சிவத்தைத் தியானிக்குந்தோறும் அது அத் தியானங்களுக்கு அப்பால் அப்பால் சேறலின், "நிழலளப்பார்" என்றுங் கூறினார். சிவத்தினது உண்மையைக் கேட்டிருந்தும் இங்ஙனம் செய்தலான், "ஆரைப்போல்வாரென்னலாம்" என்றார்.

இத் திருவெண்பாவால் மலரகிதமாய் ஆநந்தவடிவாயிருந்த சிவத்திற்கு மாயாகாரியமாகிய நீராதி உபசாரங்களால் சுத்தமும் சுகமும் உண்டாகா என்பதும், அதனைப் போதத்தால் அளவிட் டறியக் கூடாதென்பதும் அறிவித்தவாறு காண்க. (௯)

நீர்க்கும் வழிக்குந் துயரில்லை நீந்திநடந்
தார்க்குத் துயரென் றறிவறியா - மூர்க்கருரை
யாற்றுக்கு வாய்கட்டி யம்பரத்துக் கேணியிட்டுக்
காற்றுக்குக் கால்பிடித்தல் காண்.

(உரை.) நீர்க்கும் வழிக்கும் துயர் இல்லை நீந்தி நடந்தார்க்குத் துயர் என்று அறிவு அறியா மூர்க்கர் உரை—வெள்ளமாய் நிறைந்துள்ள நீருக்கும் ஒரூர்க்குச் செல்லும் வழிக்கும் துன்பம் ஏதும் இல்லை, அவ்வெள்ளத்தை நீந்திச் செல்வோர்க்கும் அவ்வழி நடந்து செல்வோர்க்கும் துன்பமென்று அறிவதுபோல, பூரணமாய் மௌனமாய் ஆநந்தமாயிருந்த சிவத்திற்கு ஓர் துன்பமும் இன்று, அதற்கு ஓர் துன்பம் உளது போற் கருதி, பூசை நைவேத்திய உபசாரங்களைச் செய்யத் தொடங்கும் எமக்கே துன்பமென்று அறிந்து, இங்ஙனம் செய்யும் பூசையாதிகளை விட்டு நீங்கி, அச்சிவத்தை அறிவித்தற்கு ஏதுவாய ஞானசாரியரை அடைந்து, திருவருள் ஞானத்தை அறியாத கிரியாகுருவாகிய தூர்ச்சனர் பிறர்க்கு உபதேசப்போற் கூறும் உரை,

யாற்றுக்கு வாய் கட்டி அம்பரத்துக்கு ஏணி இட்டுக் காற்றுக்குக் கால் பிடித்தல்—பிரளயமாய்ச் செல்லும் ஆற்றுக்கு வாய்கட்டி அதனை அடக்கச் சொல்லுதல்போலும், ஆகாயத்தின் கண் ஏணி நாட்டி இதன்மேல் ஏறி அதனைப் பிடிக்கச் சொல்லுதல்போலும், காற்றுக்குக் கால் பிடித்தல் முதலிய உபசாரங்களைச் செய்யச் சொல்லுதல்போலும் ஆம்.

(குறிப்பு.) மலைக்கண் நின்று கடலளவும் ஊடுருவிச் சேர்த்து நின்ற ஆற்றுக்கு வாய்கட்டி அடக்கச் சொன்னதுபோல், பிருதிவிமுதல் முப்பத்தாறு கருவிகளையும் ஊடுருவிப் போர நந்தக்கடலாய் நிறைந்திருந்த சிவத்தை ஓர்வடிவத்து ஆவாகனம் பண்ணச் சொல்வதனால், "ஆற்றுக்கு வாய்கட்டி" என்றும், ஏணிநிற்றற்கும் அதன்மேல் ஏறிச் செல்வோனுக்கும் இடங் கொடுத்துநின்ற ஆகாயத்தை அவ்வேணிமேல் ஏறிப் பிடிக்கச் சொன்னதுபோல், அந்தரியாக பூசைக்குத் தான் சொல்லுந் தானத்திற்கும் அத்தானத்திருந்து பூசனை செய்வோனுக்கும் உட்புறம்பாய் நிறைந்துள்ள சிவத்தை இங்ஙனம் இருப்பதென்று அறியாது, அப்பூசனையால் அறி என்று சொல்வதனால், "அம்பரத்தைக் கேணியிட்டு" என்றும், அருவமாயிருந்த காற்றிற்குக் காலே இன்று, அஃது அங்ஙனம் இருப்பவும் அதற்குக் கால்பிடித்தல் முதலிய உபசாரங்களைச் செய்யச் சொல்வதுபோல், உருவம் அருவம் உருவருவங்களை எல்லாம் கடந்துநின்ற சிவத்திற்கு வடிவேயில்லை, இஃது இங்ஙனம் இருப்பவும் இதற்குச் சோடச உபசாரங்களைச் செய்யச் சொல்வதனால், "காற்றுக்குக் கால்பிடித்தல்" என்றுங் கூறினார். உபசாரஞ் செய்தலை இருவகைப் பூசைக்கும் பொதுவாகக் கொள்க. காண் - அசை.

இத் திருவெண்பாவால் கிரியாகுரு உபதேசத்தால் ஆன்மலாபம் இன்றென்று அறிவித்தவாறு காண்க. (௬)

ஆயின் ஞானிக்குக் கிரியை செய்ய வேண்டாவோ எனின், மேற் கூறுகின்றார்.

ஆகாயம் போவார்க்கு மாவிகையோ வாழ்கடலோ
மீகாமன் போற்றிரிய வேண்டுமோ - யோகிக்குங்
கன்மமோ பூரணன்காண் காலமுமா காயமும்போ
யென்ன தொழிலியற் றும்.

(உரை.) ஆகாயம் போவார்க்கு மாவிகையோ ஆழ்க டலோ மீகாமன் போல் திரிய வேண்டுமோ—ஆகாயகமனம் பண்ணுவோர்க்கும் ஓர் பற்றுக்கோடோ? அவ்வாகாயம் ஆழ்க டலோ? இவ்வாழ் கடலிற் செல்லும் மீகாமனைப்போல் பற்றுக் கோடுபற்றி ஓர் துறை சார்தற் பொருட்டுத் திசைநாடி இங்ஙனம் சுழல அவர்க்கு வேண்டுமோ? (அதுபோல),

யோகிக்கும் கன்மமோ பூரணன் காலமும் ஆகாயமும் போய் என்ன தொழிலை இயற்றும் —சிவயோகி ஆநந்த பூரணன் ஆகலின், தேகாந்தனு யிருந்துள்ள கிரியையாளனைப் போல் அவனுக்கும் கிரியைசெய்ய வேண்டுமோ? அஃதன்றி, காலமும் ஆகாயமும் தாம் இருந்தபடி இருப்ப, தம்மிடத்தில் பிறபொருள்கள் தொழிற்படுவன அன்றி, தாம் சென்று யாது தொழிலைச் செய்யும்? அதுபோல், பூரணனுகிய அச்சிவயோகி சந்நிதானத்தில் கருவிகள் தொழிற்படுவன அன்றி, தான் ஒரு கருவிகளோடும் கூடித் தொழில் செய்யான்.

(குறிப்பு.) ஆகாய கமனம் பண்ணுவோன் தான் நினைத்த தானத்தில் வாயுவினுற் சென்றிருத்தல்போல, சிவயோகி தான் கருதியவீட்டை அருளால் அடைந்திருத்தலின், "ஆகாயம் போவார்க்கு மாவிகையோ" என்றார்: ஆழ்கடலிற் செல்

லும் மீகாமனுக்குக் கப்பலாகிய பற்றுக்கோடு பற்றி ஓர் துறை சக்கண் சார்தற் பொருட்டுத் திசை நாடிச் செல்லவேண்டும், அதுபோல, கிரியாவானுக்கு ஓர் வடிவைச் சிவமாய்ப் பாவித்து ஓர் பதவியை அடைதற் பொருட்டு அதற்கு விதிமார்க்கமாய் அருச்சனை யாதிகளைச் செய்யவேண்டும், அவர்க்குச் செய்யவேண்டுவது இன்றாகலின், "மீகாமன் போற்றிரிய வேண்டுமோ" என்றுங் கூறினர்.

சிவயோகி தான் அறிவாயும் ஆநந்தம் சிவமாயும் கண்டு, அறிவாகிய தான் ஆநந்தமாகிய சிவத்தில் கலந்திருப்பன். கிரியாவான் தான் தேகமாயும் சிவம் சிலையாதிகளாற் செய்யும் ஓர் வடிவாயும் கண்டு, அதனைத் திரிகரணங்களால் வழிபட்டு இனிமேல் ஓர் பதவியை அடையக் கருதி இருப்பன். ஆகலின் இவர் இருவருக்கும் இங்ஙனம் உவமை கூறினர். (கு)

நெருப்பில் விறகுதியா நெய்யிற்பா றோன்று
வருக்க னிருளை யடர்த்தாற்போன் - மருட்கெடுத்த
ஞானத்தின் பேர்கிரியை நாசமெனின் ஞானிகளு
மூனத் தொழிலுழைப்பா ரோ.

(உரை.) நெருப்பில் விறகு உதியா நெய்யில் பால் தோன்று அருக்கன் இருளை அடர்த்தாற்போல் மருள் கெடுத்த ஞானத்தின் பேர் கிரியை நாசம் எனின்—நெருப்பின்கண் விறகு தோன்றாதது போலும், நெய்யில் பால்தோன்றாதது போலும், ஆதித்தன் பூதவிருளை அழித்து எழுந்தாற்போல் மும்மலமாகிய இருளை அழித்து எழுந்த ஞானம் அவற்றினது

காரியமாகிய கிரியையையும் தோன்றாது அழிக்கும் ஆகலின், இந்த ஞானத்தின்பேர் கிரியாநாசம் என்று வேதாகமங்கள் கூறும் எனின்,

ஞானிகளும் ஊனத்தொழில் உழைப்பாரோ—இந்த ஞானத்தைப்பெற்று இதுவே வடிவாயிருந்துள்ள மெய்ஞ்ஞானிகளும் குற்றம் பொருந்திய கிரியைத்தொழிலைச் செய்வாரோ? (செய்யார்).

(குறிப்பு.) விறகை அழித்து எழுந்த நெருப்பில் விறகும், பாலை அழித்து எழுந்த நெய்யில் பாலும் தோன்றா; அது போல, கிரியையை அழித்து எழுந்த ஞானத்தில் கிரியை தோன்றாது; ஆகலின், இங்ஙனம் உவமை கூறினர்.

கிரியை பிறவித்துன்பத்துக்கு ஏது ஆகலானும், அதனால் ஆன்மலாபமாகிய ஆநந்தம் இன்மையானும், "ஊனத்தொழில்" என்றும், "உழைப்பாரோ" என்றுங் கூறினர்.

இவை யிரண்டு திருவெண்பாவானும் ஞானிக்குக் கிரியை செய்யவேண்டுவது இன்று என்று அறிவித்தவாறுகாண்க. (கூ)

கிரியையான் ஞானங் கிடைத்தாலுங் கேடு
கருவால் வருவதுபோற் காணு - மொருகோடி
சூரியரைக் கூரிருளா லேசுருட்ட லீரகில
காரணனைத் தீண்டநினைக் கை.

(உரை.) கிரியையால் ஞானம் கிடைத்தாலும் கருவால் வருவதுபோல் கேடு காணும்—கிரியைத் தொழிலால் ஞானங் கிடைத்ததாயினும், அந்த ஞானத்திற்குக் கர்ப்பத்தின்கண்

உற்பத்தியாய் வரும் பொருள்கள்போல் கெடுவதன்றாம்; (அஃதன்றி),

நீர் அகிலகாரணனைத் தீண்ட நினைக்கை ஒருகோடி சூரியரைக் கூர் இருளாலே சுருட்டல்—சடசித்துக்களாயுள்ள பிரபஞ்சங்களை யெல்லாங் கடந்து நின்றும் அவற்றை நடத்தும் காரணனாகி யிருந்த சிவனை நீர் உமது கிரியையால் தொடர்ந்து பற்றக் கருதுவது ஒருகோடி சூரியரை மிகுந்த இருளினால் சுருட்டிப் பிடித்தல் போலும்.

(குறிப்பு.) சரியை கிரியை யோகங்கள் ஞானசாரியரை அடைதற்குப் பக்குவம் ஆக்குவன அன்றி, ஞானத்தைக்கொடா ; ஆயினும், முன்விட்ட குறையால் கிரியை அநுட்டிக்குங் காலை ஓர்கால் ஞானம் தோன்றிற்றாயினும், அந்த ஞானம் ஞானசாரியரால் பெறாமையானும், தான் செய்யும் கிரியை மேலீட்டானும் நிலைபெறாது மறையும். ஆகலின், "கிரியையான் ஞானங்கிடைத்தாலும்" என்றும், "கருவால் வருவது போற்கேடு" என்றும் கூறினார்.

ஞானத்தால் சிவத்தைப் பெறவேண்டும் என்பது அறியாது, மாயாகாரியமாகிய கிரியையால் அதனைப் பெறத்தொடங்கலின், "ஒரு கோடிசூரியரைக் கூரிருளாலே சுருட்டல்" என்று உவமை கூறினார்.

கிரியை ஏதுவால் ஞானம் வந்ததாயினும் நண்டு இப்பி முதலிய தமது கருவால் நாசமாவனபோல் அந்த ஞானமேலீட்டால் கிரியை கெடும் என்பதும் ஆம்.

இத் திருவெண்பாவால் கிரியை அநுட்டிக்குங்காலத் தெய்வகதியாய் ஞானம் தோன்றிற்றாயினும், அக்கிரியை மேலிட்டால் அந்த ஞானம் நிலைபெற்று நில்லாது மறையும் என்று அறிவித்தவாறு காண்க. (எ)

சுகாதீதம் வேண்டிற் றொழில்செய்வோ மென்றால்
நகாரோ துயில்வார் நடந்தோ - விகாரமெனச்
சாத்திரமும் பூசைச் சமாதிகளுஞ் சார்போதக்
கோத்திரங்காண் மாயைக் குழாம்.

(உரை.) சுகாதீதம் வேண்டின் தொழில்செய்வோம் என்றால் நகாரோ நடந்தோ துயில்வார்—ஆநந்தாதீதமாகிய வீடடைய விரும்பின், அதனை அறிவிக்கும் ஞானாசாரியரை அடைந்து அருள்ஞானம் பெற்று, இவ்வருள் ஞானத்தால் அவ்வீடடையாது விடுத்து, கிரியைத் தொழிலான் அவ் வீடடையலாம் என்று கருதி அக்கிரியைகளைச் செய்வோம் எனின், மெய்ஞ்ஞானிகள் நகைசெய்யாரோ? அஃதென்னெனின், நித்திரை பண்ணவேண்டினோர் ஓரிடத்துப் படுத்துக்கொண்டு நித்திரைபண்ணுவதன்றி, ஒரூர்வழி நடந்து சென்றோ நித்திரை பண்ணுவார்? (அஃதன்றி),

விகாரம் எனச் சாத்திரமும் பூசை சமாதிகளும் சார்போதக் கோத்திரம் மாயைக் குழாம்—ஞானிகளோடு மாறுபட்டது போன்று நீர் ஓதும் சாத்திரமும், அந்தரியாக பூசையில் ஓர் வடிவைத் தியானித்து நீர் சமாதி கூடுதலும், உமது சார்போதத்தின் கூட்டமும், மாயைக் கூட்டமும் அவை.

(குறிப்பு.) போத ஒழிவில் நின்ற சுகாதீதத்தை விரும்பினோர் கருவிகள் ஒழிந்தபோதும் அசைவறாதபோதம், அவைகளோடு கூடித் தொழில்செய்தால், நெய்சொரி தழல்போல் மேன்மேல் வளர்தலின், "சுகாதீதம் வேண்டிற்றொழில்செய்வோமென்றால்" என்றும், இத்தொழிலால் அச்சுகாதீதம் பெறுதல் அரிதென்பதும் ஞானிகளறிவார் ஆகலின், "நகாரோ" என்றுங் கூறினார்.

தேகம் அசைந்து செல்லும்போது நித்திரைவரினும், அவ்வசைவு அந் நித்திரையை வரவொட்டாது தடுத்தல்போல, கருவிகள் அசைந்து தொழில் செய்யும்போது தெய்வ கதியால் ஆநந்த நித்திரைவரினும், இத்தொழில் அந் நித்திரையை வரவொட்டாது தடுக்கும் ஆகலினும், தேகம் அசைவற ஒரிடத்துக் கிடந்தபோது நித்திரை நன்றாய் வருவதுபோல, கருவிகள் தொழில்செய்யாது அடங்கியபோது ஆநந்தநித்திரை நன்றாய் வருமாகலினும், "துயில்வார் நடந்தோ" என்றார்.

போதம் ஒன்றாயினும் அடுத்த கருவிகள்தோறும் அதனதன் மயமாய்ச் சென்றிருத்தலின், "சார்போதக்கோத்திரம்" என்று பன்மையாகக் கூறினார். "மாயைக்குழாம்" என்றது கருவிகளை. போதமும் கருவிகளும் கூடிச் செய்தலான் இரண்டையுங் கூட்டிக் கூறினார். பாசஞானம் பசுஞானம் என்றுமாம்.

காண் – அசை.

இத் திருவெண்பாவால் கருவிகளையும் போதத்தையுங் கடந்துநின்ற சுகாதீதமுத்தியை அவற்றாற் செய்யும் கிரியைகளால் அடையக்கூடாதென்று அறிவித்தவாறு காண்க. (அ)

தொழிலிறுதி தானே சுகவுதய மென்றாற் [யினும்
றொழி லுதயந் றுக்கமெனச் சொல்லோந்-தொழில்செ
வந்திப்போ கம்போல வுண்டுடுத்தன் மாத்திரமாய்ச்
சிந்திப்பா ரைப்பேணிச் செய்.

(உரை.) தொழில் இறுதி தானே சுக உதயம் என்றால் தொழில் உதயம் துக்கம் எனச் சொல்லோம்—இம்மையைக் குறித்துச் செய்யும் உழவாதி அறுவகைத் தொழில்களும், மறுமையைக் குறித்துச் செய்யும் சரியாதி தொழில்களும், வீட்டைக்குறித்துச் செய்யுங் கருவிகளை நியதிகளாதலாகிய தொழில்களும், அதற்குமேல் ஞாதுரு ஞான ஞேயமாய் நிற்கும்போது அசைவுகளும் அற்ற இடந்தானே சிவாநந்தோதயம் என்று வேதாகமங்கள் கூறும் எனின், அனுபவளவேனுந் தொழில் உதயமான இடத்துத் துன்பம் உண்டாம் என்று யாம் கூறுகிலோம், ஆண்டுத் துன்பம் உண்டென்பது தொழிலிறுதிதானே சுகவுதயம் என்ற மொழிதானே விளக்கலின்;

(ஆயின் நீரிங்ஙனங் கூறிய ஆற்றான் தொழில் சிறிதேனும் செய்யவேண்டாவோ எனின்),

தொழில் செயினும் வந்திப் போகம்போல உண்டு உடுத்தல் மாத்திரம் ஆய்ச் சிந்திப்பாரைப் பேணிச் செய்—இன்றியமையாத சிற்சில தொழில்களை நீ செய்யினும் இனிமேலைக்கு வேண்டும் என்று ஒன்றையும் கருதாது, உண்டு உடுக்கும் வந்திப் போகம்போல் இம்மை மறுமைப் போகங்களில் ஒன்றையும் சிந்தியாது, காடி கூழேனும் கிடைத்ததை உண்டலும்

கரித்துணி கந்தையேனும் கிடைத்ததை உடுத்தலும் ஆகிய இம் மாத்திரமே சிந்திக்கும் பெரியோரைப்பார்த்து அவரைப்போல நீயும் செய்தி.

(குறிப்பு.) ஓர் தொழிலும் செய்யாது நிழற்கண் இருப்பது சுகம் என்றால் எழுந்து வெய்யிலிற்சென்று தொழில்செய்தல் துன்பம் என்பது சொல்லவேண்டுவது இன்றாகலின், "தொழிலுதயந் துக்கமெனச் சொல்லோம்" என்றார்.

வந்தி சுகத்தைச் சுதர் இன்மையால் மேலைக்கு ஒன்றையும் குறியாததுபோல், ஞானிகட்கு இகபரங்களெல்லாம் பொய்யாகலின், இவரும் ஒன்றினையும் குறியார் ஆகலினும், அவள் உண்டு உடுத்தல் மாத்திரமா யிருத்தல்போல், இவரும் உண்டு உடுத்தல் மாத்திரமா யிருத்தலினும் இங்ஙனம் உவமை கூறினார்.

"சிந்திப்பாரைப்பேணிச் செய்" என்பது, நீ தொழில் செய்தி ஆயினும் ஞானிகள் நடையைப்பார்த்து அவர் செய்யும் தொழில் மாத்திரமே அன்றி அதிகஞ் செய்யற்க என்பதெனக் கொள்க.

இத் திருவெண்பாவால் ஞானக்கிரியை மாத்திரம் மேலைப் பயன் குறியாது செய்க என்று அறிவித்தவாறு காண்க. (க)

சும்மா திருக்கவைத்த சூத்திரமாஞ் சாத்திரத்தை
விம்மா கதறுவதும் வேலைகளுந் - தம்மறிவா
னீட்டிப் பிடித்திருக்கு நிட்டைகளு ஞானிகண்முன்
காட்டும் பரியாச கம்.

(உரை.) சும்மாது இருக்க வைத்த சூத்திரம் ஆம் சாத்திர த்தை விம்மா கதறுவதும் வேலைகளும் தம் அறிவால் நீட்டிப் பிடித்துஇருக்கும் நிட்டைகளும்—தற்போதத்தை ஒழித்து ஆந ந்த மௌனமாயிருக்க ஓதி வைத்த உபாயமாகிய சாத்திரங் களை விம்மி அழுது ஓதலும், நீராடல் ஆதி கிரியைகளைச் செய் தலும், தமது போதத்தால் ஓர் வடிவைத் தியானித்து உடலை நீட்டிப் பிடித்து ஆசனங் கட்டியிருக்கும் நிட்டைகளும் ஆகிய இவை எல்லாம்,

ஞானிகள்முன் காட்டும் பரியாசகம்—இவைகள் ஒன்றும் இன்றி மௌனானந்தமாயிருக்கும் மெய்ஞ்ஞானிகள் முன்னர்க் காட்டப்பட்ட பரியாசகமாம்.

(குறிப்பு.) வேதாகமவழிகூறும் ஞானசாத்திரங்க ளெல் லாம் தற்போதத்தை ஒழித்துச் சிவமாயிருத்தற்கு உபாயங் கூறும் ஆகலின், "சும்மாதிருக்கவைத்த சூத்திரமாஞ் சாத்திர த்தை" என்றும், ஞானசாத்திரத்தின் அருத்தங்களை நாடிக் கலுழ்தலான், "விம்மா" என்றும், அவ்வருத்தப்படி நில்லாமை யான், "கதறுவதும்" என்றும், கிரியைகள் யாவும் அறிவன்று ஆகலினும், உலகர் வேலையோடு இதுவும் ஓர் வேலை ஆகலி னும், "வேலைகள்" என்றும், தற்போதத்தால் கூடும் நிட்டை ஞானநிட்டை அன்மையால், "நீட்டிப் பிடித்திருக்கு நிட்டை" என்றும், இவை எல்லாம் ஞானிகட்குப் பரியாசகமா யிருத்த லின், "பரியாசகம்" என்றுங் கூறினர்.

"தம்மறிவா னீட்டிப் பிடித்திருக்கும்" என்றமையான், அருளறிவால் நிட்டைகூடுதல் நிட்டை என்பதாயிற்று.

இத் திருவெண்பாவால் போதம் இறந்து நிற்பதே நிட்டை என்றும், போதத்தோடுங் கூடிச் செய்வது நிட்டை அன்றென்றும் அறிவித்தவாறு காண்க. (௧0)

குடையுஞ் செருப்புங் கொடுநடப்ப தல்லாற்
படியும் விசும்பும் பரப்பி - யிடையாடு
மாத்திரம்போ லேசமய வாதமனம் போதாத
சாத்திரங்கற் றூர்வீடுற் றூர்.

(உரை.) குடையும் செருப்பும் கொடு நடப்பது அல்லால் படியும் விசும்பும் பரப்பி இடை ஆடும் மாத்திரம் போலே— ஓர் ஊருக்குச் செல்லவேண்டினோன் உடம்பில் மழை வெயிலாதிகள்படாது கையில் குடையும் பிடித்துக்கொண்டு, காலில் கல் முள் மண் தாக்காது செருப்பும் தொட்டுக்கொண்டு நடப்பதே அன்றி ஆகாய மெங்கும் குடை பரப்பிப் பூமி யெங்கும் தோல்பரப்பி அவற்றிற்கு இடையேசெல்லு மாத்திரம்போலே,

சமயவாதம் மனம் போதாத சாத்திரம் கற்று வீடு உற்றூர் ஆர்—சமயிகள் நானாவாகக் கூறும் தருக்க வாதங்களையும், அத் தருக்க வாதத்தால் அநந்த பேதமாய்த் தோற்றும் மனோ வுத்திகளையும் அளவு கூறினும் அவ்வளவு போதாத சாத்திரங் களைக் கற்று வீடடைந்தார் யாவர்?

(குறிப்பு.) ஓர் ஊரை அடையக்கருதினோன் மேலுக்கும் காலுக்கும் துன்பம் அணுகாவகை குடையும் செருப்பும்பிடித்திட்டுக்கொண்டு சென்று அவ்வூரை அடைவதுபோல், வீடடையக்கருதினோன் ஆசாரியர் கூறும் உபதேச மொழிகளும் அவர்

கொடுக்கும் ஓர் சாத்திரமும் கொண்டு, அவற்றின் அருத்தப் படி திரிகரணங்களால் ஒன்றையும் வருந்திச் செய்யாது தற்போதத்தையே ஒழித்து அவ்வீட்டை அடையாத, அளவிடப் படாத ஆகாயத்திலும் பூமியினும் குடையும் தோலும் பரப்பி நடுவிடைச்செல்லத் தொடங்குவோனைப்போலும். தருக்கவாதங்களையும் அவ்வாதத்தாலெழும் மனோவுத்திகளையும் அளவிடினும் அளவிடப்படாத சாத்திரங்களைக் கற்று நீர் வீட்டையத் தொடங்குவது என்பதும், சிலகற்பினும் அதனால் வீடு கூடாதென்பதும் இதனாற் காண்க.

சாத்திரங்களை மிகவுங் கற்றோர்க்குத் தருக்கவாதமும் மனோவுத்தியும் மிகவும் விரியும் ஆகலின், சாத்திரங்கட்கு அளவு கூறுவார் வேறு கூறாது அவற்றையே அளவு கூறினார்.

வாதம் என்பதும் மனம் என்பதும் ஆகுபெயர்.

இத் திருவெண்பாவால் அபரஞானத்தால் வீட்டையக் கூடாது என்று அறிவித்தவாறு காண்க. (கக)

அறிவாலே பற்றி யனுபவித்து விட்ட
திறிபால் வருமோ கெடுவீ - ரறிவாய்நீ
ராம்போ தறிவிப்பான் றானா யவையிரண்டும்
போம்போதும் வாராப் பொருள்.

(உரை.) அறிவாய் நீர் ஆம்போது அறிவிப்பான் தான் ஆய் அவை இரண்டும் போம் போதும் வாராப்பொருள்—கருவிகள் முப்பத்தாறையும் நீக்கி அவற்றின் முடிவில் நின்றஅறிவுயாம் என்று அவ்வறிவாய் நீராகும்போது உம்மையும் தன்னை

யும் அறிவிப்பான் தானாகி, அந்த அறியும் அறிவும் அறிவிக்கும் அறிவும் ஆகிய அவை இரண்டும் நீங்கியபோதும் வாராத சிவனாகிய மெய்ப்பொருள்,

கெடுவீர் அறிவாலே பற்றி அனுபவித்து விட்ட கிறியால் வருமோ—கெடுவீர்காள்! தற்போத அறிவால் ஒன்றைப் பாவித்துப்பற்றி, இஃது இங்ஙனம் இருப்பது என்று அப்போதத்தால் அநுபவித்து அறிந்து, மீட்டும் அப்பாவனையை விடுத்த பொய்யினால் வருமோ?

(குறிப்பு.) பாவனையில் தோன்றும் வடிவ மாயை, அவ்வடிவில் இதம் பிறத்தல் கருமம், அவ்வடிவை மெய்யாகக் கருதப்பண்ணுவது ஆணவம் ஆகலின், "கிறியால்வருமோ கெடுவீர்" என்றார்.

அருளும் ஆன்மபோதமும் நீங்கியபோது ஆன்மா சிவமயமாயிருக்கும் ஆகலின், "அவை யிரண்டும் போம்போதும் வாராப்பொருள்" என்றார்.

இத் திருவெண்பாவால் அருளையும் போதத்தையும் கடந்துநின்ற சிவம் போதத்திற்கு அகப்படாதென்று அறிவித்தவாறு காண்க. (கஉ)

அழிப்பே யவனுக்கு மிச்சையது வாழ
விழுப்பே யுனக்கிச்சை யென்றா - யிழுப்பை
யறியா ததுகா ணறியாவஞ் ஞானங்

(உரை.) அழிப்பே அவனுக்கும் இச்சை அது ஆனால் இழப்பே உனக்கு இச்சை என்னாய்—உன்போதத்தை ஒழிப்பதே சிவனுக்கும் இச்சை, அவனது இச்சாசத்தித் தொழிலும் அது வானால், அவனது இச்சைபோல் உன்போதத்தை ஒழிப்பதே உனக்கும் இச்சையாகக் கருதுவாய்,(நீ வீடடைய விரும்பினை எனின்) ;

(ஆயின் நீர் இங்ஙனங் கூறியவாற்றால் அஞ்ஞானங் கெடுதல் வீடு அன்றென்பதும், போதங் கெடுதல் வீடு என்பதும் ஆயிற்று. இனி அஞ்ஞானமாவது யாது எனின்),

இழப்பை அறியாததுகாண் அறியா அஞ்ஞானம் இறி உன்போதம் கெடல் கேள்—அப்போத இழப்பை அறியாது கிரியையாதிகளை நீ செய்தலே அறியாமையாகிய அஞ்ஞானமென்று அறிதி. (ஆயின், அப்போத இழப்பை அறிதற்கு உபாயம் எங்ஙனம் எனின்), பொய்யனே! இனி உன்போதங் கெடுதற்கு உபாயம் செல்லுதும் நீ கேட்டி.

(குறிப்பு.) சிவன் பெத்த திசையில் உடலை ஒழித்து மாயையில் வைத்து இளைப்பாற்றுதல்போல், முத்தி திசையில் போதத்தை ஒழித்து ஆநந்தக்கடலில் வைத்து இளைப்பாற்றுவனாயினும், அவன் ஒழிக்கும் இச்சைபோல் தன்னை இழக்கும் இச்சைவைத்த ஆன்மபோதத்தை ஒழிப்பன் அன்றி, அப்போதத்தை ஒழிக்கும் இச்சையின்றிய ஆன்ம போதத்தை ஒழியானாகலின், "இழப்பே யுனக் கிச்சை யென்னாய்" என்றார்

இத் திருவெண்பாவால் தற்போத நாசத்தை விரும்பி ஞேர்க்கு மெய்ப்பொருள் கிடைக்குமென்று அறிவித்தவாறு காண்க. (கக)

மருந்து பிணியோடே மாண்டு புகைதீ
யெரிந்த விறகோ டிறக்கில் - விரிந்த
தொழின்மனத்தின் மட்டேநீ தோயுமதென் ஞடி
நிழல்புதைத்தாற் போலெதிர்போய் நில்.

(உரை.) மருந்து பிணியோடே மாண்டு புகை தீ எரிந்த விறகோடு இறக்கில்—பிணிமாண்டபோது அது நீங்கப்பொருட்டு உண்டமருந்தும் அப்பிணியோடு மாண்டுபோம் எனில், எரிந்த விறகு இறந்தால் அவ்விறகோடு புகையும் தீயும் இறக்கும் எனில், அவைபோல், உன்போதம் இறந்தால் அப்போதத்தோடு கிரியை இறக்கும் என்றும், கிரியை இறந்தால் அதனேடு கருவியும் போதமும் இறக்குமென்றும் அறியாது உன் போதத்தால் கிரியை செய்யாநின்றனை;

விரிந்த தொழில் மனத்தின் மட்டே நாடி தோயுமது என் நீ நிழல் புதைத்தால்போல் எதிர்போய் நில்—நாளுவாய் விரிந்த உனது கிரியைத்தொழில்கள் மனத்தினளவே அன்றி வேறு இன்று ஆகலின், கருவிகள் முப்பத்தாறையும் போதத்தையுங் கடந்துநின்ற சிவத்தைக் கிரியை ஏதுவாகக்கொண்டு அப்போதத்தால் நாடி, அச்சிவத்தை அடையத்தொடங்கு—உன் கருத்து என்னை ! நீ அக்கருவிகளை வியதிகளைந்து அவற்றின் முடிவில் நின்ற உன்னை அருளால் அறிந்து, பெரியநிழ

வில் சிறிய நிழல் மறைந்தாற்போல் நீ அத்திருவருளில் மறைந்து எதிரீடெல்லாம்போய் நிற்றி; (இங்ஙனம் நிற்றி எனின், போதம் ஒழித்தற்கு உபாயமும் சிவத்தைப் பெறுதற்கு உபாயமும் இதுவேயாம்).

(குறிப்பு.) போதம் தோன்றியபோது கிரியைதோன்றும், அப்போதம் சிவத்தில் இறந்தபோது அப்போதத்தோடும் கிரியை இறக்கும். ஆகவின், போதத்தைப் பிணியாகவும், கிரியையை மருந்தாகவும் வைத்துக் கூறினார்.

விறகு எவ்வளவு இருந்தது அவ்வளவும் புகையும் தீயும் இறவா, அவ்விறகு இறந்தபோது அதனோடு புகையும் தீயும் இறக்கும்; அதுபோல, கிரியை எவ்வளவு இருந்ததோ அவ்வளவும் கருவிகளும் போதமும் இறவா, அக்கிரியை சிறிதும் தோன்றாது இறப்பின் அதனோடு இக்கருவிகளும் போதமும் இறக்கும் ஆகவின், "புகைதீ யெரிந்த விறகொடிறக்கில்" என்றார்.

கிரியை இறந்தபோது கருவிகளும் போதமும் இறக்குமென்றது எங்ஙனம் எனின், கிரியை இருந்தபோது போதம் வளர்வதே அன்றி இறவாது, அக் கிரியை இறந்தால் போதத்திற்கு அசைவின்றிக் கெடும். இப்போதம் கெடவே இதனைத் தொடர்ந்து நின்ற கருவிகளும் கெடும். ஆகவின், இங்ஙனமேன்று அறிதி.

பெரிய நிழலிற் சிறிய நிழல் புறம்போகாது அடங்கின் மறையுமதுபோல், பூரணமாகிய சிவபோதத்தில் கின்சிற்ஞமா

ஙிய ஆன்மபோதம் எதிரிட் டசையாது அடங்கின் அதில் மறையும் ஆகலின், "நிழல் புதைத்தாற்போல்" என்றார்.

நீங்கிநின்ற கருவிகளையும் அடைந்துநின்ற திருவருளையும் எதிரிடாது நிற்கவேண்டு மாகலின், "எதிர்போய் நில்" என்றார்.

இத் திருவெண்பாவால் போதம் அடக்குதற் குபாயங் கூறியவாறு காண்க. (கச)

காணு மறிவுநீ காட்டறிவு நாமவற்றைக்
காணக் கழலுங் கழற்றியிலே - நாணி
நமைத்திரும்பிப் பாராதே நான்றானென் றேதே
யமிழ்த்துகா கம்போனிற் பாய்.

(உரை.) காணும் அறிவு நீ காட்டுஅறிவு நாம் அவற்றைக் காணக் கழலும் கழற்றியிலே—கருவிகளை இது இது என்று காணும் அறிவு நீ, அவற்றை உனதுயிர்க்கு உயிராயிருந்து உனக்குக் காட்டும் அறிவு நாம், அக்கருவிகளினது குணங்களை நீ காணக் காண அவைகள் எல்லாம் உனக்கு அன்னியமாய் நீங்கும் நீக்கத்தில் அவற்றின் முடிவில் நின்ற உன்னைக் கண்ட பின்னர்,

நாணி நமைத் திரும்பிப் பாராதே நான் தான் என்றேதே அமிழ்த்து காகம்போல் நிற்பாய்—யான் காணும் அறிவு ஆகலின், அக்கருவிகளை அறிந்து நீங்கவும் என்னை உள்ளபடி அறியவும் எனக்குச் சுதந்தரம் இன்று என்று நீ நாணி எனக்குக் காட்டும் அறிவு ஒன்று உளது என்று நம்மை எதிரிட்டுப்பாராதே; அங்ஙனம் காணு மறிவும் காட்டும் அறிவுமாய் இருந்தோம்

ஆயினும், கண்ணொளியும் ஆதித்தன் ஒளியும் பிரிபடாதது போல் பிரிபடாதிருப்போம் ஆகலின், அஃதன்றி இங்ஙனம் பிரிபடாதிருந்த பரிபூரணத்தை நான்தா னென்று கருதாதே; கடலில் அமிழ்த்திய கரகம் சலத்தை உள்ளே கொண்டு அக் கடலில் மறைந்தாற்போல், நீயும் அப்பரிபூரணத்துக்குள்ளே அமிழ்ந்தி நீ தோன்றாது அதனுள் மறைந்து நிற்பாய்.

(குறிப்பு.) கருவிகளினது குணங்களை எதிரிட்டு அறியாதபோது அவைகள் ஆன்மாவிற்கு அன்னியமாய் நீங்கா ஆகலின், "காணக்கழலும்" என்றார்.

கருவிகளை எல்லாம் நீங்கி ஆன்மா அருள்வடிவாயபோது அவ்வருட் பூரணமெல்லாம் தானாய்த் தோற்றும் ஆகலின், "நான்றா னென்னாதே" என்றார்.

இத் திருவெண்பாவால் கருவிகள் நீங்குதற்கு உபாயமும் அவற்றை நீக்கித் தன்னை அருளால் அறிந்து அருட்பூரணம் விளங்கியபோது போதம் சேவியாது அருளில் மறைந்து நிற்றற்கு உபாயமும் அறிவித்தவாறு காண்க. (௧௫)

வதுவைச் சடங்கதனை மைதுனமாக் கொண்ட
புதுமைச் சிவானந்தம் போதும் - பதையா
விளக்கொளியி லெண்ணெய் வியாபியா னாற்போற்
கொளக்கொடுத்தல் சத்தியமாக் கொள்.

(உரை.) வதுவைச் சடங்கதனை மைதுனமாக் கொண்ட புதுமைச் சிவானந்தம் போதும்—தன் புருடனைக் கூடி இன்புறுதற்கு ஏதுவாகச் செய்யும் கலியாணச் சடங்கினை அவனோடும் கூடி இன்புறுதலாகக் கருதிக்கொண்ட பேதைப் பெண்போல், சிவனாகிய புருடனை ஆன்மநாயகி கூடி இன்புறுதற்கு ஏதுவாகச் செய்யும் கிரியைத்தொழிலை அவனோ

டும் கூடி நீ இன்புறுதலாகக் கருதிக்கொண்ட இந்தப் புதுமையாகிய சிவானந்தம் அமையும்; (இனிக் கிரியையைச் சிவாநந்தமாகக் கருதும் கருத்தைவிட்டு),

பழையா விளக்கு ஒளியில் எண்ணெய் வியாபி ஆனால் போல் கொளக்கொடுத்தல் சத்தியமாக் கொள்—அசையாது நின்று விளக்கொளிக்குள் எண்ணெய் வியாபியாற்போல், நீ சிவத்தில் வியாபியாய் அசைவற நின்று அது விழுங்கிக்கொள்ள உன்னைக் கொடுத்தல் உண்மையாயுள்ள முத்தி என்று அறிந்துகொள்ளுதி.

(குறிப்பு.) விளக்கொளியில் எண்ணெய் வியாபித்துக் கொண்டு நிற்க, இவ் எண்ணெய்யை அவ்வொளி விழுங்கித் தான் பிரகாசித்தல்போல், அச் சிவபூரணத்தில் ஆன்மா வியாபித்து அசைவற நிற்கவே, அச்சிவபூரணம் இவ்வான்மாவை விழுங்கிக்கொண்டு தான் பிரகாசிக்கும் ஆகலின், "விளக்கொளியி லெண்ணெய் வியாபி யானாற்போற் கொளக்கொடுத்தல்" என்றார்.

தன்னைக்கொடுப்பது சத்தியம் எனவே தன்னாற்செய்யும் கிரியை அசத்தியம் என்பது தானே ஆயிற்று.

இத் திருவெண்பாவால் போதத்தாற் செய்யும் கிரியை முத்திக்கு ஏது அன்று என்பதும், போதத்தைச் சிவனுக்கு ஊணாகக்கொடுத்து நிற்றலே ஏது என்பதும் அறிவித்தவாறு காண்க. (கசு)

## நான்காம் அதிகாரம்

## கிரியைக் கழற்றி

## முற்றும்.

ஐந்தாம் அதிகாரம்.

# சரியைக்கழற்றி.

நடந்துங் குளித்துமிது நல்லநா ளூணை
விடுந்தொழிலான் மெய்வருந்தி வீடென் - றடங்காதா
ரென்றுசுக மேயிருப்ப ரிப்போதே துக்கமிவர்க்
கென்றெதிர்போ யின்பமுதிக் கும்.

(உரை.) நடந்தும் குளித்தும் இது நல்ல நாள் ஊணை விடும் தொழிலால் மெய்வருந்தி வீடு என்று அடங்காதார்—பூப் பிரதக்ஷிணமாய் நடந்துசென்றும், கங்கை முதலிய தீர்த்தங்களாடியும், இது நல்ல நாள் என்ன ஊணை விடுத்தும், இவை முதலியன செய்யும் சரியைத்தொழிலால் மெய்வருந்தி, இங்ஙனம் செய்வனவே வீடென்று துணிந்து தற்போதம் அடங்காதார்,

என்று சுகமே இருப்பர் இப்போதே துக்கம் இவர்க்கு என்று எதிர்போய் இன்பம் உதிக்கும்—எக்காலம் ஓர் தொழிலையும் செய்யாது சுகமே இருப்பர்? இத்தொழில்களான் இவர்க்கு இம்மைக்கண்ணே துன்பம், இத்தொழில்வாசனை மறுமைக்கண்ணும் தொடரும் ஆகலின், எக்காலம் தான் என்றும் சிவம் என்றும் எதிரிடும் போதம் ஒழிந்து ஆநந்தம் தோன்றும்?

(குறிப்பு.) தாம் குறித்தது வீட்டின்பமா யிருந்தும் அத்னைப் பெறுதற்கு ஏது அல்லாத சரியைத்தொழிலை மிகவும் மெய்வருந்திச் செய்தலான், அவ்வின்பத்தைப் பெறுதற்கு ஏதுவாய்த் தற்போதத்தையும் எளிதில் ஒழித்து, அதனை எக் காலம் பெறுவரோ என்னும் காருணியத்தால், "என்றெதிர் போ யின்பமுதிக்கும்" என்றார்.

இத் திருவெண்பாவால் வீடடையத் தொடங்கினோர் அறியாமையான் இத்தொழிலைச் செய்து வருந்துகின்றார் அந்தோ என்று இரங்கிக் கூறியவாறு காண்க. (க)

உடலா லுழைத்தா லுடலொழியு மென்று
கெடுவீ ரிதையெங்கே கேட்டீ - ருடலே
நடையா டியபிணம்போ னான்போய்த் திரியக்
கிடையாதோ வென்றுகே ளீர்.

(உரை.) உடலே நடை ஆடிய பிணம்போல் நான்போய்த் திரியக் கிடையாதோ என்று கேளீர்—இந்த உடல் தானே நடையாடிய பிணம்போலத் தற்போதம் கெட்டு நிலத்தின்கண் உலாவ எமக்கு உண்டாகாதோ என்று ஞானாசாரியரைக் கேளாத நீங்கள்,

கெடுவீர் உடலால் உழைத்தால் உடல் ஒழியும் என்று இதை எங்கே கேட்டீர்—கெடுவீர்காள், உடலால் வருந்தி யாத்திரை சேறல் முதலிய இச்சரியைத் தொழிலைச் செய்தால் பிறப்பு நீங்கும் என்று இந்த உபதேசத்தை எந்தக் குருவினிடத்துக் கேட்டீர் ?

(குறிப்பு.) ஞானசாரியரை அடைந்து அனுக்கிரகம் பெற்ற மெய்ஞ்ஞானிகட்குக் கருவிகள் முப்பத்தாறும் தற்போதமும் கெடலான், அக்கருவிச் சேட்டையும் போதச்சேட்டையும் இன்றாம்; ஆகலின், அவரது திருமேனி உள்ளும் புறனும் வறுங் கடத்து ஆகாயம்போல் சிவமே நிறைந்திருக்கும்; அவர் நிலத்தில் சரிக்கும்போதும் அக்கடம் ஆகாயத்திற் செல்வது போல் தோற்றும்; ஆகலின், "நடையாடிய பிணம்போ லுன் போய்த்திரிய" என்றார்.

கேளீர் எங்கே கேட்டீர் என முடிக்க.

வீடடையத் தொடங்கி இங்ஙனம் செய்தலால், "கெடுவீர்" என்றார்.

இத் திருவெண்பாவால் அவர் கேட்ட உபதேசத்தை மறுத்தவாறு காண்க. (உ

எந்தவூர் நீரென்றா லிப்போ திருந்துநாம்
வந்தவூர் தன்னை மறந்தோமேல் - அந்தவூர்க்
கின்றுநாம் போம்வழியே தென்னினுமக் கேழுலகு
மொன்றாபோ லொன்றாந்தான் றாம்.

(உரை.) நாம் எந்த ஊர் நீர் என்றால் இப்போது இருந்து வந்த ஊர் தன்னை மறந்தோமேல்—யாம் இந்த ஊரிலிருந்து மற்றோர் ஊருக்குச் சென்றபோது, அவ்வூரில் இருந்தான் ஒருவன் எந்த ஊர் நீர் என்று எம்மைக் கேட்டால் இப்போது இருந்துவந்த ஊர்தன்னை அவனுக்கு இன்ன ஊர் என்று சொல்ல மறந்தோம் எனின்,

அந்த ஊர்க்கு இன்று நாம் போம் வழி ஏது என்னின் உமக்கு ஏழுலகும் ஒன்றுபோல் ஒன்று தோன்றும்—முன்னிருந்து வந்த ஊருக்கு இப்போது நாம் போதற்கு வழி யாதென்று நீர் நாடின், உமக்கு ஏழுலகும் ஒன்றுபோல் தோன்றி அந்த ஊருக்குச் செல்லும் வழிபோல் மற்றோர் ஊருக்குச் செல்லும்வழி தோன்றும் (எனின், இங்ஙனம் கேட்டோனுக்கு ஊர்ப்பெயரும் சொல்ல மறந்து அவ்வூருக்குச் செல்லும் வழியும் தெரியாது மயங்கிய இப்போதம் கொண்டோ திரிகரணங்களையும் கடந்து நின்ற பூரணசிவத்தை நீர் அடையத் தொடங்கினீர்?)

(குறிப்பு.) அவர்க்குத் தம்மைப்போல் இவரும் சோற்றலான், அவரை இவர் தம்மோடுங் கூட்டி "மறந்தோமேல்" என்றார்.

ஊர்ப்பெயர் சொல்ல மறந்துபோவது தூலபுத்தியால் தெரியாது யாம் அங்ஙனம் மறப்பது இலம் என்று அவரைத் தம்மைவிடப் பிரித்துநோக்கி, உமக்கு ஏழுலகும் ஒன்றுபோல் ஒன்று தோன்றும் எனத் தூலமாகிய வழித்திகைப்பை எடுத்துக் காட்டினார்.

நெறிக்கண் திகைதப்பியபோது முன்போல் நான்கு திசையும் பிரிந்து தோன்றாது ஆகலின், "ஏழுலகு மொன்று போல்" என்றார்.

இத் திருவெண்பாவால் ஞானாசாரியரால் அன்றி ஆன்மாக்கள் சுதந்திரத்தால் வீடடையக்கூடாதென்று சுதந்திரதின மறிவித்தவாறு காண்க. (க)

வேட்டியுந் தாழ்வடமும் வெண்ணீறும் வெண்பல்லுங்
காட்டுவது ஞானக் களவுகாண் - தேட்டமற்றோன்
பூரணன்கான் சிற்றறிவன் பொய்ப்பாச மென்றறிந்
தோர்வடிவும் வார்த்தையுமுண் டோ. [தார்க்

(உரை.) வேட்டியும் தாழ்வடமும் வெண் நீறும் வெண் பல்லும் காட்டுவது ஞானக்களவு—காவிவேட்டியும், உருத்திராக்கத் தாழ்வடமும், மெய்ம்முழுதும் பூசும் வெண்ணீறும் அடைக்காய் தின்னாதவெண்பல்லும் இவை முதலிய சிவவேடங்களை மெய்யிற் காட்டுவது ஞானத்திருட்டு;

தேட்டம் அற்றோன் பூரணன் சிற்றறிவன் பாசம் பொய் என்று அறிந்தார்க்கு ஓர் வடிவும் வார்த்தையும் உண்டோ— ஓர் பொருட்கண்ணும் விருப்பம் அற்றோனாகிய சிவன் பரிபூரணன், சீவன் சிற்றறிவன், பாசம் பொய் என்று அறிந்த ஞானிகட்கு ஓர் சமய வேடமும் சமயாபிமான வார்த்தையும உளவோ? இல.

(குறிப்பு.) அகத்து ஞானம் இன்றிப் புறத்து வேடத்தானும் வசனத்தானும் ஞானிபோற் காட்டினமையால், "ஞானக் களவுகாண்" என்றார். அகத்து ஞானமும் புறத்து வேடமும் உள எனின், ஞானக்களவு அன்று என்றாயிற்று.

சிவம் அணுத்திரள் முதலிய பொருள்கட்கெல்லாம் உட்புறனாகிய பரிபூரண அறிவாகலின், அதற் கோர்சமயம் இல்லை. சிற்றறிவு பொய்யாகிய பாசத்தை விட்டுநீங்கி அப்பரிபூரண அறிவோடும் கலந்தபோது, அப்பரிபூரண அறிவாய் நிற்கும்

அன்றி, அது இது என்னும் பகுப்பில்லை ஆகலின், "ஓர் வழியும் வார்த்தையுமுண்டோ" என்றார். காண் - அசை.

இத் திருவெண்பாவால் வேடத்தால் மிகவும் சிறப்புள்ளாராயினும், அகத்து ஞானம் இலர் எனிற் சிறப்பிலர் என்பதும், வேடம் யாதும் இலராயினும் அகத்து ஞானம் உள்ளார் சிறப்புளர் என்பதும் அறிவித்தவாறு காண்க. (௯)

**கல்வியாய்ப் புத்தகமாய்க் காவிகடுக் குட்கட்டாய்ப்**
**பல்லின்வெளுப் பொத்த பசுமார்க்க - மெல்லை**
**கழன்ற தியானத்திற் கண்சிமிட்டு மாங்காண்**
**சுழன்றபெரு மாயைத் தொழில்.**

(உரை.) கல்வி ஆய்ப் புத்தகம் ஆய்க் காவி கடுக்குள் கட்டு ஆய்ப் பல்லின் வெளுப்பு ஒத்த பசுமார்க்கம்—தாம் கற்ற கல்விகளைப் பேசுவதாய்ப் புத்தகம் கையிற் கொள்வதாய்க் காவி வேட்டி உடுப்பதாய்த் திருமேனிக் கடுக்கன் காதிலே இடுவதாய்க் கண்டத்தில் கெவுடம் கட்டுவதாய்ப் பேச்சிற்கும் வேடத்திற்கும் ஒப்பப் பல் வெளுப்பும் ஒத்திருந்த பசுஞான நெறியினை உடையார்,

எல்லை கழன்ற தியானத்தில் கண்சிமிட்டும் ஆம் சுழன்ற பெருமாயைத் தொழில்—பிருதிவிமுதல் நாதம் ஈறு என்று அளவுகூறப்பட்ட கருவிகள் முப்பத்தாறையும் கழன்ற சிவத் தியானத்தை உடையவரைப்போலக் கண் மேற் செருகி ஆசனங்கட்டிக்கொண்டு இருப்பர்; இவர் இங்ஙனம் இருப்பதாம் கறங்குபோல் சுழலாநின்ற பெரியமாயையினது தொழிலாவது.

(குறிப்பு.) ஞானம் இன்றி வேடங் கொண்டோர் வேடசாரிகளோடு ஒப்பு ஆகலின், "பசுமார்க்கம்" என்றார்.

அகத்துப் பரிபூரண ஞானம் இன்றிக் கண் சிமிட்டிப் பத்திந்திரியங்களையும் அப்போ தடக்கி ஆசனங்கட்டி இருப்போர்க்கு, முன்னர் ஞானேந்திரியங்களால் அறிந்து, கன்மேந்திரியங்களால் தொழில்செய்யும் மனம், அப் பத்திந்திரியங்களும் அடங்கலின் அவற்றின் வாசனையோடும் முன்னர் ஏறிய வாசனையோடும் உள்ளே சுழலும் அன்றி அடங்காது ஆகலின், "சுழன்ற பெருமாயைத்தொழில்" என்றார்.

காண்-அசை.

இத் திருவெண்பாவால் ஞானநிட்டை யன்மையான் அவரது நிட்டையை மறுத்தவாறு காண்க. (௫)

ஞானக் கிரியை நடிப்பவர்க்கு நாடோறும்
போனத் தளவே புசிப்பன்றி - யேனுந்
துறவா யவாவறுத்து மெய்யுணர்ந்த தூய
வறிவார்க் கறியா வின்பம்.

(உ-ரை.) ஞானக்கிரியை நடிப்பவர்க்கு நாள்தோறும் போனத்து அளவே புசிப்பு அன்றி—அகத்து ஞானம் இன்றிப் புறத்து ஞானாசாரமாய் நடிப்பவர்க்கு எக்காலமும் அன்னபானத்தளவு வரும் விடயானந்தாநுபவம் அன்றி,

துறவு ஆய் அவா அறுத்து மெய் உணர்ந்த தூய அறிவார்க்கு அறியா இன்பம் என் ஆம்—துறவினை உடையராகித் துறந்த அப்பொருள்கள்மேல் முன்னர் வாசனையால்

ஏழும் அவாவினை அறுத்து மெய்ப்பொருளை உணர்ந்த நிர்மல ஞானிகட்கும் தோன்றாத சொரூபானந்தானுபவம் ஏன் உண்டாம்?

(குறிப்பு.) இவர்செய்யும் ஆசாரத்தைப் பிறர் கண்டு பெரியர் எனப் போனகங் கொடுத்தலின், "போனத்தளவே புசிப்பன்றி" என்றார்.

பேரின்பம் போதநாசத்தில் தோன்றாமல் தோன்றலான், "அறிவார்க் கறியா வின்பம்" என்றும், இவ்வின்பம் பெறுதற்கு ஏதுவாய ஞானம் இன்மையால், "ஏனும்" என்றுங் கூறினார்.

துறவு-புறப்பற்று நீங்குதல். அவாவறுத்தல் - அகப்பற்று நீங்குதல். இவ்விருவகைப் பற்றும் நீங்கவே சகல கேவலங்களும் நீங்கும். இவை நீங்கவே மெய்யுணர்வு தோன்றும். ஆகலின், "துறவா யவாவறுத்து மெய்யுணர்ந்த தூயவறிவார்' என்றார்.

போனகம் என்பது போனம் என்றாயிற்று.

இத் திருவெண்பாவால் ஞானம் இன்றி ஞானசாரமாத்திரம் செய்வோர்க்குப் பிறப்பின்பமே அன்றி வீட்டின்பம் இன்றென்று அறிவித்தவாறு காண்க. (௬)

இந்த இன்பம் யாவரா லறியக்கூடுமென்று இரங்கிக்கேட்ட மாணாக்கனை நோக்கி மேற் கூறுகின்றார்.

இன்பே யறிவுக் கிடம்புள்ளி னொந்ததுபோற் [தாற்
றன்பே யணுப்பொருப்பாய்த் தூக்கிக்கும்-நன்குணர்

பேரின்புக் கிச்சை பிறந்ததினிக் கேளுனக்குப்
பேரின்பந் தேடிப் பெறுய்.

(உரை.) இன்பே அறிவுக்கு இடம்—இந்தப் பேரின்பம் பரிபூரணம் ஆகலின், இவ்வின்பமே ஆன்மா இருத்தற்கு இடம்;

(ஆனால் அவ்வின்பம் இங்ஙனம் இருக்கும் எனின், அதனை யான் இப்போது அடையவேண்டும், இனிப் பிறவித்துன்பஞ் சிறிதும் படமாட்டேன் என்ற மாணுக்கனை நோக்கி மேற்கூறுகின்றார்.)

புள் இளைந்ததுபோல் துன்பே அணுப்பொருப்பு ஆய்த் துக்கிக்கும் நன்குணத்தால் உனக்குப் பேரின்புக்கு இச்சை பிறந்தது இனிக்கேள் பேரின்பம் தேடிப் பெறுய்—உயிர்ப்பு ஒலி சிறிது தோன்றினும் அதனைப் பேரொலியாகக் கண்டு அசுணப்புள் வருந்தியதுபோல், நீ இத்தேகாதி பிரபஞ்சங் களான் வரும் துன்பம் அணுவளவு ஆயினும் அதனைப் பொருப்பளவாகக் கண்டு துன்புறும் நற்குணத்தால் உனக்கு இப்போது பேரின்பத்தின்மேல் இச்சை சனித்தது; ஆகலின், இனி அதனை அடைதற்கு உபாயம் சொல்லுதும் கேட்டி, அப்பேரின்பத்தை யாம் கூறிய உபாயப்படி தேடிப் பெறுதி.

(குறிப்பு.) விடயசுகத்தைத் துன்பம் எனக்கூறினர்; இதனை அங்ஙனம் கண்டோர்க்குச் சொரூப சுகத்தின்மேல் இச்சை சனிக்கும் ஆகலின், "துன்பே யணுப்பொருப்பாய்த் துக்கிக்கு நன்குணத்தாற் பேரின்புக் கிச்சை பிறந்தது" என்றார்

இத் திருவெண்பாவால் பேரின்பத்தை விரும்பிக் கேட்ட மாணாக்கனுக்கு விடை கூறியவாறு காண்க. (எ)

பேரின்ப முன்னைப் பிரியா துன் னுண்மையது
வோரின்ப மாய்விடயத் தூடுதிப்பும் - பேரின்
பழிவிலே தோன்று மறிவு மயலா
மொழியு மிரண்டின்ப மும்.

(உரை.) பேரின்பம் உன்னைப் பிரியாது அது உன் உண்மை—அந்தப் பேரின்பம் உன்னைவிட்டு எக்காலமும் ஓர் அணுவளவேனும் பிரியாதிருப்பது, அவ்வின்பமே உனக்கு உரித்தாய மெய்ம்மையாய் உள்ளது;

(அங்ஙனம் என்னைவிட்டு நீங்காது எனக்கு உரித்தாய மெய்ம்மையாய் இருப்பது எனக்குத்தோன்றாது இருப்பானேன் எனின்),

ஓர் இன்பம் ஆய் விடயத்தூடு உதிப்பும் பேரின்பு அழிவிலே தோன்றும்—உன்னால் அறியப்பட்டு ஓரின்பமாய் வனிதையர் விடயத்தூடு தோன்றுவதும், யாம் கூறிய அந்தப் பேரின்பமும் எதிரீடு அற்ற இடத்துத்தோன்றும்;

அறிவும் அயல் ஆம் இரண்டு இன்பமும் ஒழியும்—ஆணறிவும் பெண்ணறிவும் எதிரிட்டபோது அவ்வறிவுகளும் அயலாம், (ஆண்குறியும் பெண்குறியும் எதிரிட்டபோது இக்குறிகளும் அயலாம், இவைகள் அயலாகவே இவ்விருவகைக் கூட்டுறவுகளால் வரும்) இரண்டின்பங்களும் அயலாய் ஒழியும்.

(குறிப்பு.) ஆண்குறியும் பெண்குறியும் கலந்து எதிரிட்டழிந்தபோதும், ஆணறிவும் பெண்ணறிவும் கலந்து எதிரிட்டழிந்தபோதும், அவ்வின்பமும் இவ்வின்பமும் தோன்றலான், "அழிவிலே தோன்றும்" என்று இருமைக்கும் பொதுவாகக் கூறினர்.

குறிகளும் அறிவுகளும் எதிரிட்டபோது இன்பம் இன்மையால், "ஒழியுமிரண்டின்பமும்" என்றார்.

இருவகைக் குறிகளும் கலந்தபோது அவை இருந்தும் தோன்றாது அழிதலானும், ஆண்குறி பெண்குறிக்கு உள்ளீடாயிருத்தலானும், இன்பம் தோற்றலானும், அவற்றினது கூட்டரவை இவற்றினது கூட்டரவிற்கு உவமையாகக் கூறினர்.

"அறிவும் அழிவா" மென்ற உம்மையால் ஆண்குறி பெண்குறிகளும், "அழிவிலே தோன்று" மென்றமையான் அழிவது எதிரிட்டபோது என்பதும் வருவிக்கப்பட்டன.

விடயாநந்த மேலீட்டால் பரவசமாவதுபோல் சொரூபாநந்த மேலீட்டால் பரவசமாவதுங் கொள்க.

இத் திருவெண்பாவால் பேரின்பம் ஆன்மாவை விட்டு நீங்காது என்பதும், அதனைப் பெறுதற்கு உபாயமுங் கூறியவாறு காண்க. (அ)

விடயாநந்தம் அறிதல்போல் அவ்வானந்தமும் அறியக்கூடாதோ எனின், மேற்கூறுகின்றார்.

விடய முநித்து நின்று விட்டவிடங் கீழ்மே
லிடைவிடா தேநிறைந்த வின்பந் - தொடுவேசா

தோன்றி யழிவதுவே துக்கசுக மூன்னுண்மை
தோன்றா வடங்காச் சுகம்.

(உரை.) விடயம் உதித்து நின்று விட்ட இடம் கீழ் மேல் இடைவிடாதே நிறைந்த இன்பம் தொடுவரோ—ஓர் விடயத்தின்கண் தோன்றி நின்று அழியப்பட்ட இன்பம் கீழாய இன்பம், வெவ்வேறு வகைப்பட்ட பொருள்களினும் இடையறாது பரிபூரணமாய் நிறைந்த இன்பம் மேலாய இன்பம்; ஆகலின், இவ்வின்பத்தைப் பெற்றுள்ளார் தற்போதத்தால் அதனைப் பற்றுவரோ? (அஃது எங்ஙனம் எனின்),

தோன்றி அழிவதுவே துக்கசுகம் உன் உண்மை தோன்றா அடங்காச் சுகம்—போதத்தால்பற்றி அறிந்து அனுபவக்கும் அவ்வின்பம் தோன்றி அழிவது; அங்ஙனம் தோன்றி அழிவதுவே சுகமும் துக்கமும் ஆகலினும், உனதுள்ளே மெய்ம்மையா யிருந்த இன்பம் ஓர் காலங்களினும் உற்பத்தி நாசம் இன்றாய வீட்டின்பம் ஆகலினும்.

(குறிப்பு.) அவ்வின்பம் ஓர் விடயத்தில் தோன்றி அழிதலால் பற்றி விடப்பட்டது. இவ்வின்பம் பூரணம் ஆகலானும் உற்பத்தி நாசம் இன்மையானும் பற்றுதல விடுதல் இதற்கு இன்மை ஆயிற்று.

தோன்றியபோது சுகமும் மறைந்தபோது துக்கமும் வருதலின், "தோன்றியழிவதுவே துக்கசுகம்" என்றார். இச் சுகதுக்கங்களால் விழைவு வெகுளியும், இவ்விழைவு வெகுளிகளால் இருவினைகளும், இவ்விருவினைகளால் பிறப்பும் உண்டாம் என்பதுங் கொள்க.

அவ்வின்பம் பற்றியபோது தோன்றும், விடுத்தபோது மறையும்; இவ்வின்பம் பற்றியபோது மறையும், விடுத்தபோது தோன்றும் என்பதுங் காண்க. [அவ்வின்பம் - விடயவின்பம் இவ்வின்பம் - வீட்டின்பம்.]

இத் திருவெண்பாவால் இவ்வின்பம்போல் உவ்வின்பம் போதத்தால் அறியக்கூடாதென்று அறிவித்தவாறு காண்க. )

ஆயின் அவ்வின்பம் இத்தலத்தில் தோன்றுவதில்லை ஆகவின், மற்றோர்தலத்தில் சென்றிருந்து தவத்தைப் பண்ணி அதனைப் பெறுகின்றேன் என்ற மாணாக்கனை நோக்கி மேற் கூறுகின்றார்.

எங்கும் பரிபூ ரணமென்னி னீதல்ல
வங்கங்கா மென்னும்போ தங்கிலையோ - பங்காகே
ளாகாயந் தீண்டிவிடு மற்ப வறிவழிவி
லேகாண்பே ரின்பமுதிக் கும்.

(உரை.) எங்கும் பரிபூரணம் என்னின் ஈது அல்ல அங்கு அங்கு ஆம் என்னும்போது அங்கு இலையோ பங்கா கேள்—அப்பேரின்பம் இருநூற் றிருபத்துநாலு புவனம் எங்கும் உட்புறமாய் நிறைந்துள்ள பரிபூரணமென்று வேதாகமங்கள் கூறும் எனின், அவ்வின்பம் பெறுதற்கு ஈது இத்தலம் அன்று காசி முதலிய அந்தந்தத் தலங்களில் பெறலாம் என்று நீ கூறும்பொழுது, நீ இருந்த அத் தலத்தில் அவ்வின்பம் இன்றாயதோ? பகுப்பறிவு நீங்காதவனே! கேட்டி,

ஆகாயம் திண்டிவிடும் அற்ப அறிவு அழிவிலே பேரின்பம் உதிக்கும் காண்—பரையோகமாகிய ஞானகாசத்தைப் பெற்றவிடத்து அதற்குமேல் தோன்றும் அநுபவத்தை நாடித் தான் நின்ற நிலையைத் தழுவும் அற்பவறிவு அழிந்தவிடத்திலே உனக்குப் பேரின்பம் தோன்றுமென்று அறிதி.)

(குறிப்பு.) பரையோக நிட்டை பெற்ற காலை அதற்குமேல் தோன்றும் சிவத்தை நாடாது அவ்வருளையும் மறவாதிருப்பின், சிவதரிசனம் தானே தோன்றும், அது தோன்றவே கிஞ்சிஞ்ஞபோதம் அழியும், அஃதழியவே பேரின்பம் தோன்றும் ஆகலின், "ஆகாயந் திண்டிவிடு மற்பவறி வழிவிலேகாண் பேரின்ப முதிக்கும்" என்றார்.

* "*

கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாகில்
பிறியாத சிவன்றானே பிறிந்து தோன்றிப்
பிரபஞ்ச பேதமெல்லாந் தானாய்த் தோன்றி
நெறியாலே யிவையெல்லா மல்ல வாகி
நின்றென்றுந் தோன்றிடுவ னிராதார னாயே"

என்பது சித்தியார்.

† "இறைதேர் கொக்கொத் திரவுபக
லேசற் றிருந்தே வேசற்றேன்
கறைசே ரடியார் களிசிறப்பக்
காட்சி கொடுத்துன் னடியேன்பால்

* எட்டாஞ்சூத்திரம் - 30.

† கோயின்மூத்த திருப்பதிகம் - 5.

பிறைசேர் பாலி னெய்போலப்
பேசா திருந்தா லேசாரோ"

என்பது திருவாசகம்.

இத் திருவெண்பாவால் பூரண இன்பம் உறுதற்குத் தலம் இடம் இன்றென்றும் போதகாசம் இடமென்றும் அறிவித்தவாறு காண்க. (௧௦)

அப் பேரின்பம் அடைதற்கு இச் சிற்றின்பமாகிய விடயந் தடை ஆகலின், இதனை ஒழித்து அதனை அடைவேன் என்ற மாணாக்கனை நோக்கி மேற்கூறுகின்றார்.

உடம்புள்ள மட்டும் விடய மொடுங்கா
வொடுங்குகிலோ கேவலமா மும்ப - ரிடம்புட்
பறந்தாற் கலங்குமோ பாசத்தி னுண்மை
யறிந்தாற் சுடாத்தடைபோ லாம்.

(உரை.) உடம்பு உள்ள மட்டும் விடயம் ஒடுங்கா ஒடுங்குகிலோ கேவலம் ஆம்—விடயங்கள் அநுபவித்தற்கு ஏதுவாய உடம்பிருக்கும் அளவும் அவ்விடயங்கள் ஒழியா, உடம்போடு ஒற்றுமையாயிருந்த ஞானேந்திரியங்கள் ஐந்திற்கும் எதிரீடாய் விடயங்கள் தோன்றுந்தோறும் அவற்றை ஒழிப்பேன் எனின், அங்ஙனம் ஒழிக்கில் கருவிகள் எல்லாம் ஒழியும், அவை ஒழியிலோ கேவலம் வந்து அடிக்கும்; (ஆயின் அவற்றை ஒழிக்குமாறு எவ்வாறு எனின்),

உம்பர் இடம் புள் பறந்தால் கலங்குமோ பாசத்தின் உண்மை அறிந்தால் சுடர்த் தடைபோல் ஆம்—ஆகாயத்தி

னிடமாய்ப் புள் பறந்தால் அவ்வாகாயம் அசையாததுபோல் நீ இம் மாயாவடிவத்தை யான் அலன் என்று நீங்கி அருள் வடிவாய் இருத்தி எனின், அப்போது விடயங்கள் வந்து அடுப்பினும் நீ அசையாதிருப்பை; ஆயின், மாயாவடிவமா யிருந்தபோது வருத்திய விடயம் திருவருள் வடிவாயிருந்தால் வருத்தாதிருப்பது எங்ஙனம் எனின், அசத்தும் துக்கம் அநித்தியம் அன்னியம் என்று பாசத்தின் உண்மையைத் திருவருளால் அறிந்தனையாயின், அக்கினிச்சூட்டைத் தடுக்கும் மந்திரம்போல், அவ்வறிவு கருவிச்சேட்டையைக் கெடுக்கும் ஆகலின், அக்கினியிருந்தும் சுடாததுபோல் கருவிக ளிருந்தும் முன்போல வாதியா வாகும்.

(குறிப்பு.) தான் கருவிகட்கு அன்னியமாய்ப் பிரிந்து நின்று அருளால் அடக்காது, அக்கருவிகளோடுங் கூடி நின்று போதத்தால் அடக்கினமையால், "கேவலமாம்" என்றார்.

அருள்வடிவா யிருந்தபோது கருவிகள் அசைவதே அன்றித் தான் அசையான் ஆகலின், "உம்பரிடம் புட்பறந்தாற் கலங்குமோ" என்றார்.

இத் திருவெண்பாவால் கருவிகளை உள்ளபடி அருளால் அறிந்து நீங்கி, அவ் வருளில் மறைந்து நின்றால் மீட்டும் அவைகள் வந்து வாதியா என்று அறிவித்தவாறு காண்க.(கக)

விடயங்களை இந்திரியங்களால் அறிந்து அநுபவித்தற்கு ஏதுவாய இவ்வுடலை ஒழித்து இவ்வின்பத்தைப் பெறுவேன் எனின், மேற் கூறுகின்றார்.

உடலிருந்தென் போயென் னுருவருவ மூன்று
மடைவர் தொழிலு மநாதி - குடமுடைத்து
மண்ணென்ன வேண்டுமோ மாயா வயிந்தவத்து
முண்ணின்று பார்த்தியிப் போதும்.

(உரை.) உடல் இருந்து என் போய் என் உரு அருவம் மூன்றும் அடைவர் தொழிலும் அநாதி—இவ்வுடல் இருந்ததனால் அவ்வின்பம் வருதற்குத் தடை என்னை? இது போயதனால் அவ்வின்பம் வருமாறு என்னை? அவ்வின்பம் வருதற்குத் தடை இவ்வுடலால் யாதும் இன்று; உருவமும் அருவமும் உருவருவமும் ஆகிய இம்மூன்று வடிவத்தினையும் உடைய ஸர்வஜ்ஞர் (அநாதியிலே ஆணவமலத்திற் கிடந்த உன்னைக் காருணியத்தால் எடுத்து மாயையில் தநுகரண புவன போகங்களைக் கொடுத்து, இருவினை ஒப்பு மலபரிபாகம் வருவித்து, வீடடைவிக்கும் பொருட்டுச் செய்யும்) பஞ்ச கிருத்தியங்களும் அநாதி; (ஆகலின், நீ இக்காயத்தை ஒழிப்பலெனக் கருதற்க);

குடம் உடைத்து மண் என்ன வேண்டுமோ மாயா வயிந்தவத்தும் உள் நின்று பார்த்தி இப்போதும்—ஒருவனுக்குக் கடத்தை மண்ணென்று அறிவிப்பதே அன்றி அக்கடத்தை உடைத்து மண்ணென்று அறிவிக்க வேண்டுமோ? அது போல், உனக்கு இவ்வுடம்பை மலமென்று அறிவிப்பதே அன்றி, இதனை அழித்து மலமென்று அறிவிக்கவேண்டுமோ? ஆகலின், இதனுள் இருந்தே இவ்வுடம்பையும் மற்றும் உள்ள

னவாய கருவிகளையும் மாயாமலமென்றும் உனக்கன்னியமென்றும் கண்டு நீக்கி, வயிந்தவ மாயையாகிய சுத்த தத்துவத்தின் முடிவில் நின்று, உன்னை அருளால் கண்டு அவ்வருளில் அசைவற இருத்தி, இப்போதும் அவ்வாநந்தம் உதயமாம்: (தேகமுடிந்த அப்போதும் அவ்வாநந்த மயமே யாவை).

(குறிப்பு.) பெத்த திசையில் பஞ்சகிருத்தியத்தால் பஞ்சாவத்தைகளையும் உண்டாக்கி நடத்தா நின்ற ஸர்வஜ்ஞர் இப்போது முத்தி திசையினும் உனக்குப் பஞ்சாவத்தைகளையும் நீக்கித் தமது திருவடி யாநந்தத்தைக் கொடுப்பர், நீ உடலை ஒழிக்கவேண்டுவது எதுக்கு என்று அறிவித்தற்கு, "அடைவாந் தொழிலு மாதி" என்றார்.

"இப்போதும்" என்றமையான், அப்போதும் என்பது வருவிக்கப்பட்டது.

இத் திருவெண்பாவால் அவ்வின்பம் பெறுதற்கு உடலொழித்தல் எதுவன்று, இவ்வுடலாதிகளை எல்லாம் தனக்கு அன்னியமென்று அருளாற் கண்டு நீங்கி, அவ்வருளில் நிற்றல் எதுவென்று அறிவித்தவாறு காண்க. (கஉ)

வேதாந்த முத்தியோ சித்தாந்த முத்தியோ உண்மை என்ற மாணாக்கனை நோக்கி மேற்கூறுகின்றார்.

கயிற்றரவுங் கட்டையினிற் கள்ளனும்போன் மாயா
மயக்கமற்ற வேதாந்த வாழ்வு - முயற்சிகெட்ட
வானந்தா தீதத்தே யாணவரா மாகமமுந்
தானந்தி னார்க்குச் சமன்.

(உரை.) கயிறு அரவும் கட்டையினில் கள்ளனும்போல் மாயா மயக்கம் அற்ற வேதாந்த வாழ்வும்—உள்ள கயிற்றினிடத்து இல்லாத பாம்பு கற்பிதமாகத் தோற்றுதல்போலும், உள்ள கட்டையினிடத்து இல்லாத கள்வன் கற்பிதமாகத் தோற்றுதல் போலும், உள்ள பிரமத்தினிடத்து இல்லாத மாயை கற்பிதமாகத் தோன்றுகிறதென்று அறிந்து, இம் மாயா மயக்கம் சிறிதும் தோன்ருது இறந்த இடம் வீடென்று கூறும் வேதாந்தச் செல்வமும்,

முயற்சி கெட்ட ஆனந்தாதீதத்தே ஆணவர் ஆம் ஆகமமும் தான் நந்திஞர்க்குச் சமன்—தற்போத முயற்சி சிறிதும் தோன்ருது இறந்த ஆநந்தாதீதத்தில் பெத்த திசையில் ஆணவராகி இருப்பாரைப்போலும் இருப்பதே வீடென்று கூறும் ஆகமச் செல்வமும், தானென்று எதிரிட்டெழும் புல்லறிவு கெட்டார்க்குச் சமனும்.

(குறிப்பு.) * அவித்தியாகதமாய் இருந்த சீவனது புன்மை அறிவாய் இருந்து நான் என்று எதிரிடும் அவ்வறிவு கெட்ட போது அச் சீவசாட்சியாய் இருந்த பிரமம் தான் ஆகலானும், ஆணவமயமாய் இருந்த ஆன்மாவினது புன்மை அறிவாய் இருந்து நான் என்று எதிரிடும் அப்போதம் கெட்டபோது அவ்வான்மா தனக்கு முதலாகிய சிவமயம் ஆதலானும், இங்ஙனம் ஆயபோது இருவர்க்கும் ஆநந்தாநுபவம் இருத்தலானும், 'தானந்திஞர்க்குச்சமன்'' என்ருர். தான் நந்தாத அபரஞானிகட்குச் சமன் அன்றென்பது தானே ஆயிற்று.

இத் திருவெண்பாவால் வேதாந்த சித்தாந்த முத்தி இரண்டும் தற்போதம் ஒழிந்தோர்க்குச் சமனென்று அறிவித்தவாறு காண்க. (கரு)

* அஞ்ஞானமயம்.

என்னாணை யென்னாணை யென்னாணை யேகமிரண்
டென்னாமற் சும்மா திருவென்று - சொன்னான்
திருஞான சம்பந்தன் சீகாழி நாட
னருளாளன் ஞானவிநோ தன்.

(உரை.) திருஞான சம்பந்தன் சீகாழி நாடன் அருளாளன் ஞான விநோதன்—திருஞான சம்பந்தப் பிள்ளையாரென்னுந் திருநாமத்தையுடையார், சீகாழி நாட்டிற்கு அதிபதியான அருளாட்சியுடையார், ஞானத் திருவிளையாட்டினையுடையார்,

என் ஆணை என் ஆணை என் ஆணை ஏகம் இரண்டு என்னாமல் சும்மா இரு என்று சொன்னான்—முக்காலும் தமதுபேரில் திருவாணைகூறி முத்தியில் வேதாந்தியைப்போல் ஏகம் என்றும், பேதசித்தாந்த வாதியைப்போல் இரண்டென்றும் கூறாது, இங்ஙனம் கூறுதற்கு ஏதுவாய உன்போதத்தை ஒழித்து, நீ மௌனாநந்தமா யிருத்தி என்று அருளிச்செய்தார்.

(குறிப்பு.) ஒன்றெனில் பெறுவானும் பேறும் இன்றாமாகலினும், இரண்டெனில் பசுமுத்தியே அன்றி ஐக்கிய முத்தி கூடாதாகலினும், போத அறிவில் இரண்டாயும் போத ஒழிவில் ஒன்றாயும் இருத்தலினும், "ஏகமிரண் டென்னாமற் சும்மா திருவென்று சொன்னான்" என்றார்.

இத் திருவெண்பாவால் முத்தி நிச்சயம் ஈதென்று அறிவித்தவாறு காண்க. (கஎ)

ஐந்தாம் அதிகாரம்

சரியைக்கழற்றி

முற்றும்.

## ஆறாம் அதிகாரம்.

# விரத்தி விளக்கம்.

---

இங்ஙனம் சரியாதிகளை நித்துகின்றார் ஆயினும், உள்துறவு இல்லார்க்கு ஞானம் விளங்காது ஆகலின், இவ்வதிகாரத்தினுள் துறவி விளக்கங்கூறி உட்டுறவின் இலக்கணம் அறிவித்தார் ஆகலின், இவ்வதிகாரத்திற்கு விரத்தி விளக்கமென்று பெயராயிற்று. விரத்தி யெனினும் துறவி எனினும் ஒன்று.

அறிந்தவிடத் தின்பதுன்ப மாகா ததுவும்
மறந்தவிடத் தின்ப மயக்கு - மறிந்த
வலியறிவு நீயென்றா னத்துவிதா நந்த
முலையமுத முண்ட முனி.

(உரை.) அத்துவித ஆநந்த முலை அமுதம் உண்ட முனி —இரண்டற்ற அத்துவிதத்தில் தோன்றும் பேராநந்தமாகிய திருமுலை அமுதத்தை அம்மை பொற்கிண்ணத்தோடும் கொடுப்ப வாங்கி உண்ட திருஞான சம்பந்தப்பிள்ளையார்,

அறிந்த இடத்து இன்ப துன்பம் ஆகாது மறந்த இடத்து அதுவும் இன்பம் மயக்கும் அறிந்த அலி அறிவு நீ என்றான்— கருவிகள் முப்பத்தாறையும் கடந்து, அருளை அறிந்தவிடத்து; ஆண்டு இன்பமும் துன்பமும் உண்டாகா; அவ்வருளை மறந்த

விடத்து முன் நீங்கி நின்ற கருவிகள் வந்து கூடலான், அத் துன்பமும் இன்பமும் வந்து ஈண்டு மயக்கும், ஆகலின், பதி அறிவோடுங்கூடி இன்பதுன்பம் இன்றிய அப்பதி அறிவாயும், பாச அறிவோடுங்கூடி இன்பதுன்பமாயும் நின்று அதனையும் இவற்றையும் அறிந்த அலி அறிவு நீ என்று எனக்கு அருளிச் செய்தார்.

(குறிப்பு.) பதி அறிவு-ஆணறிவு; பாச அறிவு - பெண்ணறிவு; இவ்விருவகை அறிவும்போலன்றிப் பதி அறிவோடுங் கூடிப் பதி அறிவாயும், பாச அறிவோடுங் கூடிப் பாச அறிவாயும், ஆண்வடிவும் பெண்வடிவும் தழுவிநின்ற அலிபோலிருத்தலின், பசு அறிவை, "அலி யறிவு" என்றார்.

அம்மை ஆநந்த வடிவம் ஆகலின், அவளது திருமுலைப் பாலை "ஆநந்தவமுதம்" என்றார்.

அதுவும் என்பதனை அத்துன்பமும் இன்பமும் மயக்கும் எனக் கூட்டுக.

இத் திருவெண்பாவால் ஆன்மா ஒன்று உண்டென்று அறிவித்தவாறு காண்க. (௧)

அறுசமயத் தோர்க்கு மறுதியிட்ட கூடற்
றுறவா யவாவறுத்த றூய்மை - பிறவா
முடிகளச முத்தி முயற்சி யெல்லா மூத்த
கடைகரும நாசமிது காண்.

(உரை.) அறு சமயத்தோர்க்கும் அறுதி இட்ட கூடல் துறவு ஆய் அவா அறுத்தல் தூய்மை—அறுவகைச் சமயத்

தோர்க்கும் வீடடைதற்கு மட்டிட்டு வைத்த பொதுநெறியா தெனின், கூடற் கண் சங்கப்பலகையில் ஏறி இருந்து உட்பற் றுப் புறப்பற்று என்னும் இருவகைப் பற்றினையும் துறப்பதாய் இத்துறவுகளான் மெய்ப்பொருளை உணர்வதாய்ப் பிராரத்த வாசனையான் ஒரோர் காலையின் உள்ளத்தெழும் அவாவினை யும் அறுத்தல் தாய்மையாய்க் கூறிய இம்மூவகை அதிகாரங்க ளின் நெறிகளே யாம்; (அஃது அன்றியும்),

பிறவா * முடி களச முத்தி மூயற்சி எல்லாம் மூத்த கடை நரும நாசம் இது—பிறவாமைக்கு ஏது கூறிய டலவாற்றன் ஞம், சிரசாய கருவிகள் முப்பத்தாறையும் போக்கப்பட்ட வீடும், தற்போத முயற்சி எல்லாம் முதிர்ந்த கடையாகிய கரு மநாசமும், இம்மூவகை அதிகாரத்திற் கூறிய நெறியாம்.

(குறிப்பு.) சமயிகள் அறுவரும் வீடடைதற்கு மட்டு வேறுவேறு கூறினார் ஆயினும், ஒருவர் கூறியது ஒருவர்க்குச் சம்மதம் அன்று, துறவாய் மெய்யுணர்ந்து அவாவறுத்தல் அனை வர்க்கும் சம்மதமாம்; ஆகலின், "அறுசமயத்தோர்க்கு மறுதி பிட்ட கூடற்றுறவா யவாவறுத்தல்" என்றார்.

துறவும் அவாவறுத்தலும் கூறினமையான், இடையில் மெய்யுணர்வு வருவிக்கப்பட்டது.

இங்ஙனம் சங்கப்பலகையின்மேல் ஏறிக் கூறிய மூன்றதி காரங்கள் என்றது திருக்குறளுள் துறவாதி மூன்றதிகாரங் களையுமாம் என்றறிக.

* முடி - சிரசு, களசம் - நீக்கம், முத்தி - வீடு,

இம்மூவகை அதிகாரங்களின் நெறிகளில் ஒழுகுதல் உயிர்ச்சுத்தி; இங்ஙனம் உயிர்ச்சுத்தி பண்ணுவோருக்கு உடற்சுத்தி பண்ணவேண்டுவது இன்மையால், "கடைகரும நாசமிதுகாண்" என்றார்.

காண் - அசை.

இத் திருவெண்பாவால் உட்டுறவு புறத்துறவு உடையாரைச் சமயிகள் எல்லாரும் ஞானிகளென்று அங்கீகரிப்பரென்று அறிவித்தவாறு காண்க. (உ)

வாசிக்குச் சாவீரர் வைதாற் பொருததுபோ
லாசைக்கே டர்க்கிதுவா மட்டதென - நேசித்த [கும்
வொட்டைப்போல் வார்க்கா முடம்பார வூண்பழு
பெட்டருக்கீ தாகாப் பிழை.

(உரை.) வாசிக்குச் சாவீரர் வைதால் பொருததுபோல் ஆசைக் கேடர்க்கு இது ஆம்—* வாசி என்ற வார்த்தைக்கு மனம்பொருது இறந்துவிடத் துணிந்த வீரரை வைதால் மனம் பொருததுபோல், பெண்ணாசை ஆகாதென்று ஓர் வார்த்தை கூறியமாத்திரத்தில் அவ்வாசை மனத்தின்கண் மீட்டும் எழாது அடக்கும் அவ்வாசை நாசர்க்கே இவ்வதிகாரத்தின் அருத்தம் சம்மதமாம், (ஆகென்றி),

அட்டது என நேசித்த ஒட்டையைப் போல்வார்க்கு ஆம் உடம்பு ஆர ஊண் பழகும் பெட்டருக்கு ஈது ஆகாப்

* இது செய்கவிடுகவென்று நியாயமாகக் கூறும் வார்த்தை.

பிழை—அறுசுவை அடிசில்போல் வேப்பந்தழையாதி கைப்பினை இச்சித்த ஒட்டகத்தைப்போல், காடி கூழ் களி முதலிய வற்றைச் சுவையாய் விரும்புவோர்க்கும் சம்மதமாம்; உடல் பருக்கும்படி அறுசுவை அடிசில்களை நன்று நிமிதன்று புசித்து ஊண்பழகும் பேடிகளுக்கும் காமிகளுக்கும் இதன் அருந்தும் சம்மதம் ஆகாத குற்றமாம்.

(குறிப்பு.) மற்ற நூலின்கண் ஒரிடத்தும் பெண்ணாசை ஆகாதென்று கூறக்கண்டு அதனை விடுத்தோர்க்கே அவ்வாசை உடையோரை மிகவும் இகழ்ந்து கூறும் இதன் அருத்தம் சம்மதமாம் ஆதலின், "வாசிக்கும் சாவீரர் வைதாற்பொருந்து போலாசைக்கேடர்க் கிதுவாம்" என்றார்.

அருந்தல் ஆசை வைத்துக் கூறினமையால், "ஆசைக் கேடர்க்"கென்றதை பொருந்தல் ஆசையாகக்கொள்க.

இத் திருவெண்பாவால் அருந்தல் பொருந்தல்களில் ஆசையற்றோர்க்கே இந்நூல் ஆமென்று அறிவித்தவாறு காண்க. (௩)

நீர் இங்ஙனம் கூறிய ஆற்றான் ஆசையறுதலோ முத்தி எனின், மேற் கூறுகின்றார்.

பாசங் கழன்றாற் பசுவுக் கிடம்பதிபா
லூசல் வடங்கழன்ற தொவ்வாதோ - நேசித்த
பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் பாட்டெக்கோ
மற்றைச் சமயமெங்கு மாம்.

(உரை.) பாசம் கழன்றால் பசுவுக்கு இடம் பதி ஆம் ஊசல் வடம் கழன்றது ஒவ்வாதோ—(உயிர்ச்சார்வு பொருட் சார்வு ஆகிய இருவகைச் சார்வும், இச்சார்வுகளை நீங்கியபோதும் இவற்றின்மேல் எழாநின்ற அவாவும், இவ்வவா நீங்கிய போதும் கண்டபொருள்கள்மேற் சென்று பற்றும் இந்திரியங்களும், இவ்விந்திரியங்கள் அடங்கியபோதும் முன் எறியிருந்த வாசனையால் உள்ளெழும் மனநினைவுகளும், இவை முதலிய) பாசங்களெல்லாம் கழன்றபோது இவற்றினின்ற பசுவுக்குப் பதியே இடமாம்; அஃது எங்ஙனம் எனின், அந்தரமாய் நின்ற ஊசற்கயிற்றில் இருந்தோனுக்கு அவ்வூசற்கயிறு அற்ற போது நிலம் இடமாம், அதுபோல், அஃது ஒவ்வாதோ? (அதனை நீ அறிதி, அஃதன்றி),

நேசித்த பற்று அற்ற கண்ணே பிறப்பு அறுக்கும் பாட்டு உமக்கோ மற்றைச் சமயம் எங்கும் ஆம்—தம்மால் இச்சிக்கப்பட்ட பற்றுக்கள் எல்லாம் அற்றபோதே அப் பற்றறுதி பிறப்பினை அறுக்கு(மென்று திருவள்ளுவநாயனார் கூறிய) *குறள் வெண்பாப்பாட்டு உமக்குமாத்திரமோ சம்மதம், மற்றைய சமயங்களுக்கெல்லாம் சம்மதமாம்.

(குறிப்பு.) ஊசல் இருந்தபோதும் ஒழிந்தபோதும் அதனான் இருந்தோனுக்கு அசைவும் அசைவின்மையும் உண்டாவதுபோல், பாசம் இருந்தபோதும் ஒழிந்தபோதும் அசைவும் அசைவின்மையும் ஆன்மாவிற்கு உண்டாமென்பதும் காண்க.

* "பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப் படும்"-349.

இத் திருவெண்பாவால் ஆன்மாவிற்குப் பாசமுழுதும் நீங்கின் பதியைத் தேடவேண்டுவது இன்றென்று அறிவித்த வாறு காண்க. (௯)

உனக்குமெய் யாய்த்தோன்றி யொழித்துவிடும் பாசம்
வினைச்சடமே யென்னில் விடம்போ - லுனைச்சுழற்று
மாறனுந் தன்னை யறியாத துன்னறிவு
தானாகு ஞானத் தடை.

(உரை.) உனக்கு மெய்யாய்த் தோன்றி ஒழித்துவிடும் பாசம் வினைச்சடமே என்னில் விடம்போல் உனைச் சுழற்றும் ஆறனும்—உனக்குத் தோன்றும்போது யான் எனது என்று கருதும்படி மெய்யாகத் தோன்றி நீங்கும்போது உன்னைப் புறம்பாய் ஒழித்து நீங்கிவிடும் தேகபோகங்களாகிய பாசம் வினைக்கீடாய் வரும் மாயாகாரியமாகிய சடமென்று அறிவிப்பினும், நீ இங்ஙனம் அறியாமையான், நின்னைவிடம் புசித்தவனை மயக்குதல்போல் மயக்கும் எனினும், (அப்பாசம் ஞானத்தடை அன்று; இனி ஞானத்தடையாவது யாதெனின்),

தன்னை அறியாதது உன் அறிவுதான் ஆகும் ஞானத் தடை—தனுவாதிகளை யெல்லாம் இது இது என்று நானுவாய்ப் பகுத்தறிந்தும், அவற்றை அறிந்த தன்னை அறியாதது உனது புல்லறிவாகலின், இவ்வறிவே ஞானத்திற்குத் தடையாகும்.

(குறிப்பு.) ஆணவத்தால் மறைபட்டிருந்த ஆன்மாவிற்குச் சிவன் மாயையில் தனுகரண புவனபோகங்களைக் கொடு

தது இச்சா ஞானக்கிரியைகளை விளக்குவித்தலானும், இத் தனுவாதிகளால் சுருதி குரு சுவானுபூதிகளை அறிந்து வீடடை தற்கு ஏதுவாகலானும், இவற்றைச் சடமென்றும் தனக்கு அந்நியமென்றும் அறிந்தபோது மயக்காமையானும், "உனை ச்சுழற்றும் ஆறுலும்" இவை ஞானத்தடை அல்ல வென்றும்; தானென்றும் தனதென்றும் தன்னால் அறியப்பட்ட தேகபோ கங்களைத் தானும் தனதும் அல்லவென்று அவற்றைத் தனக் கந்நியமாக்கண்டு தன்னை உள்ளபடி அறியமாட்டாத தனது அறிவே ஞானத்தடை ஆகலின், "உன்னறிவு தானொரு ஞானத் தடை" என்றுங் கூறினார்.

தனுவாதி நான்கினுள் தனுவோடு கரணமும் போகத் தோடு புவனமும் ஒற்றுமையா யிருத்தலின், தேகபோகமெ ன்று இரண்டாகக் கூறப்பட்டன.

இத் திருவெண்பாவால் தனுவாதிகளைத் தனக் கந்நிய மாக் காணின், திருவருள் தோற்றும் என்று அறிவித்தவாறு காண்க. (௫)

ஆன்மாவிற்கு இவை உருவம் அன்றாயின், இவற்றின் மயமாயிருப்பதென்னை யெனின், மேற்கூறுகின்றார்.

சிற்றறிவ னாய்மறைப்பைச் சேர்ந்தவடி வொண்படிகம்
பற்றுகினு மொன்றாகாப் பான்மைபோ - லுற்ற
வுருவ சொரூப சுபாவ முனக்கு
வருமடைவு சொன்னேன் மதி.

(உரை.) சிற்றறிவன் ஆய் மறைப்பைச் சேர்ந்த வடிவு ஒண்படிகம் பற்றுகினும் ஒன்று ஆகாப் பான்மைபோல்—கிஞ்

சிஜ்ஞ அறிவனுய்ச் செம்பில் களிம்புபோன்ற ஆணவமறைப்பைச் சேர்ந்த வடிவு ஆன்மாவினது சுபாவம்; படிகம் அடுத்த வன்னமயமா யிருப்பினும் தன் நிறம் அந் நிறத்தோடு ஒன்றுகாத முறைமைபோல, தான் அடுத்த கருவிமயமா யிருப்பினும் தன் அறிவு அக் கருவி அறிவோடு ஒன்றுகா திருப்பது ஆன்மாவினது உருவம்; ஒன்றையும் பற்றுதிருந்த படிகம் நிருமலமா யிருத்தல்போல், ஆன்மா மும்மலங்களையும் நீக்கி நிற்றல் அதனது சொரூபம்;

உற்ற உருவ சொரூப சுபாவம் உனக்கு வரும் அடைவு சொன்னோம் மதி—இங்ஙனம் உனக்கு உற்ற சுபாவ உருவ சொரூபங்கள் வரும் முறையைச் சொன்னோம், இவற்றை அறிந்து கொள்ளுதி.

(குறிப்பு.) "படிகம் பற்றுகினு மொன்றுகா" எனவே ஒன்றையும் பற்றுத படிகம் நிருமலமா யிருக்குமென்பது ஆயிற்று.

ஆணவம் சகசமலம் ஆகலின், அதனைச்சேர்ந்த வடிவு சுபாவம் என்றும்; படிகத்திற்குச் சிவப்புவன்ன முதலிய செயற்கையாய் வந்ததுபோல், ஆன்மாவிற்குக் கருவிகள் செயற்கையாய் வந்து பொருந்துதலின், இதனை உருவம் என்றும்; படிகம் வன்னங்களை நீங்கியபோது தனது சுய சொரூபத்தோடு இருத்தல்போல், ஆன்மா கருவிகளை யெல்லாம் நீங்கிய போது தனது சுய சொரூபத்தோடு இருத்தலின், இதனைச் சொரூபம் என்றுங் கூறினர்.

இத் திருவெண்பாவால் ஆன்மாவினது உருவ சொரூப சுபாவம் அறிவித்தவாறு காண்க. (சு)

நினைப்புமறப் பற்ற நிறைந்த வறிவா
யனைத்துடனு நின்றம் பரமாய்த்-தனக்கருளித்
தன்ஞநந் தத்தைத் தனக்களித்த சர்க்கரையே
யன்னானுக் கின்னவைமூன் றாம்.

(உரை.) நினைப்பு மறப்பு அற்று நிறைந்த அறிவு ஆய் அனைத்துடனும் நின்று அம்பரம் ஆய்த் தனக்கு அருளி—நினைப்பு மறப்பாகிய சகல கேவலங்களை அநாதியிலே நீங்கி, எங்கும் பரிபூரண அறிவாய், எல்லாவற்றோடும் கூடிநின்றும், ஆகாயம்போல் ஒன்றோடும் தாக்கற் றிருப்பதாய் ஆன்மாவிற்கு அருள்செய்து மும்மலங்களையும் நீக்கி,

தன் ஆநந்தத்தை தனக்கு அளித்த சர்க்கரையே அன்னானுக்கு இன்னவை மூன்று ஆம்—தனது பேராநந்தத்தை அவ்வான்மாத் தனக்குக் கொடுத்தருளிச் செய்த நாவிற்குச் சர்க்கரையே அன்ன சிவனுக்கும் இன்ன உருவ சொரூப சுபாவம் மூன்றும் உண்டாம்.

(குறிப்பு.) "நினைப்பு மறப்பற்று நிறைந்த வறிவாய்" எனவே சிவனது சுபாவம் அநாதியிலே நின்மலமாயிருத்தல் எனவும், "அனைத்துடனு நின்றம் பரமாய்" எனவே இங்ஙனம் இருப்பது அருளாகலின், அவனது உருவம் இச்சாஞானக்கிரியைகள் எனவும், "தன்ஞநந்தத்தைத் தனக்களித்த எனவே, ஆநந்தம் அவனது சொரூபம் எனவுங் காண்க.

இத் திருவெண்பாவால் சிவனது உருவ சொரூப சுபாவம் அறிவித்தவாறு காண்க. (எ)

அறிந்துபற்றி நின்றழுந்து மற்ப வறிவை
அறிந்துசுத்தி யேபே ரறிவாய்-நிறைந்துசிவந்
தோயாம னின்றதுபோற் றோற்றமுத லைந்துடனுந்
தோயாமற் சுத்தத் துறவு.

(உரை.) அறிந்து பற்றி நின்று அழுந்தும் அற்ப அறிவை அறிந்து சுத்தியே பேர் அறிவு ஆய்—பஞ்ச விடயங்களையும் ஞானேந்திரியங்களால் அறிந்து, கன்மேந்திரியங்களாற் பற்றி, அந்தக்கரணங்களால் அவற்றுள் அழுந்தும் கிஞ்சிஜ்ஞ போதத்தை (ஆன்மாவினது இயற்கைக் குணம் அன்றென்றும், மதுபானங் கொண்டோனுக்கு லகிரிதோன்றியதுபோல் அவ்விருவகை இந்திரியங்களையும் கரணங்களையும் கூடியவிடத்துத் தோன்றிய விடயபோதம் ஈதென்றும்) அறிந்து, (அவ்விந்திரிய கரணங்களோடும் அப்போதத்தை நீத்து, தன்னை உள்ளபடி அறிந்து, அங்ஙனம் தன்னை அறிந்தபோது தனக்கு இந்திரிய கரணங்களையும் வேறாக்கித் தன்னையும் அறிவித்தது அருளெனக்கண்டு, அவ்வருளே வடிவாகி இருந்து, தான் மலமும் ஆகாமல் சிவமும் ஆகாமல் சிவானுபோகத்தில் இரண்டற அழுந்தி நிற்பது ஆன்மசுத்தி, இந்த) ஆன்மசுத்தியே (சிவத்தில் வியாபகமாகிய பேரறிவு ஆகலின்) இப்பேரறிவாகி,

சிவம் நிறைந்து தோயாமல் நின்றதுபோல் தோற்றம் முதல் ஐந்துடனும் தோயாமல் சுத்தத் துறவு — தனக்கு

* வியாத்தியா யிருந்த சிவம் எல்லாவற்றேடும் பூரணமாய் நிறைந்திருந்தும், ஒன்றேடும் தோய்வற்று நின்றாற்போல, சிருஷ்டியாதி ஐந்தொழில்களோடும் தோயாமல் (நிற்பதே)பரி சுத்தமான தூநவு.

(குறிப்பு.) இச்சா ஞானக் கிரியைகள் சிவதத்துவங்களைச் செலுத்த, சிவதத்துவங்கள் கலாதிகளைச் செலுத்த, கலாதிகள் ஆன்மாவின் இச்சா ஞானக் கிரியைகளை எழுப்ப, ஆன்மாவின் இச்சை அந்தக்கரணங்களிடத்தும், ஞானம் ஞானேந்திரியங்களிடத்தும், கிரியை கன்மேந்திரியங்களிடத்தும் நின்று, விடயங்களை அறிந்து பற்றி அழுந்தும் ஆகலின், இவ்விருவகை இந்திரியங்களும் கரணங்களும் நீங்கவே ஆன்மாவின் இச்சா ஞானக் கிரியை நீங்கும், இவை நீங்கவே கலாதிகள் நீங்கும், இவை நீங்கவே சிவதத்துவம் நீங்கும், இவை நீங்கவே ஆன்மா தன்னை அறியும். ஆகலின், "அறிந்து பற்றி நின்றழுந்து மற்பவறிவை யறிந்து" என்றார்.

அவன் அவள் அது முன்னிலையாய் இதாகிதங்கள் வருதலையும், அவற்றைத் தான் பெறுதலையும், திருவருட் கண்ணால் பார்த்து அழித்துப் பேய் பிடியுண்டவனைப் போல் சிவத்துள் மறைந்து நின்றமையால், 'தான் மலமும் ஆகாமல்' என்றும், அங்ஙனம் நின்று அழியாத ஆநந்தபோகம் பெறுதலால், 'தான் சிவமும் ஆகாமல்' என்றும் இங்ஙனம் கூறப்படும்; இங்ஙனம் இருப்பது ஆன்மசத்தியாகலின், "சத்தி" என்றார்.

* கலக்கப்படுவது.

ஒன்றையும் பகுத்துக் காணாது வியாத்தியாய் நின்ற சூரியன் ஒளியில் வியாபகமாகிய கண்ணொளியும் ஒன்றையும் பகுத்துக்காணாது நிற்பதுபோல், ஒன்றையும் பகுத்தறியாது நின்ற சிவவியாத்தியில் வியாபகமாகிய ஆன்மாவும் பஞ்சகிருத்தியங்களால் விளங்கும் பிரபஞ்சங்களுள் ஒன்றையும் பகுத்தறியாது நிற்கவேண்டும் ஆகலின், "சிவந் தோயாம னின்றதுபோற் றோற்ற முதலைந்துடனுந் தோயாமற் சுத்தத் துறவு" என்றார்.

பஞ்ச கிருத்தியங்களாவன: ஓர் இந்திரியத்தில் பிரவேசித்தல் சிருஷ்டி, அவ்விந்திரியத்தில் நின்று ஓர் விடயத்தைப் பற்றுதல் திதி, பற்றிய விடயத்து இரண்டற அழுந்துதல் சங்காரம், அதில் இதம் பிறத்தல் திரோபவம், அதனைத் தெளிந்து கோடல் அநுக்கிரகம். இங்ஙனம் ஓர் இந்திரியத்தில் பஞ்சகிருத்தியங்களும் வரலால் ஐந் திந்திரியங்களினும் தோயாமல் நிற்பதே ஐந்தொழிலினும் தோயாமல் நிற்பதெனஅறிக.

அறிந்து பற்றி நின்று அழுந்துதலை விடயபோதமென்று அறிதல் ஆன்மரூபம், அவற்றை நீக்கித் தன்னை அருளால் கண்ட விடம் ஆன்மதரிசனம், தான் மலமும் ஆகாமல் சிவமும் ஆகாமல் சிவத்தோடு இரண்டறக்கலந்து நிற்பது ஆன்மசுத்தி எனக் கொள்க.

இத் திருவெண்பாவால் பரிசுத்தமாகிய துறவு இது வென்று அறிவித்தவாறு காண்க. (அ)

ஞானிகள் இங்ஙனம் பிரபஞ்சத்தில் தோயாமல் நிற்பரோ எனின், மேற்கூறுகின்றார்.

கூரிருளின் மின்மினியின் கூட்டம்போல் வாழ்சகத்
யாரறிவா ரந்த வறிவுதயம் - சூரியன்கா [தை
ணுன்னீழ லைக்கெடுத்த வுச்சியிலே யூனமறச்
சொன்னா ரவத்தைகளைந் தும்.

(உரை.) கூர் இருளில் மின்மினியின் கூட்டம்போல் வாழ் சகத்தை யார் அறிவார் அந்த அறிவு உதயம் சூரியன் — மழைக்காலத்து அரையிருளில் மின்மினிப் புழுக் கூட்டம்போன்று, ஆணவாந்த காரத்தில் ஆன்மாக்கள் கிஞ்சிஜ்ஞ போதத்தோடும் கூடிப் பொய்ம்மையாய் வாழாநின்ற இப்பிரபஞ்சத்தை ஞானிகளாயினோர் யாவர் அறிவார்? (அவர் சகத்தோடுங்கூடி இருக்கையினும் அதனை அறியாரென்று நீர் கூறியது என்னை எனின்), அவர்க்கு அந்த ஞானோதயம் சூரியோதயம்போல் தோற்றும் (ஆகலின், அச்சகத்தை அறியார், ஆயின் இந்த ஞானத்தை அடியேன் பெறுமாறு எங்ஙனம் எனின்),

உன் நீழலைக் கெடுத்த உச்சியிலே ஊனம் அற அவத்தைகள் ஐந்தும் சொன்னார்—காலையினும் மாலையினும் நீளும் உனது நிழலைக்கெடுத்த உச்சிக்காலத்தைப்போல், சகல கேவலங்களில் செல்லும் உன்போதம் அடங்கிய நடுவிடத்து உனது ஆணவக்குற்றம் அறவும் ஞானச்செல்வம் வரவும் ஏதுவாகச் சுத்தாவத்தைகள் ஐந்தினையும் சொன்னார் (பெரியர்; அவற்றை யாம் சொல்லக்கேட்டு நீ அறிதி.)

(குறிப்பு.) இருளைப்போல் ஆணவம், மின்மினிபோல் கருவிப்போதத்தோடுங் கூடிய ஆன்மாக்கள், மின்மினி மின்

னியவாறே தோன்றுது மறைந்து மறைந்து மின்னல்போல், ஆன்மாக்களினது மறப்பு நினைப்புகள், ஆகலின், "கூரிருளின் மின்மினியின் கூட்டம்போல் வாழ்சகம்" என்றார்.

சூரியோதயத்தில் பூதவிருளும் மின்மினி ஒளியும் தோற்றா; அதுபோல், ஞானோதயத்தில் ஆணவ இருளும் கருவிப் போதமும் தோற்றா ஆகலின், "அறிவுதயஞ் சூரியன் காண்" என்றார்.

இந்திரியங்கள் பத்தும் பஞ்ச பூதங்களிடமாய் நின்று, விடயங்களை நேரே அபகரித்து * விசர்க்கரிக்கப் பொருந்திய போதம் இறக்க இருந்த இடம் நின்மலசாக்கிரம்; அவ்விந்திரியங்களிடமாய் விடயங்களைப் பகுத்தறியப்பட்ட ஆன்மாவின் இச்சாஞானக் கிரியைகளுக்கு இடமாகிய மனம் புத்தி யகங்காரங்களின் வியாத்தி அறும் இடம் நின்மல சொப்பனம்; ஆன்ம சைதன்னியத்திற்கு அதிட்டானமான சித்தவிகற்பம் ஒடுங்கின இடம் நின்மல சுழுத்தி; அச் சைதன்னிய வாகனமான பிராணவாயு நீங்கின இடம் நின்மலதுரியம்; ஊசல் வடம் அற்றபோது அதற்கு வீழ்ந்த இடம் ஆதாரம் ஆனாற்போல், இங்ஙனம் கருவிப்போதம் எல்லாம் கழிந்த இடத்து ஆன்மா அருள் ஆதாரமாய் நின்ற சுத்தாவத்தை நின்மலாதீதம்.

இக் கருவிப்போதங் கழன்ற சுத்தாவத்தையில், சுடர் காட்டக் கண்ட கண்போல், அருளால் தன்னை அறிவது நின்மல சாக்கிரம்; இங்ஙனம் தன்னை அறிந்த இடத்துத் தனக்கொரு சேட்டை அற்று அந்த அருளே தனக்கு ஆதாரமாய்

* விட.

அவ்வருளில் தான் அசைவற நின்ற இடம் அவ்வருள் தரிசனம், இங்ஙனம் இவ்வருளைத் தரிசிப்பது நின்மல சொப்பனம்; இச்சாஞானக்கிரியை தோன்றாது நின்ற இடம் பரை, இந்தப் பரையினது நின்மலமெல்லாம் தனது இச்சாஞானக்கிரியை தோன்றாது தனதாகி எதிரீடு சிறிதும் இன்றி இப் பரையே தானாகி இருந்த இடம் நின்மலசுழுத்தி; தான் இப் பரையாகிய இடத்துக் கதிரொளி நேரேநின்ற கண் அக் கதிரிடத்து அதீதப்படுந் தறுவாயில் இக்கண்ணுக்கு அந்தக் கதிரினது வட்டப் பளபளப்புமாத்திரந் தோற்றுவதுபோல், பரையை நீங்கி ஆநந்தசத்தி நேரேநின்று தான் சிவத்தில் அதீதப்படுந் தறுவாயில் ஆநந்தாநுபவம் பெறுவது நின்மலதுரியம்; அக் கதிரினது வட்டப் பளபளப்பாகிய சோபையைக் கண்ட கண் அக் கதிராகா திருக்கையிலும், தன்பார்வையும் இழந்து தன்னால் காணப்பட்ட முதலையும் இழந்து அக்கதிர் தானாய் மிகவும் அதீதப்பட்டாற்போல், அங்ஙனம் ஆநந்தாநுபவம் பெற்ற ஆன்மா அந்த ஆநந்தமாகா திருக்கையிலும், அவ் வாநந்தாநுபவத்தை அறிந்த தானும் இன்றி ஆநந்தமாய் நின்ற முதலும் இன்றி அவ் வாநந்தமே தானாய் அதீதப்பட்ட இடம் நின்மலாதீதம்.

முன்சொன்ன ஐந்தும் கருவிகள் முப்பத்தாறும் நீங்குதற்கு ஏது, பின்சொன்ன ஐந்தும் தற்போதங்கெட்டுச் சிவத்தில் அதீதப்படுதற்கு ஏது. "சொன்னா ரவத்தைக ளைந்தும்" என்றது இவையெனக் கொள்க.

"உச்சியிலே சொன்னா ரவத்தைக ளைந்தும்" என்றமையான், அவ்வுச்சி நேர்படுதற்கு ஏதுவாகிய அவத்தைகள்ஐந்தும் சொல்லப்பட்டன.

இருளைப்போல் கேவலம்; உடுக்களைப்போல் சகலம்; உடு இன்றி இருளைமாத்திரம் காணும் கண்போலவும், இருளிடத்து

டுவோற் காணுங் கண்போலவும், கேவல சகலங்களை அறியும் ஆன்மா; சூரிய உதயத்தில் இருளும் உடுவும் இன்றிச் சூரியப் பிரகாசமாத்திரங் கண்ட கண்போல், அருள் தோற்றியகால த்து முன் தோன்றிய கேவல இருளும் கருவிக் கூட்டங்களும் தோன்றாது, அவ்வருளை மாத்திரம் கண்டுகொண் டிருப்பது அருள் தரிசனம்; சூரியப்பிரகாசத்தைக் கண்ட கண் புடைபெ யர்ந்து நோக்காது அச் சூரியப்பிரகாசத்தில் ஏகிபாவமாய் நிற் பதுபோல், அருள் என்றும் தான் என்றும் சிறிதும்தோன்றாது அவ்வருளே தாளுய் நிற்பது பரைதரிசனம்; சூரியப் பிரகாசத் தைவிட்டு அச் சூரியனது வட்டப் பளபளப்பைப் பார்த்த கண் போல், ஆன்மா பரையை நீங்கி ஆனந்தபோகம் பெறுதல்; சூரியனது வட்டப் பளபளப்பைப் பார்த்த கண் தன் பார் வையையும் இழந்து, அப் பளபளப்பாகிய காட்சியையும் இழ ந்து, அச்சூரியனுள் அதீதப்பட்டதுபோல், ஆநந்தபோகத்தை பெற்ற ஆன்மா அதனைப்பெற்ற தான் என்பதும் அவ்வாநந்தம் என்பதும் இன்றி அவ்வாநந்தந் தாளுய் அதனுள் அதீதப்படு வது. ஈண்டு இருவகையாய்க் கூறிய அவத்தைகட்கு உவமை இதனுனுங் காண்க.

இத் திருவெண்பாவால் ஞானிகள் உலகத்தை அறியார் என்றும், ஞானம் நின்மலாவத்தையில் நின்ருல் பெறலாம் என்றும் அறிவித்தவாறு காண்க. (கூ

அந்த ஞானத்தை நீர் கூறிய நின்மலாவத்தையில் நின் று பெறுவதே அன்றி, துறவின்கண் நின்று தவத்தைப் பண் ணிப் பெறக்கூடாதோ எனின், மேற்கூறுகின்ருர்.

மெய்யாகத் தோன்றிவிடும் பொய்யை விசாரிக்கிற் பொய்யாய்ச் சுவர்ப்பாம்பாய்ப் போமன்றி-யையா

தொழிலைச் செயிற்றானுச் சோரனைப்போற் றோன்றிக் கழலப் பறைபறைதல் காண்.

(உரை.) மெய் ஆகத் தோன்றிவிடும் பொய்யை விசாரிக்கில் பொய் ஆய் சுவர்ப்பாம்பு ஆய்ப் போம் அன்றி ஐயா தொழிலைச் செயில்—விசாரியாத படியினாலே மெய்யாகத் தோன்றும் பொய்யாகிய கருவிக் கூட்டங்களது உண்மையை நின்மலாவத்தையில் நின்று விசாரித்து அறியின், சுவரில் எழுதிய பாம்பு போலாய்ப் பொய்யாய்த் தோன்றும்; அஃதன்றி, அவற்றை அங்ஙனம் விசாரித்தறிந்து நீக்காது வைத்துக்கொண்டு, அவை போம்படிக்கு, மாணக்கனே! நீ தவத்தொழில்களைச் செய்தியெனின்; (அதுதான்)

தாணு சோரனைப்போல் தோன்றிக் கழலப் பறை அறைதல்—சடமாகிய கட்டையைத் தீபத்தால் பாராத படியினால் கள்வனைப்போல் தோன்றக்கண்டு வெருண்டு அக்கள்வன் நீங்கும்படிக்குப் பறை அறைதலோடு ஒக்கும்.

(குறிப்பு.) சுவரில் எழுதிய பாம்பிற்குத் தோற்றரவு மாத்திரமே அன்றிச் சேட்டை இன்றாயதுபோல், கருவிகளை எதிரிட்டறிந்தபோது பிரபஞ்சம் தோற்றரவு மாத்திரமே அன்றி முன்போல் சேட்டியாது ஆகலின், அங்ஙனம் உவமை கூறினார்.

நின்மலாவத்தையில் நின்று அருட்கண்ணால் எதிரிட்டுப் பார்க்கும்போது சடமாய் நீங்கும் கருவிகளை மெய்யாகக் கருதிக்கொண்டு, அவை நீங்கும்படிக்குத் தவத் தொழிலைச் செய்யத் தொடங்கினமையால் இங்ஙனம் உவமை கூறினார்.

காண் - அசை.

இத் திருவெண்பாவால் கருவிகளினது உண்மையைக் காணின் எல்லாம் பொய்யாய் விட்டு ஞானம் தோன்றும் அன்றி, தவத்தான் அங்ஙனம் விடுதலும் ஞானம் தோற்றலும் இன்றென்று அறிவித்தவாறு காண்க. (௧0)

கருவிகளது உண்மையை அறிந்தால் எல்லாம் பொய்யாய்ப் போம் என்றீர். அப் பிரபஞ்சமும் தேகமும் பரிச்சேதம் இன்றாய்ப் போமோ எனின், மேற்கூறுகின்றார்.

உலகத்தை மாயா வுடலைப்பொய் யென்றா
லலகைத்தேர் போலறிவ தல்லால் - விலகித்
துடைத்தொழித்த லாகுமோ சொப்பனத்தீச் சூழ்ந்
கடக்கவிடுஞ் சாக்கிரம்போற் காண். [தாற்

(உரை.) உலகத்தை மாயா உடலைப் பொய் என்றால் அலகைத் தேர்போல் அறிவது அல்லால் விலகித் துடைத்து ஒழித்தல் ஆகுமோ—மாயாகாரியமாகிய இப் பிரபஞ்சத்தினையும் உடம்பினையும் பொய் என்று அறிவித்தால், பேய்த்தேர்போல் பொய்யாகக் கண்டு அறிவது அன்றி அத் தேகாதிபிரபஞ்சங்களைப் பரிச்சேதமாய் நீக்கித் தள்ளி ஒழிக்கக்கூடுமோ? (நீர் இங்ஙனம் கூறிய வற்றால் ஞானமும் அஞ்ஞானமும் கூடியிருக்குமோ எனின்),

சொப்பனத் தீச் சூழ்ந்தால் கடக்கவிடும் சாக்கிரம்போல் காண்—சொப்பனவத்தையில் ஒருவனைக் கடக்கும்வழி இன்றி அக்கினி சூழ்ந்துகொண்டால் அவ்வக்கினியைக் கடக்கவிடும் சாக்கிராவத்தைபோல், உன்னைச் சூழ்ந்துகொண்டு நின்ற தேகாதி பிரபஞ்சங்களை ஞானசூரியன் வந்து தோன்றில் உனக்குப் பொய்யாகக் காட்டிவிடும் என்றும் அறிதி.

(குறிப்பு.) பேய்த்தேர் நீரைப் பொய் என்று கண்டபோதும் நீர்போல் தோற்றரவும் முன்னர் மெய் என்று கண்ட வாசனை யும் இருக்கும்; சொப்பனத்தினைக் கடக்கவிட்ட சாக்கிரத்தில் இத் தோற்றரவு இன்றி முன்கண்ட வாசனை மாத்திரம் இருக் கும். அங்ஙனம்போல், சுத்தாவத்தையில் நிற்போர்க்கும் சுத்தத் தில் நிற்போர்க்கும் பிரபஞ்சந் தோற்றும் ஆகலின், அவ்விர ண்டு உவமையுங் கூறினார்.

இத் திருவெண்பாவால் கருவிகளது உண்மை அறிந்த விடத்துத் தேகாதி பிரபஞ்சங்கள் முன்போல் மயக்குதலின் றிக் காட்சிவாதனை மாத்திரையாய் நிற்கும் என்று அறிவித்த வாறு காண்க. (கக)

கருவிகள் முப்பத்தாறையும் பொய்யாகக் கண்டு நீங்கி னால் அந்த ஞானம் தோன்றுமோ எனின், மேற்கூறுகின்றார்.

பொய்யென்ற வார்த்தை புரையற்று மெய்யானால்
மெய்யென் பதுதேட வேண்டுமோ-மையிருளைத்
தீர்த்த வெயிலைத் திரும்பி யசைத்திமைத்துப்
பார்த்ததிலென் சந்தையம்மைப் பாய்.

(உரை.) பொய் என்ற வார்த்தை புரை அற்று மெய் ஆ னால் மெய் என்பது தேடவேண்டுமோ—கருவிகள் எல்லாம் பொய் என்று நீ சொன்ன வார்த்தைபோல், குற்றமற்று, உனது அறிவிற்கு அவை பொய் என்பது உண்மையாய்த் தோற்றும் எனின், மெய்யாகிய ஞானம் என்பது வேறு தேட வேண்டு மோ? (அவத்தையைப் பொய்யாய்த் தோற்றுவித்தது தானே ஞானம் அன்றோ? ஆயின், இங்ஙனம் தோற்றுவித்த ஞானத் தை யான் கண்டுகொண்டிருக்க வேண்டாவோ எனின்),

மை இருளைத் தீர்த்த வெயிலைத் திரும்பிஅசைத்து இமை ததுப் பார்த்து அதில் என் சந்தையம் வைப்பாய்—மயக்கமாகிய ஆணவ இருளைத் தீர்த்த ஞானப்பிரகாசத்தை உன் போதத்தால் எதிரிட்டு அசைத்துப் பார்த்தும் அங்ஙனம் பாராது ஒழிந்தும், அந்த ஞானப்பிரகாசத்தை ஈது அஃதாமோ அன்றோ என்று நீ என்னை ஐயுறுகின்றாய்? (அங்ஙனம் ஐயுறாது அதனுள் அசைவற நிற்றி).

(குறிப்பு.) சூரியப் பிரகாசத்தால் இருள் நீங்கி, அப் பிரகாசத்தைக் கண்ட கண் ஈது அப் பிரகாசமோ அன்றோ என்று அதன்மேல் ஐயுறாது, அவ்வொளியில் ஏகீபாவமாய் நிற்பது போல், அருளில் அசைவற நிற்கவேண்டும் ஆகலின், அங்ஙனம் உவமை கூறினார்.

இத் திருவெண்பாவால் கருவிகள் அனைத்தும் பொய்யாக உள்ளபடி அறிதலே ஞானம் என்று அறிவித்தவாறுகாண்க.()

தேகாதி பிரபஞ்சமெல்லாம் பொய் என்றும், பிறவித் துன்பம் ஈது ஆகாதென்றும், ஞானிகளும் ஞானிகள் அல்லாரும் கூறுகின்றார். இவருள் ஞானிகளை அறிவது எங்ஙனம் எனின், மேற்கூறுகின்றார்.

வேண்டா பிறப்பென்ற வார்த்தையினின் மெய்யடியார்
ஈண்டா தறிலே தெரியாதோ - காண்பீ
ருடம்பு மிகையொன்றி லாமையே நோன்பென்
றுக வடங்கினு ரை.

(உரை.) பிறப்பு வேண்டா என்ற வார்த்தையினில்—பிரபஞ்சம் பொய் என்றும், பிறவி ஆகாது என்றும், மெய்ஞ்ஞானிகளும் பொய்ஞ்ஞானிகளும் கூறிய வார்த்தையினால், (அவர்களைப் பிரித்துக் காணக்கூடாதாயினும்);

* உடம்பு மிகை ஒன்று இலாமையே நோன்பு என்று அடங்க அடங்கினரை மெய்விடயம் தீண்டாது அதிலே தெரியாதோ காண்பீர்—உடம்பைச் சத்துரு என்றும், ஓர்விடயங்களிலும் பற்று இலாமையே நோன்பு என்றும் அறிந்து,அத்தேக போகங்களை யான் எனது என்று கருதும் புறத்து நின்ற போதம் அடங்க உள் நின்ற போதம் அடக்கிய மெய்ஞ்ஞானிகளை அவரது உடம்பு விடயங்களைப் பற்றாததனால் தெரியும் ஆகவின், இக்குறிப்பால் கண்டுகொள்வீர்.

(குறிப்பு.) மெய்யால் காண்பீர் என்றமையால், வார்த்தையிலே காணக்கூடாதாயினும் என்பது வருவிக்கப்பட்டது.

மெய்யோடு இந்திரியங்கள் ஒற்றுமையா யிருத்தலின் "மெய் விடயந் தீண்டா" தென்று ஆகுபெயராகக் கூறினார்.

என்று என்பதனை "உடம்புமிகை" என்றதனோடுங் கூட்டுக.

இத் திருவெண்பாவால் வாசக ஞானிகளையும் அநுபவ ஞானிகளையும் அறிதற்கு ஏது கூறியவாறு காண்க. (கரு)

ஆறும் அதிகாரம்.

விரத்தி விளக்கம்

முற்றும்.

---

* "மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க லுற்றார்க் குடம்பு மிகை"—குறள். 345

"இயல்பாகு நோன்பிற்கொன் றின்மை யுடைமை மயலாகு மற்றும் பெயர்த்து"—குறள். 344.

ஏழாம் அதிகாரம்.

## துறவு.



எத்தனை உள்துறவு உடையார் ஆயினும் புறப்பற்றுண்டு இருப்பின் இப்பற்று ஒரோர் காலே அறிவை மடக்கும் ஆகலின், புறத்துறவும் வேண்டும் என்று இதனுள் புறத்துறவிலக்கணம் கூறினார். ஆகலின், இவ்வதிகாரத்திற்குத் துறவு என்று பெயராயிற்று.

தேடப் படும்பொருளைச் சிக்கனவா கப்புதைத்துக்
கோடிக் கொருநிமிடங் கொள்ளுகினுங் - கூடாத
வாழ்நாளை வீண்கழிக்கு மானிடரைப் போன்மயக்கம்
பூண்டோர்பொய் கண்டுதுறப் போர்.

(உரை.) தேடப்படும் பொருளைச் சிக்கனவாகப் புதைத்துக் கோடிக்கு ஒருநிமிடம் கொள்ளுகினும் கூடாத வாழ்நாளை வீண்கழிக்கும்—தம்மால் தேடப்பட்ட திரவியங்களை யெல்லாம் செலவழியாது பத்திரமாகச் சேமஞ்செய்து வைத்துக் கொண்டு, தாம் உடலைவிட்டுப் போங்காலை ஒரு நிமிடகாலம் அவ்வுடலில் இருக்கக் கோடி திரவியத்துக்குப் பிறர்கையில் ஆயுள் வாங்கிக் கொள்ளுவோம் எனினும் கூடாத இவ்வுடலோடு உயிர் வாழ் நாளைத் தவத்திற் கழியாது அவத்திற் கழிக்கும்,

மானிடரைப் போல் மயக்கம் பூணார் பொய் கண்டு துறப்போர்—பேதை மானிடரைப்போல் தேகாதி பிரபஞ்சங்களை மெய்யாகக் கண்டு, இவற்றில் மயக்கம் பூணார்கள் இவற்றைப் பொய்யாகக் கண்டு துறப்போர்.

(குறிப்பு) கடவுளர் ஆயினும் அங்ஙனம் ஆயுள் கொடுக்கவும் கொள்ளவும் கூடாது ஆகலின், "கூடாத" என்றார்.

இத் திருவெண்பாவால் இளமைக்கண்ணே வனிதாதி போகங்களைத் துறந்து, ஞானாசாரியரை அடைந்து, வீடடைய வேண்டும் என்று கூறியவாறு காண்க. (க)

ஊர்க்குருவி யும்வளர்த்த குஞ்சு மொருமனையிற்
பாக்கனையும் பார்த்திருநம் பற்றென்னே - மூர்க்க
ரரிபிரம ரிந்திரர்கள் வாழ்வதித்த நம்வாழ்
வொருபொருளோ வென்றொழிவா ரோ.

(உரை.) ஒருமனையில் ஊர்க்குருவியும் வளர்த்த குஞ்சும் பாக்கனையும் பார்த்து நம்பற்று இது என்னே மூர்க்கர்—ஓர் மனையில் வாழாநின்ற ஊர்க்குருவியும், அது வளர்த்த குஞ்சுகளும், அம்மனையில் பூனையும். அப்பூனையினது குட்டிகளும், இளமையில் நல்வினைக்கீடாய்த் தம்முள் உறவாய்க்கூடி இருப்பதையும், முதிர்ந்தபோது தீவினைக்கீடாய் உறவாயிருந்த தாமே தம்முட்பகையாய்ப் பிரிந்துபோவதையும், அம் மனையுள் இருந்து நாம் பார்த்திருந்தும், அங்ஙனம் வினைக்கீடாய் வரும மனைவிமக்கள் முதலிய இப்பிரபஞ்சத்தினைத் துறவாது இதன் மேல் மனதுபற்றி இருத்தல் இது என்னைகொலோ? (ஆயின்,

அவற்றைப் பார்த்திருந்தும் எல்லோரும் இல்வாழ்க்கையோ டும் இருக்க இல்லையோ, நீர் இங்ஙனம் கூறியதென்னை எனின், அம் மனைவி மக்கள் முதலிய இப்பிரபஞ்சம் வினைக்கீடாய் வந்ததென்று அறியாது அப்பிரபஞ்சத்தோடுங் கூடிவாழ்பவர்) மூர்க்கர்.

அரி பிரமர் இந்திரர்கள் வாழ்வு அநித்தம் நம் வாழ்வு ஒரு பொருளோ என்று ஒழிவாரோ—அப் பிரபஞ்சம் இருவினைக் கீடாய் வந்ததென்று அறிந்த உத்தமராயினோர் யாவர்க்கும் மேலாய அரி பிரமர் இந்திரர் முதலிய தேவர்கள் வாழ்வும் அநித்திய மென்று வேதாகமங்கள் கூறுதலான், நமது அற்பவாழ்வு இஃது ஓர் பொருளோ என்று கருதி, அப் பிரபஞ்சத்தைத் துறவாது ஒழிவாரோ?

(குறிப்பு.) ஒருவன் நல்வினை அநுபவிக்குங் காலத்துத் தாய் தந்தை மனைவி மக்கள் சுற்றம் நட்பு இவர் முதலியோர் உறவாயிருந்து இதஞ்செய்வர், அவன் தீவினை அநுபவிக்குங் காலத்து அங்ஙனம் உறவா யிருந்தவர் தாமே பகையாய் அகிதஞ் செய்வர் ஆகலின், இவர் இருவினைக்கீடாய் வந்தவரென்று அறிந்து துறக்கும்படிக்கு அவைகளை உவமை கூறினார்.

இத் திருவெண்பாவால் மனைவியாதி குடும்பம் வினைக்கீடாய் வந்ததன்றித் தமக்கு உறவு அன்றென்பதும், அநித்தியம் என்பதும் அறிவித்தவாறு காண்க. (உ)

இங்ஙனம் எல்லாவற்றையும் துறந்தவர் யாவர் எனின், மேற்கூறுகின்றார்.

பட்டின துப் பிள்ளையினைப் பத்ரகிரி யைப்பரனி
விட்டுவி ...ட்டார் வெறுவிடர் - வெட்ட

வெறுவெலும்பை நாய்கறண்ட வெந்தர்வர நாய்பார்த்
துறுமுவதை காட்டுவோமோ

(உரை.) பட்டினத்துப் பிள்ளையினைப் பத்ரகிரியைப் பரவி விட்டுவிட மாட்டார் * வெறு வீடர்—அளவற்ற செல்வரா யிருந்தும் அச் செல்வங்கள் எல்லாம் துரிசறத் துறந்த பட்டினத்துப்பிள்ளை நாயனாரையும், பத்திரகிரி நாயனாரையும் தோத்திரம்பண்ணி, மனைவியாதிய பற்றுக்களை விட்டுத் துறக்கமாட்டார்கள் மிகுந்த மிடியரா யிருந்தார்;(ஆயினும் மனைவி மக்கள் முதலாயினோரை யாம் விடுத்துத் துறந்தோமேல் அவரை அயலார் கைக்கொண்டு போகாரோ எனின்,

கெட்ட வெறு எலும்பை நாய் † கறண்ட வேந்தர் வர நாய் பார்த்து உறுமுவதைக் காட்டுவோமோ—ஊன் சிறிதும் இன்றிய வெள்ளெலும்பை ஓர் நாய் தனது பற்கொடு கறண்ட, அந் நாய் முன்னர் அரையர் எதிர்வர, அவ்வெலும்பை அவர் கவர்ந்துகொள்வர் என்று கருதி அவரைப் பார்த்து உறுமுவதைப்போல், யாமும் காட்டுவோமோ?

(குறிப்பு.) அளகேசனைப் போன்ற செல்வத்தினையும், அருந்ததி போன்ற கற்பினையுடைய மனைவியையும், காமனைப் போலும் கட்டழகினையும் துறந்தோர் பட்டினத்துப்பிள்ளை நாயனாரும், பத்திரகிரிநாயனாரும் ஆகலின், அவரைத் துறந்

* அநுபவிப்பதற்கில்லாமையால் விட்டோர் போன்றிருப்பவர்,

† பற்களால் நெருக்கிப் பறண்ட,

தோர் என்று எடுத்துக் காட்டி, அம் மூவகையுள் ஒன்றேனும் இல்லாரும் அவரைப்போல் துறக்கமாட்டாமையால், "விட்டு விட மாட்டார் வெறுவீடர்" என்றார்.

எலும்பு கறண்டும் நாய்க்குத் தனது எயிற்றில் அறுதைத்த துன்பந் தெரியாது இன்பமாத் தோற்றல்போல வனிதாதி போகங்களாகிய துன்பத்தை ஆணவம் இன்பம்போல் மாறுபடுத்திக் காட்ட இன்பமாகக் கருதலான், "வெறும்வெலும்பை நாய்கறண்ட" என்றார்.

தான் பற்றிய எலும்பை அரையர் கவர்வரெனக் கருதி, அவரைப்பார்த்து உறுமுவதுபோல்,தாம்பற்றிய குடும்பத்தைப் பிறர் கவர்வரெனக் கருதிக் கூறலான், "உறுமுவதைக் காட்டுவோமோ" என்றார்.

இத் திருவெண்பாவால் செல்வம் இளமை அழகு முதலானவற்றுள் சிறந்திருந்தும், அவற்றில் பற்று ஓரணுவளவும் இன்றி, அவற்றை யெல்லாம் துன்பமென்று அரிசறக் கைவிட்ட பட்டினத்துப்பிள்ளை நாயனார் பத்திரகிரிநயனார் போன்று துறந்தோரே எல்லாவற்றையும் துறந்தோராவர் என்பதும், அச் செல்வம் முதலியவற்றுள் ஒன்றேனும் இன்றாகவும்; துன்பந் தருதற்கு இடமாகிய மனைவியாதி குடும்பத்தை இன்பமெனக் கருதிக் கைவிடற்கு அஞ்சுபவரே ஆணவத்தால் மறைப்புண்டவராவர் என்பதும் அறிவித்தவாறு காண்க. (௬)

நீர் இங்ஙனங் கூறியவாறே துறந்தோர் பிறப்பு நீங்குவரோ எனின், மேற்கூறுகின்றார்.

நாடுநகர் வீடுடையா டாய்தந்தை நட்புமக்கள்
மாடுகுலம் பொன்னுடம்பின் வாதனைகள்-கூடத்

தொடுத்தவலைக் கண்ணித் தொடக்கிதனை யிப்போ
விடப்பெறுவா ரேன்பிறப்பார் மேல்.

(உரை.) நாடு நகர் வீடு உடையாள் தாய் தந்தை நட்பு மக்கள் மாடு குலம் பொன் உடம்பின் வாதனைகள்—நாடும் நகரும் வீடும் மனைவியும் தாயும் தந்தையும் நட்பும் மக்களும் மாடும் சாதியும் திரவியமும் இவை முதலிய உடம்பு வாதனைகளும்,

கூடத்தொடுத்த வலைக்கண்ணித்தொடக்கு இதனை இப்போ விடப்பெறுவார் மேல் ஏன் பிறப்பார்—தாம் அகப்படப் பிணித்த வலையும் கண்ணியும் ஆகிய தொந்தனை என்றறிந்து, இத் தொந்தனையை இப்போது விடப்பெறுவார் இனிமேல் ஏன் பிறப்பார்?

(குறிப்பு.) உடம்பின் வாதனைகள் என்றமையால் ஆடை ஆபரணம் யானை குதிரை கவிகை சிவிகை சாமரை முதலியவும் கொள்க.

இங்ஙனம் கூறிய எனதென்னும் போகப்பற்றை நீத்துத் தவஞ் செய்வோர்க்கு யானென்னும் தேகப்பற்றும் அறும், இத் தேகப்பற்று அறவே இவற்றை யான் எனதென்று புறத்து நின்ற போதம் அறும், இப்போதம் அறவே உள்நின்ற போதம் அசுத்தவாசனை பண்ணாது சுத்தவாசனை பண்ணும், இவ் வாசனையால் ஞானங் கிடைக்கும், இஞ் ஞானத்தால் வீடுளதாம், ஆகலின், "ஏன் பிறப்பார்மேல்" என்றார்.

இத் திருவெண்பாவால் போகவாதனைகள் எல்லாம் பற்றறத் துறந்தோர் தேகவாதனையாதிகள் அற்று ஞானத்தால்

விடடைவது மெய்ம்மை ஆகலின், அவர்க்கு இனி என்றும் பிறப்பு இன்று என்பது அறிவித்தவாறு காண்க. (௬)

நீர் கூறிய மனை ஆதிய பற்றுக்களை எல்லாம் துறந்துபொன்னை மாத்திரம் பிடித்துக்கொண்டு தவஞ்செய்ய லாகாதோ எனின், மேற்கூறுகின்றார்.

தின்னிற் றிமிரில் விடம்பிடித்துத் தீர்ந்துவிடும்
பொன்னை நினைக்கப் பொறாதுகாண் - பின்னை
மருந்தானு மந்திரத்தி னானுந் தவிராப்
பெரும்பாவம் பெண்ணிற் பெரிது.

(உரை.) தின்னில் திமிரில் விடம் பிடித்துத் தீர்ந்துவிடும் பொன்னை நினைக்கப்பொறாது பின்னை மருந்தாலும் மந்திரத்தினாலும் தவிராப் பெரும்பாவம்—கோபாதிகளாகிய திமிரினால் விடம் உண்டால், அவ் விடம் சிறிதுபோது தாழ்த்துத் தலைமீக்கொண்டு, பின்னர் மணிமந்திர ஔடதங்களால் தீர்ந்துபோம், பொன்னைக் கரத்தானும் பற்றாது வாக்கானும் கூறாது மனத்தால் நினைக்கவே, அப் பொன்னாசையாகிய விடம் அரைக்கணமேனும் தாழாது, அந் நினைவினும் விரைந்து தலைமீக்கொண்டு, பின்னர் மணியானும் மருந்தானும் மந்திரத்தானும் தீராத பெரும்பாவம் ஆகலின்,

பெண்ணில் பெரிது—நீ விடுக்கின்றேன் என்ற பெண்ணாசைவிடத்தைப் பற்ற இப்பொன்னாசை விடம் மிகவும் பெரிது; (இதனை மனத்தானும் நினையாது விடவேண்டும்).

(குறிப்பு.) துறந்தோர் பொன் பிடித்தால் அதனைப் பாதுகாத்தற்கு இடம் பிடிக்கவேண்டும்; அஃதன்றி, அப்பொன்னை

வளர்த்தற்கு அவாத் தோன்றி, அபக்குவர்க்கு ஞானசாத்திரங்களைக் கூறி, பொன் கொடுத்தார்மேல் விழைவும், கொடாதார்மேல் வெகுளியும் தோன்றும்; இவை தோன்றவே துறவால் வரும் தவப்பயனும் இன்றி, முன் பெண்ணோடுங் கூடிச் செய்த இல்லறப்பயனும் இன்றிக் கேடுவரும்; ஆகலின், "பெரும்பாவம் பெண்ணிற் பெரிது" என்றார்.

காண் - அசை.

இத் திருவெண்பாவால் பொன் மனத்தால் நினைப்பினும் மாறுமயக்கம் தருதலானும், ஈட்டல் ஆதியால் விழைவு வெகுளியாதிகள் அடுத்துத் தவப்பயன் அன்றி இல்லறப்பயனும் அழிதலானும், பெண்ணாசையினும் பெரும்பாவம் தருவது ஆகலின், அதனைப் பற்றலாகாது என்பது அறிவித்தவாறு காண்க. (ரு)

இங்ஙனந் தேகாதி பிரபஞ்சம் எல்லாம் பொய் என்று நீர் சொல்லக் கேட்டதே அன்றி மற்றியாவரும் சொல்லக் கேட்டிலேன் என்ற மாணாக்கனை நோக்கி, மேற்கூறுகின்றார்,

செல்வ மிளமை யுடம்புபேய்த் தேரென்று
சொல்லுவதென் காணோரா சுட்டதுபோ - யொல்லை
விடுவோர் பிறப்பிறப்பின் மீளார்கண் மீண்டாற்
றொடுமோ சிவனைத் தொடர்.

(உரை.) செல்வம் இளமை உடம்பு பேய்த்தேர் என்று சொல்லுவது என் காணோரோ—செல்வமும் இளமையும் உடம்பும் இவை முதலிய பிரபஞ்சங்களும் கானற் சலம்போலப்

பொய்யென்று யாம் கூறவேண்டுவது என்னை அவை மெய் போலத் தோன்றி அழிவனவற்றைத் தாம் காட்சிப் பிரமாண மாகக் காணார் கொல்லோ? (ஆயின், எல்லோரும் ஞானத் தால் பிறப்பு அறுமென்று கூற, நீர் துறவால் பிறப்பறும் என்று கூறியது என்னை எனின்),

சுட்டு அது போய் ஒல்லை விடுவோர் பிறப்பு இறப்பில் மீளார்கள் மீண்டால் தொடுமோ சிவனைத்தொடா—தேகாதி பிரபஞ்சங்களை யான் எனது என்று சுட்டி அறியும் இச் சுட்டுப் போதம் போய், அப் பிரபஞ்சத்தைச் சீக்கிரத்தில் விட்டுத் துற ப்போர் பிறப்பிறப்பில் மீண்டு வாரார்கள், ஞானக் குறைவினால் மீண்டார்களேனும், (முன் துறந்து தவம்பண்ணிய வாசனை யால் அப் பற்றுக்களைக் கடந்து நிற்பரே அன்றி, அவரைப் பற் றுத் தீண்டுமோ? தீண்டாது; ஆயினும், பிறப்பில் மீண்டோ ரைத் தீண்டாதோ எனின், அவர்) சிவனைப்போலும் ஒன் றேனும் பற்றற் றுடையார் ஆகலின், தீண்டாது.

(குறிப்பு.) அநித்திய விவேகந்தோன்றிய அக்கணமே தாழ்த்திராது எல்லாவற்றையும் விடவேண்டும் ஆகலின், "ஒல் லைவிடுவோர்" என்றார்.

முற்பிறப்பில் அவா உடையார்க்கு இப் பிறப்பினும் அது தொடர்தல்போல; முற்பிறப்பில் அவா அறுதி உடையார்க்கு இப் பிறப்பினும் அவ் அவா அறுதியே தோற்றும் ஆகலின், "சிவ னைத்தொடா" என்றார்.

இத் திருவெண்பாவால் உடம்பு முதலிய பிரபஞ்சந்தோ ன்றி அழிவது பிரத்தியக்ஷமாக இருத்தலின், கானற் சலம்போ

ன்று அழிவதென்று ஒருவர் கூறக் கேட்க வேண்டுவது இன்றென்பதும், இங்ஙனம் பிரத்தியக்ஷமா யிருப்பினும் அறியார் அஞ்ஞானிகள் என்பதும், சுட்டறிவுபோய்ப் பிரபஞ்சத்தை அநித்தியமென்று அறிந்து விரைந்து விட்டுத் துறப்பதே ஞானமென்பதும், இத் துறவுடையோர் ஈண்டு மீண்டும் பிறவார் என்பதும், தவக்குறைவால் மீண்டார் ஆயினும் ஒன்றினும் பற்றுதல் அற்றிருப்பர் என்பதும் அறிவித்தவாறு காண்க. (சு)

இந்த அவா அறுதியினால் வரப்பட்ட இன்பம் என்னை என்ற மாணாக்கனை நோக்கி, மேற்கூறுகின்றார்

ஆசையினா லற்பசுக மாயழிந்தாற் பேரின்ப
மாசையின்போக் கென்றறிய லாகாதோ - வாசை
நளினைக் கழுக்குவந்த நாசமென நாடித்
தெளியப்போ மற்றிவையைந் தும்.

(உரை.) ஆசையினால் அற்பசுகம் ஆய் அழிந்தால் பேரின்பம் ஆசையின் போக்கு என்று அறியல் ஆகாதோ—ஆசையினாலே போதம் சகமுகமாய்ச் சென்று விடயங்களில் அழுந்த, தமக்கு அவற்றுள் அற்பமாய சுகந்தோன்றி அழியும் ஆனால், இவ்வாசை நாசமே சிவத்தில் தோன்றும் பேரின்பம் பெறுதற்கு ஏது என்று அறியலாகாதோ? (ஆயின்,அவ்வாசை போமாறு எங்ஙனம் எனின்),

ஆசை நளினைக்கு அழுக்கு வந்த நாசம் என நாடித் தெளிய மற்று இவை ஐந்தும் போம்—அவ்வாசை போதத்தின் கண் ஏறுவது நெய்பாகி வார்த்து அடைக்கும் மூங்கிற் குழாய்

வந்து அழுந்து வந்த நாசம்போல, தமக்கு நாசமாம் என விசாரித்தறிய, அவ்வாசையின் போதமாய் அவ்விடயங்களிற் பிரிந்து செல்லும் இவ்வைந்து அவாவும் நீங்கும்.

(குறிப்பு.) ஆன்மா ஆசையினால் விடயத்தில் அழுந்திச் சிற்றின்பம் பெறுதல்போல், அவ்வாசை நாசத்தால் சிவத்தில் அழுந்திப் பேரின்பம் பெறும் ஆகலின், "பேரின்ப மாசையின் போக்கென் றறிய லாகாதோ" என்றார்.

தேன் நெய் எண்ணெயாதி வார்க்கும் மூங்கிற் குழாய்ச் சிறு துவாரத்தின்கண் மரவட்டை முதலிய நுழைந்தால் அதில் சுழல்வதே அன்றி, அழுக்கினால் மீளமாட்டா; ஆகலின், முன்போல் தேனாதி வார்த்து அங்கீகரியாது அதனைப் புறம்பாய் விடப்படும். அதுபோல், ஆசை போதத்தில் ஏறியிருந்தபோது எவ்விதத்தானும் மீளாது; அதனால், அப்போதத்தில் வீட்டின்பத்திற்கு ஏதுவாய துறவு மெய்யுணர்வு முதலிய நற்குணங்கள் ஏறா, இக் குணங்கள் ஏறாமையின் முன்போல் பிறவித் துன்பத்தையே பெறும். ஆகலின், அங்ஙனம் உவமை கூறினார்.

நளிகையில் மரவட்டையாதி நுழையும்போது இன்பம் போல் எளிதில் நுழைந்து மீளமாட்டா. அதுபோல், போதத்தின்கண் ஆசை ஏறும்போது இன்பம்போல் தோன்றி, எளிதில் ஏறி மீளாமைக்குங் கொள்க. நளிகை என்பது மூங்கிற் குழாய், அது திசைச்சொல்.

இத் திருவெண்பாவால் அவாவினால் அற்ப இன்பம் பெறுதல் போல், அவா அறுதியால் பேரின்பம் வரும் என்பதும்,

|வாவினால் தமக்கு நேரிடும் அநர்த்தத்தை உண்மையாய்
'சாரித் தறியின் அவ்வவா அறுதி வரும் என்பதும் அறிவித்த
'ாறு காண்க. (எ)

இனித் துறவினது முடிவும், துறந்து செய்யும் தவத்தி
ரது முடிவும், அடியேற்கு அருளிச்செய்ய வேண்டும் என்ற
ாணுக்கனை நோக்கி மேற் கூறுகின்றார்.

_கயந் தொழப்போவார்க் குள்ளும் புறம்பும்
|றைதயவொளி வீசுமா போலே - பதிமோகி
ீக்காட்டி லேகொடுக்கச் சென்றவா கண்டக்காற்
ுக்காத தன்றோ தவம்.

(உரை.) உதயம் தொழப் போவார்க்கு உள்ளும் புறம்
'ம் புறைதய ஒளி வீசுமா போலே—சூரிய உதயம் தொழச்
'சல்வோர்க்கு உள்ளும் புறம்பும் இருள் மறைய ஒளி வீசு
ாறு போலே, (மனை சுதர் முதலிய பற்றுக்கள் எல்லாவற்றை
ம் விட்டு, அவற்றின்மேல் உள்ளத்தெழும் அவாவினையும்
ிறுத்து, கண்ட விடயங்கள்மேற் சென்று பற்றும் இந்திரியங்
களையும் அடக்கி, உள்ளும் புறம்பும் ஆசையாகிய இருளற
ராசையாகிய ஒளி வீச நிற்றலே துறவினது முடிவு);

பதி மோகி கொடுக்கத் தீக்காட்டிலே சென்ற ஆறு கண்
.க்கால் தாக்காதது அன்றோ தவம்—தனதுபுருடன்மேல்அதி
'மாகியா யிருந்துளாள் அவன் மரித்தகாலை அவனுக்குத் தன்
னக் கொடுக்கச் சுடுகாட்டிற் சென்றவாறு கண்டு (அவளைப்
'பாலும் தற்போதத்தைச் சிவனுக்கு ஊணாகக் கொடுத்துத்

காம் ஒன்றேனும்) தாக்கற்றிருத்தல் அன்றோ தவத்தினது முடிவு?

(குறிப்பு.) உதயந் தொழுவார்க்குக் கண் விழித்தபோதும் இமைத்தபோதும் ஒளிவீசுதல் போலும், துறந்தோர்க்குப் பொறிகளால் விடயங்களைக் கண்டபோதும் காணாதிருந்தபோதும் உள்ளும் புறம்பும் நிராசையோடு இருக்கவேண்டும் ஆகலின், அங்ஙனம் உவமை கூறினார்.

தவமென்றமையால் துறவு வருவிக்கப்பட்டது.

இத் திருவெண்பாவால் உள்ளும் புறம்பும் நிராசையோடிருப்பது துறவினது முடிவென்பதும், போதம் ஒழிந்து ஒன்றேனும் தாக்கற் றிருப்பது தவமுடி வென்பதும் அறிவித்தவாறு காண்க. (அ)

இங்ஙனம் நிராசையோ டிருந்தோர்க்குத் தற்போதம் அறுமோ என்ற மாணாக்கனை நோக்கி, மேற்கூறுகின்றார்.

ஊமைமணி யாட்டுகினு மோசையழிந் தாற்போல
வாமதுபோ னிற்க வரிதுகா - ணுமாய்
வளர்ந்த வசத்தையெலா மாளமரக் காலா
லளந்தெறிந்து போட்டதுபோ லாம்.

(உரை.) ஊமை மணி ஆட்டுகினும் ஓசை அழிந்தாற் போல ஆம்—நாவிழந்த மணியைப் பிடித்து அசைப்பினும் ஓசை ஒழிந்து நின்றாற்போல, (பஞ்சவிடயங்களும் வலியவந்து அடுப்பினும் அதிதீவிர பக்குவர்க்குப் போதங் கலங்காது நிராசையே) உண்டாம்;

அது போல் நிற்க அரிது ஆம் ஆய் வளர்ந்த அசத்தை எலாம் மாள மரக்காலால் அளந்து எறிந்து போட்டது போல் ஆம்—அவர் அங்ஙனம் நிற்குமதுபோல் நிற்க மற்றைய பக்குவர்க்கு மிகவும் அரிது, (தாஞ் உபாயத்தானும் அங்ஙனம்)நிற்க வருமாயின்ஆசையால்முன்னர்ப் போதம் மேலிட்டு மேன்மேல் வளர்ந்த அதனது சேட்டை எல்லாம் இறந்துபோம்படி அறிவாகிய மரக்காலால் இவ்வளவென்று அளந்து புறம்பாய் எறிந்து போட்டது போல் ஆம்.

(குறிப்பு) நிராசையோ டிருப்போரைக் கருவிகள் * சேட்டியாது நீங்கும், அக் கருவிகள் நீங்கவே திருவருள் தோன்றும், அத்திருவருளால் போதத்தை ஈதென்று அளவிட் டறிந்து ஒழிக்கலாம் ஆகலின், இங்ஙனம் உவமை கூறினர்.

இத் திருவெண்பாவால் நிராசை உடையோரை வலிந்து விடயங்கள் அடுக்கினும் போதம் அசையாது ஆகலின், நிராசைவரின் போத ஒழிவு தானேவரும் என்பதும், இங்ஙனம் இருத்தல் மற்றைய பக்குவர்க்கு அரிதென்பதும், அங்ஙனம் ஆயினும் அவர்க்கும் உபாயத்தான் அவாவறுகி வருமாயின் அப்போதச் சேட்டை அளவிட் டெறியப்படும் என்பதும் அறிவித்தவாறு காண்க. (கூ)

தநுகரணபுவன போகங்களில் சிறிதேனும் பற்றின்றி நிற்றற்கு உபாயம் எங்ஙனம் என்ற மாணாக்கனை நோக்கி, மேற் கூறுகின்றார்.

* தொழிற்படுத்தாது அல்லது குணக்கேடான தொழில் விளைக்காது.

தனுவாதி நான்கினுக்குஞ் சார்வழிந்து சற்று
நினையா திளைப்பாறி நின்றால் — மனையாமோ
காந்தக் கடத்தூசி காற்றற்ற தீபமென
வாந்தத் துவங்களய லாட்.

(உரை.) தனு ஆதி நான்கினுக்கும் சார்வு அழிந்து சற்றும் நினையாது இ ப்பு ஆறி நின்றால் மனை ஆமோ—போகமும் நானன்று புவனமும் நானன்று தநுவும் நானன்று கரணமும் நானன்று என்று உள்ளபடி அறிந்து, நியதிகளோந்து, அத்தநுவாதி நான்கினிடத்தும் யான் எனதென்று சார்ந்துநின்ற போதச்சார்வு கெட்டு, அவற்றை மீட்டுச் சற்றும் பற்றாது அருளில் இளைப்பாறி அசைவற நின்றால், மனையாகிய புவனத்திடத்தும், அம் மனையைப் பற்றி யிருந்த வனிதாதி போகத்திடத்தும், முன்போல் பற்றுண்டாமோ? (ஆயின், புவனபோகங்களில் பற்றின்றி நிற்பினும் தநுகரணங்களிற் பற்றின்றி நிற்பது எங்ஙனம் எனின்),

காந்தக் கடத்து ஊசி காற்று அற்ற தீபம் என ஆம் தத்துவங்கள் அயல் ஆம்—காந்தக் கடத்திற்கு எதிர்முகமாயபோது பற்றியும், அதனுட் கிடந்தபோது பற்றாதும் இருந்த காந்தக்கடத்து ஊசிபோலும், காற்றில் இருந்தபோது அசைந்தும் காற்றின்றியபோது அசையாதும் இருந்த காற்றற்ற தீபம்போலும், (அத் தநுகரணங்களைத் தனக் கந்நியமாய்க் கண்டு நீங்கி நிற்பின், அவற்றோடும்) தாக்கற்று நிற்பது உண்டாம், (அவற்றோடும் தாக்கற்று நிற்கவே மற்றைய) தத்துவங்களும் அயலாய் நீங்கும்.

(குறிப்பு) தநுவாதிகளில் கறங்குபோல் சுழன்ற தன்மை திருவருட்கண் நின்றபோது இன்மையால், "இளைப்பாறி" என்றார்.

காந்தக் கடத்திற்கு எதிர்முகமாயபோது பற்றிய ஊசிஅதனுட் கிடந்தபோது பற்றா திருந்ததுபோல், சகமுகமாய்நின்று தேகத்தை யானென்று பற்றிய போதம் அகமுகமாய் நின்று திருவருளை அடைந்தபோது அத் தேகத்தை யானென்று பற்றாது ஆகலின், "காந்தக்கடத்தூசி" என்றும், அப் புவன போக தநுகரணங்களைப் போதம் பற்றாது நின்றபோது கரணம் தற்சேட்டையற்று அடங்கும், அப்போது போதந் திருவருளோடு கூடிக் காற்றற்ற தீபம்போலாகி மீட்டும் கரணத்தோடுங் கூடாது ஆகலின், "காற்றற்றதீபம்" என்றும், கரணங்களறவே அக் கரணங்களினது சேட்டைக்கு ஏதுவாய கலாதிகளும், அக் கலாதிகளைப் பிரேரகம்பண்ணும் சுத்த தத்துவங்களும் நீங்கும்; ஆகலின், "தத்துவங்க ளயலாம்" என்றுங் கூறினார்.

இத் திருவெண்பாவால் புவனபோகங்களைத் தான் அன்றென்று உள்ளபடி அறிந்து களைந்து, அவற்றின்கட் சார்ந்து நின்ற போதச்சார்வு கெட்டு, அருட்சார்பி னின்றால் புவன போகப் பற்றறும் என்பதும், தநு கரணங்களைத் தனக்கு அந்நியமென்று அறிந்து, அவற்றோடும் தாக்கற்றுத் தனக்கு அநந்நியமான அருளாய் நிற்பின் அத் தநு கரணப் பற்றறும் என்பதும், இங்ஙனம் அறவே மற்றைத் தத்துவங்கள் தாமே அறுமென்பதும் அறிவித்தவாறு காண்க. (௧0)

உத்தமராயினோர் கற்புடைய மனைவியைத் துறப்போர் என்ற மாறுக்களை நோக்கி, மேற் கூறுகின்றார்.

நாயலகை நெய்விரும்பி நக்குவது நஞ்சிட்ட
பாயசமு மெய்ப்பரிசப் பாவைமிகச் - சாயாநீர்
வேட்கை யசுணமிபம் விட்டின்மீன் வண்டிவையின்
சாட்சியைக்கண் டார்துறவா தார்.

(உரை.) நாய் அலகை நெய் விரும்பி நக்குவதும் நஞ்சு இட்ட பாயசமும் பாவை மெய்ப் பரிசம் மிகச் சாயா நீர் வேட்கை—நாயானது வாள்வாயில் தடவிய நெய்யை விரும்பி அவ்வாள் வாயை நக்குவது போலும், விடங்கலந்த பாயசத்தை ஒருவன் சுவையென விரும்புவது போலுமாகும், பாவையரது மெய்ப்பரிசத்தை இன்பமாய் விரும்புதல் ஆகலினும், பொய்யாகிய அப் பாவையரது மெய்ப்பரிசத்தை மெய்யாகக் கண்டு அநுபவிக்க விழைதல் மிகவும் பொய்யாகிய கானல்நீரை மெய்யாகக் கண்டு தாகத்திற்கு உண்ண விரும்புதல் போலாம் ஆகலினும்,

அசுணம் இபம் விட்டில் மீன் வண்டு இவையின் சாட்சியைக் கண்டு துறவாதார் ஆர்—அசுணப்புள் சத்தத்தானும், பானை பரிசத்தானும், விட்டிற்பூச்சி உருவத்தானும், மீன் இரசத்தானும், வண்டு கந்தத்தானும், கெடுமென இவைகளைச் சாட்சியாக் கண்டிறலானும், இவ்வைந்து விடயங்களும் உளவாகிய அப் பாவையரைத் துறவாதார் யாவர்?

(குறிப்பு.) வாள்வாயின் நெய்யை நக்கின நாய்க்கும், நஞ்சிட்ட பாயசம் உண்டோனுக்கும், முன்னர் அனுபவளவின்பம்

போல் தோன்றி, பின்னர் அதனால் மலையளவு துன்பம் வருவதுபோல், அநுபவிக்கும்போது சிறிது இன்பம்போல் தோன்றிப் பின்னைத் துன்பம் வரும் என்பதும், பொய்யாய்த் தோன்றும் கானல்நீரை மெய்யாய்க் கருதி உண்ணத் தொடங்கினானைப்போல், பொய்யாய்த் தோன்றும் பாவையரை மெய்யாய்க் கருதி அநுபவிக்கத் தொடங்குவரென்பதும், ஒரோர் விடயத்தை விழைந்து ஒவ்வொன்று கெடுமெனில் ஐந்துவிடயங்களும் உளராகிய பாவையரை விழைந்தால், அவரால் வருங் கேட்டிற்கு அளவின்றென்பதும் இதனாற் காண்க.

இத் திருவெண்பாவால் பெண்கள் இன்பம் மிகச் சிறிதென்பதும், அதனால் வருந் துன்பம் மிகப் பெரிதென்பதும், அவர் கூட்டரவு மாயையென்பதும், அவர்கள் செய்யும் ஐம்புல நுகர்ச்சி பெருங்கேட்டைத் தருமென்பதும், இங்ஙனம் அறிந்தோர் தம் மனைவி அருந்ததிக் கற்பினள் ஆயினும் துறப்பரென்பதும், அறிவித்தவாறு காண்க. (கக)

எல்லோரும் மனைவி ஆதிய குடும்பத்தோடிருந்து, இன்பங்களை அநுபவித்துக்கொண்டு பூரிப்போடும் இருக்க, அக் குடும்பத்தை நீர் துன்பமென்றீர், இஃதென்னை எனின், மேற் கூறுகின்றார்.

இடும்பைக்கே கொள்கலமா யேழ்நரகுக் கீடாங்
குடும்பத்தைக் குற்ற மறைக்கி-னடுங்காரோ
னவ்வர்க் கொருவ னறுதொழிலைச் செய்தலான்
மெய்யைப்பொய் யாக்கி விடும்.

(உரை.) இடும்பைக்கே கொள்கலம் ஆய் ஏழ் நரகுக்கு ஈடு ஆம் குடும்பத்தைக் குற்றம் மறைக்கின் நடுங்காரோ—அஞ்ஞானிகள் இம்மைக்கண்ணே துன்பங்களை எல்லாம் தாம் அநுபவித்தற்கு ஏற்றுக்கொள்வதாய கப்பலாய், மறுமைக்கண்ணே எழுவகைப் பிறவியாகிய எழுவகை நரகத்தையும் உண்டாக்கும் கனைதயினையுடைய மனை சுதர்முதலிய குடும்பத்தை இங்ஙனம் இகபரங்களினும் துக்கத்தைத் தருவதென்று அறியார்; இங்ஙனம் அறியவொட்டாது ஆணவமாகிய குற்றம் அவரை மறைத்தலால், இவ்வாணவக் குற்றம் நீங்கினோர் குடும்பக் குழாத்தைக் கண்டாலும் உளம் வெருவி நடுக்கம் உறார்கொலோ (ஆயின், நீர் மெய்யென்று கூறிய சிவம் ஒருவர்க்குந் தோன்றா திருப்பானேன் என்னின்),

ஐவர்க்கு ஒருவன் அறதொழிலைச் செய்தலால் மெய்யைப் பொய்யாக்கிவிடும்—ஐந்து இந்திரியங்கட்கும் ஓர் முதல்வனாகிய ஆன்மா அவ் விந்திரியங்களால் அறிந்து அநுபவிக்கும் விடய சுகத்தின் பொருட்டு உழவு முதலிய அறுவகைத் தொழிலில் முயற்சிப்படலால் இம் முயற்சி அச்சிவத்தைத் தெரியவொட்டாது பொய்யாக்கிவிடும்; (இதனை நீ அறிதி).

(குறிப்பு.) குடும்பத்தால் இம்மைக்கண் தேகதுக்கம் மனோதுக்கங்கள் இடையறாது வருதலின், "இடும்பைக்கே கொள்கலமாய்" என்றும், இக் குடும்ப வாசனையால் மறுமைக்கண் பிறவிகள் தொன்றுதொட்டு வருமாகலின், "ஏழ்நரகுக்கீடாம்" என்றுங் கூறினார்.

"அறுதொழிலைச் செய்தலால் மெய்யைப் பொய்யாக்கி விடும்" எனவே குடும்பத்தின் பொருட்டுச் செய்யும் அறுவகைத் தொழில்களின் முயற்சியைவிட்டுச் சிவயோக முயற்சியில் தொடங்கின் மெய்ப்பொருள் தோற்று மென்பதாயிற்று. அறுவகைத் தொழில்களாவன—உழவு, தொழில், வாணிகம், எழுத்து, சிற்பம், பரதம் இவை ஆறுமெனக் கொள்க. (சஉ)

உத்தம பக்குவராயினோர் குடும்பத்தோடும் கூடியிரார் என்று இன்னுங் கூறுகின்றார்.

குரங்கிற் றுனிச்சி குடும்பக் குழாமும்
பெருங்குப்பை யிற்கரடிப் பெண்டும்-பொருந்துவரோ
காலனுந் தீயுங் கடலுமிருங் கல்லுமாய்
மேலு நரகாய் விடும்.

(உரை.) குரங்கின் துனிச்சி குடும்பக் குழாமும் பெருங் குப்பையில் கரடிப் பெண்டும் பொருந்துவரோ—ஓர் குரங்கைப் பல குரங்கு வந்து சேட்டித்தல்போல, தாய் தந்தை சுதர் சுற்றம் முதலியோர் தம்மை வந்து வாதிக்கும் குடும்பக் கூட்டத்தையும், அக் குடும்பக் கூட்டமாகிய பெரிய மலக் குப்பைக் கண் கரடிபோலும் பற்றப்பட்ட பெண்டிராகு கூட்டரவினையும், பொருந்தியிருப்பரோ உத்தமராயினோர்? (ஆயின், எல்லோரும் அவரோடுங்கூடி யிருக்க இல்லையோ? இவரென்னை அங்ஙனம் இராதுபோவது எனின்),

காலனும் தீயும் கடலும் இருங்கல்லும் ஆய் மேலும் நரகாய்விடும்—அக் குடும்பக் கூட்டம் காலனைப்போலும், தீயைப்

போலும், கடலைப்போலும், பெரிய மலையைப்போலும், இம்மைக்கண்ணே துன்பந் தருவதாய் மறுமைக்கண்ணும் அதனொடுங் கூடியிருந்த வாசனையால் பிறப்பாகிய சாகரத்தையும் தருவதாய்விடும் (என அறிந்து அதனொடுங் கூடியிரார்).

(குறிப்பு.) சோறு கூறை முதலியன கொடுக்கும்போதும் கொடாதபோதும் வரும் பிணக்கானும், அவற்றிற் கேதுவாகிய திரவியந் தேடுதலானும், அதனைப் பாதுகாத்தலானும், அவர்க்கு வியாதி ஆதி துன்பம் அபிமானபங்கம் வந்த காலையினும், அரையர் கலகம் அற்பகாலம் வந்த காலையினும், அவரிறந்த காலையினும், இவை முதலியவற்றால் அக் குடும்பத்தால் தேகதுக்க மனோதுக்கங்கள் இடையறாது வருதலின், "குராங்கிற்றனிச்சி குடும்பக்குழாம்" என்றார்.

இத் துன்பக் குழுவில் கரடிபோலும் குணத்தானும் செய்கையானும் இழிவாய பெண்டிரைக் கூடுவரோ என்பதனை, "பெருவகுப்பையிற் கரடிப்பெண்டும் பொருந்துவரோ" என்று குறிப்பாற் கூறினார்.

காலன் உயிர்களைப் பாசத்தால் பிணித்துக்கொடுசென்று நிரயத்துள் வீழ்த்தி வருத்துதல்போல், துறந்து செல்கிறேனென்று இரண்டடிச் சென்றோனை மனை சுதர் முதலியோர் கரசரணங்களைப் பற்றிக்கொண்டு ஒவிட்டழுது அவனுள்ளம் இளகப்பண்ணி மீட்டுக் கொடுவந்து குடும்பமாகிய துன்பத்துள் அகப்படுத்தி வருத்துதலின், காலன் என்றும், ஒருவனைத் தீச் சூழ்ந்துகொண்டதுபோல் சூழ்ந்து கோடலின், தீ என்றும், நடுக்கடலில் வீழ்ந்தோனுக்குக் கரைகண்டு ஏறக் கூடாத

துபோல், அக் குடும்பசாகரத்தில்வீழ்ந்தோனுக்கு இக்கரைகண்டேறக்கூடாது ஆகலின், கடல் என்றும், மலை யிருத்திக்கொண்டதுபோல் குடும்பபாரந் தன்றலைச்சுமையா யிருத்துதலின், இருங் கல் என்றும், இறக்கும்போது உயிர்க்கு எந்த வாசனை இருந்தது அந்தவாசனையோடும்சென்று பிறத்தலின், மேலும் நரகம் என்றுங் கூறினர்.

இவை யிரண்டு திருவெண்பாவானும் மனைவியாதிய குடும்பம் துன்பங்கட்கும் பிறவி வாதனைகட்கும் உறைவிடமென்பதும், இதனை இங்ஙனமென்று ஆணவமறைப்பான் அஞ்ஞானிகள் அறிந்கல ரென்பதும், ஞானிகள் இதனைக் காணினும் கேட்கினும் நடுங்குவ ரென்பதும், இக் குடும்ப முயற்சி சிவத்தை அறியவொட்டாது மறைக்குமென்பதும், உத்தமபக்குவர் விடாது சூழ்ந்து வாதிக்கும் இக் குடும்பவாதனையான் வரும் நட்டங்களை முற்றும் அறிந்து அதனை அக்கணத்தே விடுவரென்பதும், அறிவித்தவாறு காண்க. (கஈ)

இங்ஙனந் துன்பமென்று அறிந்து, துறந்து செல்வோர் தம்மை நம்பியிருந்த குடும்பத்தைப் பாதுகாத்தற்குச் சகோதரர் முதலாயினருள் ஒருவரைத் துணையாக வைத்து, பின்துறந்து சேறலாகாதோ எனின், மேற் கூறுகின்றார்.

கன்னனைப்போற் றன்னை யறிவனோ காக்கையுடன்
மன்னு குயில்போன வாறுபோ - லந்நியமாய்ப்
பேசாது போன துறவி பிறப்பறுப்பார்க்
காசானு மென்றே யறி.

(உரை.) கன்னனைப் போல் தன்னை அறிவனே காக்கையுடன் மன்னு குயில் போன ஆறு போல் அந்நியம் ஆய்ப் பேசாது போன துறவி—யான் இன்னசாதி இன்ன குலம் தாய் தந்தை இன்னாரென்று தனது குல குடும்பங்களை அறியாத கன்னனைப்போலும், உத்தம பக்குவன் யான் இன்னசாதி இன்ன குலம் இன்னார் தாய் தந்தை யென்று தனது குல குடும்பங்களைப் பகுத்தறிவனோ? இங்ஙனம் ஒன்றையும் பகுத்தறியாது காக்கையுடன் பருவம் வருமளவும் தனது இனம்போல் கூடிச் சென்று, பருவம் வந்தகாலை அதற்கு அந்நியமாய்ப் பேசாது சென்ற நிலைபெற்ற குயில்போலும், அநித்திய விவேகம் வருமளவும் அவரினம்போல் கூடியிருந்து, அந்த விவேகம் வந்தகாலை அவர்க்கு அந்நியமாய்ப் பிரிந்து அவரோடுஞ்சொல்லாது சென்ற துறவியே மெய்த்துறவி;

பிறப்பு அறப்பார்க்கு ஆசானும் என்று அறி—அத் துவிற பிறப்பறுக்கும் பொருட்டுத் துறந்தார்க்கு ஆசாரியனும் ஆவன் என்று நீ அறிதி.

(குறிப்பு.) தருமன் முதலிய துணைவரையும் குந்தியாகிய தாயையும் கண்டிருந்தும் கன்னன் அறியாததுபோல், இவன் குடும்பத்தாரைக் கண்டிருந்தும் அநித்திய விவேகத்தால் பொய்யாய்க் கண்டான் ஆதலின், "கன்னனைப்போற் றன்னை யறிவனோ" என்றும், குயில் காக்கையோடு கூடியிருந்தபோதும் தன் குரலைக்காட்டினால் கொத்துமென்று அடங்கியிருந்து, செல்லும்போதும் கூவாது சென்றதுபோல், குடும்பத்தோடு கூடியிருந்த போதும் தான் துறந்து சேறலை அவரோடும் சொன்

ளைற் பற்றவரென்பது அறிந்து, சொல்லா தடங்கியிருந்து, செல்லும்போதும் சொல்லாது சென்றமையால் "குயில்போன வாறுபோற் பேசாது போன துறவி" என்றுங் கூறினார்.

அறிவும் துறவும் உள்ள ஞானி சிறப்புளன் ஆகலின் இவனை "ஆசானும்" என்றார்.

ஏ - அசை.

இத் திருவெண்பாவால் குலமுதலியவற்றின் அபிமானம் இன்றி, அநித்தியவிவேகம் வருமளவும் அவற்றோடு உண்ணோக்குதல் அற்றுக் கூடிநின்று, அந்த விவேகம் வரின் ஒருவரோடும் விடைபெறாது சென்றவனே துறவிகளுட் சிறந்தவன் என்றும் அறிவித்தவாறு காண்க. (கச)

இங்ஙனம் துறந்து செல்வாரை மாதா பிதாக்கள் வந்து தடுத்தால் எங்ஙனம் செல்வார் எனின், மேற் கூறுகின்றார்.

நித்திரைசெய் வீட்டி னெருப்பும் பெரும்படையு
முற்றிப் புறப்பட்டார் முற்றத்தே - பித்தரைப்போ
னில்லென்று சொன்னாலு நிற்பரோ வப்படிகா
ணில்லறத்தை நீத்தா ரியல்பு.

(உரை.) நித்திரை செய் வீட்டில் நெருப்பும் பெரும் படையும் முற்றி முற்றத்தே புறப்பட்டார் நில் என்று சொன்னாலும் பித்தரைப்போல் நிற்பரோ—தாம் நித்திரை பண்ணுகின்ற வீட்டினுள்ளே நெருப்பும் பெரும்படையும் செறிந்துவர (விழித்து, அவற்றைக்கண்டு வெருண்டு அவ் வீட்டின் வாயில் கடந்து) முன்றிலில், புறப்பட்டார் தமக்கு அனுகூலராயி

னும், அவற்றின் நடு நிற்பீரென்று அறியாது கூறினும், பித்தரைப்போலும் அவர் மொழியை உட்கொண்டு கணைப்போதாயினும் நிற்பரோ?

அப்படி இல் அறத்தைத் நீத்தார் இயல்பு—(அவர் எப்படி நில்லாது ஓடிச் செல்வரோ) அப்படியே மாதாபிதாக்கள் வந்து தடுப்பினும் நில்லாது இல்வாழ்க்கையைத் துக்கமாகக் கண்டு துறந்து செல்வாரது முறைமையும் ஆம்.

(குறிப்பு.) குடும்பம் துக்கமென்று அறியாதபோது அதனோடுங் கூடியிருப்பார் என்பதும், துக்கமென்று அறிந்தபோது அதனைத் துறந்து செல்வார் என்பதும், துறந்து செல்லும்போது யாவர் தடுப்பினும் நில்லார் என்பதும், இவ்வுவமைக் குறிப்புகளாற் காண்க.

காண் - அசை. (கரு)

இங்ஙனம் துறந்து செல்வோர் இயல்பு இன்னுங் கூறுகின்றார்.

கட்டு நெகிழ்த்துவிட்ட கள்ளனைப்போற் கங்குலிற்பே [ய்
வெட்டு களத்தின் வெருவினர்போல - முட்டத்
தொடர்ந்த படைபிழைத்துத் தோன்றப்போ வாரம்பா
லடங்கத் துறந்தேகு வார்.

(உரை.) கட்டு நெகிழ்த்துவிட்ட கள்ளனைப்போல் கங்குலில் பேய் வெட்டு களத்தின்வெருவினர்போல் முட்டத்தொடர்ந்த படை பிழைத்துத் தோன்றப்போவார் போல்—பொருள் திருடிய கள்வனைச் சிலர் வந்து பற்றிப் பிணித்து வருத்த

அவருள் அருள் உளதொருவன் வந்து அப் பிணியை அவிழ்த்துவிட்ட காலையில் விரைந்துசெல்லும் அக் கள்வனைப்போலும், அரையிரவிற் பெரும் பேயைக்கண்டு வெருவினர் விரைந்து சேறல்போலும், யுத்தகளத்தின் வெருவினர் விரைந்து சேறல்போலும், தம்மைப் பிடிக்கப் பின்தொடர்ந்த படைக்குத் தப்பி மிகவுங் கைகடந்து செல்வார்போலும்,

அடங்கத் துறந்து ஏகுவார்—தாய்தந்தை மனை சுற்றம் முதலிய குடும்பக்கூட்டங்களை எல்லாம் ஒருங்கே துறந்து செல்வார்; (அன்றி, அவர்க்கு ஓர் தடையும் இன்று).

(குறிப்பு.) மலபரிபாகம் வாராமுன் தாம் செய்த இருவினைக்கீடாய்க் குடும்பபாசத்தால் பிணிப்புண்டு வருந்தவர் என்பதும் அப் பரிபாகம் வந்தகாலைத் தோன்றுகின்ற அருட்சத்தி அக் குடும்ப பாசந் துக்கமென்று அறிவிக்க அறிந்து துறந்து செல்வார் என்பதும், அப்போது இரவில் தோன்றும் பேய்போலும் யுத்தகளம்போலும் குடும்பம் அவர்க்குத் தோற்றுமென்பதும், அக் குடும்பக் குழாங்கள் பின் தொடர்வரென்று அறிந்து தூரதேசத்திற் செல்வாரென்பதும், இவ்வுவமைக் குறிப்புகளாற் காண்க.

படை - சேனை.

இவையிரண்டு திருவெண்பாவானும் குடும்பபாரம் பொறுத்தற்கு ஆற்றாது வருந்தி இழித்துவிட்டு விரைந்து செல்வோர் தாய்தந்தையர் ஆதியர் தடுத்தற்குச் சிறிதும் உட்படாரென்று அறிவித்தவாறு காண்க. (கசு)

தாம் துறந்து போதற்குக் குடும்பத்தார் சம்மதித்தால், அப் பதியிலிருந்து தவம்பண்ணலாகாதோ எனின், மேற் கூறுகின்றார்.

உடுக்கை மறந்தவருக் கூர்காடென் றுண்டோ
வடுத்தயலா ருண்டோபே யானால்-சுடப்போட்
டெதிரிட்ட தெல்லா மிழந்தார்க் கிருந்த
பதியைக்கொண் டுண்டோ பயன்.

(உரை.) உடுக்கை மறந்தவருக்கு ஊர் காடு என்று உண்டோ பேய் ஆனால் அடுத்தயலார் உண்டோ—(குடும்பக் கூட்டங்களை எல்லாம் துர்சனத் துறந்து தேகத்தையும் சத்துருவாகக் கண்டு அத் தேகத்தில் நான்குமுழஞ் சுற்றம்) உடுக்கையும் மறந்து திரிவோர்க்கு இது ஊர் என்றும், இது காடென்றும் பகுத்துக் காணும் நினைப்பும் உண்டுகொல்லோ? (அஃதன்றி), பூரணப்பேய் மயமாகையினால் அவர்க்கு அடுத்தாரும் அயலாரும் உண்டுகொலோ? (இங்ஙனம் உடுக்கை மறந்து அடுத்தார் அயலாரென்பதும் தோன்றா திருப்பதும் அன்றி),

சுடப் போட்டு எதிரிட்டது எல்லாம் இழந்தார்க்கு இருந்த பதியைக் கொண்டு பயன் உண்டோ—காத்தில் வைத்த பொருள் மிகவுஞ்சுட விரைந்துபோட்டு நின்றாற்போல், தமதறிவிற்கு எதிரிட்ட கருவிகளை எல்லாம் துன்பமாகக் கண்டு ஞானாக்கினியினால் எரித்து இவற்றையும் இழந்தார்க்குத் தாம் முன்னிருந்த பதியில் இப்போது இருந்ததுகொண்டு பயன் என்னை உண்டுகொல்?

இத் திருவெண்பாவால் தேகாபிமானம் விடுத்து அதனைப் பகையாகவும், எதிரிட்டவைகளைத் துன்பமாகவும் கண்டு, அனைத்தையும் இழந்து, பூரண மருள் கொண்டோர் இது நாடு இது காடென்றும் இவர் அடுத்தார் இவர் அயலா ரென்றும் பகுத்தறிதல் இன்றாகலின், முன்னிருந்த பதியில் இப்போது இருப்பதனால் அவர்க்கு வரும் பயன் ஒன்றும் இன்றென்று அறிவித்தவாறு காண்க. (கஎ)

முன்னிருந்த பதியைவிட்டு, மற்றோர் சிவதலத்தில் ஓரிடம் பற்றியிருந்து, ஒருவர் முன்னிலையாய் உதராக்கினிக்கு அன்னமாத்திரம் வாங்கியுண்டு தவத்தைப் பண்ணலாகாதோ எனின், மேற்கூறுகின்றார்.

துக்கஞ் சுகமான சுட்டறிவு கெட்டவர்க்குத்
திக்குண்டோ வெங்குஞ் சிவாலயமா - மக்கினிக்குப்
பிச்சை பொதுநிழனீர் பேரிதுவே பேசார்த
மிச்சையிருப் பேகாந்தத் தே.

(உரை) துக்கம் சுகம் ஆன சுட்டு அறிவு கெட்டவர்க்குத் திக்கு உண்டோ எங்கும் சிவாலயம் ஆம்—முன்கண்ட பிரபஞ்ச துக்கம் எல்லாம் இப்போது ஆநந்தமாகக் கண்ட அச்சுட்டுப்போதம் கெட்டோர்க்கு இன்ன திசை என்றும் இன்ன இடம் என்றும் பகுப்புண்டாமோ? அவர்க்கு எத்திசையும் எவ்விடமும் சிவாலயமே ஆகும்; (அஃதன்றி),

அக்கினிக்குப் பிச்சை பொதுநிழல் நீர் பேரிதுவே பேசார் ஏகாந்தத்து இருப்பு தம் இச்சை—உதராக்கினி அவித்த

ற்கு ஊரின்கண் பிச்சையும் இருத்தற்கு இடம் பொதுச்சாவடி மாசிழலும், தாகந் தணித்தற்கு ஏரியாதி நீர்களும் உளவாகலின் அன்னம் இடம் நீர் என்றும் இவற்றினது பயனையே சொல்லார்; (ஆயின், அவர்க்கு இச்சைதான் ஏது எனின், ஒருவரோடுங் கூடியிராது பேசாது) ஏகாந்தத்திருப்பதே இச்சையாம்.

(குறிப்பு.) சிவத்தை உணர்ந்தோர்க்கு எங்கும் பரிபூரணமாய்த் தோற்றும் ஆகலின், "எங்குஞ் சிவாலய மாம்" என்றார்.

இத் திருவெண்பாவால் பிரபஞ்சங்களையெல்லாம் ஆநந்த மயமாக் கண்ட துறவினர்க்குத் திசையாதி எவ்விடத்தும் சிவாலயமாகும் என்பதும், பிச்சையாதி உளவாகலின் அன்னபானாதி ஓரிடத்தில் குறியார் என்பதும், ஒருவரோடும் கூடாது ஏகாந்த மௌனத் திருப்பதே அவர்க்கு இச்சை என்பதும் அறிவித்தவாறு காண்க. (கஅ)

ஒருவரோடு கூடியிருந்து பேசுதலும் ஆகாதோ எனின், மேற் கூறுகின்றார்.

அங்கக்கா ரன்குதிப்பு நாவிசுவை யானதுவுஞ்
சிங்கி குளிர்ந்ததுவும் போற்செகத்தோர்-சங்கத்தைத்
தீண்டுமன மேபகையாய்ச் சேரா துடலோடே
மாண்டுதிரி வார்துறவா வார்.

(உரை.) அங்கக்காரன் குதிப்பும் நாவி சுவையானதுவும் சிங்கி குளிர்ந்ததுவும் போல் செகத்தோர்—காறு வேடங்கொ

ண்டு நடிக்கும் வேடதாரி அவ்வேடங்கட்கு ஏற்ற பாடை பே சுதல்போலவும், கொல்லா நின்ற வற்சநாபி ஒருவர்க்குச் சுவை யானதுபோலவும், தன் காலிற்பூண்ட விலங்கு ஒருவற்கு இத மானது போலவும், (தத்தம் சாதிகட்கும் தொழில்கட்கும் ஏற் றசொற்களைச் சொல்லியும், துன்பமாயுள்ள விடயங்களை இன் பமாகக் கருதிக்கொண்டும், மனைவிமுதலிய பாசவிலங்கை இத மாகக் கைக்கொண்டும் மயங்கிச் சுழலா நிற்பர்) இச் சகத் தோர்;

சங்கத்தைத் திண்டும் மனமே பகை ஆய்ச் சேராது உட லோடே மாண்டு திரிவார் துறவு ஆவார்—இங்ஙனம் சுழலா நின்றார் கூட்டத்தைக் கூடவேண்டு மென்று கருதும் மன நினைவே தம் பகையாகி அந் நினைவோடுங் கூடாது, உடலோ டுங் கூடியிருந்தும் கூடாது, அவ்வுடல் வாதனை மாண்டு திரி வாரே துறவினை உடையராவர் (என்றறிதி.)

(குறிப்பு.) "உடலோடே மாண்டு திரிவார்" எனவே, போகவாதனை, தேகவாதனை, போதவாதனை ஆகிய இம் மூன்று வாதனையும் நீர்ந்தார் என்பதாயிற்று.

இத் திருவெண்பாவால் பிரபஞ்சிகள் ஒருவரோடொருவர் கூடியும், நானாவிதமாய் வார்த்தையாடலும், இன்பமாய்க்க ருதி மயங்குவர் என்பதும், துறவோர் அங்ஙனஞ் செய்வது துன்பமென்று விடுப்பதுமன்றி, தம்முடலோடுங் கூடியுங் கூடாதிருப்ப ரென்பதும் அறிவித்தவாறு காண்க. (கக)

பொன்மலைமே லாகாயம் போவார்க்குப் பூமியுள்ளே
யென்னவே நாதாந்த மெய்தினரை - யென்னருகே

வாவென்று பாற்கடலில் வாழரியை யண்டேகங்

கூவுந் தகைமையதொக்கும்.

(உரை.) பொன் மலைமேல் ஆகாயம் போவார்க்குப் பூமி உள்ளோர் என்னவே—பொன்மலை முடிமேல் ஆகாச கமனம் பண்ணுவோர்க்கு இந் நிலத்தின்கண் உள்ளார் மிகவும் தாழ்ச்சியானதுபோல், ஞானிகட்கும் பிரபஞ்சிகட்கும் உயர்ச்சி தாழ்ச்சி இருப்பவும்,

நாதாந்தம் எய்தினரை என் அருகே வா என்று பால் கடலில் வாழ் அரியை யண்டேகம் கூவும் தகைமையது ஒக்கும் —நாத தத்துவத்தின் முடிவாயிருந்த திருவருளை அடைந்த ஞானிகளைப் பஞ்சபூத காரியந் தானாகிய தேகந்தானாகி இந்திரியவழி நுழைந்து செல்லும் பிரபஞ்சி ஒருவன் என் பனைக்கு நீ வருக என்றழைத்தல் பாற்கடல் நாப்பண் அரவணையில் பள்ளிகொள்ளாநின்ற பெருமானைப் பார்த்து, ஓர் தவளை நீரும் இக்கடல் மிசை மிதந்து துயில்கின்றீர், யானும் இக்கடல் மிசை மிதந்து துயில்கின்றேன், உமக்கும் அரியென்று பெயர், எனக்கும் அரியென்று பெயர், ஆகலின், என தருகே நீர் வருக என்றழைக்கும் முறைமையது ஒக்கும்.

(குறிப்பு.) பொன்மலை முடியை நாதாந்தத்திற்கும், அம் மலைமுடிமேல் தோன்றும் ஆகாயத்தை இந் நாதாந்தத்தில் தோன்றும் திருவருளுக்கும், அவ்வாகாயத்தில் கமனம் பண்ணுவோனை இத் திருவருளையும் கடந்து செல்லும் ஞானிகள் அறிவிற்கும் உவமித்துக் கூறியவாறு காண்க.

ஞானிகள் தத்துவங்கட்கெல்லாம் முடிவாய் நின்ற பரிபூரணத்தை அடைந்தவர், பிரபஞ்சிகள் தத்துவங்கட்கெல்லாம் அடியாயுள்ள பஞ்ச பூதகாரியம் தானாயுள்ள தேகத்தை அடைந்தவர். ஆகலின், "பொன்மலைமே லாகாயம் போவார்க்குப் பூமியுள்ளோ ரென்னவே" என்று அங்ஙனம் உவமை கூறினார்.

ஞானிகளது மகிமையை அறியாததால், அவரும் உலகத்தின்கண் இருக்கின்றார், யானும் உலகத்தின்கண் இருக்கின்றேன், அவரும் மனிதர், யானும் மனிதனென்று கருதி அழைத்தான் ஆகலின், "பாற்கடலின் வாழ்கரியை மண்டூகங் கூவுந் தகைமையதொக்கும்" என்று இங்ஙனம் உவமை கூறினார்.

இத் திருவெண்பாவால் ஞானிகட்கும் அஞ்ஞானிகட்கும் தாரதம்மியமும், அவரை இவரெண்ணாமல் அழைப்பதும், இங்ஙனம் என்று அறிவித்தவாறு காண்க. (உ0

ஆயின், பத்தியோடு மனமொழி மெய்களால் அவரை வணங்கி என் மனைக்குத் தேவரீர் எழுந்தருளுக என்று ஒருவன் அழைத்தால் செல்வீரோ எனின், மேற்கூறுகின்றார்.

கும்பிட்டுங் கீர்த்தித்துங் கோடி யுபசாரம்
வம்பிட்ட பத்தி வலைவழியை - நம்புவரோ
ஆறுதி வாதனைக ளொன்றாத வப்பெருமை
வீணை விளைக்கு மெனின்.

(உரை.) கும்பிட்டும் கீர்த்தித்தும் கோடி உபசாரம் வம்பு இட்ட பத்தி வலைவழியை நம்புவரோ—ஒருவன் வந்து

அஷ்டாங்க பஞ்சாங்கத்தோடு வணங்கியும், அநேக தோத்திரங்களைப் பண்ணியும், சுவாமிகள் அடியேன் மனைக் கெழுந்தருளுக என்று கோடி பேதங்களாய் உபசாரங்களைச் செய்தும், இங்ஙனம் அழைக்கும் புதுமை பொருந்திய பத்தி ஆகிய வலைநெறிபை ஞானிகளாயினோர் ஓர் பொருளாகக் கருதிச் செல்வரோ? (ஆயின், அன்போடு வணங்கி அன்னங் கொடுக்கின்றேன் என்றழைத்தால் அவ்வன்ன மாத்திரஞ் சென்று வாங்கிக்கொள்ள லாகாதோ எனின்),

ஊண் ஆதி வாதனைகள் ஒன்றாத அப் பெருமை வீணே விளைக்கும் எனின்—ஊண் உடுக்கை முதலிய வாதனைகளையும் விரும்பாத அந்த அவா அறுதி ஆகிய பெருமை அவரிருக்குமிடத்து அவர் வேண்டா என்று தள்ளவும் வீறெய் அவ்வூணை திக்களைக் கொடுப்பிக்கும் ஆயின்.

(குறிப்பு.) உபசாரமிகுதியை, "கோடி" என்றும், ஒருவரும் அங்ஙனஞ் செய்யக்கண்ட தின்மையால், "வம்பிட்ட" என்றுங் கூறினார்.

"ஊணாதிவாதனைகள்" எனவே நோய் குளிர்கட்கு மருந்தும் உறையுளும் வேண்டார் என்பதாயிற்று. (உக)

தாம் ஊணாதிகளை விரும்பி ஒருவரைப் பின் சேறலாகாதன்றி, ஒருவர் அன்போடும் வணங்கி ஊணாதி கொடுத்தற்குத் தம் மனைக்கு அழைத்தாலும் செல்லாதிருப்பது ஏது காரணம் எனின், மேற் கூறுகின்றார்.

கருமந் திரிவிதத்திற் கட்டவிழுங் கால
மரவுந் தவளையும்போ லாகி - யிருதலையிற் [னி
கொள்ளியெறும் பாயுடம்பே கூற்றாகித் தோற்றுமே
னுள்ளினரு முருமென் றுகும்.

(உ-ர.) திரிவிதத்தில் கருமம் கட்டு அவிழும் காலம்அர வும் தவளையும்போல் ஆகி இருதலையில் கொள்ளி எறும்பு ஆய் உடம்பே கூற்று ஆகித் தோற்றும் எனில்—ஞானாசாரியர் கிருபாநோக்கத்தானும், கர சரண பரிசத்தானும், திரு வாக்கானும், அவரது ஆணவம் மாயை கன்மங்களாகிய கட்டு விடு தலையாகாநின்ற காலம் ஆகலின், தம் உடம்பே பாம்பும் தாம் ஓர் தவளையும்போலாகி, அவ்வுடம்பே இருதலையும் எரிசூழ்ந்த கொள்ளியாகி, தாம் அக் கொள்ளிக் குழலுட் சுழலும் எறும்பாகி, அவ் வுடம்பே தம்மைப் பிணித்துச் செல்லுங் கூற்றாகித் தோற்றும் எனின்,

உள்ளினரும் ஊரும் என் ஆகும்—இங்ஙனம் பகையாய்த் தோற்றும் உடம்பிற்கு உபசாரஞ் செய்யக் கருதினோரும், அவர் அழைத்துச் செல்லும் ஊரும், அவர்க்கு என்ன பயனைத் தரும்?

(குறிப்பு.) பாம்பு தவளையைப் பற்றி நிற்றல்போல் உடம்பு அவரைப் பற்றி நிற்றலானும், நெருப்பு அவியுமளவும் குழற்கண் வருந்திச் சுழலும் எறும்புபோல் ஊழ்வினை அறுமளவும் உடம்புள் வருந்தி இருத்தலானும், கூற்று உயிரைப் பிணித்துச் சேறல்போல் அவரைப் பற்றிநின்று பிச்சையாதிக்குச் செல்லப் பண்ணுதலானும், அங்ஙனம் உவமை கூறினார்.

ஒருவன் றனக்குப் பகையாயினார்மேல் வெறுப்புண்டாவதுமன்றி, அப் பகைவர்க்கு இதஞ் செய்வார்மேலும் வெறுப்புண்டாவதுபோல், அவர்க்குப் பகையாகிய உடம்பின்மேல் வெறுப்புண்டாவதும் அன்றி, அவ் வுடம்பிற்கு இதஞ் செய்

வார்மேலும் வெறுப்புண்டாம் ஆகலின், "உள்ளினரும்மூருமெ ன்றாகும்" என்றார்.

"திரிவிதத்திற் கட்டவிழும்" என்றதையால், இரண்டு மலமும் வருவிக்கப்பட்டன. (உஉ)

ஞானசாரியரை அடைந்தோரும் ஒருநாள்காண் ஒருவன் செய்யும் உபசாரத்தை அங்கீகரிக்க இல்லையோ? இவர் என்னை அங்ஙனம் அங்கீகரியா திருப்பது எனின், மேற்கூறுகின்றார்.

பிறவாத யோனி பிறந்துபிறந் தெல்லா
மறிவானு னாரென் றறியா - வறிவை
யறிந்துமீ னண்ட வழிபருந்திற் குஞ்சாய்ப்
பிறந்தவர்க ளென்பார்ப்பார் பின்.

(உரை.) பிறவாத யோனி பிறந்து பிறந்து எல்லாம் அறிவான் நான் ஆர் என்று அறியா அறிவை அறிந்து—(தெய்வ மானுடப் பிறப்பன்றி, மற்றைப்) பிறவாத யோனி பேதங் கள் எல்லாவற்றுள்ளும் அளவில் காலம் சென்று சென்று பிற ந்து எய்த்து, (பின்னர்த் தெய்வகதியாய்ப் பிறவிகட்கு எல் லாம் தப்பி, தன்னை அறிதற்கு ஏதுவாய இம் மானுடப்பிறவி யிற் பிறந்தும், இத் தேகத்துள் இருந்து) எல்லாவற்றையும் அறிவானாகிய யான் யாரென்று அறிதற்கு அரிதாய அறிவை இம் மானுடதேகம் அநேகத்தாற் செய்த சிவபுண்ணிய மேலி ட்டால் இப்போது அறிந்து,

மீன் அண்ட வழி பருந்தில் குஞ்சு ஆய்ப் பிறந்தவர்கள் பின் என் பார்ப்பார்—நீரில் நுழைந்துசெல்லும் மீன்முட்டை

வழித்தோன்றும் குஞ்சு ஆகாயத்திற் செல்லும் பருந்தின்முட்டை வழித்தோன்றும் குஞ்சாய்ப் பிறந்ததுபோல், பிறப்பிற்கு ஏதுவாய்ப் பிறந்த பிறப்புக்கள் நீங்கி, வீட்டிற்கு ஏதுவாய்ப் பிறந்தோர்கள் இப்போது மற்றையரைப் போலும் ஊர் உறவு என்று ஏன் பார்ப்பார்?

(குறிப்பு) முட்டைவழித் தோன்றல் இரண்டிற்கும் ஒத்ததாயினும், முன் நீருட் சென்றதும், பின் ஆகாயத்திற் செல்வதும் ஒவ்வாததுபோல், முன்னரும் இப்போதும் பிறந்த மானுடப்பிறப்பு ஒத்ததாயினும், முன் பிறப்பிற் சென்றதும், இம்போது வீட்டிற் செல்வதும் ஒவ்வாது. ஆகவின், இங்ஙனம் உவமை கூறினார்.

முற்பிறப்பில் சிவபுண்ணிய மேலீட்டால் இப்பிறப்பில் எளிதில் தன்னை அறிந்தமையால், "அறிந்து * * * பிறந்தவர்கள்" என்றார்.

தன்னை அறிந்தால் தலைவனையும் அறியலாம் ஆகவின், "ஒன்றென்றறியா வறிவையறிந்து" என்றார். (உரு)

இங்ஙனம் ஊர் உறவாதி ஒன்றும் வேண்டார்க்குப் பெருமை ஏன் யாது எனின், மேற் கூறுகின்றார்.

அரசர்க் குடைமை யளவற்ற பேறே
பெருமையா னாற்போலப் பெற்ற - வரிபிரமர்க்
கப்பாலாம் வாழ்வு மனுவாகி யாதுமற
விப்போ பெருமை யிவர்க்கு.

(உரை.) அளவு அற்ற உடைமை பேறே அரசர்க்குப் பெருமை ஆனல் போல—அளவற்ற திரவியம் ஆடை பூஷ

ஞாதிகளைப் பெறும் பேறே அரசர்க்குப் பெருமையானாற் போல,

பெற்ற அரிபிரமர்க்கு அப்பால் ஆம் வாழ்வும் அணு ஆகி யாதும் அறல் இவர்க்கு இப்போ பெருமை—அவ்வரசர் முத லியோர் வாழ்விற்கு மேலாய வாழ்வினைப் பெற்ற அரிபிரமர் வாழ்விற்கும் அப்பாலாகிய பதமுத்தி வாழ்வுகளும் அணுமாத் திரம் இன்பமாய் அழியும் எனக் கண்டிருந்த இக பர வாழ்வு களில் யாதொன்றினும் பற்றற்ற இப் பற்றறுதியே இவர்க்கு இப்போது பெருமையாம்.

(குறிப்பு.) "அரசர்க்குடைமை" என்று பொதுப்படக் கூறினமையான், நால்வகைச் சேனை நால்வகை அரண் நாடு தேசங்கள் முதலியவுங் கொள்க.

அவர்க்கு அப் பேறு மேன்மேல் பெறுவது பெருமையா னாற்போல், இவர்க்கு அப் பேறு மேன்மேல் விடுவது பெருமை என்பதும்; அவர்க்கு அப் பேறின்மை சிறுமையாவதுபோல், இவர்க்கு அப் பேறு பெறுவது சிறுமை என்பதும்; பேற்றின் மேல் பற்றுப் பிறவிக்கேது, அப் பேற்றின்மேற் பற்றறுதி வீட்டிற்கேது என்பதும்; பிறப்பை அடைதல் சிறுமை, வீட் டை அடைதல் பெருமை என்பதும் இதனாற் காண்க. (உச)

இங்ஙனம் இருந்த ஞானிகள் வீட்டிற்கு ஏதுவாகிய சரி யாதிகளைத்தான் செய்யார்களோ எனின், அவர் செய்யுஞ் சரி யாதிகள் இவை என்று மேற் கூறுகின்றார்.

சரியை யுடல்வெறுத்த றன்னை யறிதல்
கிரியோகங் கூடாமை கேளாத் - திருஞானம்
வேறின்மை பேரின்பம் விட்டுதியா மேவீடு
பேறின்மை தானே பெறல்.

(உரை) சரியை உடல் வெறுத்தல் கிரியை தன்னை அறிதல் யோகம் கூடாமை—அவர்க்குச் சரியையாவது (மலச்சுமை தூக்கம் நீக்கும் குரம்பை, அநித்திய விருந்து எனக்கண்டு உண்டி சுருக்குதல் முதலியவற்றான்) உடலத்தை வெறுத்தல்; கிரியையாவது (தத்துவம் முப்பத்தாறையும் அதிகரித்து அவற்றின் முடிவினின்ற) தம்மை உள்ளபடி அறிதல், யோகமாவது (அங்ஙனம் தம்மை அறிந்தவிடத்துத் தமக்கு உயிர்க்குயிராயிருந்த திருவருளைக்கண்டு அவ்வருளே வடிவாகியிருந்து முன் நீக்கி நின்ற கருவிகளோடு) கூடாமை;

கேளாத் திருஞானம் வேறு இன்மை பேரின்பம் விட்டு உதியாமேல் ஈடு பேறு இன்மை பெறல் தானே—அம்மூகையாலும் உண்டாம் கேட்டறியலாகாத அழகிய ஞானமாவது (அவ்வருளே வடிவாயிருந்த தாம் சிறிதும் தோன்றாது பரையே ஆகிய) வேறின்மையினையும், அதன்மேல் பேரின்பம் விட்டுத் தோன்றாத மேலீட்டினையும், இவ்வின்பத்தைப் பெற்றேமென்னும் பேறின்மையினையும் பெறுதல் தானேயாம்

(குறிப்பு.) ஞானாசாரியர் மௌனமொழியால் அறிவிக்க அறிதலான், "கேளாத்திருஞானம்" என்றும், இன்ப மேலீடா முன் விட்டுத்தோன்றலான் "விட்டுதியாமேலீடு" என்றுங் கூறினார். பேறின்மை - இன்பாதீதம்.

"கும்பிட்"டென்னும் திருவெண்பாமுதல் இவை ஐந்து திருவெண்பாவாலும் ஞானிகளினது இயற்கை நெறிகளினது முறைமை அறிவித்தவாறு காண்க. (உ-டு

## ஏழாம் அதிகாரம்.

## துறவு

## முற்றும்.

## எட்டாம் அதிகாரம்.

# அருளவத்தைத் தன்மை.

இங்ஙனம் சரியாதிகளை நீத்து உள்துறவு புறத்துறவுடையராய், பிருதிவிமுதல் நாத தத்துவம் ஈறாகச் சொல்லப்பட்ட தத்துவம் முப்பத்தாறையுங் கடந்து, ஆணவ இருளையுங் கடந்து, ஆன்மதரிசன முதலிய சுத்தாவத்தையில் நிற்போரது தன்மை கூறினமையால், இவ்வதிகாரத்திற்கு அருளவத்தைத் தன்மை என்று பெயராயிற்று.

உண்டொழித்துத் தேடு முடம்பரா யொன்றுமுத
லண்டர்பதத் தப்பாலு மைம்புலத்து - முண்டு
மழுங்கினர்க்குப் போகம் வருத்தமாய்த் தோன்ற
வெழுந்தவருள் கெட்டே னிதென்.

(உரை.) உண்டு ஒழித்துத் தேடும் உடம்பர் ஆய் ஒன்று முதல் அண்டர் பதத்து அப்பாலும் ஐம்புலத்தும் உண்டு மழுங்கினர்க்கு — ஒருடம்பில் பிராரத்தத்தை உண்டொழித்து, அவ்வுடம்பில் அவ் வினையை உண்டொழித்தற்கு இடையே, இதா கிதங்களாகிய தொடர்பால் தேடும் ஆகாமியத்தால் தொன்றுதொட்டு வரும் உடம்புகளை உடையராய், இப் பூலோகமாகிய ஒன்று முதல் தேவர் பதவிக்கு அப்பாலும் ஆண்டாண்டுச் சென்றிருந்து ஐம்பொறிகளானும் அவ்வவ் வுடம்புகட்கு ஏற்ற

விடயபோகங்களை இன்பமாகக் கண்டு உண்டு அளவில் காலந் தழும்பேறினோர்க்கு,

போகம் வருத்தமாய்த் தோன்ற எழுந்த அருள் கெட்டேன் இது என்—அப்போது இன்பமாய்த் தோன்றிய போகம் இப்போது துன்பமாய்த் தோன்ற உதயமாகிய திருவருள், கெட்டேன் ஈது என்கொல்!

(குறிப்பு.) ஓர்பிரகாரம் இன்றிச் செய்த வினையின் பேதப்படியே தநுகரணபுவன போகங்களும் பேதித்துத் தோன்றலான், "தேடுமுடம்பரா யண்டர்பதத் தப்பாலு மைம்புலத்து நூண்டு பழுங்கினர்க்கு" என்றார்.

தநுவாதிகள் பேதிப்பதாவன, நல்லதேசத்து நல்லோர்கள் அங்கீகரித்த போகத்தைப் புசித்தலானும், நல்ல நினைவோடும் நல்ல சொல்லோடும் நற்றொழிலைச் செய்தலானும், பொல்லாத தேசத்துப் புன்போகங்களைப் புசித்தலானும், பொல்லாத நினைவோடும் பொல்லாத சொல்லோடும் புன்றொழிலைச் செய்தலானும், இவற்றுள் ஒன்று நன்றும் ஒன்று தீதுமாய் மாறிமாறி வருதலானும், இவை முதலாயவற்றால் பேதிப்பதெனக் கொள்க.

இத் திருவெண்பாவால் சுத்தாவத்தையில் நின்று அருளைத் தரிசித்தோர்க்கு விடயந் துன்பமாய்த் தோற்றும் என்று அறிவித்தவாறு காண்க. (க)

வாசகத்துங் கோவையினு மாணிக்க மாகவழுங்
காசைத் துறையநந்த மாமதிலே - யாசை

யிருதலைப்பா லேக மெனவிரண்டா மித்தி
லொருதலைக்கா மந்துறவன் றோ.

(உரை.) மாணிக்கம் ஆக ழங்கு வாசகத்தும் கோவை யினும் ஆசைத்துறை அநந்தம் ஆம் — மாணிக்கமணிபோலாகப் புலவரான் எடுத்து வழங்காநின்ற சங்கத்தார் முதலியோர் கூறிய ஆசிரியப் பாக்களினும், மாணிக்கவாசகசுவாமிகள் அருளிச்செய்த திருச்சிற்றம்பலக் கோவையார் முதலிய கோவை களினும், காமத்தினது இலக்கணமாகக் கூறப்பட்ட கிளவித் துறைகள் அநந்தம் ஆகும்;

அதிலே ஆசை இருதலைப்பால் ஏகம் என இரண்டாம் இதில் ஒருதலைக்காமம் துறவு அன்றோ — அக் கிளவித் துறைகளுள் காமம், தலைவனும் தலைவியும் ஆகிய இருவர் பாலும் சமனொத்துக் கூடுவதாகிய இருதலைக்காமம் எனவும், ஒருவர்பால் மிகுதலும் ஒருவர்பால் குறைதலும் காமம் ஒவ்வாது கூடுவதாகிய ஒருதலைக்காமம் எனவும், இரண்டுள் அடங்குவதாம்; இவற்றுள் தலைவன் விழையாதிருப்பத் தலைவி விழைந்து பற்றும் ஒருதலைக்காமம்போல விடயாநந்தத்தைத் துறந்து சொரூபாநந்தத்தைப் பெறும்பொருட்டுச் சுத்தாவத்தையில் நிற்போர்க்கு இச் சொரூபாநந்தம் கிடைத்திலது ஆயினும் இவ்வாநந்தத்தையே பெற விரும்பித் தொடர்ந்து நிற்பது அன்றோ துறவாவது?

(குறிப்பு.) தலைவன் கூடி இன்பம் கொடாதிருப்பினும் தலைவி தனது கற்பால் பிறரை விழையாது அத் தலைவனையே

விழைந்து நிற்றல்போல், சொரூபாநந்தம் தனக்குக் கிடைத்தி லது ஆயினும் தனது தவக் கற்பால் விடயாநந்தத்தை விழை யாது சொரூபாநந்தத்தையே விழைந்து நிற்கவேண்டுமென் பதும், தலைவி கற்பினைக்கண்டு தலைவன் காருணியத்தால் அவ ட்கு இன்பங் கொடுத்தல்போல், இவன் தவக்கற்பினைக்கண்டு சிவம் காருணியத்தால் தனதானந்தத்தை இவனுக்குக் கொடு க்குமென்பதும், இவ்வுவமைக் குறிப்புகளாற் காண்க.

வாசகம்போல் இருத்தலின் ஆசிரியப்பாவை "வாசகம்" என்றார்.

இத் திருவெண்பாவால் சொரூபாநந்தத்தை விரும்பிச் சுத்தாவத்தையில் நிற்போர்க்கு இச் சொரூபாநந்தம் கிடைத் திலது ஆயினும், இவ் வானந்தத்தையே விரும்புவது அன்றி அசுத்தாவத்தையில் திரும்பி அவ்விடயாநந்தத்தை விரும்பல் ஆகாதென்று கூறியவாறு காண்க. (உ)

சாத்துவிக மெட்டாய்த் தசவவத்தை யாய்த்தன்னை
நீத்தவனாய்த் தானாய்ப்பின் னேயமாய்க்-கூர்த்ததெல்
சுத்தவவத்தைத் துவட்சித் துகளற்ற [லாஞ்
வத்துவிதாக் கேகமுத்தி யா.

(உரை.) சாத்துவிகம் எட்டு ஆய்த் தச அவத்தை ஆய் தன்னை நீத்தவன் ஆய்த் தான் ஆய்ப் பின் நேயம் ஆய்க் கூர்த் தது எல்லாம் சுத்த அவத்தைத் துவட்சி—இராசத தாமத காரியங்களை யெல்லாம் நீக்கிச் சாத்துவிக காரியமாகிய நிரா

சை முதலிய எண் குணங்களையும் உடையவனாகி அருகிய நோக்க முதலிய பத்தவத்தைகளையும் உடையவனாகி, இந்த நற்குணங்களால் தத்துவ முப்பத்தாறையும் கடந்து தன்னை அறிந்து அருளைத் தரிசித்துத் தற்போதம் அடங்கினவனாகி, பின்னர்ப் பரையே தானாகி, பின்னர் நேயத் தழுந்தினோனாகி, இங்ஙனம் ஒருவன் நுண்ணிதாய் அறிந்து சென்றதெல்லாம் சுத்தாவத்தை அநுபவங்களாகும்;

துகள் அற்ற அத்துவிதர்க்கு எதும் உதியா—இந்தச் சுத்தாவத்தைகளை அறிந்து சென்ற போதம் அற்றுச் சிவத்தோடும் இரண்டறக்கலந்த அத்துவிதத்தை உடையோர்க்கு முற்கூறிய அநுபவங்களுள் யாதொன்றேனும் தோன்றாது; (இவர் மௌனாநந்தமாயிருப்பர்.)

(குறிப்பு.) சாத்துவிகம் எட்டாவன: நிராசை, தவம், பொறுமை, கிருபை, சந்தோஷம், வாய்மை, அறிவுடைமை, அடக்கம் உடைமை இவை எண்வகையும் எனக் கொள்க.

தச அவத்தையாவன: பிரபஞ்சத்தை மாயாவடிவமாய்க் காணாது அருள்வடிவாய்க் காணும் அருகிய நோக்கமும், கருவிகளை நியதிகளையும் சிந்தனையும், முற்பிறவியிற்பட்ட துன்பங்களை நினைத்து நெட்டுயிர்ப் பெறிதலும், திருவருள் மேலீட்டால் உடம்பில் இளைந்தெழுதலும், ஊணாதிகளைத் துறத்தலும், ஒருவரோடு உரையாடற்கு மானமுறுதலும், மௌனமாயிருத்தலும், பித்தேறினாற்போலப் பிரபஞ்சப்பகுப்புத் தோன்றாதிருத்தலும், பிராணவாயு இறந்து மூர்ச்சித் திருத்தலும், போதம் இறந்து நிற்றலும் ஆகிய இவைபத்துமெனக்கொள்க.

சுத்தாவத்தைகளோடுங் கூடி அவற்றில் தோன்றும் அநுபவங்களைப் போதம் சுருங்கி நின்று அறிதலானும், அப் போதம் தேய்தல் வளர்தற்குத் தக்கதாய் ஓர்கால் உயர்ந்த அநுபவமாயும், ஓர்கால் தாழ்ந்த அநுபவமாயும், மாறித் தோன்றலானும், "துவட்சி" என்றார்.

கேவலாவத்தையோடு ஆணவம் நீங்கிற்று ஆயினும், அதனது காரணம் போத மிறக்குமளவும் இருத்தலின், போதத்தைத் "துகள்" என்றார்.

இத் திருவெண்பாவால் ஞான சாதகர் இலக்கணமும் சாத்தியரது இலக்கணமுங் கூறியவாறு காண்க. (௩)

அவ்வநுபவங்களை அறிந்து சொல்வது வாக்கு ஆகலின், இவ்வாக்கினை மௌனமாக்குவது முத்தி அன்றோ எனின், மேற் கூறுகின்றார்.

உரையொடுங்கிற் போத முதிக்கு மொழிவே
யருளா மதன்போக் கசையாப் - பரையோகம்
போனாற் சுகாதீதம் புண்ணியர்க்குப் பொய்யுதியா
தேனோர்க்குப் பல்விதமா கும்.

(உரை.) உரையொடுங்கின் போதம் உதிக்கும் ஒழிவே அருள் ஆம் அதன்போக்கு அசையாப் பரையோகம் போனால் சுகாதீதம்—வாக்கினை மௌனமாக்கின் உள்ளே போதம் தோன்றும் (ஆகலின், அவ்வாக்கு மௌனம் முத்தி அன்று; ஆயின், போதமடங்கின் முத்தியோ எனின்) போதம் அடங்

கின் அருள் தரிசனம் (ஆகலின், அப்போதம் அடங்கல் முத்தியன்று; ஆயின், அருள் தரிசனம் நீங்குதல் முத்தியோ எனின்) அவ்வருள் தரிசனம் நீங்கின் போதஞ் சிறிதும் அசையாத பரையோகம் (ஆகலின், அவ்வருள் தரிசனம் நீங்குதல் முத்தி அன்று; ஆயின், பரையோக நீங்குதல் முத்தியோ எனின், பரையோகம் நீங்கின் சுகப்பேறாம்; ஆகலின், அப்பரையோகம் நீங்குதல் முத்தி அன்று; ஆயின், அச் சுகப்பேறு நீங்குதல் முத்தியோ எனின்) அச் சுகப்பேறு நீங்குதலே சுகாதீதம் (இச் சுகாதீதமே முத்தி நிலை.)

புண்ணியர்க்குப் பொய் உதியாது ஏனோர்க்குப் பல்விதம் ஆகும்—இச் சுகாதீத முத்தியை அடைந்த புண்ணியர்க்கு மேற் கூறிய சுத்தாவத்தையில் தோன்றும் பொய்கள் யாவும் தோன்றா, இம் முத்தியைப் பெறாது அச் சுத்தாவத்தையில் நிற்போர்க்கு அநுபவம் பலவிதமாய்த் தோற்றும்.

(குறிப்பு.) பரையோகம் கூறி அதற்கப்பால் சுகாதீதங் கூறினமையால், இவற்றிற்கு இடையில்தோன்றும் சுகப்பேறு வருவிக்கப்பட்டது.

பரிபூரண சிவத்திற்குத் தம்மைக் கொடுத்தலால் மெய்ஞ் ஞானிகளைப் "புண்ணியர்" என்றார்.

சுகாதீதத்திற்குச் சுத்தாவத்தைக் காட்சி பொய்யாகலின் "பொய்யுதியாது" என்றார்.

இத் திருவெண்பாவால் முத்திநிலை ஈதென்று அறிவித்தவாறு காண்க. (ச)

அச் சகாதீத முத்தியை அடைதற்கு ஏதுவாகிய சுத்தாவத்தையில் நிற்போரது குணங்கள் யாவை எனின், மேற்கூறுகின்றார்.

கருவி கழல வரைநோக்காஞ் சிந்தை
பெருமூச்சாம் போதம் பிறியி - லருளாய்
வெதும்பி யுடல்வெறுக்கு மின்பாய் விகளமுதிர்ந்துறையு நாணுமொடுங்கும்.

(உரை.) கருவி கழல வரை நோக்கு ஆம் போதம் பிறியிற் சிந்தை பெருமூச்சு ஆம்—கருவிகள் நீங்கவே மலைமேல் நின்று நோக்குவோர்க்கு நிலத்தின்கண் உள்ள பொருள்கள் அருகித் தோன்றுமாப்போல, (பிரபஞ்சம் எல்லாம் பொய்யாய்த் தோன்றுவதாம்) அக் கருவிகளுள் அதோமுகமாய் நின்ற போதம் அவற்றைப் பிறியில் (ஊர்த்துவமுகமாய் நின்று தன்னை அறியும், அங்ஙனந் தன்னை அறியும்போது இங்ஙனம் இருக்கின்ற யான் எறும்புகளால் * நாக்கூழ் அரிப்புண்டது போல், அளவில் காலம் அக் கருவிகளால் அரிப்புண்டேனே என்றும்) சிந்தனையால் நெட்டுயிர்ப்புளதாம்;

அருள் ஆய் உடல் வெதும்பி வெறுக்கும் இன்பு ஆய் விகளம் முதிர்ந்து உறையும் நாணும் ஒடுங்கும்—(தன்னை அறிந்தபின்னர்) அருள்தரிசனம் உண்டாய், (பின்னர் அவ்வருளே தனக்கு வடிவாகி) இம் மாயா உடலம்வெதும்பி (இதனை வெறுப்பன்; (பின்னர்) ஆநந்தமுண்டாய், (இவ்வாநந்தமேல

* நாகப்பூச்சியென்னு மோர்கிருமி.

டாகிய) உன்மத்தந் தலைமீக்கொண்டு மௌனமா யிருப்பன், (அஃதன்றி, பிரபஞ்சத்தார்க்கு காணுவதாய) நாணமும் நீங்கு.

(குறிப்பு.) "போதம்பிறியில்" என்றதனால் தன்னை அறிந்தென்பது வருவிக்கப்பட்டது,

"அருளாய்" என்றதனால், அருள் தரிசனம் வருவிக்கப் பட்டது.

நாணம் ஒடுங்கலாவது நீராடல் பூசனையாதி செய்திலன் என்று உலகத்தார் பழிப்பது குறித்து வரும் நாணம் எனக் கொள்க.

இத் திருவெண்பாவால் கருவிகள் நீக்கியவிடத்து வருங் குணமும், தன்னை அறிந்தவிடத்து வருங் குணமும், திருவருள் தோன்றியவிடத்து வருங்குணமும் ஆநந்தந் தோன்றிய விடத்து வருங்குணமுங் கூறி யாறு காண்க. (6)

வேர்க்கும் விழிததும்பும் பொய்யறியின் மெய்வெதும்
யார்க்கும் விறைக்கு மருளுதிப்பின் - வாக்குமன [ம்பி
நின்றுபரி பூரணமாய் நேயத்தே தார்க்கதமாய்க்
ன்றிப் புளகிதமாங் காண்.

(உரை.) வேர்க்கும் விழி ததும்பும் பொய் அறியின்மெய் வெதும்பி ஆர்க்கும் விறைக்கும்—(பொய்யாகிய கருவிகளை உள்ளபடி பொய்யாய் அறியின், மெய்யில்) வேயர்வை அரும்பும், விழியில் நீர்ததும்பும், எல்லாம் பொய்யென் றறிந்து

கொண்டேன் என்று உடலத்துள் இளைஞ்ருடெழ ஆரவாரிப்பன். (பின்னர்த் தன்னை உள்ளபடி கண்டு ஒன்றினையும் நாடாது) உடலம் அசைவற இருப்பன்;

அருள் உதிப்பின் வாக்குமனம் நின்று பரிபூரணம் ஆய் நேயத்தே கார்க்கதம் . ய்க் கன்றிப் புளகிதம் ஆம்—(பின்னர் அருள் தோன்றுமிடத்து வாக்கு மனங்களில்நின்று அவ்வருள்) பரிபூரணமாய்த் தோன்ற இதற்கு முதலாய நேயத்தை (என்றைக்கு அடைவேன் என்று அந்நேயத்தை நாடி) மேகங் குமுறுவது போலாய் உள்ளே குமுறி உள்ளம் வெதும்பி உடலம் உரோமாஞ்சலிடாம்.

(குறிப்பு.) வாக்கு மனங்களில் நின்று அருள் பூரணமாய்த் தோன்றுவதாவது, மனத்தால் நினைந்த நினைவு நினைந்ததில்லையாயும், வாக்காற் சொன்ன சொற்கள் சொன்னதில்லையாயும், தனக் கநுபவமாய்த் தோன்றுவதாம் எனக்கொள்க.

இத் திருவெண்பாவால் கருவிகளைப் பொய்யென்று அறிந்தவிடத்து வருங் குணமும், திருவருள் உதித்த விடத்து வருங் குணமும், அறிவித்தவாறு காண்க. (சு)

பேயைப்பெண் ணென்றிருந்தும் பித்தருக்குப் பொன்
மாயத்தா னுண்டுமயல் மாண்டுமயல்-போயத் [தோற்று
திடுக்கமே பித்தாய்ச் தெளிமபலா றைற்போ
னடக்குமருண் மேலிட்ட நாள்.

(உரை.) பெண்ணை பேய் என்று இருந்தும் பித்தர்க்குப் பொன் தோற்றும் மாயத்து ஊண் உண்டு மயல்போய்

மனம் மாண்டு—பெண்களைப் பேய்களைப் போலும் பிடித்து வாதிப்பவரென்று கண்டிருப்பதாயும், பித்தளைக்குப் பொன் தோற்றப்போவதாய்க் காண்பதாயும், உதர எரிவாய்த் தோன்றும் மாயத்திற்குக் காடி கூழ் முதலிய ஊண் யாது கிடைப்பினும் வாங்கி உண்டு (அவைகள்மேல் வைத்த)மயலும் போய் (அவற்றை மெய்ப்பொருளாகக் காணும்) மனமும் இறந்து ;

அத் திடுக்கமே பித்து ஆய்த் தெளி மயல் ஆனல்போல் அருள் மேலிட்ட நாள் நடக்கும்—அப் பொருந்தல் அருந்தல்களையும் அவற்றிற்கு ஏதுவாய பொன்னையும் விழைந்து நெடுநாள் பிறவித்துன்பத்தால் வருந்தினேமே என்னும் அந்தத் திடுக்கந்தானே விடாப் பிராந்தியாய் அறிவு மயித்தியங் கொண்டோனைப் போலவும் திருவருள் மேலிட்டகாலத்து விளங்கும்.

(குறிப்பு.) பேய் பிடியுண்டு விடுபட்டோனுக்கு ஓர் காலத்து அதனைக் கண்டபோது பயந்தோற்றல்போல், முன் பெண்களால் வருந்திய வருத்தத்தை நோக்கி அவரைக் கண்டபோது பயந்தோற்றலான் அங்ஙனம் உவமை கூறினார்.

"பித்தளைக்குப் பொன் றோற்றம்" என்று அதனினும் இழிவாய்க் கூறினமையால் ஒட்டுச் சின்னங்களையும் சிறுகற்களையும் போல் காண்பார் என்பதாயிற்று.

எங்கும் பரிபூரணமாய் அருள்வடிவா யிருத்தலானும் பொன் பெண் மண் ஊண் உடல என்னும் ஐவகையும் வெறுத்து உலகத்தாரோடு மாறுபட்டிருத்தலானும், "தெளிமய லானற்போல்" என்றார்.

இத் திருவெண்பாவால் அருள் மேலிட்டநாள் நடக்குங் குணங் கூறியவாறு காண்க. (எ)

மலட்டுமக னீங்கி வரக்கண்ட தாய்தா
லலத்தி மகிழு மதுபோ - லுலப்பிலாக்
காலங் கழிந்ததையுங் காணாத்தைக் கண்டகளிப்
பாலு மழுதுசிரிப் பார்.

(உரை.) மலட்டு மகன் நீங்கி வரக்கண்ட தாய் தால் அலத்தி மகிழும் அதுபோல்—(நெடுநாள்) மலடிருந்து (பின்னர் அரிதாய்ப்பெற்ற) புதல்வன் (தன் மனைவிட்டு) நீங்கி (அயல் மனையிற் சென்று மீண்டு) வர எதிர்கண்டதாய் (சென்று எடுத்து மார்போடு அணைத்து முன்னர் அவனைப் பெறாத காலத்தையும் இப்போது அவனைப் பெற்றுக் கண்ட காட்சியையும் நினைந்து) தாலாட்டுதலோடு அழுது அவ்வழுகையோடும் சிரிக்கும்; அதுபோல,

உலப்பு இலாக் காலம் கழிந்ததையும் காணாத்தைக் கண்ட களிப்பாலும் அழுது சிரிப்பார்—(திருவருளைப் பெறாது) அளவிறந்தகாலம் (பிறவியில்) வீணாய்க் கழிந்ததைக் கருதியவதனாலும், (அக் காலங்களுள் ஓர் காலமாயினும்) காணாத அத் திருவருளை (இப்போது கண்ட) களிப்பாலும், அவ்வருளைத் தோத்திரம் பண்ணலோடு அழுது அவ்வழுகையோடும் சிரிப்பார் (திருவருள் மேலீட்டைப் பெற்றோர்).

(குறிப்பு.) "தாலலத்தி" என்று உவமை கூறினமையால் அருளைத் தோத்திரம் பண்ணுதல் வருவிக்கப்பட்டது. அருள்

தம்மிடத்துத் தோற்றலான் அதனை மகவாக உவமித்து கூறி ஞர். தால் - தாலாட்டுதல், அலத்தல் - அழுதல்.

இத் திருவெண்பாவால் கழிந்தநாட் கிரங்குதல் கூறிய வாறு காண்க. (அ)

சுகாதீதமுத்தியைப் பெறாது, இங்ஙனந் திருவருள் மேலீட்டைப் பெற்றோர்க்குப் பிறப்பு உண்டாகாதோ எனின், மேற்கூறுகின்றார்.

நடைதளர்ந்து மெய்ம்மறந்து நாண மழிந்தே [ய்ச்
யுட றளர்ந்து கீழ்க்குரலிட் டூண்போய் - மடலெடுப்பா
சத்தாதி கெட்டுமனந் தாக்கற்றுச் சந்தழிந்த
பித்தர்க்கு மாகா பிணி.

(உரை.) நடை தளர்ந்து மெய் மறந்து நாணம் அழிந்து உடல் தளர்ந்து கீழ்க்குரல் இட்டு ஊண் போய்—(கருவிச்சேட்டைகளடங்குதலின்) நடைதளர்ந்து, (அருளே வடிவாயிருத்தலின்) உடம்பு மறந்து, (உடம்பு மறத்தலின்) பிரபஞ்சிகள் பழிப்பார் என்பது குறித்து வரும் நாணம் அழிந்து (உண்டிமேல் விருப்பின்மையான்) உடல் தளர்ந்து, (மனமௌனியா யிருத்தலின்) கீழ்க்குரற் பேச்சாய், (அருளமுதம் புசித்தலின்) சிற்றூண் உண்பதாய்,

மடல் எடுப்பு ஆய்ச் சத்தாதி கெட்டு மனம் தாக்கு அற்றுச் சந்து அழிந்த பித்தர்க்கும் பிணி ஆகா—(அருளையே அன்றி மற்றொன்றையும் நாடாமையின் * மடலெடுப்பான்

* பனைமடலாற் குதிரைசெய்தேறுதல்.

பாலாய், (ஐந் தவாவும் அற்றமையால் சத்தாதி விடயங்க ளும் இறந்து, (இச் சத்தாதி விடயங்கள் இறந்தமையால்) மனம் ஒன்றேடும் தாக்கற்று, (மனம் ஒன்றேடுந் தாக்கற்ற மையால்) அருளென்றும் தானென்றும் இன்றி இரண்டற்ற இவ்வருள் தலைமீக்கொண்ட) பித்தர்க்கும் (சுகாதீத முத்தி யை அடைந்தோரைப்போல்) பிறவிநோய்கள் உண்டாகா.

(குறிப்பு.) அருள் மேலீட்டையும், பிரபஞ்சப் பற்றொழி வையும் உடையோர் தேகாந்தத்து அறிவோடுஞ் சென்று சுகாதீதமுத்தியை அடைவர். ஆகலின், "பித்தர்க்குமாகா பிணி" என்றார்.

இத் திருவெண்பாவால் அருள்மேலீட்டை உடையே... க்கும் பிறப்பு இன்றென்று அறிவித்தவாறு காண்க. (கூ)

குறும்பாட்டுமெ புன்சிரிப்புங் கூர்த்திமையா நோக்கும்
வெறும்போகஞ் சாய்ந்து விழினு - மறந்த
திகைப்பும் விதிர்ப்புந் திமிர்ப்பும் விறைப்பு
முழைப்புந் தெளிந்தறித லும்.

(உரை.) குறும்பாட்டும் புன்சிரிப்பும் கூர்த்து இமையா நோக்கும்—(தாம் அறிந்த பாட்டுகளுள் சில பாட்டான் அரு ளைத் தோத்திரம் பண்ணுவதாய) குறும்பாட்டும், (ஆநந்த மகி ழ்ச்சியால் தோன்றும்) புன்சிரிப்பும், (உட்புறனும் அவ்வாந ந்த பூரணத்தை நுண்ணிதாய்ப் பார்த்துக்கொண்டிருப்பதாய) இமையா நாட்டமும்,

வெறும் போகம் சாய்ந்து விழினும் மறந்த திகைப்பும் விதிர்ப்பும் திமிர்ப்பும் விறைப்பும் உகைப்பும் தெளிந்து அறிதலும்—(தாம் ஒன்றையும் விழையாது இருப்பினும் தமது சந்நிதியில்) பொய்ப் போகங்கள் மிகவுஞ் சாய்ந்துவந்து கிடப்பினும்(இத் துன்பங்கள் ஈண்டு ஏன் வந்தன என்று அவற்றை) சிறிதும் நினையாத திகைப்பும், (அவற்றைக் கண்டபோது) உடல் நடுக்குறுதலும், (பஞ்சேந்திரியங்கட்கு உரிய விடயங்கள் நேர்படின் அவ் விடயச்சுவை தோன்றாத) திமிர்ப்பும், (பூதம் பேய் புலி கரடி முதலிய வந்த காலத்துக் கற்றூண்போலத் தேகம் அசைவற்றிருக்கும்) விறைப்பும், (ஆநந்தம் மிகவும் வந்து தாக்குதலான் எழுந்து குதித்தாடும்) உகைப்பும், (அங்ஙனம் ஆடிய ஆநந்த மேலீட்டால் தோன்றாது அவ்வாநந்த மேலீடு சிறிது நீங்கியபோது இப்போது யாம் என் செய்தோம் என்று) தெளிந்தறிந்து கோடலும், (ஆகிய இக் குணங்கள் எல்லாம் பரையோக நீங்கி ஆநந்தம் பெற்றோர்க்குத் தோன்றுவனவாம்).

(குறிப்பு.) இங்ஙனம் அறிவும் துறவும் உடைய ஞானிகளைப் பத்தராய் உள்ளார் எல்லாரும் அன்னபானம் காய் பழம் ஆடை முதலிய கொடுவந்து வைத்து வணங்குவர் ஆகலின், "வெறும்போகஞ் சாய்ந்துவிழினும்" என்றார். வெறும் போகம் - பொய்ப்போகம். சாய்ந்தென்பது மிகுதிமேல் நின்றது.

இத் திருவெண்பாவால் ஆநந்தம் பெற்றோர் குணம் அறிவித்தவாறு காண்க. (௧0

இங்ஙனம் பூரணானந்தம் பெற்றோர்க்கு ஆடலும் பாடலும் உண்டாவது என்னை எனின், மேற்கூறுகின்றார்.

**கால்வந்த வர்க்காட்டங் கைவந்த வர்க்காட்ட**
**மால்முந்தி வந்தவர் வாய்ப்பாட்டு - மேல்கொண்ட**
**வானந்த வுல்லாசத் தாச்சரிய மாரறிவா**
**ரூனம்போற் காணு முலகு.**

(உரை.) கால் வந்தவர்க்கு ஆட்டம் கை வந்தவர்க்கு ஆட்டம் மால் முந்தி வந்தவர் வாய்ப்பாட்டும்—(பிறவி முடவராயிருந்து இடையில் தெய்வகதியால்) கால் நடக்க வந்தவர்க்கு ஆட்ட முண்டாவது போலும், (கைவராதிருந்து இடையில் அங்ஙனம்) கைவந்தோர்க்கு ஆட்ட முண்டாவது போலும், (தாங் கூடி அநுபவித்த பெண்மேல்) ஆசை தலை மீக்கொண்டு வந்தவர் வாய்ப்பாட்டுப்போலும்,

மேல்கொண்ட ஆநந்த உல்லாசத்து ஆச்சரியம் ஆர் அறிவார் ஊனம்போல் காணும் உலகு—(தம்மை மறைத்து) மேற்கொண்டெழுந்த ஆநந்த உல்லாச அதிசயத்தால் (அவர்க்கு ஆடலும் பாடலும் உண்டாம்), அவ்வாநந்தாதிசயத்தை (அதனைப்பெற்ற ஞானிகள் அறிவது அன்றி) மற்றை யாரறிவார்? (அவர்க்கு ஆடல் பாடல்களை) பயித்தியமிகுதியால் உண்டாவனபோல் காண்பார் உலகத்தார்.

(குறிப்பு.) நெடுநாள் காலுங் கையும் வராதிருந்து இடையில் அவை வந்தோர்க்கு ஆட்டம் உண்டாவதுபோல், அளவிறந்த காலம் மும்மலச்சிறையிற் கிடந்தோர்க்கு இப்போது அச்

சிறை விடுதலையாய்ப் பரிபூரண வடிவைப் பெற்றமையான் ஆடலும், தாம் அநுபவித்த பெண் இன்பவாசனை உளத்திரு தலான் அவர்க்குப் பாடல் உண்டாவதுபோல், துன்பப் போகத்தையே அளவில் காலம் புசித்தோர்க்கு இப்போது நிரதிசயாநந்தங் கிடைத்தமையால் பாடலும், உண்டென்பது இவ்வுவமைகளாற் காண்க.

"ஊனம்போல்" என்றமையால் ஊனம் இன்றென்பதாயிற்று.

உலகென்பது ஆகுபெயர்.

"கைவந்த வர்க்காட்டம்" என்பதற்கு அருத்தம் ஓர் வித்தையாதி முன் கைவராதிருந்து பின் கைவந்தபோது ஆட்டம் உண்டாவதுபோலும் என்கினும் ஆம்.

இத் திருவெண்பாவால் ஞானிகட்குப் பூரணவடிவம் பெற்றமையால் ஆடலும், ஆநந்தம் பெற்றமையால் பாடலும் உண்டாம் என்று அறிவித்தவாறு காண்க. (கக)

ஆநந்த மௌனமதனை அடைந்த ஞானிகள் போதம் இழந்தோராகலின், இங்ஙனம் நிர்விகாரிகளா யிருந்தோர்க்கு அந்த விகாரிகள் போலும் ஆடல் பாடல் எங்ஙனம் உண்டாம் எனின், மேற் கூறுகின்றார்.

அறிவு பறிகொடுத்திவ் வாக்கையற மாறிப்
பெறுதி யிழப்புதியாப் பித்தி - னறிசென்
றலையற்ற நீத்தமோ ராளற்ற கப்ப
லுலைவுற்ற தோரிற்ப தோ.

(உரை.) அறிவு பறிகொடுத்து இவ்வாக்கை அற மாறிப் பெறுதி இழப்பு உதியாப் பித்தின் சென்று அறி—(முன்னர் விடயாநந்தத்திற்குத் தமது அறிவைப் பறிகொடுத்ததுபோல் இப்போது மாறிச் சொரூபாநந்தத்திற்கு) அவ்வறிவைப் பறிகொடுத்து, (முன்னர்க் கூடியிருந்த) இம் மாயாவடிவ மறந்து போக, (இப்போது அருள்வடிவாய்) மாறிப்பெற்று, (அவ்வருளை வடிவாகலின் ஓர் பொருளைப் பெற்றோமென்னும்) பெறுதியும், (ஓர் பொருளை இழந்தோமென்னும்) இழப்பும், (இவற்றான் வரும் இதாகிதங்களும்) தோன்றாத ஆநந்தப் பயித்தியம் மேற்கொண்டு, (ஓரிடத்துச் சிறிதேனும் விகார முண்டாகாது இதனை அறிவில்) சென்று பார்த்தறிதி ; (இஃதன்றி),

அலை அற்ற நீத்தம் ஓர் ஆள் அற்ற கப்பல் உலைவு உற்றதோ நிற்பதோ—அலையின்றிய சாகரத்தில் நிற்கும் ஓராளும் இன்றிய கப்பல் அசைவுறுகின்றதோ ? அசைவற்று நிற்கின்றதோ ? (அஃது எங்ஙனம் அசைவற்று நிற்கின்றது, அதுபோலும் மௌனாநந்த சாகரத்தில் முப்பத்தாறு தத்துவங்களும் தற்போதமும் இறந்து நின்ற ஞானிகளும் அசைகிலர் என்றுஇத் திட்டாந்தத்தானும் கண்டுகொள்க).

(குறிப்பு.) அலையற்ற நீத்தத்தை மௌனாநந்தத்திற்கும், ஆளற்றிருத்தலைக் கருவிகளிறந்து நிற்றற்கும், அசைவற்ற கப்பலைப் போதமிறந்த ஞானிகளது அறிவிற்கும், உவமித்தார். அறிவு பறிகொடுத்தல் - ஆநந்தமயமாய் அழுந்தல். (கஉ)

திசைகளுஞ்சிரிக்கத் தாஞ்சிரித்துச் சிபேயென் றோட்டி
லகம்புறங்கா டேச்சுக்குற் றற்றுத் - திகம்பரியாய்த்

தானந்தம் பாடிவிண்ணிற் றட்டத் துணங்கையடித்
தானந்தக் கூத்துநடிப் பார்.

(உரை.) செகம் சிரிக்கத் தாம் சிரித்துச் சீபேய் என்று ஒட்டில் புறங்காடு அகம் எச்சுக் குற்றற்றுத் திகம்பரி ஆய்— (உலகநடைதெரியாத பேயரென்று) சகத்தோர் தம்மைப் பார்த்துச் சிரிப்ப, (ஞானநெறி தெரியாத மலப்பேயரென்று) தாமும் அவரைப்பார்த்துச் சிரித்து, (புறந்திண்ணை பொதுச்சாவடிகளில் தாம் இருந்தவிடத்து அவர்வந்து) சீ பேயரே போம் என்று ஒட்டினல் (யாதொன்றும் கூருது அவ்விடம் விட்டு நீங்கி) புறங்காட்டை நன்மனைபோற் கண்டு, அசுத்தமென்னும் அருவருப்புச் சிறிதும் அற்றுத் திகம்பரிகளாய் (அவ்விடத்திருந்து),

தான் அந்தம் பாடி விண்ணில் தட்டத் துணங்கை அடித்து ஆனந்தக்கூத்து நடிப்பார்—தமது போதநாசமான இடத்தப்பட்டிச் சிதாகாசவெளியில் பொருந்தி நின்று துணங்கைக் கூத்திற்கு உரித்தாம்படி கையடித்து ஆநந்தநடனம் பண்ணுவர் (அவ்வாநந்த பூரண ராயினர்).

(குறிப்பு.) உலகர்க்கு ஞானிகள் மாறுபாடா யிருத்தலானும், ஞானிகட்கு உலகர் மாறுபாடா யிருத்தலானும், "செகஞ் சிரிக்கத்தாஞ் சிரித்து" என்றார். உலகத்திற்கு ஞானம் பேய் ஞானத்திற்கு உலகம் பேய் என்னும் உலகவழக்கமும் அது.

பிரபஞ்சமெல்லாம் ஆநந்த பூரணமாய்த் தோற்றலின் சுடுகாட்டசுத்தம் அவர்க்குத் தோற்ருது என்பதறிக.

"தானந்தம்பாடி" என்றதனுல் போதம் இறந்து நின்று பாடினுர் என்பதும் "விண்ணிற்றட்ட ** நடிப்பர்" என்றதனுல் பரிபூரணுநந்தம் மாருது நடிப்பா ரென்பதுங் காண்க.

இவை யிரண்டு திருவெண்பாவானும் ஞானிகள் கிருவிகாரிகளா யிருந்தே ஆடுவர் பாடுவரென்று அறிவித்தவாறு காண்க. (கரு)

நீர் கூறியவாறே எல்லாவற்றையும் துறந்து, சிவவேடம் பூண்டுகொண்டு, தவங்களைச் செய்து, சிவாலயங்கடோறும் ஆடிப்பாடி அழுது சிரிக்கின்றோர் கிருவிகாரிகள் அலரோ எனின், மேற்கூறுகின்றார்.

விபரீதப் பூணு முடையும் விளியா
லபிமா னமுமவரா லாட்டுந் - தபசுபோற்
செய்யுஞ் சடங்குந் திகைப்புஞ் சிதம்பரத்தி
லையன் றனக்கறிய லாம்.

(உரை.) விபரீதப் பூணும் உடையும் விளியால் அபிமானமும் அவரால் ஆட்டும் தபசுபோல் செய்யும் சடங்கும்—(பார்த்தபேருக்கு) விபரீதமாய்த் தோன்றும்படி (சிரம் செவி களம் கரம் மார்புகளில் மிகவும் பூண்டுகொள்ளும்) உருத்திராக்கப் பூண்களும், (உத்தூளனமும்), ஒட்டு வேட்டி உடையும், வார்த்தையினுல் யாம் சிவமதம் என்று பிடித்துப் பேசும் அபிமானமும், அவரிடத் துண்டாம் ஆடல் பாடல்களும், தவசுபோற் செய்யும் ஞானுசாரங்களும்,

திகைப்பும் சிதம்பரத்தில் ஐயன் தனக்கு அறியல் ஆம்—(அவ் வேடத்திற்கும் நடைக்கும் உரிய பரிபூரணஞானம் அக

த்து இன்றி) திகைத்திருத்தலும், (ஆகிய இவை உடையாரது கருத்தினை) சிதாகாசத்தில் பஞ்சகிருத்திய நடனம் பண்ணு நின்ற பரமசிவனது திருவுளத்திற்கே அறியலாம் (அன்றி மற்றையர்க்கு அறியலாகாது).

(குறிப்பு.) ஆபரணம்போல் பூண்டு கோடலின், உருத்திராக்கத்தை, "பூண்" என்றார். உருத்திராக்கங் கூறினமையால் உத்தூளனம் வருவிக்கப்பட்டது.

அகத்து ஞானம் இன்றி, புறத்து இங்ஙனங் காட்டுவன எல்லாம் தற்போதத்தா லுண்டாவன ஆகலின், இவர் நிருவிகாரிகள் அலரென்பதுங் காண்க. இவர்களும் ஞானிகள்போல் பிறர்க்குத் தோற்றலின், "சிதம்பரத்தி லையன் றனக்கறியலாம்" என்றார்.

இத் திருவெண்பாவால் ஞானிகள்போல் நடிக்கின்றோரைப் பொய்ஞ்ஞானிகளென்று அறிவித்தவாறு காண்க. (கச)

மெய்ஞ்ஞானிகள் நடை இன்னுங் கூறுகின்றார்.

மாலயனு யிந்திரனுய் வாழுவதாய் மாளுவதாஞ்
சாலமயல் பார்த்துத் தலையசைப்பர் - ஞாலமயங்
குன்மத்தக் கோரணிபார்த் தோகோ வெனச்சிரிப்பர்
தன்னைப்பார்த் தாடுவர்தாந் தாம்.

(உரை.) மால்(ஆய்) அயன் ஆய் இந்திரன் ஆய் வாழுவது ஆய் மாளுவது ஆம் சால மயல்பார்த்துத் தலை அசைப்பர் ஞாலம் மயங்கு உன்மத்தக் கோரணிபார்த்து ஓகோ எனச் சிரிப்பர்—(தேவர்கட் கெல்லாம் மேலாய) மால் என்னும் பெயரை

உடையனாகியும், அயன் என்னும் பெயரை உடையனாகியும், இந்திரன் என்னும் பெயரை உடையவனாகியும் சிறந்துள்ளார் (தத்தம் பதவிகளில்) அழிவின்றி வாழ்வதாய்க் கருதிக்கொண் டிருந்து, பன்னாளில் மாண்டுபோவதாகும் அவரது மிகுந்த ஆணவ மயக்கத்தைப் பார்த்து, (இவ்வாணவம் அவர்களையும் பொய்யாகிய தேகாதிகளையும் மெய்யாக் கருதப்பண்ணி மயக்கிற்று, கண்டீர்கொலோ என்று உள்ளத்து நாடி) சிரக்கம்பங் கொள்வர்,(அவ்வாணவத்தான்) இவ்வுலகத்தார் மயங்காநின்ற பயித்தியக் கோரணிக் கூத்தைப் பாாத்து ஓகோ எனப் பிறர்க்குக் கேட்கச் சிரிப்பர்,

தன்னைப் பார்த்து ஆடுவர் தாம்தாம்—(அஃதன்றி) தம்மைப்பார்த்து, தம்மைச் சிவபூரணம் விழுங்கிக் கோடலால் காணாது, தாம் அச் சிவபூரணம்தாம் என நடனம் புரிவார்.

(குறிப்பு.) மால் அயன் இந்திரன் முதலியோர் இறந்து போவது ஆகமப் பிரமாணத்தால் அறிவதாகலின், அவரது "மயல் பார்த்துத் தலையசைப்பர்" என்றார்.

பித்தமேறினான் தன்னுடம்பு தெரியாது உலகர் நடைக்கு மாறுபாடாய்த் திரிவதுபோல், ஆணவ மேலீட்டால் தம்மைத் தெரியாது ஞானிகள் நடைக்கு மாறுபாடாய்த் தேக போகங்களை விழைந்துகொண்டு, அறுவகைத் தொழில்களில் நானாபேதமாய் முயற்சிப்படலான், "உன்மத்தக் கோரணி" என்றார்.

அவர் மருளால் மயங்கி நடிக்கின்றார், இவர் அருளால் தெளிந்து நடிக்கின்றார் என்பதுங் காண்க.

தாந்தாம் என்பது அந் நடத்திற்கு ஓர் தாளமும் ஆமெனக் கொள்க. (கரு)

ஆசைமுத லான வனைத்தும்போய் நானதுவாம்
வாசனையு மாண்டு மறந்தறியா - நேசத்
துறும்போக வுல்லாச வூமைக்கூத் தாடிக்
குறும்போக்கு வந்துநடப் பார்.

(உரை.) ஆசை முதல் ஆன அனைத்தும் போய் நான் அது ஆம் வாசனையும் மாண்டு மறந்து அறியா நேசத்து உறும் போக உல்லாச ஊமைக் கூத்தாடி—ஐந்து அவா முதலிய கருவிகள் அனைத்தும் இறந்து, நான் அச் சிவத்தோடு அத்துவிதமானேன் என்பதாகிய வாசனையும் இறந்து, (தன் தரிசனம் திருவருள் தரிசனங்களில் நின்றோர் ஓர்காலை அவற்றை மறந்து மீண்டும் அறிவது போல்) மறந்து அறியாத நேயத்துத் தோன்றும் பரிபூரணாநந்த போக உல்லாசத்தோடு மௌனக் கூத்தாடி,

குறும் போக்கு வந்தும் நடப்பார்—பின்னர்ச் சிறிதிடஞ் சென்று மீண்டு வந்தும் உலாவுவார் (அவ்வத்துவிதாநந்தம் பெற்றோர்).

(குறிப்பு.) விடயங்களில் செல்லும் ஐந்து அவாவும் நீங்கவே, அவ் விடயங்களை அறிந்து பற்றி அவற்றுள் அழுந்துவதாய இருவகை இந்திரியங்களும் அந்தக்கரணங்களும் நீங்கும். இவைகள் நீங்கவே, ஒழிந்த கருவிகளும் நீங்கும். ஆகலின், "ஆசை முதலான வனைத்தும்போய்" என்று ஆசையை முன்வைத்துக் கூறினார்.

நேயத் தழுந்தியபோது போதம் இறத்தலின், "மறந்தறியா நேசம்" என்றார்.

சிறு பிள்ளைகள்போ லுலாவி விளையாடுவ ராகலின், "குறும்போக்கு வந்து நடப்பார்" என்றார்.

இவை யிரண்டு திருவெண்பாவானும் மெய்ஞ்ஞானிகள் அஞ்ஞானிகளது பொய்யுலகாசாரத்தைக் கண்டு சிரக்கம்பஞ் செய்வதும், தம்முண்மையும் ஆநந்தா நுபவமும் கண்டு நடனஞ் செய்வதும் செய்வரென்று அறிவித்தவாறு காண்க. (கசு)

கருவிகளும் போதமும் இறந்து நேயத் தழுந்தினோர் அக் கருவிகளும் போதமும் உடையோரது மயக்கமும் தமது தெளிவும் எங்ஙன மறிவார் எனின், மேற் கூறுகின்றார்.

கேடுஞ் சுகமு முதலெல்லாங் கீழ்ப்படுத்திக்
கூடுஞ் சுகம்போலக் கொள்ளாதே - நாடுநகும்
பூனைக்கண் ணேரி பொருப்பேறி போலுச்சிப்
பானுப்போ னீயவரைப் பார்.

(உரை.) கேடும் சுகமும் முதல் எல்லாம் கீழ்ப்படுத்திக் கூடும் சுகம்போலக் கொள்ளாதே—துக்கமும் சுகமும் இவற்றிற்கு முதலாய் உள்ள தேகாதி பிரபஞ்சமெல்லாமும் கீழ்ப்படுத்தி நீக்கி, நேயத்தைக் கூடும் பரமுத்தர் குணம்போலச் சீவன்முத்தர் குணத்தை நீ கருதிக்கொள்ளாதே; (அஃது எங்ஙனம் எனின்),

நாடு நகும் பூனைக்கண் எரி பொருப்பு ஏறிபோல் உச்சிப் பானுபோல் நீ அவரைப்பார்—நாட்டின்கண் உள்ளார் பார்த்து

நகையாநின்ற இருட்டைச் சிறிதேனும் இன்றி இரவினும் பகலினும் அறியும் பூனையினது கண்ணைப்போலும், எரிகரைமேல் ஏறினேனைப்போலும், மலைமேல் ஏறினேனைப்போலும், மத்தியானத்துச் சூரியனைப்போலும், நீ அச் சீவன்முத்தர் அறிவையும் பார்த்தறிதி.

(குறிப்பு.) பூனைக் கண்ணிற்கு இரவினும் பகலினும் பொருள்கள் தோன்றுவனபோலும், எரிகரைமேல் ஏறிக்கு இருபாலும் தோன்றுவன போலும், பொருப்பேறிக்கு நிலத்திற் பொருளும் பொருப்பிற் பொருளும் தோற்றமாபோலும், உச்சிப் பானுவிற்கு உதயமாகுந் தானமும் அத்தமிக்குந் தானமும் தோற்றுமா போலும், பிறப்பில் துன்பமும் வீட்டில் இன்பமும் அவர்க்குத் தோற்றும். ஆகலின், இங்ஙனம் உவமைகூறினார்.

இருளான் அறியுங் கண்ணிற்கு ஒளியிற் பொருள் தோற்றாததுபோல் பெத்தராக வென்பதும், ஒளியான் அறியுங் கண்ணிற்கு இருளிற் பொருள் தோற்றாததுபோல் பரமுத்தரென்பதும், இருளினும் ஒளியினும் அறியுங் கண்ணைப்போல் சீவன்முத்தரென்பதும், "பூனைக்கண்" என்னும் உவமைக் குறிப்பாற் காண்க.

பரமுத்தர் தநுவாதிகளை நீக்கி நேயத்தழுந்தினோர், சீவன்முத்தர் தநுவாதிகளோடு கூடியுங் கூடாமல் நின்று நேயத்தழுந்தினோர். ஆகலின், இச் சீவன்முத்தராவார் இவரென்று இதனுட் பகுத்தறிவித்தார்.

ஏறி யென்பதனைக் கரைமேலேறி யென்பதனோடுங் கூட்டுக.

"நாடுகெடும்" என்பது பூனைக் கண்ணிற்கு அடை.

இத் திருவெண்பாவால் சீவன் முத்தராய மெய்ஞ்ஞானிகள் சகமுகமும் அகமுகமும் தோன்றப் பற்றாது பார்த்து அறிவரென்று அறிவித்தவாறு காண்க. (கஎ)

ஞானிகளாயினோர் மௌனமா யிருப்பதன்றி ஆடலாதிகளைச் செய்வது என்னை என்று சரியாதியி னிற்போர் சொல்லார்களோ எனின், மேற்கூறுகின்றார்.

சூலையும் பேயும் பிடித்துழல்வார் சும்மாநம்
போலறிவீ ரென்றுரைத்த புத்திபோல் - மூல
விருளான் மறந்தறிவா ரீதென்றா ரென்பா
ரருளா லறிந்தறிவா ரை.

(உரை.) சூலையும் பேயும் பிடித்து உழல்வார் சும்மா நம் போல் அறிவீர் என்று உரைத்த புத்திபோல்—(பொதுமாதர் கூட்டரவான் வரும்) சூலைநோயும் (நற்குணத்தை மாறுபடுத்தும்) பேயும் பிடித்து (அவற்றான் வருந்தி) சுழல்வார் (இச் சூலையும் பேயுங்கொண்டு) சும்மா எம தறிவைப்போல் (நீரும்) அறிவீர் என்று (நற்குணத் தோர்க்கு) சொன்ன புத்திபோல்,

மூல இருளால் மறந்து அறிவார் அருளால் அறிந்து அறிவாரை ஈது என் என்பார்—மூல மலவிருளால் (தம்மை) மறந்து (மாயா காரியமாகிய தநுவாதிகளை யான் எனதென்று) அறிவார் அருளால் (அத் தநுவாதிகளைப் பொய்யென்)றறிந்து (நீங்கித் தம்மையும் தமக்குரிய பேரின்பத்தையும்) அறிந்துளாரைப் பார்த்து (பித்தரைப்போல் நீர் செய்யும் ஆடல் பாடல்

கள்) இதென்னை என்று சொல்வர்; (அதுகொண்டு இவர்க் கோர் இகழ்ச்சியும் இன்று).

(குறிப்பு.)சூலையும் பேயும் பிடித்துளோர் புத்தியை அவை பிடியாத நற்குணத்தோர் கேளாததுபோல், சகல கேவலத்தில் நிற்போர் சொற்களை அவற்றை நீங்கிச் சுத்தத்தில் நிற்போர் கேளாரென்பது இவ் வுவமையான் அறிக.

சூலையும் பேயும் என்றது ஏகதார விரதியாய் இலிங்க விரதியா யிருப்போர்க்குப் பொதுமாதர் கூட்டுறவும் ஐவரரசர் முதலிய மருளேற்றிக் கொள்வதும் நன்றென்று பிறர் கூறு வனபோல் என்பதும் ஆம்.

இத் திருவெண்பாவால் மெய்ஞ்ஞானிகளது ஆடலாதிக ளைக்கண்டு கருமிகள் பழிப்பினும் அது பழிப்பின்பாற்பட்டது அன்றென்று அறிவித்தவாறு காண்க. (கஅ)

ஞானிகள் மகிமையை உலகத்தாரும் சரியையாதியி னிற் போரும் அறியா திருத்தல் ஏன் எனின், மேற் கூறுகின்றார்.

மருண்மூகர் வாக்கறிய வல்லரோ மாயா
விருளே யொளியா யிருப்ப - ரருளுருத்த
பேயரைப்பே யென்றுரோ பித்தராப் பாலிருட்கண்
பார்வைக்குப் பானு பகை.

(உரை.) மருள் மூகர் வாக்கு அறிய வல்லரோ மாயா இருளே ஒளி ஆய் இருப்பர்—பித்தமேறிய ஊமர்கள் (நல்லறி வாளர் கூறும் அறநெறி) வாக்கினை(உட்கொண்டு) அறியவல் லரோ?(அதுபோல்,உலகத்தார் ஞானிகள் கூறுந்திருவாக்கான்

ஆயினும் அவர்களை ஞானிகளென்று அறியவல்லரோ? அஃதன்றி, தாம் கற்ற நூலறிவும் சரியையாதி*ளுமாகிய) மாயாவிருளைத் தானே ஞானப்பிரகாசமாக் கருதிக்கொண்டிருப்போர்,

உருத்த அருள் பேயரைப் பேய் என்றேரோ பால் பானு பித்த நா இருள்கண் பார்வைக்குப் பகை—(மும் மலங்களையும் சற்போதத்தையும்) கோபித்த அருளாகிய பூரணப்பேய் பிடித்த பேயரைப் பேயரென்று சொல்லார்களோ? (அங்ஙனம் இருந்தோர் இங்ஙனம் இருந்தோரைப் பேயரென்று இகழ்வான் ஏன் எனின்) மதுரமாகிய பால் பித்தமேறிய நாவிற்குப் பகையானது போலும், பேரொளிப் பிரகாசமா யிருந்த பானு இருளை ஒளியாகக்காணும் இருட்கண் பார்வைக்குப் பகையானதுபோலும், (ஆநந்தமும் திருவருளும் மலமேலீட்டால் அவர்க்குப் பகையாமாகலின், இவற்றைப் பெற்ற ஞானிகளும் பகையாத் தோற்றுவர், இஃதே அவரிகழ்தற்குக் காரணம் என்று அறிதி).

(குறிப்பு.) "மருண்மூகர் வாக்கறிய வல்லரோ" என்றது உலகத்தார்க்கு உவமை.

நூலுணர்ச்சியோடும் சரியையாதிகளி னிற்போர் இகழ்வாரென்றது பரஞானம் இன்மையால் எனக்கொள்க.

பகை என்பதனைப் பால் என்றதனோடுங் கூட்டுக. கைப்பாயும் இருளாயும் மாறுபடத் தோற்றலின் "பகை" என்றார்.

இத் திருவெண்பாவால் ஞானிகளது மகிமையை உலகத்தாரும் சரியையாதிகளி னிற்போரும் மெய்யுணர்ச்சி யின்மையான் அறியார்களென்று அறிவித்தவாறு காண்க. (கக)

ஞானிகள் மகிமையை மானிட ரறியாராயின், அறிவார் ஆர் எனின், மேற்கூறுகின்றார்.

அடைப்புள்ளா யாளடர்ந்த வாமையாய்த் திக்கே
யுடுப்பதா யோர்ந்துழல்வார்க் கூரார் - நடைப்பிணமே
யூமைப்பே யாரெனினு மோலமிடுந் தேவர்குழாஞ்
சேமக்கோ லாளிந் திரர்.

(உரை.) அடைப்புள் ஆய் ஆள் அடர்ந்த ஆமை ஆய்த் திக்கே உடுப்பது ஆய் ஓர்ந்து உழல்வார்க்கு ஊர் ஆர்—(நேய நிட்டை மாறாதிருத்தலின் முட்டைகளை வைத்து அவையங் காக்கும்) அடைப்புட் போலாய், (தாமிருந்த இடந்தேடிச் சிலர் அன்னாதிகளைக் கொடுவந்து நேரே வைத்து வணங்கி உபசாரங்களைக் கூறினும் இந்திரியங்கள் ஐந்தையும் அவற்றிற் செல்லவொட்டாது உள்ளடக்கிக்கொண் டிருத்தலின் ஆள் அடர்ந்த ஆமைபோலாய், (இவ்வுடையைத் துறந்து திக்கெல்லாம் பரிபூரணமாயுள்ள உடையைத் தம்மைத் தெரியாது சூழவுடுத்திக்கொண் டிருத்தலின்) திக்கையே உடுப்பதாய், (இங்ஙனந் தேர்ந்து உலாவுவார்க்கு) ஊரின்கண் உள்ளார் (நன்று கூறினுந் தீதுகூறினும் உறவரோ பகைவரோ இவர்) யாவர்?

நடைப்பிணமே ஊமைப்பேயார் எனினும் ஓலம் இடும் தேவர் குழாம் சேமக்கோல் ஆள் இந்திரர்—(அஃதன்றி) நடையாடிய பிணம்போல் திரிந்தார் எனினும், ஊமைப் பேயரைப்போல் இருந்தார் எனினும்; (அவரது மான்மியத்தை)

தேவர் கூட்டங்களெல்லாம் அறிந்து சூழ்ந்துகொண்டு தோத்திரம் பண்ணுநிற்பர், இந்திரர்கள் (அவர்க்கு ஏவற்பணிவிடை செய்யும்) சேமக்கோ லாள்களாய்த் திரிவர்.

(குறிப்பு.) அடைப்புள் முட்டையைச் செட்டையால் அடக்கிக்கோடல் போல், அண்டங்களை எல்லாம் தமது பூரணத்தால் மறைத்துக்கொண்டிருப்பர் என்பதும் ஆம்.

ஆள் அடர்ந்தபோது ஆமை ஐந்துறுப்பையும் அடக்கிக்கோடல்போல், விடயங்கள் நேர்படின் அவர் ஐந்தையும் அடக்கலின், இங்ஙனம் உவமை கூறினர்.

ஊர் என்பது ஊரின்கண் உள்ளார்மேல் நிற்றது. ஓர்ந்துழல்வார்க் கூரினுள்ளா ரியாவரெனக் கூட்டுக.

கருவிச்சேட்டைகள் இறந்து நிற்றலின், "நடைப்பிணம்" என்றும், மௌனாநந்தமா யிருத்தலின், "ஊமைப்பேயர்" என்றும், ஒன்றினும் அவாவற்ற மெய்ஞ்ஞானி தேவருலகத்தும் இன்மையால், "ஓலமிடுந் தேவர்சூழாம்" என்றும், "சேமக்கோலாளிந்திரர்" என்றுங் கூறினர்.

அந்த ஞானிகட்கு ஏவல் செய்வது மிகவும் சிறப்பாகலின், அவர் பிடிக்குங்கோலை, "சேமக்கோல்" என்றார்.

உபேந்திரர் உளர் ஆகலின், இந்திரரென்று பன்மையாகக் கூறினர்.

இத் திருவெண்பாவால் ஞானிகள் மகிமையை மானிடர்கள் அறியார் எனினும், தேவர்கள் அறிந்து ஏவல் புரிவார் என்று அறிவித்தவாறு காண்க. (உ0)

இங்ஙனம் மகிமையுடைய ஞானிகள் எத் தேசத்திற் செல்வர் எவ்விடத் திருப்பர் எனின், மேற்கூறுகின்றார்.

செத்தவரைப் போலத் திரும்பாமற் போகலுமா
மெத்திசையு மொன்றென் றிருக்கலுமா-முத்தர்தமக்
கண்டமணுச் சிற்றி லரங்கந் தேகமலாற்
கண்டிடுகைக் கேதுமில்லை காண்.

(உரை.) முத்தர் தமக்குச் செத்தவரைப்போலத் திரும்பாமல் போகலும் ஆம் எத் திசையும் ஒன்று என்று இருக்கலும் ஆம்—முத்தர் தமக்குச் செத்தவரைப்போலத் (தாம் இருந்து நீங்கிய பதியிற் மீட்டும்) திரும்பாமல் சேறலும் ஆகும், அஃதன்றி எல்லாம் பரிபூரணமாய்த் தோற்றலின் எமக்கு) எல்லாத் திக்கும் ஒன்றுதானே என்று ஓரிடத் திருத்தலும் ஆகும்;

தேகம் அணுச் சிற்றில் அண்டம் ஆடு அரங்கம் அலாற் கண்டிடுகைக்கு ஏதும் இலை—(அஃதன்றி) தேகங்கள் ஆன்மாக்கட்குச் சிற்றில் இழைத்தற்கு இடமெனவும், அண்டம் (அவ்வான்மாக்கட்கு மாயாகோரணிக் கூத்தாடற்கு) ஓராடரங்கெனவும், காண்பது அல்லாமல் (அம் முத்தர் தமக்கு) வேறு காண்கைக்கு யாதொருபொருளும் இல்லை.

(குறிப்பு) உடற்கண் ணிருந்து நீங்கிய உயிர் மீட்டும் வந்து அதனுள் புகாததுபோல், தாமிருந்து நீங்கிய பதியில் மீட்டும் வந்து புகாமையின், "செத்தவரைப்போலத் திரும்பாமற் போகலுமாம்" என்றார்.

அணு என்பது ஆன்மா.

தேகம் சிற்றிலெனவும், அண்டம் ஆடரங்கெனவும் மாறிக்கூட்டுக.

பிரபஞ்ச மெல்லாம் அண்டபிண்டங்களுள் அடங்கும் ஆகலின், "கண்டிடுகைக் கேதுமிலைகாண்" என்றார்.

முத்தர் தமக்கென்பது நடுநின்று இருபாலுங் கொண்டு முடிதலின், தாப்பிசைப் பொருள்கோளும் நடுநிலைத் தீபகமும் ஆதல் காண்க.

காண்-அசை.

இத் திருவெண்பாவால் ஞானிகள் செல்வதற்கும் இருப்பதற்கும் தேசமும் இடமும் குறியீடு இன்றென்று அறிவித்தவாறு காண்க. (உக)

அந்த ஞானிகள் போகாத ஊர் ஒன்றும் இன்றோ எனின், மேற் கூறுகின்றார்.

உடற்போகம் போக வுயிர்ப்பகைபோய்ப் பேறுங்
கெடத்தானுந் தன்னறிவுங் கெட்டோர்-நடக்கும்போ
தாகாயுஞ் சாணிடல்போ லாவதல்லாற் பூரணர்க்குப்
போகாவூ ருண்டோ புகல்.

(உரை.) உடல் போகம் போக உயிர்ப்பகை போய்ப் பேறும் கெடத் தானும் தன் அறிவும் கெட்டோர்—உடம்பான் அநுபவிக்கும் விடயபோகம் போக (அப் போகமாகிய துன்பத்தை இன்பம்போல் மாறுபாடாய்த் தோற்றுவிக்கும்) உயிர்ப்

பகையாகிய ஆணவம் போய், (பேரின்பத்தைப் பெற்றேமெ ன்னும்) பேறும் போக, தன்னையும் தனக் கறிவிப்பதாய அருளையும் இழந்துள்ளோர்,

நடக்கும்போது ஆகாயம் சாண் இடல்போல் பூரணர்க்கு ஆவது அல்லால் போகா ஊர் உண்டோ புகல்—(ஒரு திசையில்) செல்லும்போது ஆகாயத்தைச்சாணிட் டளப்பதுபோல் (பரிபூரணர்க்குத் தமது பூரணத்தில் தாம் செல்வதுபோல்) தோற்றும் அல்லாமல் (இது நீடுதென்று பகுத்துப்பார்த்து) போகாது தவிரும் ஊரும் உண்டுகொல்? நீ புகலுதி.

(குறிப்பு.) ஆணவத்தால் இன்பமாய்த் தோன்றிய போகம் துன்பமாய்த் தோன்றியபோது அவ்வாணவங் கெடும். அவ்வாணவம் கெடவே தன் தரிசனமுந் திருவருள் தரிசனமும் பரையோகமும் ஆநந்தப்பேறும் உண்டாம். ஆநந்தப்பேறு இழந்த இடத்துத் தானுந் தனக்கறிவித்த அருளும் இன்றாம். ஆகலின், உண்டாம் அவைக்கும் இன்றாம் இவைக்கும் காரணம் இவையென்று உடற் போக இழப்பையும் உயிர்ப் போக இழப்பையும் எடுத் தறிவித்தார்.

ஆகாயத்தைச் சாணிட் டளக்கும்போது அளப்பதுபோல் தோன்றி, விடுத்தபோது அளந்ததும் இன்றாய் விடுத்ததும் இன்றாய் இருத்தல்போல், பூரணர்க்கு நடக்கும்போதும் அப்பூரணம் மாறாது அதனுள் நடப்பதுபோல் தோன்றி,ஓர் தானத் திருந்தவிடத்து முன் நடந்தோம் என்பதும் இப்போ திருந்தோம் என்பதும் தோன்றாதாகலின், "ஆகாயஞ் சாணிடல் போல்" என்று உவமை கூறினார்.

இத் திருவெண்பாவால் ஞானிகட்கு நிற்குநிலையும், நடக்கும்போது உள்ள குணமும், ஒரூர் நிற்கை ஒரூர் தவிர்கையும் ஆகிய நியதி இன்றென்பதும், அறிவித்தவாறு காண்க. (உஉ

ஆயின் அவர்க்கு நற்றானமும் தீதாய தானமும் சரியோ எனின், மேற்கூறுகின்றார்.

தருவனமென் றண்டுகுடை சாமரையாய் வாழு
நரவனமென் மேல்கீழ் நடுவென் - பரமசிவன்
றாக்கற் றதுபோ லருள்சிவனைச் சாராபோல்
றாக்கற்றார்க் கெங்குஞ் சமன்.

(உரை.) தரு வனம் என் தண்டு குடை சாமரை ஆய் வாழும் நரவனம் என் மேல் நடு கீழ் என்—தருக்கள் நெருங்கிய சோலையாயின் என்னை, முள் செறிந்தவனம் ஆயின் என்னை? சிவிகை கவிகை சாமரை முதலியன உடையராய் வாழும் நராகிய அடவி ஆயின் என்னை? உத்தம மத்திம அதமமாயுள்ள தலங்களாயின் என்னை?

பரமசிவன் தாக்கு அற்றதுபோல் அருள் சிவனைச்சாரா போல் தாக்கு அற்றார்க்கு எங்கும் சமன்—பரமசிவன் (எல்லாவற்றோடுங் கூடியிருந்தும் அவற்றுள்) தாக்கற் றிருந்தது போலும், திருவருளானது (கிருத்தியங்கள் ஐந்தும் தன்னால் நடக்கவும் சிவத்தைவிட்டு நீங்காதிருப்பதே அன்றி இக் கிருத்தியங்கள் ஐந்தையும் ஒழித்து) அச் சிவத்தைச் சார்வோம் என்று சாராதவாறுபோலும் (ஒன்றோடும்) தாக்கற்ற ஞானிகட்கு (முற்கூறிய) இடமெல்லாஞ் சரியாம்.

(குறிப்பு.) கருவிகள் எல்லாவற்றோடும் கூடியிருந்தும் அவற்றன் தாக்கற்று நிற்றலால், "பரமசிவன் தாக்கற்றது போல்" என்றும், தேக இந்திரிய அந்தக்கரணங்கள் தம்மால் தொழிற்படினும் தாம் சிவத்தைவிட்டு நீங்காதிருப்பதே அன்றி இத் தேக இந்திரியாதிகளினது தொழில்களை ஒழித்து அச் சிவத்தை அடைவோம் என்பதின்றிப் பரிபூரணமாயிருத்தலின், "அருள் சிவனைச் சாராபோல்" என்றும் கூறினார்.

இத் திருவெண்பாவால் ஞானிகட்கு எவ்விடமும் சமனென்று அறிவித்தவாறு காண்க. (உ௯)

ஆயின் அவர்கட்கு இடந்தான் யாது எனின், மேற்கூறுகின்றார்.

தம்மையரு ளாலறிந்து தாமறிந்த தெல்லாம்போ
யிம்மைப் பெருவாழ்வை யெய்தினர்க்கு - முன்னே
நடந்தறிந்த போத நசிப்பே யிருக்கு
மிடம்புறங்கா டென்ப திலை.

(உரை.) தம்மை அருளால் அறிந்து தாம் அறிந்தது எல்லாம் போய் இம்மைப் பெருவாழ்வை எய்தினர்க்கு—(கருவிகள் முப்பத்தாறையுங் கடந்து) தம்மை அருளால் அறிந்து (அங்ஙனந் தம்மை யறிந்து பின்னர்த் தம்மை அறிவித்த அருள் தரிசன முதலாய்) தாமறிந்தவை எல்லாம் நீங்கி இம்மைக் கண்ணே சுகாதீதமாகிய வாழ்வை அடைந்தோர்க்கு,

முன்னே நடந்து அறிந்த போதம் நசிப்பே இருக்கும் இடம் புறங்காடு என்பது இலை—(கருவிகளையும் தன் தரிசன

முதலியவற்றையும் இது இது என்று அறிந்து) அவற்றை நீங்கிச்சென்று (சிவத்தை) அறிந்து அதனுள் இறந்த போதம் (மீண்டு எழாது அதனைக்) கெடுப்பதே இருக்கும் இடமன்றி இது சுத்தமாகிய இடம் என்பதும் இது புறங்கா டென்பதும் இன்று.

(குறிப்பு.) தற் றரிசன முதலியவற்றால் உறுதியாய் நின்றோர் மறுமைக்கண் அடையும் சுகாதீத முத்தியை இவர் இம்மைக் கண்ணே அடைந்தாராகலின், "இம்மைப் பெருவாழ்வை யெய்தினர்" என்றார்.

எல்லாவற்றையும் நீங்கிச் சென்றமையால், "நடந்து" என்றார்.

இத் திருவெண்பாவால் ஞானிகட்குப் போதம் இறந்திருக்கும் இடமே கருத்தன்றி மற்றொன்றும் இன்றென்று அறிவித்தவாறு காண்க. (உச)

இங்ஙனம் இருந்த ஞானிகட்குச் சாதிநடை சமயநடை இன்றோ எனின், மேற் கூறுகின்றார்.

காமாதி விட்டுக் கரமே கலமாகிப்
பூமீதே கைகாலைப் போர்த்துறங்கி – நாமகுணம்
சாதி கருமமெனும் வாதனையிற் றுக்கற்றார்க்
கேது சமயமென லாம்.

(உரை.) காமம் ஆதி விட்டுக் கரமே கலம் ஆகிப் பூமீதே கை காலைப் போர்த்து உறங்கி—காமக் குரோத லோப மோக மத மாற்சரியங்களை யெல்லாம் விட்டு நீங்கி, கரமே உண்கல

ஞகி (மனைதோறும் பிச்சை ஏற்றுண்டு பொதுச்சாவடி புறந் திண்ணை பாழ்ங்கோயில் முதலியவற்றுள்) பூமியாகிய மலரணைமீது கரங்களையும் தாள்களையும் போர்வையாகப் போர்த்துக்கொண்டு ஆநந்த நித்திரை பண்ணி,

நாமம் குணம் சாதி கருமம் எனும் வாதனையில் தாக்கு அற்றார்க்கு ஏது சமயம் எனல் ஆம்—பெயர் குணம் சாதி கிரியை என்னும் இவற்றின் வாசனையோடும் தாக்கற்ற மெய்ஞ்ஞானிகட்குச் சாதி யாதென்று கூறலாம்? சமயம் யாதென்று கூறலாம்? (ஆகலின், இவற்றின் நடைகளும் அவர்க்கின்று).

(குறிப்பு.) "காமாதி விட்டு" என்றமையான், மாயா குணம் ஒன்றும் இலர் என்பதாயிற்று.

நாமாதிகளில் தாக்கற்றாரென்றது அவற்றின் வாசனையிற் றாக்கற்றார் என்றமையான், அவற்றை மறந்து போயினார் என்பதாயிற்று.

"சாதி கருமம்" என்றமையான் சாதி யேதெனலாம் என்பது வருவிக்கப் பட்டது.

இத் திருவெண்பாவால் ஞானிகள் நடை சாதி சமயங்களோடு ஒவ்வாதென்று அறிவித்தவாறு காண்க. (உ௫)

ஞானி நடை சாதிநடை சமயநடைகளோடு ஒவ்வாது இங்ஙனம் இருப்பது என்னை எனின், மேற்கூறுகின்றார்.

ஞானிக் குலகநடை யென்றுநாம் பார்க்கிற்
சீனக்கண் ஞாடியொடு தீபமுமா - மேனோர்க்கும்
விப்பிரட்ட மேபோல வேறும் விகாரியோ
வப்பராக் கன்றியறி யான்.

(உரை.) ஞானிக்கு உலகநடை என்று நாம் பார்க்கின் சீனக் கண்ணாடியொடு தீபமும் ஆம்—ஞானியினது நடையை உலகரது சாதிநடைபோ லென்று யாம் பார்ப்போம் எனின், (அவரது நடை இருளில்) தீபத்தைக்கொண்டு பொருள் காண்பதுபோலுமாம், (இவரது நடை அவ்விருளில்) சீனக் கண்ணாடிகொண்டு பொருள் காண்பதுபோலுமாம்; ஆகலின், (இவரது நடையோடு ஒவ்வாதிருப்பது எங்ஙனம் எனின்),

ஏனோர்க்கும் விப்பிரட்டமே போல வேறு ஆம் விகாரியோ அப் பராக்கு அன்றி அறியான்—(சமயிகள் தத்தம் கடவுளரைத் தமக்குரிய நூல் கூறியவாறே வழிபடுபவர்; அவர் அக்கடவுளரை எல்லாம் கடந்துநின்ற பரிபூரணசிவத்தை அடைந்தவர் ஆகலின்) அச் சமயிகள் நடைக்கும் அவர் நடை சுத்தப்பிரட்டயேபோல் ஒவ்வாது வேறும்; (இங்ஙனஞ் சாதிநடை சமயநடை ஒவ்வாதாயின் இவ்விருவகை நடையும் இல்லாத பாமரர் போலும் அவர்) விகாரியோ எனின், அவர் சிவனைப் போலும் நிருவிகாரி, அவர் நிருவிகாரியேயானால் விகாரமற்று இருக்கவேண்டுமே அன்றிக் கரபிச்சைவாங்கி உண்டல் முதலிய நடை நிகழ்வானேன் எனின், அங்ஙனம் காயத்தின் நிகழ்ந்ததாயினும் அவர் நிருவிகாரமாகிய) பராக்கே அன்றி (இவ் விகாரமாகிய பராக்கினுள் ஒன்றினையும்) அறியார்.

(குறிப்பு.) உலகநடை என்றதனால் ஞானிநடை வருவிக்கப்பட்டது.

ஞானிநடை தீபம்போலெனவும், உலகநடை சீனக்கண்ணாடி போலெனவும் மாறிப் பொருள்கொள்க.

இருளில் தீபத்தால் பொய்ப்பொருள் தோன்றுவபோல் ஞானதீப நடையால் மெய்ப்பொருள் தோன்றும் என்பதும், அவ்விருளில் சினக்கண்ணுடியால் பொய்ப்பொருள் சிறிதும் தோன்றாததுபோல், மாயாந்த காரத்தோடும் செய்யும் சாதி நடையான் மெய்ப்பொருள் சிறிதும் தோன்றாதென்பதும் இவ் வுவமைகளாற் காண்க.

"விகாரியோ" என்றமையானும், "அப்பராக்கன்றியறி யான்" என்றமையானும், அவற்றிற் கிடையில் வேண்டுவன வருவிக்கப்பட்டன.

இத் திருவெண்பாவால் ஞானிகள் மாயாதீதமான சிவ ஞானம் உடையர் ஆகலின், சாதிசமய நடையாகிய மாயைக் குட்படாரென்று அறிவித்தவாறு காண்க. (உகூ)

ஞானியினது நடை முதலியவற்றை அறியக்கூடாதோ எனின், மேற்கூறுகின்றார்.

மூர்க்க னநாசாரி மூடனெனப் பண்டிதனும்
மேற்குலமா மாசார வித்ததெனப் - பார்க்கி
லளவைக் களவாகி யப்பாலா ஞானி
தெளிவைத் தெளியாத தென்.

(உரை.) மூர்க்கன் அநாசாரி மூடன் எனப் பண்டிதன் ஆம் மேல் குலம் ஆம் ஆசார வித்தது என—(உலக நடை சமய நடைகளில் நிற்போர் ஞானி நடையைப்பார்த்து, தமது நடையோடு ஒவ்வாமையான் இவர் பிரட்டு நடையையுடைய) மூர்க்

கரெனவும், ஆசார ஈனரெனவும், (ஒன்றும் அறியாத) மூட ரெனவுங் கூற (விவேகிகளாயினோர்) அவர் நடையைப்பார்த்து எல்லாவற்றையுந் தெளிந்த) பண்டிதராமெனவும், மேலாய ஞான குலமாமெனவும், ஆசாரத்திற் கெல்லாம் ஓர் வித்தா மெனவுங் கூற ;

பார்க்கில் அளவைக்கு அளவு ஆகி அப்பால் ஆம் ஞானி தெளிவைத் தெளியாதது என்—(அவர் நடையை) விசாரிக்கு மிடத்து, (இவரால் இவ்வளவென்று) அளவிடுதற்கு அளவிடுவ தாய் (இவ்வளவையுங் கடந்து) அப்பாலுமாகிய அந்த ஞானி யினது (நடையினையும்) தெளிவினையும் (இவ்வளவென்று ஒரு வராலும்) அறியக்கூடா திருந்தது என்கொலோ ?

(குறிப்பு.) உலகநூல் சமயநூல்களை உணர்ந்தோர்கள் அந் நூல்களின் நடை இன்மையான் இகழ்ந்துகூறினோர், ஞான நூ லுணர்ந்தோர் ஞானநடை என்றறிந்து புகழ்ந்து கூறினோ ராகலின், "அளவைக் களவாகி" என்றும், இங்ஙனஞ் செய் வோமென்று செய்யாதவ ரிடத்தில் ஞானநடை இயல்பாய் நிகழ்தலின் ஞானநூலுணர்ச்சியால் புகழ்ந்து கூறினோர் அள வையுங் கடந்துநின்றாராகலின், மூவளவைக்கும் பொதுப் பட "அப்பாலா ஞானிதெளிவைத் தெளியாததென்" என் றுங் கூறினோர்.

இத் திருவெண்பாவால் ஞானியினது நடையுந் தெளி வும் யாவராலும் அறிந்து அளவிடக்கூடாதென்று அறிவித்த வாறு காண்க. (உஎ)

சுகாதீதத்தில் நிற்போர்க்கு அந் நடைகள் இலவாயினும் அருள்தரிசன முதலியவற்றில் நிற்போர்க்கு அந் நடைகள் இல வாயின் அது பிரட்டன்றோ எனின், மேற் கூறுகின்றார்.

அஞ்சனக்கண் ணாளர்க் கருநிதியந் தோன்றுவபோ
னஞ்சலகை மாற்றினதி னாணுவர்போல் - வெஞ்சாப
விடுபோற் றோன்றுமருண் மேலிட்டால் விப்பிரட்டா
மோடையின்மண் ணேகமொப்போர்க் கு.

(உரை.) அருள் மேல் ஈட்டால் அஞ்சனக்கண் ஆளர்க்கு அருநிதியம் தோன்றுவபோல் நஞ்சு அலகை மாற்றின் அதில் நாணுவர்போல் வெஞ்சாப வீடுபோல் தோன்றும்—திருவருள் மேலிட்ட காலத்து, பாதாள அஞ்சனம் போட்டுப் பார்க்கும் கண்ணினை யுடையார்க்கு அரிய சேமநிதி தோன்றுவதுபோலும், தம்மே லேறியிருந்த விடத்தையும் பேயையும் மாற்றின் அதனால் (தெளிவுபிறந்து முன்னர் என்செய்து கொண்டோம் என்று அவற்றால் மயங்கிச்செய்த செயல்களைநாடி) நாணுவாரைப்போலும், கொடிய சாபத்தினால் வருந்தினோர்க்கு அச் சாபம் விடுதலைபாலாற்போலும் தோன்றும்;

ஓடையில் மண் ஏகம் ஒப்போர்க்கு விப்பிரட்டு ஆம்—(அத் திருவருள் மேலீட்டைப்பெற்ற ஞானிநடை) ஓடையில் மூழ்கிக் கிடக்கும் தவளைபோல் (மாயாசமுத்திரத்தில்) மூழ்கிக் கிடப்போர்க்குப் பிரட்டு நடைபோல் தோன்றும்.

(குறிப்பு.) மண் மறைப்பால் தெரியாதிருந்த நிதி அஞ்சனம் போட்டுப்பார்த்த கண்ணாளர்க்கு அம் மண் ஊடுரு

வித் தோன்றுவதுபோல், மலமறைப்பால் தெரியாதிருந்த அருள் அவ்வருட் கண்ணால் பார்த்தபோது அம் மலமறைப்பு நீங்கி எங்கும் தானாய்த் தோற்றுமாகலின், "அஞ்சனக் கண்ணுளர்க் கருநிதியந் தோன்றவபோல்" என்றும்; விடமும் பேயும் நீங்கிய விடத்துத் தெளிவு வந்து முன்னர் அவற்றால் மயங்கிச் செய்த செயல்களை நாடி நாணுவாரைப் போல்,சகல கேவலங்களை நீங்கி அருளைக் கண்டவிடத்து முன்னர் அவற்றால் மயங்கிச் செய்த செயல்களை நாடி நாணம் வருமாகலின், "நஞ்சலகைமாற்றி னதிலுணுவர் போல்" என்றும்; தேவனா யிருந்துளான் சாபத்தால் விலங்காதிகளா யிருந்து பின்னர் அச் சாபம் விடுதலையான போது தேவத்துவத்தை அடைந்தாற்போல, அளவிறந்தகாலம் மலதேகம் தானாயிருந்தவர் இப்போது அத் தேகம் நீங்கித் தன்னை அறிவென்று உள்ளபடி அறிந்தமையால், "வெஞ்சாப வீடுபோல்" என்றுங் கூறினார்.

"ஓடையில் மண்கே மொப்போர்க்கு" என்றது, இணைந்துத்தவளை நாட்டுவளப்ப மறியுமோ என்னும் உலகவழக்கக் குறிப்பால் மாயையில் மூழ்கிக் கிடப்போர்க்கு ஞானி நடை தெரியுமோ என் றறிவித்தது.

இத் திருவெண்பாவால் திருவருள் மேலிட்ட விடத்து வரும் அநுபவமும், அதனை உடையோரும் ஞானிகள் என்பதும், அவரது நடையை மாயையுடையோர் அறியார் என்பதும், அறிவித்தவாறு காண்க. (உஅ)

நீர் ஈண்டுக் கூறியவாறே துறவும் ஞானநடையு முடை யோரை ஞானிகளென்பது அன்றி இவை இல்லாரையும் ஞா னிகள் என்பது என்னை எனின், மேற் கூறுகின்றார்.

அவரவரைப் போலிருப்பர் தாமவரா கார்போ
லிவரவர்க்கொப் பில்லை யெனினு - முவமைசொலின்
வேசிபணம் வெய்யோன் வீணை வெளிவிசிறி
யாசியர்போ லென்கினுமா வர்.

(உரை.) அவர் அவரைப்போல் இருப்பர் தாம் அவர் ஆகார்போல் இவர் அவர்க்கு ஒப்பு இல்லை எனினும் உவமை சொலின்—(குடும்பத்தோடு கூடியிருந்தும்) ஞானிகளா யிருப் போர் (அறிவினால் அக் குடும்ப நிவிர்த்தியா யிருந்த) ஞானிக ளைப்போலே யிருப்பர், (இக் குடும்பத்தோடும் இருந்த) ஞானி கள் தாம் (நடையினால் அக் குடும்ப நிவிர்த்தியாயிருந்த ஞானி களைப்போல் ஆகார், அதுபோல, இந்தக் குடும்பிகள் அந்தக் குடும்பத்தோடும் இருந்த ஞானிகளுக்கு (நடையினால் ஒப்பர், அறிவினால் இந்தக் குடும்பிகள் அந்தக் குடும்பத்தோடும் இருந்த ஞானிகட்கு) ஒப்பிலர் எனினும்; (இன்னும் அந்த ஞானிக ட்கு) உவமை கூறுமிடத்து,

வேசி பணம் வெய்யோன் வீணை வெளி விசிறி யாசியர் போல் என்கினும் ஆவர்—வேசிபோல் என்று கூறினும், பண ம்போல் என்று கூறினும், வெய்யோன் போல் என்று கூறி னும், வீணைபோல் என்று கூறினும், வெளிபோல் என்று கூறி னும், விசிறிபோல் என்று கூறினும், யாசியர்போல் என்று கூறினுஞ் சரியாவார்.

(குறிப்பு.) வேசி தன்மேல் நசைகொண்டு வந்தார்மேல் தானும் நசைகொண்டாள் போலும் வாக்குக் காயங்களிற் காட்டி மனத்தில் அவர்மேல் நசை யின்றிப் பொருள் மேல் நசைகொண் டிருப்பதுபோல், மனைவி முதலிய குடும்பத் தார் தம்மேல் நசையுற் றிருப்பத் தாமும் அவர்மேல் நசை யுற்றார் போலும் வாக்குக் காயங்களிற் காட்டி, மனத்தில் அவ ர்மேல் நசையின்றி மெய்ப்பொருள்மேல் நசையுற்றிருத்தலின், வேசி என்றும்;

பணம் எவர் எவர் எம தெம தென்று அபிமானிப்பினும் தான் அவர்மேல் அபிமானம் அற்றிருத்தல்போல், சுற்றத்தார் நட்பு முதலியோர் எம்மவர் எம்மவர் என்று அபிமானிப்பி னும் தாம் அவர்மேல் அபிமானம் அற்று, நிர்விகாரிகளாய் இரு த்தலின், பணம் என்றும்;

வெய்யோனால் உலகத்தார் தொழிற்படினும் இவர் செய் யும் நன்று தீது அவனுக் கின்றாயதுபோல், தமது வாக்குக் காயங்களில் யாது நிகழினும் இவற்றான் வரும் இதாகிதங்க ளில் தாம் சாரா திருத்தலின், வெய்யோன் என்றும்;

வீணை வாசியா திருந்தபோதும் வாசித்து விடுத்தபோதும் சும்மா இருந்து வாசிக்கும்போது அவன் பாடும் பாட்டின்படி தான் சொல்வதே அன்றி மற்றொன்றும் சொல்லாது ஒழிதல் போல், ஒருவர் ஓர் காரியம் வந்து பேசாமுன்னரும் பேசி ஒழி ந்த பின்னரும் தாம் ஓர் காரிய விசாரணை பண்ணாது சும்மா இருந்து, காரியக்காரர் வந்து பேசும்போது அவர் பேசும் காரி

யப் பேச்சுமாத்திரம் பேசி மற்றொன்றும் சொல்லாது ஒழிதலின், வீணா என்றும் ;

வெளி எல்லாவற்றிற்கும் இடங்கொடுத்திருந்தும் அவற்றுள் தாக்கற்று நிற்றல்போல், குடும்பத்திற்கெல்லாம் தாம் பிரதானமா யிருந்தும் அவற்றோடும் தாக்கற் றிருத்தலின், வெளி என்றும் ;

விசிறி தன்னை எடுத்து விசிறிக் கொள்வார்க்குப் பயன் கொடுப்பதன்றி அவரால் தனக்குப் பயன் வேண்டா திருத்தல் போல், தம்மைக் கொண்டு பிறர் பயன்படுவது அன்றி அவரால் தனக்குப் பயன் வேண்டா திருத்தலின், விசிறி என்றும்;

யாசியர் குற்றமுடையாரையும் குணமுடையாரையும் குணமாகப் புகழ்தல்போல், இவர் குற்றம் உடையாரையும் குணம் உடையாரையும் சமனாகக் கண்டு நன்மொழி கூறலின், யாசியர் என்றும் கூறினார்.

'போலென்னினும்' என்பதனை எல்லாவற்றோடும் கூட்டுக.

இத் திருவெண்பாவால் துறந்தவர் ஞானிகளது வாக்குக் காயங்களில் நிகழும் ஞானநடைக்கு அவர் அதீதமாயிருந்தது போல், இங்ஙனம் குடும்ப சகிதரா யிருந்த ஞானிகளது வாக்குக் காயங்களில் நிகழும் உலகநடைக்கும் இவர் அதீதமா யிருப்பரென்று அறிவித்தவாறு காண்க. (உக)

இங்ஙனங் குடும்பத்தோடு கூடியிருந்தும் பற்றற் றிருப்போரை ஞானிகளென்பது சுபாவம், சிவிகை கவிகை முதலியவற்றோடும் அரசர்போல வாழ்கின்றோரையும் எங்ஙனம் ஞானியென்று சொல்வது எனின், மேற்கூறுகின்றார்.

தண்டுகுடை யாளராய்ச் சாதுரங்கப் பேரரசாய்த்
தொண்டர்குழாம போற்றச் சுகித்தாலு-முண்டுசுத்தர்
போகத்தா ரோசுடர்போற் பொய்ப்போக மெய்ப்பெ
சாகப்போ வார்கடன்றீர்த் தல். [ருக்காய்ச்

(உரை.) சாதுரங்கம் தண்டு குடை ஆளர் ஆய்ப் பேர் அரசு ஆய்த் தொண்டர் குழாம் போற்றச் சுகித்தாலும் சுத்தர் உண்டு போகத்தாரோ—நால்வகைச் சேனையும் சிவிகை கவிகை முதலியவும் உடையவராய் வாழும் பேரரசரைப் போல (சிவிகை கவிகை முதலிய வுடையராய்) அடிமைக் கூட்டங்கள் சூழ்ந்து நின்று பரிசரிப்ப (மகா போகங்களை) அனுபவித்தார் எனினும், (அவற்றோடுந் தாக்கற்று நின்று) சுத்தநிலை பெற்றாரும் உண்டு, (அவர் இப்பிரபஞ்சிகள் போலும்) போகமயமாய் அழுந்துவரோ? (அழுந்தார், அஃது எங்ஙனம் எனின்),

சுடர்போல் பொய்ப்போகம் மெய்ப்பெருக்குஆய்ச் சாகப் போவார் கடன் தீர்த்தல்—(எண்ணெய் வார்க்குந் தோறும் தன்னிடத்தில் வாங்கிக்கொண்டு தான் மிகவும் பிரகாசிக்கும் தீபம்போல், பொய்ப்போகம் (வருந்தோறும் அதனைத் தற்போதத்தாற் பற்றி அநுபவியாது அருட்கண்ணால் பார்த்துத் தாம் அற்று அநுபவித்தலின் அது மெய்ப்பொருட்காய்ப் பொய்ப் போகத்தான்) மெய்ப்பொருள் மிகவும் பிரகாசமாய்த் (தோன்றும் ஆகலின், இங்ஙனம் என்று அறிதி; ஆயின், மெய்ப்பொருளை உணர்ந்தோர் பொய்ப்போகத்தோடும் கூடி யிருந்து அநுபவிப்பது என்னை எனின், அக்கினியில் வீழ்ந்து) இறக்கப் போவார் (தமக்குரியராய் உள்ளார் கொடுக்கும் போகமாகிய)

கடனை (வாங்கி அதனுள் விருப்பற்று உண்டு தீர்த்துக்கோடல் போல் அவரும் இத் தேகத்தை எப்போது ஒழிவோம் என்னும் கருத்தராய் இதற்கமைத்த பிராரத்தகடனை விருப்பற்று அநுபவித்துத்) தீர்த்துக்கொள்வார், (ஆகலின், அவர் அதனோடுங் கூடி இருத்தல் இம் முறைமை என்று அறிதி).

(குறிப்பு.) போகம் வருந்தோறும் தமக்கென்று தற்போதத்தால் பற்றி அநுபவியாது அப் போதம் அற்று அருள்வடிவாயிருந்து அப் போகத்தைத் தாம் அநுபவிப்பதுபோல் சிவத்திற்கு ஆக்குவது மெய்ப்பத்தி, இப் பத்தியினால் அச் சிவமானது போதம் சிறிது எழினும் அதனை விழுங்கிக்கொண்டு நின்று பிரகாசிக்கும் ஆகலின், "பொய்ப்போக மெய்ப்பெருக்காம்" என்றார்.

சாகப்போவார் போகத்தை விரும்பாதிருக்கவும் சுற்றத்தாராயுள்ளார் அவரை வேண்டிக் கொடுவந்து புசிப்பித்தல் போல், ஞானிகள் போகத்தை விரும்பா திருக்கவும் பிராரத்தம் வலியக் கொடுவந்து புசிப்பித்தலின், இங்ஙனம் உவமை கூறினார்.

இத் திருவெண்பாவால் பிராரத்தத்தால் வந்த பெருவாழ்வின்கண் பற்றின்றி அவ் வாழ்வு அநுபவிப்பைப் போதத்தால் தாமநுபவியாது சிவத்துக்கு அர்ப்பிதஞ் செய்கின்றோரும் ஞானிகளே என்று அறிவித்தவாறு காண்க. (௯0)

ஞானிகள் அநுபவிப்பதும் பிராரத்தம், மற்றையர் அநுபவிப்பதும் பிராரத்தம், ஆயின் அவர்க்கும் இவர்க்கும் பேதம் என்னை எனின், மேற்கூறுகின்றார்.

பெருநோவுக் கேயென்னைப் பெற்ற துடற்போகம்
நரகேழு மூட்டுமிது நாஞ்செத் - துருவத்துத்
தாமல்லாற் போகிப்ப தல்லவது வன்பர்பதந்
காவலாட் கைத்தளைபோற் காண்.

(உரை.) உடல் பெருநோவுக்கே என்னைப் போகம் பெற்றது நரகேழும் ஊட்டும் இது நாம் செத்து உருவத்துத் தாம் அல்லால் போகிப்பது அல்ல—உடலாகிய பெருநோவுக் கென்னைக் கருதிப் போகத்தை அநுபவிப்பதுதானே பிறவியாகிய நரகமேழினும் கொடு சென்று (அவற்றில் உண்டாகிய துன்பங்களை) புசிப்பிக்கும் (இங்ஙனம் எங்ஙனம் எனின், இவர் அநுபவிக்கும்) இப் பிராரத்தம் தற்போதம் மாண்டு இத் தேகத்துத் தாம் இருப்பது அல்லாமல் (அருள்வடிவாயிருந்து) அநுபவிப்பதல்ல (ஆகலின்);

பதம் அன்பர் அது காவல் ஆள் கைத்தளைபோல் காண்—திருவடியைப்(பிரியாது நின்ற அம்)மெய்யன்பர்தம் பிராரத்தம் (தற்போதம் மாண்டு தேகம் தாம் அல்லாது திருவருள் தாமாயிருந்து அநுபவிப்பது ஆகலின், அப் பிராரத்தம் தேகமிருக்குமளவும்)—காவலாள் போலும் கைத்தளை போலும் (இருந்து தேகம் நீங்கும்போது அதனோடும் தானும் நீங்கும் ஆகலின், அவர்க்கு மறுபிறவி உளவாகா என்று) அறிதி.

(குறிப்பு.) தேகம் தானெனவும் போகம் தனதாயும் கருதிக் கொண்டு தற்போதத்தால் அப் போகத்தைப்பற்றி அநுபவித்தலின் இதாகிதங்களும், இவ்விதாகிதங்களால் இருவினைகளும்,

இவ்விருவினைகளால் மறுபிறவியும், இங்ஙனம் தொன்றுதொட்டு வரும் ஆகலின், "நரகேழுழுட்டும்" என்றார்.

போதம் இறந்திருத்தலானும், பூரணம்டிவா யிருத்தலினும், வினைசார்தற்கு இடமின்மையால், அவர்க்கு மறுபிறவி இன்றென்பது காண்க.

உடம்பு மூப்புப் பிணிக்கு இடம் ஆகலின், அதனை "பெருநோவு" என்றார். "நாஞ் செத்துருவத்துத் தாமல்லாற் பேரிப்பதல்ல" என்று அவர்க்கு உண்மையாய குணங்களை இவர்க்கு இன்மை என்று எடுத்துக் கூறினமையால், அவர்க்குஅவை வருவிக்கப்பட்டன.

'இது' என்பது இவர் பிராரத்தமேல் நின்றது. 'அது' என்பது அவர் பிராரத்தமேல் நின்றது.

பதம் – திருவடி; பதத்தினை உடைய அன்பரெனப் பொருள்கொள்க.

போகமாய் வந்து சூழ்ந்து கோடலானும், பரமுத்த ஞானமொட்டாது தேகத்தில் அவரைத் தடுத்து நிற்றலானும், பிராரத்தத்தைக்'காவலாள்'என்றும் 'கைத்தளை'என்றும் கூறினார்.

இத் திருவெண்பாவால் ஞானிகள் தேகபோகங்களில் பற்றிலர் ஆகலின், அவர் பிராரத்தம் அத் தேகத்தோடு கழியும் என்றும், அஞ்ஞானிகள் பற்றுளர் ஆகலின், அவர் பிராரத்தம் இதாகிதங்கள் வருவித்துப் பிறப்புக் கேதுவாகும் என்றும் அறிவித்தவாறு காண்க. (௬௯)

ஒருவர் செய்தவினை மற்றொருவரைச் சாராமையான், அவர் செய்தவினை அவரைச் சாராதிருப்பது எங்ஙனம் எனின், மேற் கூறுகின்றார்.

சுகிக்கில்லை துக்கஞ் சுடுகாடு சொர்க்க
மகத்துக்குஞ் சொர்க்கநர காய்ந்தார் - சுகிப்பதுவு
மத்துவி தாநந்தர்க் காகார மற்றது
பத்திசெய்வார்க் கேற்கும் பயன்.

(உரை.) சுகிக்கு துக்கம் இல்லை சுடுகாடு சொர்க்கம் அகத்துக்கும் சொர்க்கம் நரகு ஆய்ந்தார் சுகிப்பதுவும் அத்துவித ஆநந்தர்க்கு ஆகாரம் அற்றது—பரமசுகமே வடிவா யிருப்போர்க்குத் துக்கம் என்பதில்லை, (துக்கம் இன்மையால் சுடுவும் இன்று, இது சுத்தமாகிய இடம் என்னும் கருத்துச் சிறிது எழினும் அதுவே நரகமாய்த் தோற்றலின், அசுத்தமாயுள்ள) சுடுகாடே அவர்க்குச் சுவர்க்கம், (அஃதன்றித் தாம் ஆநந்த வடிவா யிருத்தலே சுவர்க்கம் எனவும், தேகம் தாம் என்று சிறிது எழும் கருத்தே நரகம் எனவும், புறத்திற்குச் சொர்க்க நரகு ஆய்ந்தாற்போல்) அகத்திற்கும் சொர்க்க நரகாய்ந்தார், (அஃதன்றி அவர்) அநுபவிப்பதும் (அத்துவிதாநந்தமேயாம், இங்ஙனம் இருந்த) அத்துவிதாநந்தர்க்கு அவ் வாகாமிய வினை புசிப்பற்று நின்றது; (இங்ஙனம் அவர்க்குப் புசிப் ற்று நின்றால் அவ் வினை தான் எவ்விடத்துச் செல்லும் எனின்),

பத்தி செய்வார்க்குப் பயன் ஏற்கும்—அவர்மேல் அன்பாய் இதஞ்செய்வோர்க்கும் (வெறுப்பாய் அகிதஞ் செய்வோர்க்கும்) அவ் விருவினைப் பயன்களுஞ் சாரும் (என்று அறிதி).

(குறிப்பு.) ஆநந்தமே வடிவா யிருத்தலின் தநுவில்லை, அவ் வடிவில் தற்போத மின்மையால் கரணமில்லை, சுகோடே சுவர்க்கமாய்க் காண்டலால் புவனமில்லை, அவ்வாநந்தத்தையே அநுபவித்தலால் போகமில்லை, இங்ஙனந் தநு கரண புவன போகங்களை எல்லாம் கடந்து நின்றோரை அவ் வினை சாரமாட்டாமையின் "ஆகாரமற்றது" என்றார்.

தேகத்தை உடையவனைத் தேகி என்றாற்போலச் சுக வடிவா யிருந்தோரைச் 'சுகி' என்றார்.

இத் திருவெண்பாவால் ஞானிகள் சிவாநந்தாநுபவர் ஆகலின், அவரை வினைகள் சாரா என்றும், அவர்க்கு இதாகிதங்களைச் செய்வோரிடத்தே அவை சாருமென்றும் அறிவித்தவாறு காண்க. (௯௨)

இங்ஙனம் இருந்த ஞானி அடைந்த பேரின்பத்துக்கு உவமை யாது எனின், மேற்கூறுகின்றார்.

அரிபிரம ரிந்திரர்க ளாதிகளார் தானச்
சரிவிரத்த னின்பத்தைச் சாற்றிற் - பரமசிவன்
றானே சரியீட்டுச் சாற்றுகின்றான் றன்சரியே
றானுரை வேதமறி யா.

(உரை.) அவ் விரத்தன் இன்பத்தைச் சாற்றின் அரிபிரமர் இந்திரர்கள் ஆதிகளார் சரி—அவ் விரத்தன் இன்பத்திற் குவமை சொல்லுமிடத்து, அரி பிரமர் இந்திரர் முதலிய தேவர்களது இன்பமெல்லாம் ஒன்றாகக் கூட்டின் சரி;

பரமசிவன் தானே சரி மீட்டுச் சாற்றுகின் தான் தான் சரி வேறு ஆனாரை வேதம் அறியா—(அஃதன்றி) பரமசிவனது பரிபூரணானந்தந் தானே சரி, பின்னுஞ் சொல்லுமிடத்துத் தன் இன்பத்திற்குத் தன் இன்பமே சரி, (இங்ஙனம் எப்பொருள்கட்கும்) வேறாய் நின்றடைந்தார் (இன்பத்தை) வேதங்களும் இவ்வளவென்று அளவிட்டறிய மாட்டா.

(குறிப்பு.) பரமசிவனது பரிபூரணானந்த மெல்லாம் தாமாகின்று அநுபவித்தலின், "பரமசிவன் தானே சரி" என்றும், தன் இன்பம்போல் மற்றியாவர்க்கும் இன்மையால், "தான் தான் சரி" என்றும், அவ்வின்பமும் தாமாகாது, அதனை அநுபவிப்போரா யிருத்தலின், "வேறானாரை" என்றுங் கூறினார்.

இன்பத்திற்குவமை கூறினமையான் அவர் சரி என்றதை அவரதின்பஞ் சரியென்று கூறப்பட்டது, அஃது ஆகுபெயர்.

தான் - அசை.

இத் திருவெண்பாவால் ஞானிகளது இன்பப் பெருமை கூறியவாறு காண்க.

சாலோக மாதி தருஞ்சைவ சித்தாந்தி
பாலேகம் பார்க்கப் பணியுமவன் - மேலே
யுருகித் திருவுளத்துக் குற்றபணி செய்வார்
பெருமைக்கே துண்டோ பிற.

(உரை.) சாலோகம் ஆதி தரும் சைவ சித்தாந்தி பால் ஏகம் பார்க்கப் பணியும் அவன் மேலே—(தன்னை வந்து அடை-

ந்தோராது பத்தி பணிவிடைக்கேற்ப அவர்க்குச்) சாலோக சாமீப சாரூப மாகிய பதமுத்திகளையுங் கொடுக்கும் சித்தாந்த ஞானிபால் ஏகமா யிருந்த மெய்ப்பொருளை அறியும்பொருட்டு (வந்து மனமொழி மெய்களான் வணங்கும் அதிபக்குவன் மேல்;

உருகித் திருவுளத்துக்கு உற்ற பணி செய்வார் பெருமைக்குப் பிற ஏது எண்டோ—(பேரன்பு வைத்து) உள்ளுருகி அவனது திருவுளத்துக்கு ஏற்ற பணிவிடைகளைச் செய்வோரது பெருமைக்கு (மேலாய பெருமை) பிறிது யாதுண்டு?

(குறிப்பு.) வந்தடைந்தோர் பக்குவா பக்குவங்களை அறிந்து, சரியையாதிகளை வருவித்து, சாலோகாதி பத முத்திகளைக் கொடுப்பதும், அதிதீவிர பக்குவனாய் வந்தோனுக்குத் தற்போதத்தைக் கெடுத்து நிரதிசய வின்பத்தைக் கொடுப்பதும், மற்றைச் சமயங்களில் இன்மையால், "சாலோகமாதி தருஞ் சைவசித்தாந்தி பாலேகம்பார்க்கப்பணியுமவன்" என்றார்.

இங்ஙனம் இருந்த சித்தாந்தியைப் பணியுமவனைப் பணிவோர்க்கும் அம்முத்தியின்பம் உண்டாமாகலின், "உற்ற பணி செய்வோர் பெருமைக்கே துண்டோபிற" என்றார்.

இத் திருவெண்பாவால் சித்தாந்த ஞானம்போலே வேறு ஞானம் இன்றென்பதும், இந்த ஞானம் பெற்றோரை வழிபடுவோர் பெருமையே பெருமையென்றும் அறிவித்தவாறு காண்க. (ரு௪)

காலமுடன்றேசந் திக்குக் கருமமுடற்
கோலஞ் சமயங் குறிப்பறிதல் - சீலந்
தலையோடு போனவுயிர் தான்போலத் தன்னோ
டிலையாஞ் சிவனே யிவன்.

(உரை.) காலமுடன் தேசம் திக்குக் கருமம் உடல்கோலம் சமயம் குறிப்பு அறிதல் சீலம்—(இன்னகாலத்து இன்ன விரதஞ் செய்வதென்னும்) காலமும், (காசி முதலியன நல்லன மற்றையன தீயன என்னும்) தேசமும், (இன்னதிக்கு நன்று இன்னதிக்குத் தீது என்னும்) திக்கும், (இன்னகருமஞ் செய்வது இன்னகருமந்தவிர்வது என்னும்) கருமமும், உடலில் (சமைந்த) வேடங்களும், (அவ் வேடங்கட்குரிய) சமயங்களும், (அச் சமயங்கட் குரிய கடவுளரை இங்ஙனம் இருப்பாரெனக் குறிப்போடு தியானிப்பதாய) குறிப்பறிதலும், (இன்ன சாதிக்கு இன்னது ஆசாரமென்று செய்யும்) சீலமும், (ஆகிய இவையெல்லாம்),

தலையோடு போன உயிர்போலத் தன்னோடு இலை ஆம் சிவனே இவன்—தலைபோனவிடத்து (அதனோடும்) போன உயிர்போல, (தற்போதம் இறந்தவிடத்து) அதனோடும் நீங்கும், (ஆகலின் மௌநாநந்தமாயிருந்த) சிவனே இவனும்.

(குறிப்பு.) கை கால் முதலிய உறுப்புக்கள் போனவிடத்தும் இருந்த உயிர் தலையோடும் போனதுபோல, போதம் சிறிது இறந்தவிடத்தும் இருந்த கிரியைத் தொழில்கள் அது முற்றும் இறந்த விடத்து அதனோடும் நீங்கும் ஆகலின், அவ்

னம் உவமை கூறினர். அவற்றைச் செய்தவன் இறந்தமை யால் இவற்றைச் செய்யப்படும் அவையும் இல என்பதுங் காண்க.

மௌனாநந்தமாயுள்ள சிவனை அடைந்தவன் மௌனாநந்தி யாகலின் "சிவனே யிவன்" என்றார்.

தான் - அசை. (௯௫)

இங்ஙனம் அவர்க்கு விதிவிருத்தங்கள் இல்லையென்று நீர் கூறியது என்னை எனின், மேற்கூறுகின்றார்.

சாவே பெருநோன்பாய்ச் சந்தற்ற சத்தியர்க்குத்
தேவாரங் காலந் தியானமறம் - பாவம்
விதிவிருத்தம் பேசுகைக்கு வேதா கமங்க
ளதிசயிக்கு மேலுரைப்பா ரார்.

(உரை.) சாவே பெரு நோன்பு ஆய்ச் சந்து அற்ற சத்தி யர்க்குத் தேவாரம் காலம் தியானம் அறம் பாவம் விதிவிருத்தம் பேசுகைக்கு—(தற்போதம்) இறப்பதே பெருந்தவமாய்க் கொண்டு (அதனைக் கெடுத்துச் சிவத்தோடும்) இரண்டறக் கலந்த சத்திய ஞானிகட்குத் தேவாரமுதலிய தோத்திரங்களை ஓத லும், காலா காலங்கள் (அறிந்து சிவாலயங்களிற் சென்று பணிதலும்) (ஒரோர் பாவனையைக் கருதித்) தியானித்தலும், (சிவபூசையாதி) புண்ணியங்களைச் செய்தலும், (இவையன்றி) பாவங்களைச் செய்தலும் ஆகிய இவ் விதி விருத்தங்களுள என்று சொல்வதற்கு,

வேத ஆகமங்கள் அதிசயிக்குமேல் ஆர் உரைப்பார்—வேதங்களும் ஆகமங்களும் அதிசயிக்கும் எனின் அவற்றிற்குமேல் மற்றியாவர் சொல்வார்?

(குறிப்பு.) போதம் சிறிது எழினும் அதனைக் கெடுத்துச் சிவத்தோடும் கலந்திருப்பதே அவர்க்குச் சகல நோன்புகளும் ஆகலின், "சாவே பெருநோன்பாய்ச் சந்தற்ற சத்தியர்" என்றார். அங்ஙனம் செய்வதே நோன்பாய்க் கொண்டோர்க்கு அதற்குமேல் மற்ற நோன்பொன்றும் இன்மையான் அவர்க்கு விதிவிருத்தம் இலவாயின.

"வேதாகமங்க ளதிசயிக்கும்" என்றதனால் அவர்தன் விதிவிருத்தம் அறிவோர்க்கு வேறு சொல்வதற்கு இடமின்மையான், "மேலுரைப்பாரார்" என்றார்.

விதியாவது வேதாகமங்கள் சிவபூசாதிகளைச் செய்க என்று கூறுவது. விருத்தமாவது மதுபானாதிகளை விடுக என்று கூறுவது.

இவை யிரண்டு திருவெண்பாவானும் ஞானிகட்கு விதிவிருத்தங்கள் இல என்று அறிவித்தவாறு காண்க. (௩௬)

மோனிகளைப் பார்த்திமையா மோகமும்வெண் டிங்க
மேனி யழுகெழுதா மேற்பத்தி - யான [ண்
பதுமா தனன்கண்ணும் பானுவும்போற் றுறை
யெதிராகுஞ் சொப்பனத்தி லும்.

(உரை.) மோனிகளை இமையா பார்த்து மோகமும் வெள் திங்கள் அழகு எழுதா மேனி—(அந்த ஞானிகள்தம்

மைப்போல் சுகாதீத முத்தியைப் பெறும்பொருட்டுப் புறத்து நின்ற போதத்தை உள்ளடக்கி இதனைக் கொடுப்பதே விரதமாய்க் கொண்ட) மௌனிகளை இமையா நாட்டத்தோடும் பார்த்து (இவர்மேல் வைத்த) மோகமும், (உத்தூளனத்தால்) வெண்டிங்கள் போலும் விளங்காநின்ற அழகெழுதக் கூடாத (அவரது) திருமேனியும்;

மேல் புத்தி ஆன பதுமாதனன் கண்ணும் பானுவும்போல் தான் ஆய்ச் சொப்பனத்திலும் எதிர் ஆகும்—பிரமனது நான் முகங்களினும் மேன்மைபெறு பந்துபோல விளங்குவதான எண்கண்களும், (அக் கண்கட் கெதிர்தோன்றும்) பானுவும்போல், (யான் கருதா திருப்பினும்) அவைதாமாய் வந்து, சொப்பனத்தினும், சாக்கிரத்தினும், (என துளக் கண்ணிற்கும் முகக் கண்ணிற்கும்) எதிரே விளங்குவதாம்.

(குறிப்பு.) சுகாதீத முத்தியை அடைந்த ஞானிகட்கு ஞானசாதகரைக் கண்டால் பாசங்களை எல்லாம் கடந்து இவ்வளவு வந்தாரென்று, அவர்மேற் சந்தோஷமும் பிறக்குமாகலின், "மௌனிகளைப்பார்த் திமையாமோகமும்" என்றார். "யான் பெற்றபேறு பெறுக இவ் வையக" மென்பதும் அது.

பதுமாதனன் இமையா நாட்டத்தையும், அதற் கெதிர் தோன்றும் பானுவையும், உவமை கூறினமையான், அவர் மேல் வைத்த மோகத்தையும், அவரது திருமேனியையும் தம துளம் மறவா தென்பதாயிற்று.

எனதெனும் பெயர் எஞ்சிநின்றது.

சொப்பனத்திலும் என்ற உம்மையால் சாக்கிரத்தும் என்று வருவிக்கப்பட்டது.

இத் திருவெண்பாவால் எமக்கும் இங்ஙனம் இருக்கும் என்று ஞானிக ளருமை அறிவித்தவாறு காண்க. (௬௭)

உருகு பரமசுக வுல்லாச நோக்குந்
திருமுகமும் புன்முறுவற் றேசுந் - திருநீறும்
தற்பாவ மாண்ட சரீரத்தி லோர்சாத்து
மற்றே வெறுமனழ காம்.

(உரை.) உருகு பரமசுக உல்லாச நோக்கும் திருமுகமும் புன்முறுவல் தேசும் திருநீறும்—உள்ளமுருகப் பண்ணுகின்ற பரமசுக உல்லாசத்தோடுங் கூடிய திருநோக்கமும், (அவ் வின்பக் களிப்பால் தெய்வத்தாமரை மலர்ந்ததுபோல விளங்கா நின்ற) திருமுகமும், (அவ் வின்பம் பொங்கி மேன்மே லெழுலால் தோன்றும்) மந்தகாசப் பிரகாசமும், (திருமேனி முழுதும் பூசுவதாகிய) திருவெண்ணீற் றழகும்,

தற்பாவ மாண்ட சரீரத்தில் ஓர் சாத்தும் அற்றே வெறுமன் அழகு ஆம்—(பஞ்சபூத குணங்களாகிய) தற்பாவம் இறந்துநின்ற திருமேனியில் (கூடியும் கூடாதிருந்த ஞானிகளது திருமேனியில் தோற்றும், அவை அங்ஙனந் தோற்றுவன அன்றி, அவற்றான் அவர்க்கு) யாது சிறப்பும் இன்று, அவை வாளா தோற்றும் அழகுகளாம்.

(குறிப்பு.) ஆநந்தம் தோன்றும்போது உள்ளம் நெக்குருகத் தோன்றும் ஆகலின், "உருகுபரமசுகம்" என்றும், சடசித்

நுக்களாயுள்ள பொருள்களெல்லாம் அவர்க்குச் சுகசொரூபமாய்த் தோற்றும் ஆகலின், அவர்நோக்கை "பரமசுகவுல்லாசநோக்கு" என்றுங் கூறினார்,

* " * * வினையேன் மனத்துத்
தேனையும் பாலையுங் கன்னலையு மமுதத்தையுமொத்
தூனையு மென்பினையு முருக்காநின்ற வொண்மையனே"

என்பதும் அது.

"பூகாளுந்தலைசுமப்ப" என்றதுபோல் தோற்றும் என்பதைச் சாத்தும் என்று அருமை தோன்றக் கூறினார்.

உல்லாசநோக்கு முதலியன அவர் கருத்தாய்த் தோற்றாது இயல்பாய்த் தோற்றலின், "அற்றே வெறுமனழகாம்" என்றார்.

வெறுமன் என்பது கிராமியச்சொல்.

இத் திருவெண்பாவால் ஞானிகளைப் புகழ்ந்து கூறியவாறு காண்க. (௬அ)

வாடன் மணம்போல் வருந்தா வயிராக்யத்
தோடு மெலிந்த வுடம்புடனே - கூடார்
திருவிடயா நந்தசுக நீங்காத நோக்குந்
திருமுகமு மென்னைவிடா தே.

(உரை.) வாடல் மணம்போல் வருந்தா வயிராக்யத்தோடு மெலிந்த உடம்புடனே கூடார்—வாடற்பூவின் மணம்

* திருவாசகம்: நீத்தல்விண்ணப்பம்—21.

சிறிது தோன்றுதல்போல் (சிறிது தோன்றும் பிராரத்த வாசனையோடும் போதத்தால்) வருந்திச்செய்யாத பாச வயிராக்கியத்தோடும் தளராநின்ற திருமேனியுடனே கூடியிருந்துங் கூடாராகிய ஞானிகளது,

நிருவிடய ஆநந்தசுகம் நீங்காத நோக்கும் திருமுகமும் வன்னை விடாது—நிருவிடயமாய்த் தோற்றும் ஆநந்தமாகிய சுகம் (உட்போல் புறத்தும்) நீங்காத(அவ்வாநந்தத்) திருநோக்கும், திருமுகமும், எனது உள்ளத்தை எப்போதும் விட்டு நீங்கா.

(குறிப்பு.) "வாடன்மணம்போல்" என்ற உவமையால் சிறிது பிராரத்த வாசனையோடும் என்பது வருவிக்கப் பட்டது.

வருந்திச் செய்யும் போதம் உடையாரது வயிராக்கியம் போல் அன்றி இவர்க்கு இயல்பாய்த் தோற்றலின், "வருந்தா வயிராக்கியம்" என்றார்.

விடயாநந்தம்போல் எதிரீடற்ற இடத்தில் தோற்றலின், "நிருவிடயாநந்தம்" என்றார்.

ஏ - அசை.

இத்திருவெண்பாவால் அவரது அருமை கூறியவாறு காண்க. (௯௧)

ஆயின், இந்த ஞானிகட்குப் பெயர் யாது எனின், மேற் கூறுகின்றார்.

தத்துவத்தின் போர்வை சரிந்த திகம்பரிபே
ரத்துவிதி யேகாந்தி யாநந்தி - சுத்தன்

றுரியனவ தூதன் றுறவிசிவ யோகி
நிருவாணி யென்விரத்த னென்.

(உரை.) தத்துவத்தின் போர்வை சரிந்த திகம்பரி பேர்—முப்பத்தாறு தத்துவங்களாகிய போர்வை சரிந்த அதனால் திகம்பரியா யிருந்த ஞானியினது பெயர் (சொல்லுமிடத்து),

அத்துவிதி ஏகாந்தி ஆநந்தி சுத்தன் துரியன் அவதூதன் துறவி சிவயோகி நிருவாணி என் விரத்தன் என்—(சிவத்தோடும் அத்துவிதமா யிருத்தலின்) அத்துவிதி யென்றும், (அங்ஙனம் அத்துவிதமா யிருப்பினும் தான் ஆச் சிவ மாகாமையான்) ஏகாந்தி யென்றும், (பூரணாநந்த மெல்லாம் தானாய் நின்று அநுபவித்தலின்) ஆநந்தி யென்றும், (மலத் திரயங்களை நீங்கி நிற்றலால்) சுத்த னென்றும், (மேலாய பொருளை அடைந்தோ னாகலின்) துரிய னென்றும், (வர்ணாச்சிரமங்களைக் கடந்து நிற்றலான்) அவதூத னென்றும், (தேகாதி பிரபஞ்சங்க ளெல்லாம் துறந்து நிற்றலால்) துறவி யென்றும், (மற்றொன்றோடுங் கூட்ட ரின்றிச் சிவத்தோடும் கூட்டரவா யிருத்தலின்) சிவயோகி யென்றும், (அத்துவா ஆறையுங் கடந்து நிற்றலான்) நிருவாணி யென்றும், (அச் சிவத்தோடு அத்துவிதமாக இருக்கின்றே னென்னும் வாசனையும் இறந்துபோ யிருத்தலின்) விரத்த னென்றும் நீ சொல்லுதி.

(குறிப்பு.) உடம்பைப் போர்த்துநின்று நீங்கிய போர்வை போல் உயிரைப் போர்த்து நின்று நீங்கினமையால், "தத்துவத்தின் போர்வைசரிந்த" என்றார். அஃதன்றிப் பூதகஞ்சுகம்-பி

கிருதிகஞ்சுகம் - கலாதிகஞ்சுகம்-வயிந்தவகஞ்சுகம் - சத்திகஞ் சுகம் என்னும் இப் பஞ்ச கஞ்சுகங்களையு நீக்கிநின்ற ரெனினு மாம்.

அத்துவிதி யென்றதாகி இக் குணங்களெல்லா முடையா ஞகலின் இப் பெயர்களெல்லா மவற்குரித்தாயின. (௬௦)

இங்ஙனம் அகத்து ளாசையற்றுத் துறந்தோரையும் அக த்து ளாசை யிருக்கத் துறந்தோரையும் எங்ஙன மறியலா மெ னின், மேற்கூறுகின்றார்.

அடங்கத் துறந்தார்க்கு மாசையறப் பாவித் தொடும்பக் குவந்தெரியா தோகோ - மடந்தேடிப் பிச்சையாய் மூலையிற் பெண்பேச்சாய் வரினடைக்கைக் கிச்சையாய்க் கைக்கெதிர்நீட் டும்.

(உரை.) அடங்கத் துறந்தார்க்கு மாசையறப் பாவித்தொடும் பக்குவந் தெரியாது ஓகோ—அகத்து ஆசையிருக்கப் புறத்து ஆசை யறப் பாவித்து அடங்கத் துறந்தாரையும், இயல்பாய் அக த்து ஆசையற்று அடங்கத்துறந்தாரையும் அவரோடு நிகழும் பக்குவா பக்குவங்களினுலே ஓகோ தெரியாதோ? அஃதெங் ஙனமெனின்,

மடந்தேடிப் பிச்சையாய் மூலையிற் பெண் பேச்சாய் வரினடைக்கைக் கிச்சையாய்க் கைக்கெதிர் நீட்டும்—அவர் நற்பிச்சையிடும் மடந்தேடிச் சென்று பிச்சை ஏற்பதாய், (புதிய) மருமகப் பெண் மூலைக்கண் இருந்து (மெல்லெ னப் பேசும்) பேச்சுப்போல் (தமக்கென ஓர் ஒடுக்கம்பற்றி அதனுள் இருந்து மாரிசத்தோடு மெல்லெனப்) பேசுவதாய்,

இவர் பெரியரெனக் கருதிப் பிறர் அன்ன வத்திர முதலிய நடைக்கை கொடு) வரின் அந் நடைக்கைக்கு இச்சைபாய் அவர் கொடுக்குங் கைக்குத் தமது கையை எதிர்நீட்டி வாங்குவர், (இவர்க்கு எல்லா மனைதோறுஞ் செல்வரேயன்றி ஓர் மடந்தேடிச் செல்வதும் ஓரொக்கம்பற்றி யிருந்து மாரிசமாய்ப் பேசுவதும் தாம் இருக்கும் இடத்துப் பிறர் அன்னாதிகளைக் கொடுவரின் அவற்றை இச்சித்து வாங்குவதும் இல்லை ஆகலின், அவரது பக்குவமும் இவரது பக்குவமும் தாமேதெரியும் நீ அறிதி.)

(குறிப்பு.) "ஆசையறப்பாவித் தடங்கத் துறந்தார்க்கும்" என்றமையான், அங்ஙனம் பாவியாது இயல்பாய்த்துறந்தாரை என்பது வருவிக்கப் பட்டது.

அடங்கத் துறத்தல் மனைவி முதலிய பற்றுக்களை எல்லாம் ஒருங்கே விடுத்தல். அடங்கத்துறந்தார்க்கும் என்னும் நான்காம் வேற்றுமையை இரண்டாம் வேற்றுமையாகக் கொள்க.

"தெரியாதோ" என்பது தெரியாதென்று ஓகாரந் தொக்கு நின்றது.

மடந்தேடிப் பிச்சையாய்க் கைக்கெதிர் நீட்டுமென்று அவரது கடை கூறினமையால், அதற்கெதிர் மறையாய் இவரது கடை வருவிக்கப் பட்டது.

ஒருவருக்குச் செல்வம் வரின் அதனை நடைக்கை என்பதுபோல், பிறர்வந்து அன்னாதிகளைக் கொடுப்பதனை நடைக்கை என்றார். (சக)

ஆயின், அகப்பற்று அற்றூர் துறப்பதே அன்றி, அகப்பற்றுடையார் துறக்கலாகாதோ எனின், மேற் கூறுகின்றூர்.

கரையடிக்க வந்தாற் றிரையலைக்குங் கப்பல் [வன்
பொருளடுத்தாற் றோன்றும் பொய்ப்போதம்-விருநினை
வெற்றிக் குதிகுதித்தோன் போல்வேண்டும் விட்டது
பற்றுமதிற் சிக்கெனநிற் பாய். [பின்

(உரை.) கப்பல் கரை அடிக்க வந்தால் திரை அலைக்கும் கும் பொருள் அடுத்தால் தோன்றும் பொய்ப்போதம்—(அலை அலைக்கும் கரைகடந்து சென்று கடலின் நடுநின்ற) கப்பல் (மீட்டும்) அக் கரையடிக்கவந்தால் (அக் கப்பலை) அலை அலைக்கு மாறுபோல, (விடயங்களைத் துறந்து சென்று துறவின் கண் நின்ற நீ மீட்டும்) அவ் விடயங்களை அடுத்தால் பொய்யாகிய அவ் விடயபோதந் தோன்றி அறிவை அலைக்கும், (ஆகலின்),

விருநினைவன் வெற்றிக் குதிகுதித்தோன் போல் வேண்டும் விட்டது பின்பற்றும் அதில் சிக்கெனநிற்பாய்—(தன்பகைவனைச் சயுங்கொண்டால் அன்றி விடேனென்னும்) விருநினைேன்போலும், (ஒருவரோடு வாதுகூறி) வெற்றிக்குத் தாவுதாவினேன்போலும், (நீயும் பிடித்த துறவை முற்றுஞ்) சாதிக்கவேண்டும், (அதனை விடாது சாதிக்கவேண்டின், விடயங்களை யடாதே, அடுத்தால் முன்னர் நீ) விட்ட பற்றுக்கனெல்லாம் இப்போதும் வந்து பற்றும், (இவை உன்னைப் பற்ருது அகலும்படி அத் துறவின்கண்) உறுதிப்பட நிற்றி.

(குறிப்பு.) கரை அடாது கடலின் நடுநின்ற கப்பலை அலை அலைபாததுபோல, விடயங்களை அடாது துறவின்கண் நின்றோரை விடயபோதம் அலையாதென்பது இவ்வுவமைக் குறிப்பாற் காண்க.

விருதிறேனுக்கு எவ் விதத்தானும் தன் பகைவனைச் சயங் கொள்வதே விருது, கூடாதாயினும் அவனோடும் பொருது இறத்தலே விருது; அதுபோல், துறவினேனுக்குத் தன் பகை என்னும் மாயைப் படைகளாகிய முப்பத்தாறையுங் கடந்து வீடடைதலே துறவு. அங்ஙனங் கடக்கக் கூடாதாயினும் அதனைக் கடத்தற் கேதுவாய சுத்த வாசனையோடு நின்று இறத்தலே துறவு, ஆகலின், "விருதினவன்" போல் என்றும்;

வெற்றிக்கு அறுபதடித்தூரவு தாவத் தொடங்கினேன் அறுபத் தோராமடி தாவினான் எனின் அதுவெற்றி, அது தவறின் வெற்றியும் இழந்து அத் தூரவினும் வீழ்வன்; அதுபோல, விடயங்களைத் துறக்கத் தொடங்கினேன் அவ் விடயங்களையும் துறந்து தற்போதத்தையும் துறப்பதே துறவு, அங்ஙனஞ் செய்யாது அவ் விடயங்களைச் சாரின் அத் துறவினான்வரும் பெருமையும் இழந்து பிறப்பினும் வீழ்வன். ஆகலின், "வெற்றிக் குதிகுதித்தோன் போல்" என்றுங் கூறினார்.

"தத்துவத்தின் போர்வை" என்னுந் திருவெண்பாமுதல் இவை மூன்று திருவெண்பாவானும் ஞானிகளது பெயரும் தாமும் துறந்ததைச் சாதிபாது மீட்டும் சாரலாகாதென்பதும் அறிவித்தவாறு காண்க. (சஉ)

எட்டாம் அதிகாரம்.

அருளவத்தைத் தன்மை

முற்றும்.

## ஒன்பதாம் அதிகாரம்.

# வாதனைமாண்டார் தன்மை.

குடும்பத்தோடு கூடியிருந்து ஞானம்பெற்று அக் குடும்ப வாதனை மாண்டு நின்றார் தன்மை கூறினமையால், இவ் வதி காரத்திற்கு வாதனைமாண்டார் தன்மை என்று பெயராயிற்று. துறவிகளா யிருந்து ஞானம்பெற்றோரும்;அன்றிக் குடும்பிகளா யிருந்து ஞானம் பெற்றோரும் உளராகலின்,அவ்வதிகாரத்தின் பின் இவ்வதிகாரம் வைக்கப்பட்டது.

ஞானம் இல்லாவிடினும் வைராக்கியத்தால் வீட்டுநெறி அடையலர்காதோ எனின், மேற்கூறுகின்றார்.

ஞான மில்லாத வைராக்கி நன்றல்ல
கானவர்க்கு நோவினர்க்குங் கள்ளர்க்கு - மானதுவெ
னெங்கிலக்கே நின்றுவெ னெவ்விடயத் தேய்ந்தாலென்
றன்னிழப்பே யின்பாந் தலம்.

(உரை.) ஞானம் இல்லாத வைராக்கி நன்று அல்ல கான வர்க்கும் நோவினர்க்கும் கள்ளர்க்கும் ஆனது என்—(அகத்துப் பரிபூரண) ஞானம் இல்லாதார் (புறத்துச் செய்யும்) வயிராக் கியம் நன்றல்லவாகும், அஃது எங்ஙனம் எனின், மலை கானி ல் சஞ்சரிக்கும்) வேடர்களுக்கும், விடா நோயினர்க்கும் (பொ

றுள் திருடும்) கள்வர்க்கும் (வைராக்கியம்) உண்டாவது என்னை? (ஆகலின், இவரது வைராக்கியத்தோடு அவரது வைராக்கியம் ஒக்கும்);

என் நிலைக்கே நின்றால் என் எவ் விடயத்து எய்ந்தால் என் தன் இழப்பே இன்பு ஆம் தலம்—(அகத்துப் பரிபூரண ஞானம் உடையார் அரசுரிமை முதலியன உலக வியாபாரங்களில்) யாது நிலையில் நிற்பினும் என்னை? (வனிதாதி விடயங்களில்) யாது விடயங்களோடு கூடியிருந்தாலும் என்னை? அந்நிலையும் அவ் விடயங்களும் இவர்க்கிடமும் அன்று இன்பமும் அன்று தற்போத இழப்பே இடமும் இப் போத இழப்பில் தோன்றும் இன்பமே இன்பமும் ஆம்.

(குறிப்பு) தழை உடுத்தல், மூலபலங்களைப் புசித்தல், இராப்பகல் கானிற் சஞ்சரித்தல், பனி மழை வெய்யில் காற்றுகளைப் பொறுத்தல் முதலியன கானவர் வைராக்கியம்; வனிதாதி விடயபோகங்களைத் துறந்திருத்தல் விடா நோயினர் வைராக்கியம்; பகைவர்க்கு அச்சம் இன்றித் தம் உடலை இகழ்ந்து இருளிற்சேறல் முதலியன கள்வர் வைராக்கியம்; இவரது வைராக்கியங்களால் போத இழப்பும் இன்பமும் இன்றாயினபோல், அவரது வைராக்கியத்தாலும் போதவிழப்பும் இன்பமும் இன்றாகலின், அவரது வைராக்கியத்தை இவரது வைராக்கியத்திறகு உவமை கூறினார்.

அகத்துப் பரிபூரண ஞானம் உடையார்க்கு யாது நிலையில் நிற்பினும் யாது விடயங்களைப் புசிப்பினும், அவற்றை அந்

தப் பரிபூரண ஞானத்தால் பார்த்தழித்தலின், அவற்றோடும் தாக்கற்று நிற்பதும், இங்ஙனந் தாக்கற்று நிற்றலால் போத இழப்பும் இப் போத இழப்பால் பேரின்பமும் உண்டாம் ஆகலின், "அந்நிலைக்கே நின்றாலென் எவ்விடயத் தேய்ந்தாலென் றன்னிழப்பே யின்பாந்தலம்" என்றார். அஃது அன்றி, விடய இன்பத்திற்கு ஏதுவாய் உலக வியாபாரங்களைச் செய்வார்போல், இவர் யாது நிலையில் நின்றார் எனினும் அதனுள் தாக்கற்று நின்று சொரூப இன்பத்திற்கு ஏதுவாய தற்போத இழப்பைச் செய்வா ரென்பதும், அவ் விடய இன்பங்களைத் தாம் அற்று அநுபவித்தால் அவற்றை அநுபவிக்குந் தோறும் தாம் அற்ற விடத்து உண்டாம் பேரின்பம் மேலிடுமே அன்றி, அவ்வின்பம் ஓர் பொருளாய்*அவர்க்குத் தோற்றாதென்பதுங் காண்க.

"தன்னிழப்பே யின்பாந்தலம்" என்றமையான், அந் நிலையும் அவ் விடயமும் இடமும் இன்பமும் அனைறென்பது வருவிக்கப்பட்டது.

"வைராக்கியமென்பது" வைராக்கி என்று கடைகுறைந்து நின்றது. (௪)

ஞானம் பெறுவோர்க்கு இல்வாழ்க்கையைத் துறக்க வேண்டாவோ எனின், மேற்கூறுகின்றார்.

**எல்லாச் சமயங்க ளுந்துறிக்கு மில்லறத்தி**
**னில்லாம னீத்தாரென் னீத்தாலென் - புல்லறிவைத்**
**தீரத் தெளிந்து சிவத்தோடும் பற்றற்றா**
**ராகிற் பிறப்பறுக்க லாம்,**

(உரை.) எல்லாச் சமயங்களும் துதிக்கும் இல் அறத்தில் நில்லாமல் நீத்தார் என் நீத்தால் என் —சமயங்களெல்லாம் இது நன்று நன்று புகழ்ந்து கூறுகின்ற இல்வாழ்க்கையில் நில் லாமல் இதனைத் துறந்தார் (இத் துறவிற்குத் தகுமென) மற்றி யாது துறந்தாலும் என்னை, (இத் துறவினாற் பிறப்பறுக்கக் கூடுமோ)?

புல் அறிவைத் தீரத் தெளிந்து சிவத்தோடும் பற்று அற் றார் ஆகில் பிறப்பு அறுக்கல் ஆம்—(தற்போதம் கருவிப்போ தங்கள் ஆய) புல்லறிவை (ஞானகுருவால்) நன்றாய் விசாரித் தறிந்து (அதனைக்கெடுத்து) சிவத்தோடும் இரண்டறக் கல ந்து, (அச் சிவத்தோடுங் கலந்திருக்கின்றோம் என்னும்) வா சனைப்பற்றும் அற்றார் எனின் (அவர்க்கே) பிறப்பறுக்கலாம், (மற்றையர்க்குக் கூடாது).

(குறிப்பு.) சமய நூல்களெல்லாம் இல்லறத்தையே மேம் பாடாகக் கூறுதலின், "எல்லாச் சமயங்களுந் துதிக்கு மில்லற த்தை" என்றார்.

* "அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும்
பிறன்பழிப்ப தில்லாயி னன்று"

என்பதும் அது.

"நீத்தாரென்னீத்தாலென்" என்றது அவ்வில்வாழ்க்கை யைத் துறந்த பின்னரும், உடலொறுத்தல், ஊண்வெறுத்தல், உடை துறத்தல், ஊரொடுக்கந் துறத்தல் முதலியன துறந்து நிற்றலெனக் கொள்க.

* திருக்குறள் - 49.

"புல்லறிவைத் தீரத்தெளிந்து சிவத்தோடும் பற்றறற்றால் இற் பிறப்பறுக்கலாம்" என்றமையால், இங்ஙனந் தெளிந்து பற்றறுதி உடையார் இல்லறந் துறவறங்களிற் நின்றாலும் பிறப்பறுப்பார் என்பதும், இவையில்லார் யாது துறந்தாராயினும் பிறப்பறார் என்பதுங் காண்க. தற்போதம் கருவிப்போதம் இரண்டும் புல்லறிவு ஆகலின், பொதுப்படப் "புல்லறிவு" என்றார். தீரத்தெளிதல் அவற்றை உள்ளபடி அறிந்து கெடுத்தல்.

மனையிழக்கி லோமனது மாறாது மாய்த்த
தனையிழக்கி லோசிவனைச் சார்ந்தங் - கனுபவிக்கை
போகா ததுபோகிற் பூரணமாம் பூரணந்தா
னாகா திருப்பதெவர்க் காம்.

(உரை.) மனை இழக்கிலோ மனது மாறாது மாய்த்த தனை இழக்கிலோ சிவனைச் சார்ந்து அங்கு அநுபவிக்கை போகாது அதுபோகில் பூரணம் ஆம்—(நீர் இங்ஙனம் கூறிய ஆற்றான் இல்வாழ்க்கையைத் துறப்பது துறவன்றோ எனின்), அவ்வில் வாழ்க்கையைத் துறக்கின்(அதன்கண் நின்று அநுபவித்த விடயவாதனை)மனத்தின்கண் மாறாது (எழும் ஆகலின், அது துறவு அன்று; ஆயின், மனத்தை மாய்ப்பதுதுறவோ எனின், மனத்தை) மாய்த்த (தற்போதம் எழும் ஆகலின், அது துறவு அன்று; ஆயின்) தற்போதம் இழப்பதோ (துறவு எனின், அத் தற்போதம் இழக்கில்) சிவத்தை அடைந்து ஆண்டுச் சுகத்தை அநுபவிக்கை போகாது, (ஆகலின், அது துறவு அன்று; ஆயின், சுகப்பே றிழப்பது துறவோ எனின்), அச் சுகப்பேறு

போகில் சிவபூரணந் தானும், (அப்போது இங்ஙனம் சிவபூரணந் தான் ஆனேன் என்னும் வாதனை தோன்றும் ஆகலின், அது துறவு அன்று; ஆயின் இனித் துறவு தான் யாது எனின்),

பூரணம் தான் ஆகாது இருப்பது எவர்க்கு ஆம்—அச் சிவபூரணந் தான் ஆனேன் என்னும் வாதனையு மறந்து நிற்பது துறவு, (இங்ஙனம் சிவபூரணந் தான் ஆகா திருப்பதாய துறவு) யாவர்க் குண்டாம்?

(குறிப்பு.) 'மாய்த்த' என்பதற்கும் 'தனையிழக்கில்' என்பதற்கும் இடையில் தற்போதம் எழும் என்பது வருவிக்கப்பட்டது.

இவை மூன்று திருவெண்பாவானும் மெய்த்துறவாவது இதுவென்று அறிவித்தவாறு காண்க. (௬)

இல்வாழ்க்கையோடு கூடியிருந்தும், இத் துற வெய்தினோரைத் துறவிகளென்று சொல்லப்படுமோ எனின், மேற் கூறுகின்றார்.

மாயாபோ கத்தரசாய் வாழ்ந்தாலு மாமணிபோற்
றோயா தவரே துறந்தோர்கள் - தோய்வாரேற்
சேரும் விதைபோலத் தீர்ந்தவிடத் தேதிரும்பும்
வேரொன் றறுமே வினை.

(உரை.) மாயா போகத்து அரசு ஆய் வாழ்ந்தாலும் மாமணிபோல் தோயாதவரே துறந்தோர்கள்—மாயாபோகத்துக்

கெல்லாம் அரசராகி (அப் போகங்களை அநுபவித்து வாழ்ந் தார் ஆயினும், மகத்தாகிய மாணிக்கமணி (ஒன்றோடும் தோயாது நின்றது போல், அவற்றோடும்) தோயாது நின்றவரே துறந்தோரென்று சொல்லப்படுவார்;

தோய்வாரேல் சேரும் விதைபோலத் தீர்ந்த இடத்தே திரும்பும் வேர் ஒன்று அதுவே வினை—(படிகமணிபோல் யாதொன்றோடாயினும்) தோய்வாரெனின், நிலத்துச்சேரும் வித்துப்போல (உடல்) இறந்த காலையில் (நின்று நீங்கிய பற்றின்கண் மீட்டும்) திரும்பும் ஓர் மூலமும் அப் பற்றுடைமையே, வினையென்பதும் அப் பற்றுடைமையே யாம்.

(குறிப்பு.) மாமணி தன்னை அடுத்த வன்னங்களைக் கவராது, தனது பிரகாசத்தை அவற்றின்மேல் வீசிநின்றாற்போல, யாது விடயங்கள் வந்தடுப்பினும் அதில் தோயாது, தமது ஞானப் பிரகாசத்தை அவற்றின் மேல் வீசி நிற்றலான், "மாமணிபோற்றோயாதவர்" என்றும்; உடம்பிற்குப் புறம்பாய பற்றுக்களை ஒழித்து, அவ்வுடம்பாய் நின்றோரைத் துறந் தோர்கள் என்று சொல்வதுபோல, உயிர்க்குப் புறம்பாய கருவிகள் முப்பத்தாறையும் ஒழித்து அறிவாய் நின்றோரைத் "துறந்தோர்கள்" என்றும்; நிலத்திற் சேரும் வித்துப்போல் உடல் இறந்தகாலை நின்ற பற்றின்கண் மீட்டும் உயிர்வந்து அடைந்து உற்பத்தியாகலின், "சேரும் விதைபோல்" என்றும்; உடல் நீங்குங்காலை உயிர்க்கு எந்த வாசனை யிருந்தது அந்த வாசனையோடும் பிறப்பின்கண் மீள்கலான், "தீர்ந்த விடத்தே திரும்பும் வேர்" என்றும், பற்றுள்ள விடத்து வினையும் உளவாகலின் "அதுவேவினை" என்றுங் கூறினார்.

"அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து"

என்பதும் அது.

"அதுவே" என்பதனைப் பற்றுடைமை எனக்கொள்க.

இத் திருவெண்பாவால் எந் நிலையில் நின்றாலும், அத னுட் பற்றறுதி உடையோர்க்கே வீடென்று அறிவித்தவாறு காண்க. (௪)

விடயங்களை அநுபவிப்பினும் அவற்றுட் கூடாரென்றீர் இதென்னை எனின், மேற்கூறுகின்றார்.

ஒருகுடைக்கீழ் வாழுலகத் தோர்க்குறும்பூ றுண்டோ
வருணிழற்கீழ் வாழ்வா ரறிவு - கருவிகளிற்
போனாலென் சேற்றுத்தாள் போலோ பருந்துநிழல்
போனாற்போற் றோயாமற் போம்.

(உரை.) ஒரு குடைக்கீழ் வாழ் உலகத்தோர் குறும்பு ஊறு உண்டோ அருள் நிழற் கீழ் வாழ்வார் அறிவு கருவிகளில் போனால் என் சேற்றுத்தாள் போலோ—(பூமியெல்லாம்) ஒரு குடைக்கீழ் ஆள்வோன் உலகத்து வாழ்வோர்க்குக் குறும்பூ றால் துன்பம் உண்டாமோ? அதுபோல், (எங்கும்பரிபூரண மாய் நின்ற) திருவடி நிழற்கீழ் (ஆநந்தச் செல்வத்தோடும்) வா ழ்வார் அறிவு விடயங்களிற் சென்றாலும் என்னை? (அவ்வறி விற்கு அவ் விடயங்களான் வரும் மயக்கம் யாதும் இன்று. மாயைக்கீழ் வாழ்வார் அறிவுபோல் அவரறிவு) சேற்றுக்குள் தாள்போல அழுந்துமோ?

* திருக்குறள்—361.

பருந்தினிழல் போலுஞ்போல் தோயாமல்போம்—பருந்தின் நிழல் ஒன்றில் தோய்ந்தும் தோயாது போனாற்போல் (அவரறிவு அவ் விடயங்களில்) தோய்ந்தும் தோயாது நீங்கும் (என்று அறிதி).

(குறிப்பு.) ஒரு குடைக்கீழ் வாழ்வார் மற்று யாதோர் ஊருக்குச் செல்லினும், அவ் வரையனது ஆணையால் குறும்பு செய்வாரும், இவரான் வரும் துன்பமும், அவர்க்கு இன்றாயது போல், திருவடிக்கீழ் வாழ்வார் அறிவு விடயங்களிற் சென்றாலும், அத் திருவடிப் பரிபூரணமாய் நிற்றலின், இவ் விடயங்கள் மயக்குவதும், தான் மயங்குவதும், இவ்வறிவிற்கு இன்றாம் ஆகலின், அங்ஙனம் உவமை கூறினார்.

பருந்தின் நிழல் தோய்ந்தவாறே நில்லாது விரைவில் நீங்குதல்போல், அவ்வறிவு விடயங்களில் தோய்ந்தவாறே மயங்காது விரைவில் நீங்கித் திருவடிக்கீழ் நிற்றலான், இங்ஙனம் உவமை கூறினார். பருந்தினை அவர்க்கும், அதன் நிழலை அவரது அறிவிற்கும் உவமையாகக் கூறியவாறு காண்க.

இத் திருவெண்பாவால் விடயங்கள் அவர் அறிவை மயக்கா என்பதும், அவ் விடயங்களில் அவரறிவு தோயாது என்பதும், அறிவித்தவாறு காண்க. (௫)

நெய்யுண்ட நாவென்ன நீரி னிழலென்ன
மையுண்ட கண்போன் மனைவாழ்வார் - துய்ய
விருளால் விலையேறு மாணிக்க மெல்லாப்
பொருள்போல வல்லாப் பொருள்.

(உரை.) நெய் உண்ட நாய் என்ன நீரில் நிழல் என்ன மை உண்ட கண்போல் மனைவாழ்வார்—நெய்யை உண்டு மீட்டும் கக்காநின்ற நாய்போலும் (தடாக தீரத்தில் நிற்கும் மரம் மேல்முகமாய் நிற்கவும் அத் தடாக) நீரில் கீழ்முகமாய்த்தோன்றும் அம் மரநிழல் போலும், (பிறர்க்கு அழகாய்த் தனக்குக் கரிப்பாயிருக்கும்) மையுண்ட கண்போலும் (அந்த ஞானிகள்) இல் வாழ்க்கையோடுங் கூடியுங் கூடாதிருந்து வாழ்வார்; (இங்ஙனம் வாழ்வாராயின், ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் பேதம் என்னை எனின்),

இருளால் விலை ஏறும் தூய்ய மாணிக்கம் எல்லாப்பொருள்போல அல்லாப்பொருள்—(இருளைத் துறந்து பிரகாசித்தலான்) இருளான் விலையேறும் நிருமலமாயுள்ள மாணிக்கமணி (அவ்விருளான் மறையும்) மற்றெல்லாப் பொருள்களைப்போலும் அல்லாதபொருள், (அதுபோல், இல்வாழ்க்கை இருளால் தாம் மறைந் திருப்பாரைப்போலுமன்றி, அவ் வில்வாழ்க்கை இருளைத் தமது ஞானப்பிரகாசத்தால் நீக்கிநின்று விளங்குவர் ஞானிகள் என்று அறிதி).

(குறிப்பு.) நெய்யை உண்டபின் வயிற்றில் எட்டுணையேனும் தங்காது மீட்டும் கக்கலான், அந் நெய்யினது சாரம் அதன் உடலிற் சாராததுபோல, விடயங்களைத் தாம் அற்று அநுபவித்துச் சிவத்திற்கு ஆக்கலான், அவ் விடய வாசனை இவரைச்சாராது ஆகலின், "நெய்யுண்ட நாயென்ன" என்றும்;

கரையின்கண் மரம் மேல்முகமாய் நிற்கவும் அதனது நிழல் நீரின்கண் கீழ்முகமாய்த் தோற்றுதல்போல், சகலத்தை

யும் கடந்த சிவத்தைத் தாம் பிரியாதிருக்கவும் மனைக்கண் இருத்தல்போல் தோற்றலின், "நீரினிழலென்ன" என்றும்;

பிறர்க் கழகாய்த் தனக்குக் கரிப்பதா யிருக்கும் மையுண்ட கண்போல், பிறர்க்கு மனைக்கண் வாழ்கின்றதுபோல் தோற்ற, தமக்கு இப் பிராரத்தவாசனை என்றைக்கு ஒழியும் என்று வெறுப்பாய்த் தோற்றலின், "மையுண்டகண்போலும்" என்றுங் கூறினார்.

மாணிக்கம் பகலைப்பற்ற இரவில் மிகவும் பிரகாசிப்பது போல், மெய்ஞ்ஞானிகட்குத் துறவைப்பற்ற இல்வாழ்க்கையில் ஞானம் மிகவும் பிரகாசிக்கும் ஆகலின், "இருளால் விலையேறு மாணிக்க மெல்லாப் பொருள்போல வல்லாப்பொருள்" என்று கூறினார். (௯)

ஞானியும் அஞ்ஞானியும் குடும்பத்தோ டிருப்பதனால், அவர்க்குப் பிறப்பு இன்றாயது என்னை, இவர்க்குப் பிறப்பு உண்டாயது என்னை எனின், மேற்கூறுகின்றார்.

தொடைதட்ட லொன்றே துயிற்கும் விழிக்கும்
படிகத் திருண்மணிக்கேன் பற்று - மடிபார்த்துக்
கூடப்பேசுங் கள்ளனைப்போற் கூடாக் குடும்பக்கூத்
தாடிக்கேன் மேற்பிறப்புண் டாம்.

(உரை.) துயிற்கும் விழிக்கும் தொடைதட்டல் ஒன்றே படிகத்து இருள் மணிக்கு ஏன் பற்றும்—துயிலும் பருவம் உடையோன் துயிறற்குத் தொடைதட்டலும், விழிக்கும் பருவம் உடையோன் விழித்தற்குத் தொடைதட்டலும் ஒன்றேயாம்,

(அதுபோல், ஞானி மனைவி முதலிய குடும்பத்தார் வந்து சருவுந்தோறும் அகமுகமாய்த் தற்போத ஒழிவில் நின்று ஆநந்த நித்திரைபண்ணுவான், அஞ்ஞானி தன் மனைவி முதலிய குடும்பத்தார் வந்து சருவுந் தோறும் சகமுகமாய் நின்று மயக்கத்தில் அழுந்துவான்; ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் பேதம் இங்ஙனம் ஆயினும், அந்த ஞானிக்குக் குடும்பத்தில் இருக்கின்றேன் என்னும் வாசனை யாயினும் தோன்றுதோ எனின்), படிகத்தில் (பற்றும் பஞ்சவன்னமாகிய) இருள் மாணிக்க மணிக்கு என் பற்றும்? (அதுபோல, அக் குடும்பந் தானாய் நின்ற அஞ்ஞானிக்கு ஏறும் வாசனை குடும்பத்திற் பற்றின்றி நிற்கும் ஞானிக்கு என் ஏறும்? இங்ஙனங் குடும்பவாசனையும் எறுதிருந்தலான்)

அடியார்த்துக் கூடப்போம் கள்ளனைப்போல் கூடாக் குடும்பக் கூத்தாடிக்கு மேல் பிறப்பு ஏன் உண்டாம்—(பொருள்களைக் களவு கொடுத்தோர்கள்) அவன் அடிபார்த்துச் செல்ல, அப்பொருள் களவுகொண்டோனும் அவரோடுங் கலந்துகொண்டு அவ்வடிபார்த்துக்) கூடச் செல்லும் அந் கள்வனைப்போல், (குடும்பத்தார்க்குச் சுகதுக்கம் வந்தகாலை அவரைப்போல் தானும் அவர்க்குக் காயத்தால் பூரிப்பும் வாட்டமும் உடையவனைப்போற் காட்டி அவரோடுங் கூடிநின்றும் மனத்தான் அவரோடும்) கூடாத குடும்பக் கூத்தாடியாகிய அந்த ஞானிக்கு மறுபிறப்பு ஏன் உண்டாம்?

(குறிப்பு.) தொடைதட்டலால் துயில்வதும் விழிப்பதும் அவர்க்கு இயல்பாயினபோல், குடும்பத்தால் அகமுகப் படுவ

தும் சகமுகப் படுவதும் இவர்க்கு இயல்பாயின என்பதுங் கொள்க.

பார்ப்பான் தோட்டிவேடம் போட்டுநடிப்பினும், தன்னை வேறுகண்டு நின்றாற்போல், இவன் குடும்பிபோல் இருப்பினும், தன்னை வேறுகண்டு நின்றான் ஆகலின், "குடும்பக்கூத் தாடி" என்றார். (எ)

நீர் இங்ஙனம் கூறிய ஆற்றான் ஞானிக்கு இல்லறமும் துறவறமும் சரியோ எனின், மேற்கூறுகின்றார்.

தொடும்போ சுழல்காற்றுத் தூளம்போற் றொட்டு
விடும்போது மங்ஙனே விட்டு - நடந்தாலு
மாகாய நீங்காம லாடியது போலடங்கு
மேகாந்திக் கெங்கிருந்தா லென்.

(உரை.) தொடும்போ சுழல்காற்றுத் தூளம்போல் தொட்டு விடும்போதும் அங்ஙனே விட்டு நடந்தாலும்—(விடயங்களைப்) பற்றும்போதும் சுழல்காற்றுத் தூளத்தைப் பற்றுவது போற் பற்றி, (அவ் விடயங்களை) விடுக்கும்போதும் அச் சுழல் காற்றுத் தூளத்தை விடுப்பதுபோல் விடுத்து, (அங்ஙனம் ஞானியின தறிவு விடயங்களைப் பற்றிவிடுத்துச்) சென்றாலும்,

ஆகாயம் நீங்காமல் ஆடி அடங்கும் அதுபோல் ஏகாந்திக்கு எங்கு இருந்தால் என்—(தூளத்தைப் பற்றும்போதும்) ஆகாயத்தைவிட்டு நீங்காமற் பற்றி, (சுழன்றுவிடும்போதும் அவ்வாகாயத்தை விட்டு நீங்காது) ஆடி, (அத் தூளத்தை விடு

த்து அவ்வாகாயத்துள்) அடங்கும் அச் சுழல்காற்றுப்போல, (விடயங்களைப் பற்றும் போதுந் திருவருளை விட்டு நீங்காது பற்றி, அநுபவிக்கும்போதும் அவ்வருளை நீங்காது அநுபவித்து, அவ் விடயங்களை விடுத்து அவ்வருளில் அடங்கும்) ஏகாந்தியாகிய ஞானிக்கு (இருவகை அறங்களில்) எவ்வறத்திருந்தால் என்னை ? (அவற்கோர் பற்றும் இன்று).

(குறிப்பு.) "ஆகாயநீங்காமலாடி" என்றதனால், தூலத்தைப் பற்றும்போதும் ஆகாயம் நீங்காமற்பற்றி என்பது வருவிக்கப்பட்டது.

"அதுபோலடங்கும்" என்றமையால், ஆடி என்றதன் பின்னர் அடங்குமென்பது வருவிக்கப்பட்டது.

இங்ஙனம் செய்தாலும் அவரிருக்கும் இடம் திருவருள் ஆகலின், "ஏகாந்தி" என்றார். (அ)

இங்ஙனம் குடும்பத்திருந்தும் அதன்கட் சார்பு ஒழிந்து நின்றார் யாவர் எனின், மேற்கூறுகின்றார்.

சுந்தரனார் சேரர்கோன் சோழர் குறுமன்னர்
மைந்தருடன் றம்முடலை வாட்டினர்க - ளந்தமிலாப்
பத்தரொடு ஞான வயிராக் கியர்பலர்க்கு
மொத்ததுசார் போத வொழிவு.

(உரை.) சுந்தரனார் * * * போத ஒழிவு—சுந்தரமூர்த்தி நாயனார், சேரமான் பெருமாள் நாயனார், செங்கட் சோழநாயனார் புகழ்ச்சோழநாயனார் ஆகிய சோழராசாக்கள்

மெய்ப்பொருள்நாயனார் கழற்சிங்கநாயனார் முதலிய குறுமன்னர், மைந்தருடலை வாட்டிய சிறுத்தொண்டநாயனார், தம்முடலை வாட்டிய கண்ணப்பநாயனார் அரிவாட்டாயநாயனார் முதலியோர், நாசமில்லாத் திருநீலகண்டநாயனார், அதிபத்தரோடு மற்றும் உண்டாகிய ஞானிகள்,வைராக்கியராயுள்ள இம் மெய்யடியார் பலருக்கும் குடும்பத்திற் கூடியிருந்தும் அதன்கட் சார்போதம் ஒழிந்து நிற்றல் ஒன்றாய் ஒத்திருந்தது; (ஆகலின், சார்போதம் ஒழிவோர் எவ்வறத்திருப்பினும் ஒழிந்து நிற்பர், ஒழியாதார் எவ்வறத்திருப்பினும் ஒழியார் என்று அறிதி).

"நெய்யுண்டநா" வென்னுந் திருவெண்பா முதல் இவை நான்கு திருவெண்பாவானும், பற்றற்ற ஞானிகட்கு இல்வாழ்க்கையில் ஞானவொளி விளங்கலின், இரவு விளக்குப் போன்று அந்த ஞானம் பயன்பட்டு அதிகமாம் என்பதும், அவர் அக் குடும்பத்தில் பற்றிலராகலின் பிறப்பு உண்டாகாது என்பதும், அவர் எவ்விடத்திருப்பினும் நிலை அயரார் என்பதும், இவ்வாறு குடும்பத்திலிருந்தும் ஞானிகளா யிருந்தோர் இவரிவ ரென்பதும், அறிவித்தவாறு காண்க. (௬)

## ஒன்பதாம் அதிகாரம்.

## வாதனைமாண்டார் தன்மை

## முற்றும்.

---

பத்தாம் அதிகாரம்.

# நிலையியல்பு.

இதனுட்கூறிய உண்மைநிலை தவறினும், மீட்டும் அதனைச் சென்றடைதற்கு உபாயங் கூறினமையான், இவ்வதிகாரத்திற்கு நிலையியல்பென்று பெயராயிற்று.

அறியார் வழிகேட் டறிந்து நடக்க
வறிவா ரறிவென் றறியார் - மறையாக்
குடையிருக்கத் தாமே குதித்துங் கடந்து
மடர்மழைக்கே வாரவர்போல் வார்.

(உரை.) வழி அறியார் கேட்டு அறிந்து நடக்க அறிவார் அறிவு என்று அறியார்—(தாம் கருதிய ஊருக்குச்செல்லும்) வழி அறியார் (அவ் வழி யறிந்தோரைக்) கேட்டறிந்து நடக்கவும் (தம்மால் அறிந்து நடப்பதாய்க் கருதுவ ரன்றி அவ் வழி) அறிவார் (அறிவித்த அறிவு தாம் அவ் வழி அறிந்த) அறிவென்று அறியார், (அதுபோல,தாம் முன்னர் அறியாத கருவிகள் முப்பத்தாறையும் இப்போது அருள் அறிவிக்க, அவற்றை அறிந்து கடந்துசெல்லவும், தம்மால் அவற்றை அறிந்து கடந்துசென்றதாய்க் கருதுவரன்றி, அவ்வருள் அறிவிக்க அறிந்த அறிவு தாம் அக்கருவிகளை அறிந்த அறிவென்று அறியார்);

அடர் மழைக்கு ஏவார் அவர் மறையாக் குடை இருக்கத் தாமே குதித்தும் கடந்தும் போல்வார்—அடர் மழைக்கண் ஓரூர்க்குச் செல்லத் தொடங்கினோர் (மழை தம்மேல் தாக்காதபடி தமக்கு) மறைப்பாகக் குடை கைக்கண் இருக்கவும் (அக் குடையைத் தம்மேற் கொண்டு செல்லாது மழைத்திவலைகட்கு இடையே) தாமே குதித்துங் கடந்தும் (அவ்வடர் மழைக்கண் நனைந்து) செல்கின்றாரைப்போல், (கருவிகளைக் கடந்து வீடடையக் கருதினோர் அக் கருவிகள் தம்முள் தாக்காதபடி அருள் தம்மைவிட்டு நீங்காதிருக்கவும், இவ்வருளை முன்னிட்டுக்கொண்டு செல்லாது, அக் கருவிகளைத் தற்போதத்தால் அறிந்தும் கடந்தும் செல்வதாகக் கருதி அவற்றுள் நுழைவார் இதென்னை)?

(குறிப்பு) முன்னர் அறியாதிருந்த கருவிகளை இப்போது அறியவந்தது திருவருளால் என்று அறியாது, தம்மால் அறிந்ததாகக் கருதினமையால், இங்ஙனம் உவமைகூறினார்.

கருவிகளை நீக்கத் தொடங்குவோர் திருவருளை முன்னிட்டுக்கொண்டு நீக்காது, தற்போதத்தை முன்னிட்டு நீக்கத்தொடங்கின், அக் கருவிகள் நீங்காது பண்டைப்படி மூடும்; ஆகவின், இங்ஙனம் உவமைகூறினார்.

இத் திருவெண்பாவால் கருவிகளை அறிந்து நீங்கிநின்ற அறிவு அருளறிவிக்க அறிந்த அறிவென்று அறியவேண்டும் என்பதும், கருவிகளை நீக்கிச் செல்லும்போது தற்போதத்தைப் பின்னிட்டு அருட்போதத்தை முன்னிட்டு நீக்கிச்செல்ல வேண்டும் என்பதும், அறிவித்தவாறு காண்க. (௧)

கருவிகளை இங்ஙனம் நீக்கித் திருவருளோக்கூடும் நிட்டை கூடாதாயினும், கேவல சகலங்கள் தாக்காது அருளே எவைக்கும் தாரகமென்று அறிந்து நிற்றற்கு உபாயம் யாது எனின், மேற்கூறுகின்றார்.

செத்துப் பிறவாமற் றேடித் திரிகையிலே
செத்துப் பிறந்து திரிவீரே - சுத்த
விருட்கே வலசகலம் போகவெதி ரிட்ட
வருட்போத ராய்த்திரியா மல்.

(உரை.) எதிரிட்ட இருள் கேவல சகலம் போக சுத்த அருட்போதர் ஆய்த் திரியாமல்—(உமது அறிவிற்கு)எதிரிட்ட மயக்க வடிவாகிய கேவலாவத்தையும் (விகற்பவடிவாகிய) சகலாவத்தையும் போக, இவைகள் தாக்காத சுத்தாவத்தையில் நின்று, அருளே எவைக்கும் தாரகம் என்று அறிந்து நாடி அவ்வருட் போதராய்ச் சஞ்சரியாமல்,

செத்துப்பிறவாமல் தேடித் திரிகையிலே செத்துப் பிறந்து திரிவீரே—(இனிமேல்) இறந்து பிறவாமல் (இப்போது பிறப்பிறப்பைக் கடந்து நின்ற வீடு) தேடிப் (பாவனை முதலிய செய்து உள்ளே) சுழலுமிடத்துத் தானே (கேவலாவத்தையில்) இறந்தும் (சகலாவத்தையில்) பிறந்துஞ் சுழல்வீர் (இது என்னை)?

(குறிப்பு.) மயக்கமாய் வந்தடுப்பது கேவலம், விகற்பமாய் வந்தடுப்பது சகலம், மயக்கம் வந்தடுத்தபோது மயக்கவடிவாய் நின்றும், விகற்பம் வந்தடுத்தபோது விகற்ப வடிவாய் நின்றும்

மயக்கம் நீங்கியபோது அம் மயக்கத்தை மயக்கம் என்றறிந்தும், விகற்பத்திற் சென்று மீண்டபோது அவ் விகற்பத்தை விகற்பம் என்றறிந்தும், இங்ஙனம் அவற்றில் மறைந்தும் சுழன்றும் அவற்றை இவை என்று அறிந்துநின்ற அறிவு தான் என்றறிந்து,அவற்றையும் தன்னையும் தனக்கறிவித்தது அருளென அறிந்து, அவ்வருள் தன்னை எப்போதும் விட்டு நீங்காதென்று அறிந்து,அவ்வருளை நாடி நிற்கவே,அம் மயக்க விகற்பமாகிய கேவல சகலங்களில் நீங்கி, அருள்பூரணமாய்ப் பிரவேசிக்கும் ஆகலின், "இருட்கே வலசகலம் போகவெதி ரிட்ட வருட்போத ராய்த்திரியா மல்" என்றார்.

இத் திருவெண்பாவால் ஆன்ம போதஞ் சீவியாது அருட்போதத்தை நாடிநின்றால், அவ்வருள் அறியப்படும் என்று அறிவித்தவாறு காண்க. (உ)

இங்ஙனம் சகல கேவலங்கள் தன்னால் அறியப்படுதலின் அவற்றைத் தன்னால் நீக்கக்கூடாதோ எனின், மேற்கூறுகின்றார்.

சகலமுங் கேவலமுந் தாக்கறுப்பான் றானே
பகல்விளக்கோ டுச்சிப் படிகம் - தகவைத்தூ
டூட்டி யுறக்குவது நாமேநம் முட்கலப்பு
நாட்டமொழி யென்றருளி னான்

(உரை.) தானே சகலமும் கேவலமும் தாக்கு அறுப்பான் பகல் விளக்கோடு உச்சிப் படிகம் தக வைத்து ஊழ் ஊட்டி உறக்குவதும் நாமே—(நமதருளை முன்னிட்டுக்கொ

ண்டு சகல கேவலங்களைத் தன்னுந் தாக்காது அறுப்பதே அன்றி) தானே சகலத்தையும் கேவலத்தையும் தன்னுள் தாக்காது அறுப்பான்? ஆதித்தன் சந்நிதியில் தற்சேட்டை அற்றிருந்த விளக்குப்போலும், உச்சிக்காலத்துப் பஞ்சவன்னங்களையும் கவராதிருந்த படிகம்போலும், (எமது சந்நிதியில் உனது தற்போதம் சீவியா திருக்கவும் எமது சந்நிதியை நீ அங்ஙனம் நீங்கா திருத்தலின், கருவிகள் உன்னைத் தாக்கா திருக்கவும்) தகைமைபெற வைத்து, உனது ஊழ்வினைப்படி உனக்கு ஊட்டி உறக்குவிப்பதும் நமதருளே; (இங்ஙனம் வீட்டின்பங் கொடுப்பதும் நமதருளே என்றறிந்து இவ்விருவகை இடத்தும் உன்போதஞ் சிறிதேனும் சீவியாது நிற்பின் நம்மிருவர்க்கும் தாமே இரண்டற்ற ஐக்கியங்கூடும்; இஃதன்றி),

நம்முள் கலப்பு நாட்டம் ஒழி என்று அருளினன்—(யாம் உன்னை வந்து கூடுதலும் நீ நம்மை வந்தடைதலும ஆகிய கருத்து உன்பால் எழின் ஐக்கியங்கூடாது ஆகலின், நாமிருவரும் வந்து) நம்முட் கலப்பதாகிய நாட்டத்தை நீ ஒழித்து என்று (திருஞானசம்பந்த மூர்த்தி நாயனர் எனக்கு) அருளிச்செய்தார், (இவ்வாறே நீயும் அறிதி எனின், அவரது திருவடிக்கண் ஐக்கியம் உனக்கும் கிடைக்கும்).

(குறிப்பு.) எதிரிட்டுத் தடுத்த போதம் எதிரிடாது அசைவற நின்று தேய்ந்தபோது ஆன்மாவிற்கும் சிவத்திற்கும் ஐக்கியம் தானே கூடும் ஆகலின், "நம்முட்கலப்பு நாட்டமொழியென்றருளினன்" என்றார்.

தமதாசாரியர் தமக் கருளிச்செய்த முறைமை ஈதென்று மாணாக்கனுக்கு அறிவித்தவாறு காண்க.

இத் திருவெண்பாவால் சகல கேவலங்களை அருட்போதத்தாலன்றி ஆன்மபோதத்தால் நீக்கப்படாதென்று அறிவித்தவாறு காண்க. (௫)

இங்ஙனம் கருதிநின்ற திருவருளைக் கூடுதல் அரிதாயினும் இன்னும் ஓருபாயம் மேற்கூறுகின்றார்.

சாக்கிரத்திற் போதச் சலனையெல்லாஞ் சொப்பனம்
லாக்கு மருட்போத ராகுவோர் • நீக்கும் [போ
பரையோகர் சுத்தர் பரமசுகா நந்தர்
துரியகதி யின்புகடந் தோர்.

(உரை.) சாக்கிரத்தில் போதச்சலனை எல்லாம் சொப்பனம்போல் ஆக்கும் அருட்போதர் ஆகுவோர்—சாக்கிராவத்தையில் தோன்றும் போதச் சேட்டையும் (மற்றும் உண்டாகிய தேகாதி பிரபஞ்சங்கள்)எல்லாமும்(இவை யாவை என்ன எதிரிட்டுப்பார்த்து, அப் போதச்சேட்டை விடயங்களைச் சார்ந்த இடத்துத் தோன்றிய விடயபோதம் என்றும்,தேகாதி பிரபஞ்சங்க ளெல்லாவற்றையும் மாயையில் தோன்றி அழிவன வென்றும், இவற்றிற்கெல்லாம் தாரகமாய் உட்புறம்பாய்ப் பரிபூரணமாய் நிற்பது அருளொன்றும் கண்டு, பின்னர் அப் பரிபூரணமாகிய அருளே மெய்யென்று அதனை நாடிநின்ற, இவ் விடய போதத்தையும் இப் பிரபஞ்சங்களையும்) சொப்பனம்போலப் பொய்யாக்கும் அவர் இவற்றை உள்ளபடி நீங்கி) அவ்வருட்போதரே ஆகுவர்; (அஃதன்றி அவரே),

நீக்கும் பரையோகர் சுத்தர் பரமசுகாநந்தர் துரியகதி இன்புகடந்தோர்—(அவ்வருளையும்) கடந்து செல்லும் பரையோகரும் (தற்சுதந்திரமற்ற) பரிசுத்தரும் அப் பரமசுகமாகிய ஆநந்தத்தை யுடையரும் நின்மல துரியத்தில் தோன்றும் பரமசுகாநந்தாதீதரும் ஆவர்.

(குறிப்பு.) இங்ஙனம் விடயபோகத்தையும் தேகாதி பிரபஞ்சங்களையும் பொய்யென்றும், தமக் கன்னியமென்றும் கண்டு, இவற்றிற் குள்ளும் புறம்பும் பரிபூரணமாகிய திருவருளையே நாடிநிற்போர் இப் பொய்களை நீங்கி அம் மெய்யாகிய திருவருளை வடிவாவர் ஆகலின், "சொப்பனம்போ லாக்கு மருட் போத ராகுவோர்" என்றும், அங்ஙனம் அருள்வடிவாய காலத்து அவ்வருளையுங் கடந்த பரையோக முதலியன அவர்க்கு எளிதில் உண்டாம் ஆகலின், அவரையே பரையோக முதலியன உடையரென்றுங் கூறினார்.

அவர் என்னுஞ் சுட்டுப்பெயர் எஞ்சிநின்றது.

இத் திருவெண்பாவால் கருவிகளை உள்ளபடி கண்டறியில் திருவருள்நிலை காண வருமென்றும், அங்ஙனம் வரின் பரையோக முதலிய பேறுளவாமென்றும், அறிவித்தவாறு காண்க. (௮)

இங்ஙனம் விடயபோகத்தையும் தேகாதி பிரபஞ்சங்களையும் நீக்கி அருளைப் பெறுவதே அமையாதோ, அதற்குமேல் நீர் பரையோக முதலியன கூறியது என்னை எனின், மேற் கூறுகின்றார்.

தத்துவம்போய்க் கேவலம்போய்த் தான்போயருள்கழ
சுத்தபரை யாய்த்தன் சுதந்திரம்போய்ச்-சத்தி [ன்
யொழிவிலே போதம்போ யொன்றாகா வொன்றி
னழிவிலே இன்பவதீ தம்.

(உரை.) தத்துவம் போய்க் கேவலம் போய்த் தான் போய் அருள் கழன்று சுத்த பரை ஆய்த் தன் சுதந்திரம் போய்ச் சத்தி ஒழிவிலே போதம் போய்—(விளைப்பாய் நின்ற) தத்துவம் முப்பத்தாறையும் நீங்கி (அவற்றின் மேல் மறப்பாய் நின்ற) கேவலாவத்தையையும் நீங்கி (அத் தத்துவங்களையும் கேவலாவத்தையையும் இவை என்றறிந்து நீங்கி நின்ற அறிவு தான் எனத் தன்னை அறிந்து அவைகளை அறிந்து நீங்கவும் தன்னை அறியவும் வந்தது திருவருள் அறிவிக்க அறியவந்த தென்று அறிந்து) தானறிந்தேன் என்பது நீங்கி, (தனக்கறிவித்த அவ்வருளைத் தரிசித்து) அவ்வருளையும் கழன்று, நின்மலமாய் உள்ள பரையே தானாகி,(அப் பரையை அறிந்த இடத்து இது அது என்று தான் காண்பானும் காட்சியுமாய் அறிந்து வந்த) தற்சுதந்திர அறிவு நீங்கி, அப் பராசத்தி நீக்கத்திலே தற்போதம் ஒழிந்து (ஆநந்தாநுபவம் பெற்று, அதன்பின்னர்),

ஒன்று ஆகா ஒன்றின் அழிவிலே இன்ப அதீதம்—(இங்ஙனம் கூறியவற்றுள்) ஒன்றும் தானாகாத ஒன்றாயிருந்த சிவத்தில் தான் இரண்டறக் கலந்து போதவாசனையும் இறந்த இடத்தில் சுகாதீதம், (இச் சுகாதீதமே உண்மைநிலை என்று அறிதி).

(குறிப்பு.) பரையோகத்தில் ஆன்மாவினது தற்சுதந்திர அறிவுகெடும் ஆகலின், "சுதந்திரம்போய்" என்றும், அப் பராசத்தி நீக்கத்தில் போதம் இறந்து ஆநந்தாநுபவம் உண்டாம் ஆகலின், "சத்தியொழிவிலே பொதம்போய்" என்றும், ஆன்மா சிவத்தோடு இரண்டறக் கலந்தவிடத்துப் போதவாசனை ஒழிதலானும், இவ்விடஞ் சுகாதீதம் ஆகலானும், "ஏன்றுசகா வொன்றி னழிவிலே யின்பவதீதம்" என்றுங் கூறினார்.

இன்பாதீதம் என்றமையால் இன்பப்பேறு உருவிக்கப் பட்டது.

தத்துவ முதலியன போக்கப்போவன ஆகலின், போ யென்பது நீங்கி என்று கூறப்பட்டது.

இத் திருவெண்பாவால் உண்மைநிலை ஈதென்று அறிவித்தவாறு காண்க. (௫)

இவ்வாநந்தப்பேறு பெறுமாறு எங்ஙனம் எனின், மேற் கூறுகின்றார்.

போதப் புரவி புருட னதிலைந்து
வீதிப் பவனி விறிசாகும் - போதப்
புரவியரு ளேறிறப் போக்குவர வற்ற
பரமசுக மாங்காணப் பா.

(உரை.) போதம் புருடன் புரவி அதில் ஐந்து வீதி விறிச பவனி ஆகும்—போதமாகிய அரையன் புருடனாகிய புரவி மேல் ஏறிக்கொண்டு பஞ்சேந்திரிய வீதிகளில் விடயங்களாகிய காட்சிகளைக் கண்டுகொண்டு சுழல்விறிசுபோலப் பவனி செல்வதாகும்;

போதப் புரவி அருள் ஏறினல் போக்கு வரவு அற்ற பரசுகம் ஆம் அப்பா காண்—போதமாகிய புரவிமேல் அருளாகிய அரையன் ஏறினல் (அப்போது) போக்குவரவு அற்றுநின்ற மௌனனந்தம் உண்டாம், இதனை மாணக்கனே நீ அறிதி.

(குறிப்பு.) போதம் புருடனேடுங் கூடிப் பஞ்சேந்திரிய வழிச்சென்று விடயங்களைப்பற்றும், அங்ஙனம் பற்ருது அவற்றை நீங்கி அப் போதத்தை உள்ளே அடக்கித் திருவருளோடவே இவ்வருள் அப் போதத்தைக் கீழ்ப்படுத்தித் தான்மேலீடாய்ப் பிரகாசிக்கும், அப்போது ஆநந்தோதயம் உண்டாம்; ஆகலின், அங்ஙனம் உவமை கூறினர்.

போத விடயாநந்தம் பெறுதற்கு ஏதுவாய் நின்றது புருடன் ஆகலின், இப் புருடனைப் புரவி யாக்கினர்.

சொரூபாநந்தம் பெறுதற்கு ஏதுவாய அருளைப் போத முன்னிட்டுக்கொண்டு சேறலின், இப் போதத்தைப் புரவி யாக்கினர்.

இந்த நாட்டம் வைத்தால் அந்த நாட்டம் மறந்துசுழலும்; அந்த நாட்டம் வைத்தால் இந்த நாட்டம் மறந்து அசைவற்றிருப்பதுங்காண்க.

ஒருவன் அட்டாவதானம் செய்தல் முதலியவும் இப் புருடனதுவேகமெனக் கொள்க. இதனை

*"ஐவகையா லுறுபயன்க ளுகரவருங் கால
மதுபுருட தத்துவமென் றறைந்திடுவ ரறிந்தோர்"

என்னும் சிவப்பிரகாசத்தாலும் மற்றும் வருவனவற்றனுங் காண்க. (௬)

* சிவப்பிரகாசம்-29.

அறிவும் ஆநந்தமும் பெறுதற்கு உபாயங் கூறினீர், இனித் துறவினது இலக்கணம் யாது எனின், மேற்கூறுகின்றார்.

அறிந்தழுந்தி யாராய்ந் தகம்புறமாய்த் தேடி
மறந்தவனாய்த் தானாய் மயங்கிப் - பிறிந்து
சுகதுக்க மாய்ப்பதறிச் சுட்டுத் தொழில்போய்ப்
பகைகெட் டதுதுறவப் பா.

(உரை.) அகம் புறம் ஆய் ஆராய்ந்து தேடி அறிந்து அழுந்தி மறந்தவன் ஆய்த் தான் ஆய் மயங்கிப் பிறிந்து சுகதுக்கம் ஆய்ப் பதறி—(தற்போதத்தால் விடயங்கள் எவ் விதத்தால் உண்டாம் என்று) உள்ளும் புறம்புமாய் விசாரித்துத் தேடியும், (அவ் விடயங்கள் கிடைத்தகாலை அவற்றை ஞானேந்திரியங்களான்) அறிந்து (கன்மேந்திரியங்களாற் பற்றி அந்தக் கரணங்களால் அவற்றுள்) அழுந்தியும், (அவ் விடயங்களைக் கேவலத்தில்) மறந்தவனாயும், (சகலத்தில் அவ் விடயங்களே) தானாய் மயங்கியும், (விடயங்கள் தன்னைப் பிரியாது நின்றவிடத்து அவற்றில்) சுகரூபியாய்ச் (சென்றுபற்றிப்) பதறியும், (அவை தன்னைப் பிரிந்து நீங்கியவிடத்துத்) துக்கியாய் நின்று பதறியும்,

சுட்டுத் தொழில் போய்ப் பகை கெட்டது துறவு அப்பா — இங்ஙனம் மயங்கி நின்ற சுட்டுப் போதமுங் கெட்டு அவ் விடயங்களாகிய உயிர்ப்பகையுங் கெட்டதுவே துறவு (என்று அறிதி) மாணாக்கனே.

(குறிப்பு.) "அறிந்தழுந்தி யென்றதனுல்" பற்றி என்பது இடையே வருவிக்கப்பட்டது.

துறவு கூறினமையால் எதிராக விடயம் வருவிக்கப்பட்டது.

அகத்துத் தேடியென்றது, அவ் விடயங் கிடைத்தற்கு உபாயம் நாடுதல்.

சுகங்கூறினமையால் விடயம் பிரியாது நின்றவிடத்து என்பது வருவிக்கப்பட்டது.

விடயம் பிரியாதபோது அதன்மேல் விரைந்து சேறலானும், பிரிந்தபோது உளம் பதைத்தலானும், இருமைக்கும் பொதுவாய்ப் "பதறி" என்றார்.

மயங்கிச் சுழல்வதனால் போதத்தைத் தொழில் என்றார்.

இம்மை மறுமைகளினும் உயிர்க்குத் துன்பந்தருவது ஆகலின், அவ் விடயங்களைப் "பகை" என்றார். (எ)

அறிவும் துறவும் இவை என்றறிவித்தீர், இனிச் சிவ யோகமாவது யாது எனின், மேற்கூறுகின்றார்.

நடந்ததெல்லா நீயே நடப்பழிய நின்ற
விடஞ்சிவநீ யென்றிருக்க வெண்ணி - லடங்கின்
மயக்கி மலமழுத்து மாயையிது வாரா
வயர்ப்பறுளா லாஞ்சிவயோ கம்.

(உரை.) நடந்தது எல்லாம் நீயே நடப்பு அழிய நின்ற இடம் நீ சிவம் என்று இருக்க எண்ணில் அடங்கின் மலம் மயக்கி அழுத்தும்—(கருவிகளை இது இது என்று அறிந்து) சென்றதெல்லாம் உன் தற்போதமேயாம், (ஆகலின் இது

சிவயோகம் அன்று, அக் கருவிகளை அறிந்து) சென்றது ஒழிய நின்ற இடத்தை நீ சிவயோகம் என்று இருக்கக் கருதினை எனின், (அக் கருவிகள்) அடங்கின் (உன்னை) ஆணவமலம் மயக்கித் தன்வயப்படுத்தும்; (ஆகலின், அக் கருவிகள் ஒழிய நின்ற இடம் சிவயோகம் அன்று, ஆயின் சிவயோகம் யாதினால் உண்டாம் எனின்),

மாயை அயர்ப்பு இது வாரா அருளால் சிவயோகம் ஆம் —(உன்னால் அறியப்படும் கருவிகள் எல்லாம்) மாயை, (அக் கருவிகள் ஒழிய நின்றவிடத்து) மறப்பாய் நின்றது ஆணவமலம், ஆகலின், (அம் மாயையும்) இவ்வாணவமும் வந்தடாத (சுத்தத்தின்கண் தோன்றும்) திருவருளால் சிவயோகம் உண்டாம் (என்றறிதி). (அ)

இச் சகல கேவலங்கள் அற்றபோது தற்போதம் அறுதோ, இவற்றின் மேலும் போதம் உளதென்று நீர் கூறியது எனனை எனின், மேற்கூறுகின்றார்.

அருளும் பரையு மருக்கன் மதி போன்ற
விரவுபக லற்ற விடத்தே - பரமநிலை
சத்திக் கழற்றியிலே சச்சிதா நந்தமய
சுத்தநிலை நீயற்ற து.

(உரை.) அருக்கன் மதிபோன்ற அருளும் பரையும் பகல் இரவு அற்ற இடத்தே பரமநிலை—அருக்கனும் மதியும்போன்ற அருளும் பரையும் ஆகிய பகலும் இரவும் அற்றவிடத்தே பரமாகந்தாநுபவநிலை ஆம்;

சத்திக் கழற்றியிலே சச்சிதாநந்தமய சுத்தநிலை நீ அற்றது—(அப் பரமாநந்தாநுபவமாகிய அநுபவ) சத்தி நீக்கத்தில் சச்சிதாநந்த வடிவாயிருந்த சிவமாகிய சுத்தநிலை(இச் சுத்தநிலையே) உன் தற்போதம் (சிறிதுந் தோன்றாது) அற்றநிலை (என்றறிதி).

(குறிப்பு.) அருள் ஆன்மாவிற்குப் புலப்படத் தோற்றலானும், அப் பரையினுந் தடிப்பாகலானும், அவ்வருளை "அருக்க" னென்றும், அவ்வருளைக் கடந்தது பரையாகலானும், இப் பரை ஆன்மாவிற்குத் தோற்றாமல் தோற்றலானும் இப் பரையை "மதி"யென்றும், பகலிரவு கண்ணிற்குத் தோற்றுதல் போல் அருளும் பரையும் ஆன்மாவிற்கு அநுபவமாய்த் தோற்றலான், "பகலிர" வென்றுங் கூறினார்.

பிரகாசம் உஷ்ணம் சோபை என்னும் இம் மூன்று குணத்தையும் உடைய சூரியனைப்போல் அருள் பரை ஆநந்தம் என்னும் இம் மூன்று இலக்கணத்தையும் உடையது சிவம் ஆகலின், "சச்சிதாநந்தமய சுத்தநிலை" என்றார்.

ஆநந்தம் அளவும் ஆன்மாவால் அநுபவங் கூறப்படும்; அவ்வாநந்தநிதத்தில் அநுபவங் கூறப்படாது: ஆகலின், "சுத்தநிலை நீயற்றது" என்றார். (௯)

இனிப் பஞ்சமலங்களும் அறுநெறி எங்ஙனம் எனின், மேற்கூறுகின்றார்.

௬௭ மருந்தல் போலத் தமைச்சிவனுக் கூனைக்கித்
தாமருளா லுண்டுபரை தாமாகித் - தாமழிய

வஞ்செழுத்தா லர்ச்சித் தடியார்க் கடிமைசெயிற்
பஞ்சமலக் கொத்தறுமப் பா.

(உரை.) தாம் அருந்தல்போலத் தமைச்சிவனுக்கு ஊண் ஆக்கித் தாம் அருளால் உண்டு பரை தாம் ஆகித் தாம் அழிய —(தமக்கு ஊணாயிருந்த அன்னாதிகளைத்)தாம் அருந்தல்போல (தற்போதஞ் சீவியாது நின்று) தம்மைச் சிவனுக்கு ஊணாய் உண்ணக்கொடுத்து, (பஞ்ச விடயங்கள் வந்தடுப்பினும் அவற்றைத் தற்போதத்தால் சென்று பற்றி அவற்றில் அழுந்தாமல் அருளை முன்னிட்டுக்கொண்டு அவ்வருள் தர வாங்கி உண்கின்றோம் என்னும் ஞாபகம் மறவாமல்) அவ்வருளால் வாங்கி உண்டு, (இங்ஙனம் அவ்வருளால் அறிகின்றோம் என்னும் போதமுஞ் சுருங்கி) பரையே தாமாகி(தற்சுதந்திர அறிவுகெட்டுப் பின்னர் ஆநந்தாநுபவத்தில்) தாமழியவே,

பஞ்சமலக் கொத்து அறும் அஞ்செழுத்தால் அர்ச்சித்து அடியார்க்கு அடிமைசெயின் அப்பா—ஆணவம் மாயை காமியம் திரோதை மாமாயை என்னும் பஞ்சமலக் கூட்டங்களும் அறும், (அங்ஙனம் நிட்டைகூடி இப் பஞ்சமலங்களை நீக்கக் கூடாதாயின்) சிவம் முன்னாக விதிப்படி உச்சரிப்பதாய பஞ்சாக்கரத்தால் சிவன் திருவடியை அருச்சனைபண்ணி, (அத் திருவடியை அடைந்த) மெய்யடியார்க்கு அடிமைபூண்டு பணிவிடை செய்யின், (முற்கூறிய அநுபவங்கள் எல்லாங் கைகூடும், பஞ்சமலங்களும் அறும் என்று) மாணாக்கனை (நீ அறிதி.)

(குறிப்பு.) தனதுடல் அருந்தும் ஊண் அவ்வுடலுக்கு உண்ணக்கொடுத்து நிற்கவே, அதனை அவ்வுடல் சிறுகச் சிறுக உண்டு தான் பருத்தல்போல, தற்சேட்டை அற்றுத் தம்மைச் சிவனுக்கு ஊணாகக் கொடுத்து நிற்கவே, அச் சிவம் தம்மைச் சிறுகச்சிறுக உண்டு தான் பூரணமாய் விளங்கும். ஆகலின், "தாமருந்தல்போலத் தமைச் சிவனுக் கூணாக்கி" என்றார்.

விடயங்கள் வந் தடுக்கும்போதும் தற்போதத்தைப் பின்னிட்டு அருட்போதத்தை முன்னிட்டு அவ்வருளால் அவ்விடயங்களை அறிந்துபற்றி, அவற்றை அனுபவிக்கும்போதும் அவ்வருளை முன்னிட்டு நின்று அநுபவித்து, அவற்றால் ஆன்ம சந்தோஷம் பிறக்கும்போதும் இச் சந்தோஷம் அவ்வருளால் உண்டாயதென்று அவ்வருளுக் காக்கி நிற்கவேண்டும்; ஆகலின், "தாமருளாலுண்டு" என்றார்.

சகல கேவலங்களை நீக்கிச் சுத்தாவத்தையில் நின்று தம்மைச் சிவத்திற்கு ஊணாக்கி நிற்றலான், முன்னர் இதமாய்த் தோன்றிய விடயபோகமும் அகிதமாய்த் தோன்றும் ஆகலின், அதனை ருசிப்பித்து நின்ற திரோதைசத்தி நீங்கும். அத் திரோதைசத்தி நீங்கவே, இருவினைப் பயன்களும் சமமாய்த் தோன்றும். இவை சமமாய்த் தோன்றவே, இவ்விருவினைப் பயன்கட்கீடாய்ச் சிவன் சுத்தமாயையில் நின்று செய்யும் பஞ்சகிருத்தியங்களும், அச் சுத்தமாயையும் நீங்கும். அவன் அவள் அது என்னும் மூன்னிலைச் சுட்டொழிந்து, அவ்விருவினைப் பயன்களைத் தருவது அருளென் றறிந்து அவ்விருளின் மறைந்து

நின்று,அவ்விருவினைப் பயன்களையும் அவ்வருளால் தாமுண்ணுதலால் கன்மமல நீங்கும். இங்ஙனம் நீங்கவே பரையோகம் உண்டாம். இப் பரையோகத்தால் இவ்வுடம்பும் தாம் அன்றென்று நீங்கவரும். இவ்வுடம்பு நீங்கவே மாயை நீங்கும், ஆநந்தாநுபவத்தில் தற்போதங் கெடும். இத் தற்போதங் கெடவே இப் போதத்திற்குத் தான் அல்லாத உடம்பைத் தானென்றும், தனதல்லாத போகத்தைத் தனதென்றும் மாறுபாடாய்க் கருதப்பண்ணி நின்ற ஆணவங் கெடும். ஆகலின், "தாமழியப் பஞ்சமலக்கொத்தறும்" என்றார்.

இங்ஙனங் கூறியவாறு நிட்டைகளால் பஞ்சமலங்களையும் நீக்கக்கூடாதவர் நகாரமாகிய திரோதையையும் மகாரமாகிய மலத்தையும் பின்னிட்டு, சிகாரமாகிய சிவத்தையும் வகாரமாகிய அருளையும் முன்னிட்டு, யகாரமாகிய தான் நகார மகாரமாகிய பாசத்திற்கும், சிகார வகாரமாகிய பதிக்கும் நடுநின்று, வகாரமாகிய அருளைக் கூடிச் சிகாரமாகிய சிவாநுபவத்தில் வகாரமாகிய அருள் கழலாது, யகாரமாகிய தற்போதங் கழல, இங்ஙனம் அவ்வருளை நாவாகச் செபியாமற் செபித்து, சிகாரமாகிய சிவத்தில் அதீதப்படுவது பஞ்சாக்கர தரிசனம். இங்ஙனம் பஞ்சாக்கர தரிசனமும் பண்ணி மெய்யடியார்க்கும் பணிவிடை செய்யின் முற்கூறிய நிட்டைகளும் கைகூடிப் பஞ்சமலங்களும் அறும் ஆகலின், "அஞ்செழுத்தாலர்ச்சித் தடியார்க் கடிமைசெய்யின், பஞ்சமலக் கொத்தறும்" என்றார். இங்ஙனம் பஞ்சாக்கர தரிசனம் பண்ணுதல் சிவனுக் கருச்சனையாகலின், "அஞ்செழுத்தா லர்ச்சித்து" என்றார்.()

தேவரீர் அருளிச்செய்த சுத்தத்தை அடியேன் பெறுவது ந்த நாள் என்று இரங்கிய மாணாக்கனை நோக்கி, மேல் அரு ரிச் செய்கின்றார்.

கருவியுதிப் பிற்சகல கேவலத்தைக் காட்டி
அருளுதிப்பு மங்கதுபோ லாக்கி - யிரவுபகற்
றக்காத சுத்தத் தலத்துநாம் வைக்கநீ
ஆக்கா தெமக்குப் பரம்.

(உரை.) கருவி உதிப்பில் சகல கேவலத்தைக் காட்டி அருள் உதிப்பும் அங்கு அதுபோல் ஆக்கி—கருவிகள் முப்பத் தாறும் கூடிநின்ற சாக்கிரத்தில் உனதறிவின் விகற்பமாய் வந் தடுப்பது சகலமென்றும், மயக்கமாய் வந்தடுப்பது கேவலமெ ன்றும் உனக்கறிவித்து, (அச் சகல கேவலங்களை நீங்கப்பண்ணி உன்னை உள்ளபடி அறிவித்து, இங்ஙனம் உன்னை அறிவித்த பின்னர்த்) தோன்றும் திருவருள் தரிசனத்திலும் (இவ் வரு ளைச் சகலமென்றும் இது கழன்றுதோன்றும் பரையோகத் தைக் கேவல மென்றும்) முற்கூறிய சகலகேவலங்களைப்போல் (உனக் கநுபவமாய்த்) தரிசிப்பித்துப் (பின்னர்),

பகல் [illegible]ரவு தாக்காத சுத்தத் தலத்து உனை நாம் வைக்க எமக்குப் பரம் ஆக்காது நீ—(அச் சகல கேவலங்களும் இச் சகல கேவலங்களும் ஆகிய) பகலிரவுகளும் தாக்காதுநின்ற (சுகாதீதமாகிய) சுத்தநிலையிடத்து உன்னை நாம் கொடுபோ ன்று வைக்க எமக்குப் பரம், (ஈண்டுக் கூறிய இருவகைச் சகல கேவலங்களினும் உன் தற்போதத்தை முன்னிட்டு) உண்டா

ாது(எம்மை முன்னிட்டுக்கொண்டு செல்வது உனக்குப்பரம். இங்ஙனஞ் சென்றியேல் உனக்கு அச் சுத்தநிலை வருமென்று) ீ (அறிதி.)

(குறிப்பு.) ஆன்மபோத எதிரீட்டினும் எதிரீடற்றவிடத்தும் தோன்றும் சகல கேவலங்களைப்போல், இவை நீங்கித் தன்னை அறிந்த இடத்தில் தோன்றும் திருவருளையும் பரையையும் எதிரீடாயும் எதிரீடற்றும் தரிசித்தலின், "அந்தபோலாக்கி" என்றார்.

"எமக்குப்பரம்" என்றமையால், உனக்குப் பரம் என்றது வருவிக்கப்பட்டது.

ஞானசாரியர் மாணாக்கனுக்கு உபதேசிக்குங்கால் தம்மைச் சிவமாகக் கூறவேண்டும் ஆகலின், "எமக்குப் பரம்" என்றார். (௪௧)

கருப்ப நிலத்தைக் கறண்டுதிரி வார்க்குச்
சருக்கரையே வாயிற் சனித்தாங் - கிருத்திவிடு
மெந்தலைமை யென்பிரா னினர்வாக் கென்னவே
தந்தலைமை மாண்ட தலம்.

(உரை.) கருப்ப நிலத்தைக் கறண்டு திரிவார்க்குச் சருக்கரையே வாயில் சனித்தாங்கு இருத்திவிடும்— (சுவையை விரும்பிக் கரும்பறத் தொழிந்த) அக் கருப்ப நிலத்தை (தமது பற்கொடு) கறண்டுகொண்டு திரிவோர்க்கு (தெய்வ கதியாய்) சருக்கரை தானேவந்து அவரதுவாயில் தோன்றிய முறைபோல,

வீட்டின்பத்தை விரும்பித் தற்போதத்தைக் கொண்டு சரியாதிகளைச் செய்வோர் இந் நூலிற் கூறிய முறையே சரியாதிகளை விட்டு நீங்கி, தற்போதத்தைப் பின்னிட்டு அருட்போதத்தை முன்னிட்டுச் சென்றார் எனின், இவ்வருட்போதமே அவரை அவ் வீட்டின்பத்தின்கண்) அழுத்திவிடும்; (ஆகலின்),

ஈனர்வாக்கு என்னவே எம் தலைமை என்பீரால் தந்தலைமை மாண்ட தலம்—(ஓர் காரியம் செய்யுமிடத்து எமது வலியினாற் செய்வோமென்று கூறும்) அறிவீனர் வாக்குப்போல (அவ் வீட்டின்பத்தை) எமது போதவலியாற் சென்று அடைவோமென்று கருதிச் சொல்வீராகுல் (அங்ஙனம் நீர் கருதிச் சொல்வதே) உமது ஞான மேம்பாடற்ற இடம் (என்று அறிந்து நீரும் இந் நூல் நெறிமுறையே செய்வீர்).

(குறிப்பு.) சரியாதிகளை விட்டு இந் நூல்நெறிச் சென்றால் போதம் ஒழியும், இப் போதம் ஒழியில் ஆநந்தந் தானே தோன்றும், ஆகலின், கருப்ப நிலத்தைக் கறண்டு திரிவார்க்குச் சருக்கரையே வாயிற் சனித்தாங்கு" என்று உவமை கூறினார்.

உந்தலைமை என்பது தந்தலைமை என்று முன்னிலைத் தன்மை தழீஇ வந்தது.

பன்னூல்களையும் விட்டு இந் நூல் நெறிச்சென்றார்க்கே இன்பங் கிடைக்கும் என்பதும் ஆம்.

"போதப்புரவி" என்னும் திருவெண்பாமுதல் இவையேழுதிருவெண்பாவானும் ஆநந்த அறிவுநிலையும், துறவு நிலை

யும், சிவயோகநிலையும், சுத்தநிலையும், பஞ்சமலம் அறுக்கும் பஞ்சாக்கரநிலையும், முத்திநிலையும், இந் நூல்நெறிச் சென்றார்க்கே வீட்டின்பங் கிடைக்குமென்னும் முடிபு நிலையும் அறிவித்தவாறு காண்க. (கஉ)

கண்மணியி னுசாய நீமுக் கலந்தாற்போ [லெண்ணேவ
லுண்மையைநீ யுண்டெடன் றெனையுணர்த்தித் தண்
பார்த்திருந்த சித்திரம்போற் பார்த்தானை நாம்பரவித்
தோத்திரஞ்செய் யாப்பிறவாச் சொல்.

இத் திருவெண்பாவின் அருத்தம் இந் நூலினை நன்குணரும் நெறியினது நல்லறிவாளர்க்குத் தானே விளங்கும் எனக் கொள்க. (கங)

பத்தாம் அதிகாரம்.

நிலை யியல்பு

முற்றும்.

---

அதிகாரம் பத்திற்கு வெண்பா-253.

ஒழிவிலொடுக்கம்

மூலமும் உரையும்

முற்றிற்று.



## உரை ஆசிரியர் கூற்று.

சமரபுரி யாறுமுகன் ருணேயென் னுள்ளத்
தமரவிருந் திந்நூற் கருத்தம் - திமிரமறக்
காட்டினான் பொல்லாக் கடையேனைச் சீர்வீட்டி
னாட்டினான் பேரருளி னால்.

கைகயிலுறை பாலின்பங் காட்டுவிர லேகசிவ
மெய்யருளாம் பாதமிடு மென்பதுகை - தூய
இருட்கே வலசகல மெந்தைசம் பந்தன்
றிருக்கோலங் கொண்ட சிறப்பு.

அரவுவிடந் தீர்க்கு மமணருடன் மாய்க்கும்
திரகதியி லெண்ணிலரைச் சேர்க்கும்-புரமயிலை
என்பைப்பெண் ணாக்கிவிடு மேழையே னேழ்பிறவித்
துன்பத்தை நீக்குவான் சொல்.

## அதிகாரங்களின் பெயர் முறை செய்யுட்டொகை,

சீராகு மாகமத்திற் செப்புமியற் சித்தாந்த
சீராகு முப்பொருளி னோர்தெளிவி னோர்த்துய்தற்
கொத்த பொதுவி லுபதேச மேழான்பான்
சத்திநி பாதத்துத் தமமொழிவு நாலே
முருமையோ கக்கழற்றி யாய்ந்திடுமை யாருங்
கிரியைக் சழற்றி கொத்துமீ ரெட்டாஞ்

சரியைக் கழற்றியதிற் சாற்றுமீ ரேழாம்
விரத்தி விளக்கத்தின் மேவும் பதின்மூன்
றுறுப்புறு நற்றுறவி னுற்றவையைந் தாகு
மவத்தைத்தன் மைக்கு ளரிய வாறேழாம்
வாதனைமாண் டார்தன்மை வாய்த்தமும் மூன்றாகும்
சோதி னிலையியல்பிற் கூறல் பதின்மூன்று
மொருபத் ததிகாரத் தோங்குதிரு வெண்பா
விருநூற்றைம் பான்மூன் றிவைக ளிசையத்
தழுவியுரைத் திட்டான் றகைமையுறு வள்ள
லொழிவி லொடுக்கத்தி னுள்.

---

பொதுவினுப தேசத்தி லறுபான் மூன்று
புகழ்சத்தி பதியொழிவி லிருபத் தெட்டு
கதியோகங் கருமஞ்ச ரியைக்க ழற்றி
கருதுமுப்பான் பதினாறு பதினொ லாகும்
நுதிவிரத்தி விளக்கந்துற வவத்தைத் தன்மை
தொகைபதின்மூன் றிருபத்தைந் தாறே ழாகும்
மதிதருவா தனைமாண்டார் தன்மைநிலை யியல்பு
வழக்கு மொன்பான் பதின்மூன்றாய் வகுக்கும் பாவே.

---

பொற்புறுநற் போரூர்ப் பொலிந்த சிதம்பரத்தே
விற்பொலியும் வேலர் வியனருளால்-தற்போ
தொழிவிலுறு மானந்தத் துள்ளொடுங்கச் செய்-
ஒழிவிலொடுக் கத்துரைமுற் றும்.

---

உ

கடவுள் துணை.

# பாட்டு முதற்குறிப்பு அகராதி.